# தொல்காப்பியம்

## உரைவளம்

# சொல்லதிகாரம்

# எச்சவியல்




பதிப்பாசிரியர்:
ஆ. சிவலிங்கனார்

# தொல்காப்பியம்-சொல்லதிகாரம்
# (உரைவளம்)
# எச்சவியல்

பதிப்பாசிரியர்
ஆ. சிவலிங்கனார்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
டி.டி.டி.ஐ., தரமணி, சென்னை-600 113.

ஶ்ரீதொல்காப்பிய உரைவள

வெளியீட்டுத்திட்டம் வெளியீடு 20

**Bibliographical Data**


| | | |
|---|---|---|
| Title of the book | : | Tolkappiyam, Echavial |
| Author | : | A. SIVALINGANAR<br>International Institute of Tamil Studies<br>T.T.T.I., Tharamani, Madras-600 113. |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>T.T.T.I., Tharamani, Madras-600 113. |
| Publication Number | : | 142 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | Dec. 1988. |
| Paper used | : | 15.4 |
| Size of the book | : | 21 × 14cms |
| Printing Type used | : | 10 Point |
| Number of Copies | : | 1200 |
| Number of Pages | : | XIX + 443 |
| Price | : | Rs. 45/- |
| Printers | : | Aarthi Printing House<br>416-A, Anna Salai, Nandanam,<br>Madras-600 035. |
| Binding | : | Card Board |
| Artist | : | M/s. Sivam Process |
| Subject | : | Grammar |
| Summary | : | Commentaries on Tolkappiyam Echavial |

டாக்டர். க. த. திருநாவுக்கரசு,
இயக்குநர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை -113.

# முன்னுரை

தொல்காப்பியத்திற்கு உரைவளம் ஒன்றினை வெளியிடும் பணியினைத் தொடர்ந்து உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் கடந்த பத்து ஆண்டுகளாகச் செய்து வருகிறது. இந்த வரிசையில் 'எச்சவியல்' என்னும் இவ்வெளியீடு இருபதாவது நூலாகும்.

தொல்காப்பியத்தின் சொல்லதிகாரத்தில் கூறப்பட்ட செய்திகளுக்கு ஓர் ஒழிபியலாக, இந்த இயலைக் கொள்ள வேண்டும். இன்றைய மொழியியலின் கண்ணோட்டத்தில் காணுகின்ற பொழுது, தமிழ் மொழியின் தொடரிலக்கணக் கூறுகள் சிலவற்றைத் தொல்காப்பியனார் இந்த இயலில் விளக்கியுள்ளமை புலனாகும். இந்த இயலின் நூற்பாக்கள் சிலவற்றிற்குப் போதிய அளவிற்குத் தெளிவான உரை அமையாமை ஒரு குறையாகும். இந்தக் குறையைப் போக்கும் வகையில், பல்வேறு உரையாசிரியர்களின் கருத்துகள் இங்குத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. மாணவர்களுக்கும், ஆராய்ச்சியாளர்களுக்கும் இந்த நூல் பேருதவியாக அமையும் என நம்புகின்றேன்.

இந்த அரும்பணியை அயராது செய்துவரும் பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் அவர்களுக்கு நன்றி பாராட்டத் தமிழ் உலகம் கடமைப்பட்டுள்ளது. இப் பேராசிரியரின் பணி, மேன்மேலும் சிறந்துவிளங்க, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் உறுதுணையாக நிற்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இந்நூலின் அச்சுத் தாள்களைச் செம்மையாகத் திருத்தம் செய்து கொடுத்து உதவிய புலவர் சி. கணேசன் M. A , M.Ed., அவர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இந்நூலினை அழகுற அச்சிட்டுத் தந்த 'ஆர்த்தி பிரிண்டிங் அவுஸ்' நிறுவனத்தாருக்குப் பாராட்டுதல்களை உரித்தாக்குகின்றேன்.

க. த. திருநாவுக்கரசு
இயக்குநர்,
உ. த. ஆ. நி,

சென்னை
30-12-88

# பொருளடக்கம்

# சுருக்க விளக்கம்

அகம் — அகநானூறு
ஆதி — ஆதித்தர்
ஆ. மொ — ஆங்கில மொழி பெயர்ப்பு
இல — இலக்குவனார்
இல — வி — இலக்கண விளக்கம்
இ — ள் — இதன் பொருள்
உ — ம் — உதாரணம்
உயிர். ம — உயிர் மயங்கியல்
உரி — உரியியல்
எச்ச — எச்சவியல்
எ — டு எடுத்துக்காட்டு
எழு, எழுத் — எழுத்ததிகாரம்
எ — று — என்றவாறு
ஐங், ஐங்குறு ஐங்குறுநூறு
கலி — கலித்தொகை
களவழி களவழி நாற்பது
கிளவி — கிளவியாக்கம்
குறுந் — குறுந்தொகை
குறள் — திருக்குறள்
சிலப் சிலப்பதிகாரம்
சிவ — சிவலிங்கனார்
சுப் — சுப்பிரமணியசாஸ்திரியார்
சூ — சூத்திரம்
செய் — செய்யுளியல்
சொல் — சொல்லதிகாரம்
தொகை தொகைமரபு
தொல் — தொல்காப்பியம்
தொன் — தொன்னூல் விளக்கம்
நச் — நச்சினார்க் கினியர்
நற் — நற்றிணை
நன் — நன்னூல்
நாலடி — நாலடியார்
நான் மணி — நான்மணிக்கடிகை

நூன் — நூன்மரபு
நேமி-நேமிநாதம்
பதிற்-பதிற்றுப்பத்து
பி. இ. நூ-பிற்கால இலக்கண நூல்கள்
பி. கு-பிற்குறிப்பு
புண-புணரியல்
புள்ளி-புள்ளிமயங்கியல்
புறம்-புறநானூறு
பெய, பெயரி-பெயரியல்
பெரும்பாண்-பொருநராற்றுப்படை
பொருள்-பொருளதிகாரம்
மலைபடு-மலைபடுகடாம்
முத்து-முத்துவீரியம்
வினை-வினையியல்
வீர-வீரசோழியம்
வெள்-வெள்ளை வாரணனார்
வேற்-வேற்றுமையியல்
வேற். ம-வேற்றுமை மயங்கியல்

# System of Transliteration

## உயிரெழுத்துகள்—Vowels

| | |
|---|---|
| அ | a |
| ஆ | a |
| இ | i |
| ஈ | l |
| உ | u |
| ஊ | u |
| எ | e |
| ஏ | e |
| ஐ | ai |
| ஒ | o |
| ஓ | o |
| ஔ | au |

## மெய்யெழுத்துகள்—Consonants

(இலக்குவனார், ஆல்பர்ட்)

| வல்லினம் | மெல்லினம் | இடையினம் |
|---|---|---|
| க்—k | ங்—n | ய்—y |
| ச்—c | ஞ்—n | ர்—r |
| ட்—t(t) | ண்—n | ல்—l |
| த்—th(t) | ந்—n | வ்—v |
| ப்—p | ம—m | ழ்—l |
| ற்—l | ன்—n | ள்—l |

# பொருட் சுருக்கம்

சொல்லதிகாரத்தில் கிளவியாக்கம் முதல் உரியியல் ஈறாக வுள்ள எட்டு இயல்களில் சொல்லாது எஞ்சிய இலக்கணங்களைக் கூறுதலின் எச்சவியல் அப்பெயர் பெற்றது.

பிரிநிலை, வினை முதலிய பத்துவகை யெச்சங்கள் கூறப் படுதலின் இவ்வியல் எச்சவியல் எனப்பட்டது என்பவரும் உண்டு. பத்துவகை யெச்சங்களின் இலக்கணங்களினும் பிற இலக்கணங்களே மிகுதியும் கூறப்படுதலின் அக்காரணம் பொருந்தாது.

பெயர் வினைகளைப் பற்றிய செய்திகள் கிளவியாக்கத்திலும், பெயரைப் பற்றியன வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல், உருபியல், பெயரியல் ஆகியவற்றிலும், வினையைப்பற்றியன வினையியலிலும், இடை உரிகளைப் பற்றியன அவ்வவ்வியல் களிலும் கூறப்பட்டுள்ளன. அவ்வவ்வியல்களில் கூறப்படவேண்டி யவை விடுபட்டும் உள்ளன. விடுபட்டனவே எச்சவியலில் கூறப்பட்டுள்ளன. அன்றியும் எவ்வியலிலும் கூறுதற்கியாது விடுபட்டனவும் இவ்வியலிற் கூறப்பட்டுள்ளன. அவை செய்யுள் பற்றிய செய்திகளாம். அவை முதலில் கூறப்பட்டுள்ளன.

## 1· செய்யுள் ஒழிபுகள்

**1. நால் வகைச் சொற்கள் :** செய்யுட்குரிய சொற்கள் இயற் சொல், திரிசொல், திசைச்சொல் வடசொல் என்னும் நான்கு மாம். 1)

அவற்றுள் இயற்சொல்லாவது தமிழ் நிலத்து வழங்கும்சொல். அது பொருளை வெளிப்படையாக உணர்த்துவது, நிலம் நீர் என்பன உதாரணமாம் (2)

திரிசொல்லாவது அரிதிற் பொருள் உணர இருக்கும் சொல். அது இரண்டு வகைப்படும். அவை கிளி என்ற ஒரு பொருளைக் குறிக்கக் கிள்ளை, சுகம், தத்தை எனப் பல சொற்கள் வருவ

---

பிறைக்கோட்டுக்குள் உள்ள எண்கள் எச்சவியற் சூத்திர எண்கள்.

தும், கோழி, சங்கு, யானை என்ற பல பொருள்களைக்குறிக்க வாரணம் என ஒரு சொல் வருவதும் ஆகும். (3)

செந்தமிழ்நாடு ஒரு காலத்தில் தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா, வேண், பூழி, பன்றி, அருவா, அருவாவடதலை, சீதம், மலாடு, புனல்நாடு எனப்பன்னிரு பிரிவுகளாக இருந்தது. அப் பன்னிரு நாடுகளிலும் தனித்தனிச் சிறப்பாக வழங்கிய சொற்கள் மற்றை நாடுகளில் சென்று வழங்கியதும் உண்டு. அச்சொற்களே திசைச்சொற்கள் எனப்பட்டன. மேலும் தமிழ் நாட்டின் நான்கு திசைகளிலிருந்தும் வந்து வழங்கிய பிறமொழிச் சொற்களும் திசைச்சொற்கள் எனப்பட்டன. 4)

வடசொல் எனபது வடமொழிச்சொல். அது தமிழில் வந்து வழங்கும் போது வடசொல் எனப்படும். தமிழில் வழங்கும் போது எழுத்து வடிவிலும் ஒலி வடிவிலும் வட வெழுத்தையும் ஒலியையும் விட்டுத் தமிழ் எழுத்திலும் தமிழ் ஒலியினும் வழங்கும். (5,6)

மேற்கூறப்பட்ட நாள்கு சொற்களும், செய்யுளில் எதுகை மோனை முதலிய நலம் கருதி, வல்லெழுத்தை மெல்லெழுத் தாகவும், மெல்லெழுத்தை வல்லெழுத்தாகவும், இயல்புக்கு மாறாக எழுத்தை விரித்தும், எழுத்தைத் தொகுத்தும், குறிலை நெடிலாகவும், நெடிலைக் குறிலாகவும் அமைக்கப்படும். (7)

2. பொருள் கோள்-

செய்யுளில் உள்ள சொற்கள் செய்யுட் பொருளை விளக்குங் கால் இருந்தாங் கிருந்து யாற்று நீர் ஒழுக்குப்போல அமைவதே யன்றி மாறியமைந்து நின்று முடிவதும் உண்டு. அவ்வாறு மாறி நின்ற சொற்களைப் பொருட் பொருத்தத்துக் கேற்ப மாற்றிக் கொள்ளுதல் வேண்டும். அவ்வாறு மாற்றிக் கொள்வதைப் 'பொருள்கோள்' என்பர். அப்பொருள்கோள், நிரல் நிறை, சுண்ணம், மொழி மாற்று, அடிமறி என்னும் நான்கு வகைப் படும். இப்பொருள்கோள் 'மொழிபுணர் இயல்பு' எனப்படும் (8)

அவற்றுள் நிரல் நிறைப்பொருள் கோளாவது :—

ஒன்றற்கு மேற்பட்ட பெயர்களும் வினைகளும், முடிக்குஞ் சொற்களாகவும் முடிக்கப்படும் சொற்களாகவும் நேருக்குநேர்

இன்றி வெவ்வேறிடங்களில் வரிசையாக இருந்து கருதிய பொருள்களைக் கொள்ளுமாறு அமைவதுநிரல் நிறைப்பொருள் கோளாம். இது பெயர் நிரல் நிறை, வினை நிரல்நிறை பெயர், வினை நிரல் நிறை என மூவகையாகவும், பெயரொடு பெயர், பெயரொடு வினை, வினையொடு பெயர், வினையொடு வினை என நான்கு வகையாகவும் வரும். வரிசை முறையில் இன்றி எதிர் வரிசையாகவரின் எதிர் நிரல் நிறை எனப்படும். (9)

சுண்ணப் பொருள் கோள் என்பது நாற்சீரடி இரண்டனுள் அதாவது ஈரடி எண் சீர்களுள் சுண்ணம் (பொடி) போலச் சிதறிக்கிடக்கு சொற்களைப் பொருட் பொருத்தத்துக்கேற்ப அமைத்துக் கொள்ளுமாறு அமைவதாம் (10)

அடிமறி மாற்றுப் பொருள்கோளாவது நாலடிச் செய்யுளில் இருந்தபடியே இருக்க அடிகளைமட்டும் எவ்வடியை எவ்விடத்து மாற்றினாலும் பொருள் கெடாதவாறு அமைவதாம். (11)

என்றாலும் இறுதியடியில் வரும் இறுதிச்சீர் எருத்தடியில் (மூன்றாமடியில்) சென்று அமையினும் அடிகளை மாற்றுதற்கமைதலின் அதுவும் அடிமறி மாற்றாகும். (12)

மொழி மாற்றுப் பொருள்கோளாவது நாலடிச் செய்யுளில் சீர்களைப் பொருட் பொருத்தத்துக் கேற்ப எவ்வடியில் வேண்டுமானாலும் மாற்றியமைத்துப் பொருள் கொள்ளுமாறு அமைவதாம். (13) சுண்ணமொழி மாற்று ஈரடி எண்சீரில் அமைவது ; இது பல வடிகளில் அமைவது.

இது வரை கூறப்பட்டன கூறாதொழிந்த செய்யுள் ஒழிபுகள்.

## 2. கிளவியாக்க ஒழிபுகள்

கிளவியாக்கத்துள் திணை, பால், எண், இடம், வினா, செப்பு, மரபு என்னும் ஏழனைப்பற்றி வரும் வழுக்களும் அமைதி களும் விரிக்கப்பட்டன. அங்கு விடுபட்ட வழுவமைதிகள் எச்சவியலில் கூறப்பட்டுள்ளன.

வாராதவற்றை அதாவது வருதல் தொழில் செய்யாத வற்றை 'இந்த நெடுஞ்சாலை புதுவையிலிருந்து வருகிறது,

என்பது போலக் கூறுதலும், இன்னது செய் என்று சொல்லாத வற்றை 'இம் மலர் என்னைப் பறித்துக் கொள் என்கின்றது' என்பது போலக் கூறுதலும் பிறவும் அவற்றின் தன்மைகளை விளக்குவனவாம். (26)

அவையில் சொல்லத்தகாத சொல்லை மறைத்து அதன் பொருளைக் குறித்துக் கொள்ளும்படி வேறு சொல்லால் சொல்லு தல் வேண்டும். 'கால் கழீஇ வருவேம்' என்பது (46) மறைக்கும் போது எல்லாச் சொற்களையும் மறைத்தல் வேண்டுவதில்லை. மறைக்காமல் வழங்கி வருவனவற்றை அப்படியே வழங்கலாம். ஆட்டுப் பிழுக்கை என்பது. (47)

ஈ, தா, கொடு என்பன பிறரிடம் ஒன்றை இரப்பவன்கூறும் சொற்கள் ஆதலும் உண்டு. (48) அவற்றுள் 'ஈ' என்பது உயர் ந்தவனிடம் இழிந்தவன் இரக்கும் போது வரும்.(49) தா என்பது ஒத்தவ்னிடம் இரக்கும் போது வரும். (50) கொடு என்பது உயர்ந்தவன் இழிந்தவனிடம் இரக்கும் போது வரும். (51) கொடு என்பது படர்க்கையிடத்துக்குரியது என்பது கிளவி யாக்கத்திற் கூறப்பட்டது (கிளவி. 30). அது ஒருவன் தன் னையே பிறன் போலக் கூறும் போது தன்மைக்கும் வரும். எனக்குக் கொடு என்பதற்குப் பதில் தன்னையே சுட்டி 'இவனுக்குக் கொடு' என்னும்போது வருதல் காண்க. (52)

ஒரு பொருளைத்தர இரண்டு சொற்கள் வரலாகாது. ஆனால் சில விடங்களில் பிரிவில்லாமல் இணைந்து வருதலும் உண்டு அவற்றை நீக்காது ஏற்பர். 'நிவந்து ஓங்கு பெரு மலை' என்பதில் நிவப்பும் ஓங்குதலும் உயர்வு என்னும் பொருள் தந்து பிரிவின்றி இருத்தல் காண்க. (64)

ஒருமை குறிக்கும் சொல் பன்மையைக் குறிக்கும் இடமும் உண்டு. பெரும்பாலும் செய்யுளில் வரும் 'வீரர் தாய்' என்பதில் வீரர் எனும் பன்மைக் கேற்பத்தாய் என்பது தாயர் எனப் பன்மைப் பொருள் கொள்ளும். (65)

## 3. பெயரியல் வினையியல் ஒழிபுகள்

பெயர்ச்சொல் எனக்கொண்டு பெயரியலிலோ வினைச்சொல் எனக் கொண்டு வினையியலிலோ கூற இயலாது ஒழிந்த தொகைச் சொற்கள் இவ்வியலிற் கூறப்பட்டன. எல்லாத் தொகைச் சொற்களும் ஒரு சொல் போல் நடக்கும் (24)

(1) தமன் நமன் நுமன் எமன் என்பனபோலும் கிளைப் பெயர்கள் தம்நம் நும் எம் எனும் பன்மைப் பெயர்களின் அடியாகப் பிறந்த ஒருமைப் பெயர்களாகக் காணப்படினும் அவற்றை அவ்வாறு பிரிக்க வேண்டின் அவை பிரியா. ஒட்டிய தொகைச் சொல்லேயாம் (14)

(2)இசைநிறை, அசைநிலை, பொருளொடு புணர்தல் என்ற வகையில் வரும் அடுக்குச் சொற்களும் ஒரு சொல் எனப்படும்; பிரிக்கப்படா (15)

ஒரு சொல் நிலையில் வரும் அடுக்குச் சொற்களுள் இசை நிறைப் பொருளில் வருவன இரண்டு மூன்று நான்கு முறை அடுக்கி வரும் (27 துணிவு விரைவு முதலிய பொருளில் வரும் அடுக்கு இரண்டு அல்லது மூன்று முறை அடுக்கி வரும் (28) அசைநிலைப் பொருளில்வரும் அடுக்கு இரண்டுமுறை அடுக்கி வரும். கண்டீர், கேட்டீர், சென்றது, போயிற்று என்பன அசை நிலைப் பொருளில் வரும்போது இறுதியில் வினா எழுத்துடன் கூடி கண்டீரே, கேட்டீரோ, சென்றதோ போயிற்றோ என்பன போல அமைந்து இரண்டுமுறை அடுக்கி வரும் (29) அவ்வாறே கேட்டை, நின்றை, காத்தை, கண்டை போலும் சொற்கள் முன்னிலையில் வாராதவழி அசை நிலையாகி இரண்டு முறை அடுக்கி வரும் (30)

(3) ஒரு சொல் போல்நடக்கும் தொகைநிலைத் தொடர்கள் பின் வருவனவாம். அவை வேற்றுமைத் தொகை, உவமத்தொகை, வினைத்தொகை. பண்புத் தொகை, உம்மைத் தொகை, அன் மொழித்தொகை என்னும் ஆறாம் (16)

வேற்றுமைத் தொகையாவது வேற்றுமையுருபுகள் விரிந்திருந் தால் எப்பொருள்தருமோ அப்பொருளை அவ்வுருபுகள் மறைந் திருந்தபோதும் (தொக்கபோதும்) தருமாறு அமைவதாம் (17) கல்லால் எறிந்தான் என்பது கல்லெறிந்தான் என வருவது.

உவமத் தொகையாவது உவம வுருபு விரிந்திருந்தால் எப் பொருள் தருமோ அப்பொருளை அவ்வுருபு மறைந்திருந்த போதும் தருமாறு அமைவது (18) மதிபோலும் முகம் என்பது மதிமுகம் என வருவது.

வினைத் தொகையாவது, வினையின் சிறப்பிலக்கணம் காலம் காட்டுவது; அக்காலம் காட்டு இடைநிலை முதலிய உருபுகள் விரிந்திருந்தால் அவ்வினை என்ன காலம் காட்டுமோ அக்காலத்தை அவ்வுருபுகள் மறைந்திருந்த போதும் குறிப்பாற் காட்டுமாறு அமைவது (13) உயர்ந்தமரம் என்பது உயர்மரம் எனவருவது. பிற காலங்களுக்கும் கொள்க.

பண்புத் தொகையாவது, வண்ணம், வடிவு, அளவு சுவை முதலிய பண்புகளை அடிப்படையாகக் கொண்டு 'இப்படிப்பட்டது இது' என்னும் படியாக வருவது. கரிய நிற முடையது குதிரை என்பதுகருங்குதிரை எனவருவது. பிறவும் அன்ன. (20)

உம்மைத் தொகையாவது எவ்வகைப்பெயரும் இருபெயராக அல்லது பலபெயராக எண்ணி வரும்போது எண்ணுப் பொருளில் வரும் 'உம்' இன்றிவருவது. கபிலபரணர் என வருவது. (31

அன்மொழித்தொகை என்பது பண்புத்தொகை மேலும் உம்மைத் தொகைமேலும், வேற்றுமைத் தொகை மேலும் தொடர் இறுதியில் மொழி தொக்கி வருவது. அவை பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை உம்மைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை வேற்றுமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை எனப் பெயர் பெறும். (32) இவற்றோடு வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையையும் உவமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகையையும் சேர்த்துக் கொள்க.

மேற்சொல்லப்பட்ட ஐந்து தொகைத் தொடர்களுள் வேற்றுமைத் தொகையிலும்,வினைத் தொகையிலும், பண்புத் தொகையிலும் உவமைத் தொகையிலும் முன்மொழியில் (நிலைமொழி) பொருள் சிறந்து நிற்கும். வேங்கைப்பூ, உயர் மரம் கருங்குதிரை, மதிமுகம் என்பனவற்றிற் காண்க. வேங்கை மரத்தின் இலை, தளிர் முதலியவற்றைப் பிரித்துக் காணும் போது வேங்கைப்பூ என்பதில் பின்மொழியாகிய (வருமொழியாகிய) பூ என்பதில்

பொருள் சிறந்து நிற்கும். அவ்வாறே கருநிறமுடைய பல விலங்கு களுள் குதிரையைச் சுட்ட வேண்டிக் கருங்குதிரை என்னுமிடத் தில் பின்மொழியிற் பொருள் சிறந்து நிற்கும் உம்மைத் தொகை யில் கபிலபரணர் என இருமொழி மேலும் பொருள் சிறந்து நிற் கும். அன்மொழித்தொகையில் இருமொழிக்கும் அப்பால் பொருள் சிறந்து நிற்கும் 'பொற்றொடி வந்தாள்' என்றால் பொன்னிலும் தொடியிலும் பொருள் நில்லாமல் பொன்னாலாய தொடியை அணிந்தாள் மேல் நிற்கும். (23)

உம்மைத் தொகைத் தொடரில் உயர்திணைத் தொடராயின் பெயர்களை எண்ணிவந்து இறுதிப் பெயரில் ஒருமையைக் குறிக்கும் இறுதி எழுத்தில்லாமல் பலர்பாலைக் குறிக்கும் எழுத் தால் (விகுதியால்) முடித்தல் வேண்டும் (28) கபிலன் + பரணன் = கபில பரணர் எனக் காண்க.

## 4. வினையியல் ஒழிபுகள் :

வினையியலிற் சொல்லாது விடுபட்டசெய்திகள் பின்வருவன.

வினைமுற்று என்பது உயர்திணை அஃறிணை, விரவுத் திணை என்னும் பொருள்களில், தன்மை முன்னிலை படர்க்கை என்னும் மூவிடங்களில், இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்று காலங்களுள் ஒன்றை வெளிப்படையாகவோ குறிப் பாகவோ உணர்த்தவரும். மூவிடங்களில் காலம் வெளிப்படை குறிப்பாக உணர்த்தவருதலின் வினைமுற்று அறுவகைப்படும். (31) மேற்சொல்லப்பட்டவாறு இன்றி வேறு வகையில் வரும். (32) வினைமுற்றுகள் அடுக்கி வந்தாலும் ஒரு பெயர் முடிபைக் கொள்ளும். உண்டான் உறங்கினான் எழுந்தான், சாத்தன் எனக் காண்க. (33)

'செய்யாய்' என்னும் வாய்பாட்டுச் சொல் 'செல்' என்னும் வாய்பாட்டில் வருவதுண்டு. 'உண்ணாய்' (உண்பாயாக என்பது 'உண்' என்று வருவது காண்க. (54)

முன்னிலை வினைச் சொல்முன் 'ஈ' என்பதோ 'ஏ' என்பதோ அவ்விடத்துக்கு ஏற்ற மெய்யை யூர்ந்து வருதலுண்டு. செல் + ஈ → செல் + ற் + ஈ = சென்றீ, நில் + ஏ → நில் + ம் + ஏ = நின்மே எனக் காண்க. (55)

வினை யெச்சச் சொற்கள் தமக்குரிய வாய்பாட்டுப் பொருள்களில் நில்லாமல் வேறு வாய்பாட்டுப் பொருள்களில் நிற்கும் குறிப்பும் உடையவாம். 'யானை ஒடித்து உண்டு எஞ்சிய கிளை' என்பதில், உண்டு என்பது செய்து என்னும் வாய்பாட்டுப் பொருளை விட்டு 'உண்ண' எனச் செய என்னும் வாய்ப்பாட்டுப் பொருளதாதலைக் காண்க (61)

## 5 வினையியல் இடையியல் ஒழிபுகள் பத்து வகை யெச்சம்

பிரிநிலை யெச்சம், வினையெச்சம், பெயரெச்சம், ஒழியிசை யெச்சம், எதிர்மறை யெச்சம், உம்மை யெச்சம், என வெச்சம், சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசையெச்சம் என எச்சம் பத்து வகைப்படும். (34)

1 பிரிநிலை எச்சம் இது ஏ ஓ என்னும் இடைச்சொல் பற்றியது. பிரிக்கும் சொல்லைச் சரர்ந்த ஏ என்னும் இடைச் சொல் பிரிக்கப்படும் சொல்லொடு முடியுமாறு அமையும் இதில் எஞ்சியிருப்பது பிரிக்கப்படும் சொல். அதைக்கொண்டு முடிவது 'ஏ' என்னும் இடைச்சொல்' 'அவனே கொண்டான்' என்பது 'பிறர் கொண்டிலர்' என்பதைக் கொண்டு முடிந்தது காண்க (35)

2 வினையெச்சம் என்பது தெரிநிலையாகமோ குறிப்பாகவோ காலம் உணர்த்தும் வினையை எஞ்சி நிற்பது. உழுது வந்தான், கற்று வல்லன் ஆனான் என்பன காண்க. இவற்றுள் கற்று என்னும் வினையெச்சம் வல்லன் என்னும் குறிப்புவினையைக் கொண்டதாயினும் ஆக்கச் சொல் ஒன்றும் (ஆனான் என்பது) உடன் இருப்பது காண்க. குறிப்பு வினை ஆக்கச் சொல்லுடனேதான் வரும். (36)

3 பெயரெச்சம் பெயரொடு முடியும். 'உண்ட சாத்தன்(37)

4 ஒழியிசையெச்சம் என்பது, ஒழியிசைப் பொருளில் வரும் இடைச் சொற்கள் (மன், தில், ஓ என்பன) வெளிப்படவாராது ஒழியும் பொருள்களை எஞ்சி நிற்பது. கூரியதோர் வாள்மன் என்பதில் 'மன்' என்பது வாள்கூரியதன்று அதாவது திட்பமின்று என்னும் ஒழிந்த பொருளை எஞ்சிநின்றது காண்க. (38) பிறவும் அன்ன.

5 எதிர் மறையெச்சம் என்பது எதிர்மறைப் பொருள்தரும் சொற்களை எஞ்சி நிற்பது. எதிர் மறைப் பொருள்தரும் இடைச் சொற்கள் ஏ, ஓ, உம் என்பன. யானே திருடினேன் என்பதில்

'ஏ' என்பது இல்லை என்னும் எதிர் மறைப் பொருட் சொல்லை எஞ்சி நின்றது. இப்படிப் பிறவும் காண்க. (39)

6 உம்மையெச்சம் என்பது இரண்டு சொற்களில் உம் வந்து ஒன்றை யொன்று எஞ்சி நிற்பதாம். அப்போது இரண்டற்கும் ஒரே வினைச் சொல்லே வரும், 'சாத்தனும் வந்தான் கொற்றனும் வந்தான்' என்பதில் சாத்தனும் என்பதன் உம்மை சாத்தனையும் எஞ்சி நிற்பதும் இரண்டும் வந்தான் என்னும் ஒரு வினையே முடிபாகக் கொள்வதும் காண்க. (40)

எச்ச உம்மை வரவேண்டிய சொல் எச்ச உம்மையில்லாமல் செஞ்சொல்லாக வருமானால் அவ்வெச்சவும்மை கொண்டு முடியும் சொல்லில் உம்மை வந்து இறந்த காலத்துக்கு எதிர் காலமும் நிகழ்காலத்துக்கு எதிர் காலமுமாக மயங்கி வரவும் பெறும். 'கூழ்உண்டான் சோறும் உண்பான்', எனவும், 'கூழ் உண்கின்றான் சோறும் உண்பான்' எனவும் வருவது காண்க. கூழ் என்பது உம்மையின்றி வந்தது. (41)

7 என் என்னும் எச்சம் வினையை எஞ்சி நிற்கும். 'கொள்எனக் கொடுத்தான்' என வரும் (42)

8. 9. 10. சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசையெச்சம் ஆகிய மூன்றற்கும் முடிக்கும் சொல் அல்லது சொற்கள் இரா (48). எனினும் குறிப்பால் உணர்ந்து முடிக்கப்படும். (44)

முள் மரத்தைச் செடியாக இருக்கும் போதே களைந்து விடுக; இல்லையேல் மர மானபின் களையமுற்படின் களைவோர் கையைப் புண்படுத்தும்'' (குறள் ) என்பது, ''பகையைத் தொடக்கத்திலேயே அழிக்க; இல்லையேல் அது வளர்ந்து உன்னை அழித்து விடும்'' என்பதைக்குறிப்பால் உணர்த்துவது குறிப்பெச்சமாம். இசை என்பது சொல் என்னும் பொருள்தரும். இசையெச்சம் என்பது ஏதேனும் ஒரு சொல் எஞ்ச நிற்பது ஆகும்.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு (குறள். 1)

என்பதில் அது போல எனும் சொல் எஞ்சி நின்றது இசையெச்சமாம்.

சொல் எச்சம் என்பது 'சொல்' என்னும் சொல்லே எஞ்சி வருவதாம், என்றான் என்பதில் என்று 'சொன்னான்' எனப் பொருள் கொள்ளும் போது 'சொல்' என்பது எஞ்சி நின்றது காண்க.

(குறிப்பு : இசையெச்சம் சொல்லெச்சம் பற்றிய கருத்து வேறுபாடுகளை உரைகளிற் கண்டு தெளிக)

பத்துவகை எச்சங்களுள் வினையெச்சமும் பெயர் எச்சமும் வினையியல் ஒழிபுகள். பிரிநிலை ஒழியிசை, எதிர்மறை, உம்மை, என என்பன இடையியல் ஒழிபுகள். சொல் குறிப்பு இசை என்பன பிற ஒழிபுகள்.

## 6. இடையியல் ஒழிபுகள் :

சொற்கள் பிறிதோர் சொல்லை வேறுபடுத்துதல் (விசேடித்தல்). வேறு படுத்தப்படுதல் (விசேடிக்கப்படுதல்) என இருவகையில் வரும். ஆனால் இடைச் சொல் என்பது பிறிதோர் சொல்லை வேறுபடுத்தவே வரும் வேற்றுமை யுருபுகள் தாம் சாரும் பெயர்ப் பொருளை வேறுபடுத்துவதைக் காண்க. (59)

உரிச்சொற்களில் சில வேறு படுத்தவும் வேறுபடுக்கப் படவும் வரும். உறு என்பது உறுபொருள் (மிக்க பொருள்) என வேறுபடுத்தவே வரும். குரு (நிறம்) என்பது குருமணி (நிறமுடையமணி) என வேறுபடுத்தவும் 'விளங்குகுரு' (விளங்கும் நிறம்) என வேறுபடுக்கப்படவும் வரும். (60) (இக்கருத்து உரியியல் ஒழிபாயினும் சூத்திரம் சுருங்க வேண்டிமேலதனுடன் சாரவைத்தார். தொல்காப்பியர்)

## 7. பிற ஒழிபுகள்

ஓர் எருத்தை நம்பி என்பதும் பசுவை இலக்குமி என்பதும் போல ஒருதிணைப் பெயரை ஒருதிணைப் பெயராக வழங்கும் சொற்களும், பூனையைக்குறிக்கும் பூசை என்பது திசைப் பெயர்; அதனால் வரும் பூசையான் என்பதுபோலும் சொற்களும், 'யாற்றுட் செத்த எருமை யீர்த்தல் ஊர்க்குயவர்க்குக் கடன்' என்பது போலத் தொடர்பில்லாத ஆனால் வழங்கி வருதல் உள்ள சொற்களும், பொருள் கருதி ஒரு திணையை வேறொரு திணைப் பொருளாகத் திரித்து வழங்கும் சொற்களும் (இதனைப் பிசி என்பர்.) இது பெரும் பாலும் சிலேடையில்

வரும்) மந்திரப் பொருளைக் குறித்த ஆனால் அம்பொருளுக் குரித்தல்லாத சொற்களும் ஆகிய அனைத்தும் வழங்கியவாறே வழங்கப்பெறும் இலக்கணம் கருதித் தவிர்க்கப்படா. (58)

காலவயப்பட்டு வழங்கவரும் புதிய சொற்கள் கடியப் படா (56)

சொற்களைத் தலை, இடை, கடையெனும் மூன்றிடத்தும் உள்ள எழுத்துகளைக் குறைத்து வழங்குதலும் உண்டு (57). உண்டெனினும் நிறை சொல்லாக இருக்கும் போதுதரும் பொரு ளையே தரும். (58) தாமரை, இல்லை, நீலம் என்பன மரை, இலை, நீல் எனக் குறைக்கப்படினும் அவ்வப் பொருளையே தருதலையறிக.

உடன் இணைந்து வராத மாறுபட்ட சொற்கள் உடன் இணைந்து வரும் இடமும் உண்டு; அறிக, சிறிது பெரிது என்பன உடன் இயையாதன; மாறுபட்டன. ஆனால் 'இதை விட இது சிறிது பெரிது' என்னுமிடத்தில் உடன் இணைந்த மையைக் காண்க. (62)

சிலசொற்றொடர்கள் சொற்பொருளை யுணர்த்தால் குறிப் பால் வேறு பொருள் உணரவும் நிற்கும். செஞ்செவி என்றால் பொன்னும் மணியும் அணியும் செவி எனப்பட்டு அச்செவி யினையுடையாரது செல்வச் செழிப்பைக் குறிப்பால் உணர்த்து வதைக் காணலாம். (63)

செய்யுளில் முன்னிலையொருமை முன்னிலைப் பன்மை வினை கொள்ளுதல் உண்டு. அது ஆற்றுப்படைச் செய்யுளில் ஆம். கூத்தராற்றுப்படையில், 'தலைவ' என விளித்தவிளி (மலை. 50) (முன்னிலையைச் சுட்டிய சொல்) 'பெறுகுவிர்' என்ற பன்மையொடு (மலை. 157) முடிந்தது காணலாம்.

**புறனடை**

சொல்லதிகாரத்துள், உலகவழக்கினும் செய்யுள்வழக்கினும் பொருள் பெறச் சொல்லப்பட்ட சொற்களையெல்லாம் பலவேறு செய்கையுடைய பழைய இலக்கண நூல் நெறி யானே தவறு படாது வேறுபடுத்தி உணருமாற்றான் பிரித்துப் பொருத்திக் காட்டுக.

# தொல்காப்பியம்-சொல்லதிகாரம்

(உரைவளம்)

## எச்சவியல்

### இளம்பூரணர்

இவ்வோத்து என்ன பெயர்த்தோ வெனின், எல்லா வோத்தினுள்ளும் எஞ்சிய பொருள்களை யுணர்த்தின மையின் எச்சவியல் என்னும் பெயர்த்து.

### சேனாவரையர்

கிளவியாக்க முதலாக உரியிய லிறுதியாகக் கிடந்த ஒத்துக்களுள் உணர்த்துதற் கிடமின்மையான் உணர்த்தப் படாது எஞ்சிநின்ற சொல்லிலக்கணம் எல்லாம் தொகுத்து உணர்த்திய வெடுத்துக் கொண்டார்; அதனான் இவ்வோத்து எச்சவியல் என்னும் பெயர்த்தாயிற்று.

'கண்டீரென்றா' (எச்-29) எனவும், 'செய்யா யென்னும் முன்னிலை வினைச்சொல்' (எச்-54) எனவும், 'உரிச்சொல் மருங்கினும்' (எச்-60) எனவும், 'ஒருமை சுட்டிய பெயர் நிலைக் கிளவி' (எச்-65) எனவும் இவை முதலாகிய சூத்திரங்களால் உணர்த்தப்பட்ட அசை நிலையும், வினைச்சொல் இலக்கணமும், வழுவமைதியும் அவ்வோத்துக்களுள் உணர்த்தாது ஈண்டுணர்த் தியது என்னையோவெனின், அதற்குக் காரணம் அவ்வச் சூத்திரம் உரைக்கும் வழிச் சொல்லுதும்.

பல பொருட் டொகுதிக்கு ஒன்றனாற் பெயர் கொடுக்குங் கால் தலைமையும் பன்மையும் பற்றிக் கொடுப்பினல்லது தலைமையும் பன்மையும் எச்சத்திற் கின்மையானும் பத்துவகை

யெச்சம் ஈண்டுணர்த்தலான் எச்சவிய லாயிற்றென்றல் பொருந்தாமையுணர்க.

## தெய்வச்சிலையார்

இவ்வோத்து என்ன பெயர்த்தோ வெனின், எச்சவியல் என்னும் பெயர்த்து; கிளவியாக்கம் முதலாக உரிச்சொல் வோத்து ஈறாகக் கிடந்த எட்டோத்தினுள்ளும் உணர்த்தாத பொருளை ஈண்டுணர்த்துதலாற் பெற்ற பெயர்.

## நச்சினார்க்கினியர்

முற்கூறிய எண்வகை ஓத்தினுள்ளும் உணர்த்துதற்கு இடம் இன்றி எஞ்சி நின்ற சொல் இலக்கணங்களைத் தொகுத்து உணர்த்துதலின், இஃது எச்சவியல் என்னும் பெயர்த்தாயிற்று.

## வெள்ளைவாரணனார்

கிளவியாக்கம் முதலாக உரியியல் இறுதியாகவுள்ள இயல் களுள் உணர்த்துதற்கு இடம் இல்லாமையாற் கூறப்படாது எஞ்சிநின்ற சொல்லிலக்கணம் எல்லாவற்றையும் தொகுத் துணர்த்துவது இவ்வியலாதலின் எச்சவியல் என்னும் பெயர்த் தாயிற்று............

இவ்வியலின்கண் 1 முதல் 15 வரையுள்ள சூத்திரங்கள் செய்யுட்குரிய சொல்லும் அவற்றது இலக்கணமும் அவற்றாற் செய்யுள் செய்யும் வழிப்படும் விகாரமும் செய்யுட் பொருள் கோளும் உணர்த்துவன. 16 முதல் 26 வரையுள்ள சூத்திரங்கள் வேற்றுமைத் தொகை முதலிய அறுவகைத் தொகைச் சொற் களின் இயல்பினை விரித்துரைப்பன. 20 முதல் 30 வரை யுள்ளவை சொல்மரபு பற்றிய வழுக்காப்பன. 31 முதல் 33 வரை வரையுள்ளவை முற்றுச் சொற்கு இலக்கணம் கூறுவன. 34 முதல் 45 வரையுள்ளவை முன்னர்க் கூறப்படாது எஞ்சிய பிரி நிலை முதலிய பத்துவகை யெச்சங்களின் முடிபு கூறுவன. 40 முதல் 65 வரையுள்ள சூத்திரங்கள் ஒருசார் மரபு வழுக் காத்தல், மரபிலக்கணம், விகாரம், வினையெச்சத்திரிபு, இரட்டைக்கிளவி, ஆற்றுப்படைச் செய்யுள் முடிபு என முன்னர்க் கூறாதெஞ்சிய சொல்லிலக்கணம் உணர்த்துவன. இறுதியிலுள்ள 66 ஆம் சூத்திரம் இச்சொல்லதிகாரத்துக்குப் புறனடையாகும்.

# செய்யுட்குரிய சொற்கள்

391. இயற்சொ றிரிசொ றிசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே (1)

(இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே)

## ஆங்கில மொழி பெயர்ப்பு

இலக்குவனார்

Words used in Poetry are 'Iyarcol', 'Thirisol', 'Thisaiecol' and Vadasol.

## பிற்கால இலக்கண நூல்கள் :

நன்னூல் 270.

அதுவே
இயற்சொல் திரிசொல் இயல்பிற் பெயர்வினை
எனவிரண் டாகும் இடைஉரி யடுத்து
நான்குமாந் திசை வடசொல் அணுகா வழி

இலக்கணவிளக்கம் :171 ஷை ஷை ஷை

தொன்னூல் விளக்கம் 42

"எச்சொலும் பெயர் வினை யிடையுரி யெனநான்கு
இவற்றுட் பொதுவென இயற்சொல் திரிசொல்"

முத்துவீரியம்-ஒழிபியல் 48

இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே.

இளம்

என்பது சூத்திரம்

இனி, இத்தலைச் சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இத்துணைப்பட்ட சொல்லினாற் செய்யுள் செய்யப் பெறும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை : இயற்சொல்லும் திரிசொல்லும் திசைச்சொல்லும் வடசொல்லும் என நான்கும் செய்யுள் செய்தற்குரிய சொல் லாதல் உடையஎன்றவாறு.

இயற்சொல் என்பது தமிழ் வழங்கு நாட்டு விகாரம் இன்றித் தமிழ்இயற்கை யிலக்கணப்பாடு செவ்வனுடைய சொல்; அவை [1]முன்னர் உணர்த்துப.

திரிசொல் என்பது செய்யுளின்பம் நோக்கி அவ்வியற் சொற்களை அவ்வாய்பாடு திரித்து வேறுவாய்பாட்ட வாக்குஞ் செய்யுளுடைய சொல். என்னை?

'[2]சேரிச் சொல்லின் முட்டுற லஞ்சிச்
செய்யுட்குப் புலவர் செய்துகொண் டன்றே' என்பது[3] புறச்சூத்திரம்.

[4]அவைதாம் வழக்கினுள் இன்மை காரணம் அமைதல் என்பவாகலின்; அவையும் [5]முன்னர் உணர்த்துப.

திசைச்சொல் என்பது செந்தமிழ் நாட்டை [6]அடையும் புடையும் கிடந்த திசை நாட்டார் வழங்குஞ்சொல்; அவையும் [7]முன்னர் உணர்த்துப.

---

1. எச்சவியல் சூத்திரம் 2-ல்
2. சேரிவழக்குச் சொற்போலச் சில சொற்கள் செய்யுளில் முட்டுப்படுதற்கு அஞ்சி அவை இயற்சொல்லாயினும் புலவரால் திரித்துக் கொள்ளப்பட்டன.
3. பரி மாணச் சூத்திரம் - பாடம்.
4. அத்திரி சொற்கள் வழக்கில் இல்லாமையால் செய்யுளில் அமைக என்ப.
5. முன்னர். சூ. 3-ல்
6. அடையும் புடையும் கிடந்த திசை = செந்தமிழ் நாட்டை அடைந்தும் அடைந்தவற்றைச் சூழ்ந்தும் கிடந்ததிசை. அடைந்து கிடந்தன தென்பாண்டி குட்டம் முதலிய பன்னிருநாடுகள். புடைக்கிடந்தன சிங்களம் சோனகம் சாவகம் முதலிய நாடுகள்.
7. முன்னர். சூ. 4-ல்.

வடசொல் என்பது ஆரியச் சொற்போலும் சொல்; அவை [8]முன்னர் விரித்துரைப்ப.

[9]பெயர், வினை, இடை, உரி எனப்பட்ட நான்கு சொல்லுமே இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் எனப் பட்டன; பிறவில்லை.

திரிசொல் செய்யுட்கே உரிய. ஒழிந்த மூன்றும் வழக்கிற் குரிய வாகிச் செய்யுட்கும் புகும் என்ற வாறு.

சேனா

செய்யுட்குரிய சொல்லும், அவற்றது இலக்கணமும், அவற்றாற் செய்யுள் செய்வுழிப்படும் விகாரமும், செய்யுட் பொருள்கோளும், [1]எடுத்துக் கோடற்கண் உணர்த்துகின்றார்.

இதன் பொருள் : இயற்சொல்லும், திரிசொல்லும், திசைச் சொல்லும், வடசொல்லும் என அத்துணையே செய்யுள் ஈட்டு தற்குரிய சொற்களாவன என்றவாறு.

இயற்சொல்லானும், செய்யுட் சொல்லாகிய திரிசொல்லானுமே யன்றித் திசைச் சொல்லும் வடசொல்லும் இடைவிராய்ச் சான் றோர் செய்யுள் செய்யுமாறு கண்டு ஏனைப் பாடைச் சொல்லும் செய்யுட்குரியனவோ வென்று ஐயுற்றார்க்கு, இந்நான்கு சொல் லுமே செய்யுட்குரியன [2]பிறபாடைச்சொல் உரிய வல்லவென்று வரையறுத்தவாறு.

செய்யுள் செய்யலாவது ஒரு பொருள்மேற் பலசொற் கொணர்ந்தீட்டலாகலான் ஈட்டம் என்றார்.

---

8. முன்னர்— சூ. 5, 6ல்.
9. சிவ. விளக்கம் பார்க்க
1. எடுத்துக் கோடற்கண்—தொடக்கத்தில்
2. பிற பாடைச்சொல் என்பதில் சிங்களம் முதலிய பாடைச் சொற்களும் அடங்கும். அவை திசைச் சொற்கள் எனப் பட்டன. எனவே எந்த பாடைச் சொல்லாயினும் திசைச் சொல்லாய் அடங்குதலின் பிறபாடைச்சொல் உரியவல்ல என்பது பொருந்தாது. நச்சினார்க்கினியர் பிறபாடைச் சொல் சிறுபான்மை வரும் என்பதும் காண்க—சிவ.

பெயர் வினை இடைஉரி என்பன இயற் சொற் பாகு பாடாக லான், இயற்சொல் அந்நான்கு பாகுபாட்டானும் செய்யுட் குரித்தாம். திரி சொல் பெயராயல்லது வாரா.

[3]என்மனார் என்பதனை வினைத்திரி சொல் என்பாரும் உளர் அஃது என்றிகினோர், 'பெறலருங்குரைத்து' (புறம். 5) என்பன போலச் செய்யுள் முடிபு பெற்று நின்ற தென்றலே பொருத்த முடைத்து.

தில் என்னும் இடைச்சொல் தில்ல என்றானும் தில்லை என்றானும் திரிந்து நின்றவழி அவை வழக்கிற்கும் உரிய வாகலின் திரிசொல் எனப்படா.

[4]கடுங்கால் என்புழிக்கடி என்னும் உரிச்சொல், 'பெயரினும் வினையினும் மெய்தடுமாறி (உரியியல் 1.) என்பதனாற் பண்புப் பெயராய்ப் பெயரொடு தொக்கு வழக்கினுட் பயின்று வருவதலால் திரிசொல் எனப்படாது.

திசைச் சொல்லுள் [5]ஏனைச் சொல்லும் உளவேனும் செய்யுட் குரித்தாய் வருவது பெயர்ச் சொல்லேயாம்.

வட சொல்லுள்ளும் பெயரல்லது செய்யுட்குரிய வாய் வாரா இவ்வாறாதல் சான்றோர் செய்யுள் நோக்கிக் கண்டு கொள்க.

தெய்

என்பது சூத்திரம்.

இதன் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், ஒரு வகையாற் செய்யுட்குரிய சொல்லின் பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

---

3. என்பர் அல்லது என்றார் என்னும் வினையின் திரி சொல் என்பர். கிளவியாக்கம் முதல் நூற்பா உரை வளத்தில் என்மனார் பற்றிய விளக்கம் காண்க.
4. 'கடி' என்னும் சொல்கால் என்னும்பெயரில் வரும் போது 'கடு' எனத்தன் உரு(வடிவம்) திரிந்து கடுங்கால் என வந்தது. அதனால் புலவரால் செய்யுட்காகத் திரித்து கொள்ளப்பட்ட சொல் எனப்படாது.
5. ஏனைச் சொல் — வினைச் சொல் முதலிய சொற்கள்.

இ-ள் : இயற் சொல்லும், திரி சொல்லும், திசைச்சொல்லும் வடசொல்லும் எனவரும் நால் வகைத்து, செய்யுளாக்குதற் குரிய சொல், எ-று.

அவையாமாறு தத்தம் சிறப்புச் சூத்திரத்தான் உணரப்படும்.

நச்

என்பது சூத்திரம்.

செய்யுட்குரிய சொல்லும், அவற்று இலக்கணமும், அவற்றின் விகாரமும், அச்செய்யுட் பொருள்கோளும் முதல் உணர்த்து கின்றார்.

இச்சூத்திரம் செய்யுள்விதி ஒழிபு பெரும்பான்மைத்து ஆதலின் செய்யுட் செய்தற்கு உரிய சொற்கள் இவை என அவற்றின் வரையறை கூறுகின்றது.

இ-ள் : இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று அனைத்தே--இயல்பாகிய சொல்லும் அதுதான் திரிந்து வரும் சொல்லும் திசைக்கண் வழங்கும் சொல்லும் ஆரியச் சொல்லும் என்று கூறிய அத்துணையே, செய்யுள் ஈட்டச் சொல்லே—ஒரு பொருள்மேல் நிகழும் செய்யுளை ஈட்டுதற்கு உரிய சொல்லாவன, எ-று.

எனவே, பிறபாடைச் சொற்கள் ஈட்டுதற்கு உரிய அன்றிச் சிறுபான்மை வரும் ஆயின; [1]அவை, செப்பு, குளிரு, சிக்கு, அந்தோ என்றாற் போல்வன பிறவுமாம்.

இயல்பாகியசொல் முற்கூறிய நால்வகைச் சொல்லேயாய் நின்று செய்யுட்கு உரித்தாம்.

அவ்வியற்சொல் திரிசொல் ஆங்கால் பெரும்பான்மை பெயராகவும் சிறுபான்மை வினைத்திரி சொல்லாகவும் திரிதலன்றி இடையும் உரியுமாகத் திரிந்து வாரா.

---

1. செப்பு—தெலுங்குச்சொல் குளிரு, சிக்கு—கன்னடச் சொல், அந்தோ—சிங்களச்சொல்.

திசைச்சொல்லும் வடசொல்லும் பெரும்பான்மை பெயர்ப் பெயராயும் சிறுபான்மை தொழிற் பெயராயும் வருதலன்றி [2]ஏனையவாய்வாரா.

வெள்

இது செய்யுட்குரிய சொல் இவையெனக் கூறுகின்றது.

இ ள் : இயற்சொல்லும் திரிசொலும் திசைச்சொல்லும் வடசொல்லும் என அத்துணையே செய்யுள் செய்தற்குரிய சொல்லாவன, எ-று.

இயற் சொல்லாலும் செய்யுட் சொல்லாகிய திரிசொல் லாலுமேயன்றித் திசைச்சொல்லும் வடசொல்லும் விரவிச் சான்றோர் செய்யுள் செய்யுமாறு கண்டு ஏனை மொழிச் சொற் களும் செய்யுள் செய்தற்குரியனவோ என்று ஐயுற்றார்க்கு, இயற்சொல்முதலிய இந்நான்குமே செய்யுட்குரியன; பிறமொழிச் சொற்கள் உரியன அல்ல என்று வரையறுத்தவாறாம்.

செய்யுள் செய்தலாவது ஒருபொருள்மேல் பலசொல் கொணர்ந்து ஈட்டலாதலின் 'ஈட்டச்சொல்' என்றார்.

சிவலிங்கனார்

இளம்பூரணர், "பெயர், வினை இடை உரி எனப்பட்ட நான்கு சொல்லுமே இயற்சொல், திரிசொல், திசைச்சொல் ...... வடசொல் எனப்பட்டன; பிறவில்லை" என்றதை நோக்கச் செய்யுளுக்குத் திசைச்சொல்லிலும் வடசொல்லிலும் உள்ள இடைச்சொற்களும் உரிச்சொற்களும் உரியனவாம் என்னும் கருத்து அவர்க்குண்டு போலும் என எண்ணத்தோன்றுகிறது. அதனை நன்னூலார் பிற்காலத்தில் தெளிவுபடுத்தினார். திசை வடசொற்களின் இடையுரிச் சொற்கள் தமிழில் வாரா என்பதற் க கவே

அதுவே
இயற்சொல் திரிசொல் இயல்பிற் பெயர்வினை
என விரண்டாகும் இடையுரி யடுத்து
நான்கு மாந்திசை வடசொலணு காவழி. (நன். 270)
எனத்திசை வடசொற்களைப் பிரித்துக்கூறினார்.

2. ஏனையவாய்—வினைமுற்று முதலியவாய்

# இயற்சொல் இலக்கணம்.

392. அவற்று
ளியற்சொ றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் [1]வழா அமை யிசைக்குஞ் சொல்லே (2)

(அவற்றுள்,
இயற்சொல் தாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம் பொருள் வழா அமை இசைக்கும் சொல்லே)

ஆ. மொ. இல.

Of them,
the 'Iyarcol' - words are those which are
Used in conformity with the usage of
Tamil Land without change in their meanings.

பி. இ. நா.
நன். 271
செந்தமி ழாகித் திரியாது யார்க்கும்
தம்பொருள் விளக்கும் தன்மைய இயற்சொல்.

இ. வி. 172 ஷெ ஷெ ஷெ
தொ. வி. 43
இயற்சொல் என்பது இயல்பில் திரிபிலா
தான் எளிது எவர்க்கும் தன்பொருள் விளக்கவே.

முத்து. ஓ 49.
அவற்றுள்
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் விளக்கும் தன்மைய இயற்சொல்

இளம்

என்பது சூத்திரம் என்னுதலிற்றோவெனின், மேல் நிறுத்த முறையானே இயற்சொல்லை யின்ன வென்று இலக்கண முறைமையாற் பகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

---

1. வழாஅமை—பாடம் (சேனா. நச்.) வழாமல்-தெய்.பாடம்.

உரை : மேற்சொல்லப்பட்ட நான்கு சொல்லுள்ளும் இயற்சொல் என்று கூறப்படுவன செந்தமிழ் நிலத்தார் வழங்கும் வழக்கத்திற்குப் பொருந்தித் தத்தம் பொருளின் வழுவாமல் நடக்குஞ் சொல், எ—று.

அவை : சோறு, கூழ், பால், [1]பாளிதம் என்னுந் தொடக்கத்தன.

[2]செந்தமிழ் நிலம் என்பது வையையாற்றின் வடக்கு, மருதயாற்றின் தெற்கு, கருவூரின்கிழக்கு, மருவூரின் மேற்கு.

மற்று, இவற்றைத் தம்பொருள் வழாமை யிசைக்கும் என்பது என்னை? ஒழிந்தன தம் பொருள் வழுவுமோ வெனின், அற்றன்று; நாயை ஞமலி என்ப பூழி நாட்டார்; என்றக்கால் அச்சொல் எல்லா நாட்டாரும் [3]பட்டாங்கு உணரார்; நாய் என்பதனை யாயின் எவ்வெத்திசை நாட்டாரும் உணர்ப என்பது.

சேனா.

இ—ள். அந்நான்கனுள் இயற்சொல் என்று சொல்லப்பட்ட சொற்றாம், செந்தமிழ் நிலத்து வழக்காதற்குப் பொருந்திக் கொடுந்தமிழ் நிலத்துந் தம்பொருள் வழுவாமல் உணர்த்தும் சொல்லாம், எ—று.

அவையாவன : நிலம், நீர், தீ, வளி, சோறு, கூழ், பால், தயிர், மக்கள், மா, தெங்கு, கமுகு என்னுந் தொடக்கத்தன.

செந்தமிழ் நிலமாவன வையை யாற்றின் வடக்கும் மருத யாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்குமாம்.

திரிபின்றி இயல்பாகிய சொல்லாகலின், 'இயற்சொல்' ஆயிற்று. கொடுந்தமிழ் நிலத்திற்கும் பொதுவாகலின் இயற்சொல்லாயிற்று எனினும் அமையும். [1]நீர் என்பது ஆரியச்

---

1. பாளிதம்—தயிர்ச்சோறு.
2. இது சோழநாட்டெல்லை. இதுபற்றித் தெய்வச்சிலையார் உரைபார்க்க.
3. பட்டாங்கு — உள்ளவாறே. அதாவது சொல் காதில் பட்டவாறே.
1. நீர் என்னும் தமிழ்ச்சொல் ஆரியத்திற் சென்றது என்பதே பொருந்தும்.

சிதைவாயினும் அப்பொருட்கு அதுவே சொல்லாய்ச் செந்தமிழ் நிலத்தும் கொடுந்தமிழ் நிலத்தும் வழங்கப்படுதலான் இயற் சொல்லாயிற்று. பிறவும் இவ்வாறு வருவன இயற்சொல்லாகக் கொள்க.

தாம் என்பது கட்டுரைச் சுவைபட நின்றது.

தெய்

நிறுத்த முறையானே இயற் சொல்லாமா றுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இயற்சொல்லாவனதாம், செந்தமிழ் நாட்டு வழக் கோடு பொருந்தித் தம் பொருள் வழாமல் இசைக்குஞ் சொற்கள், எ-று.

செந்தமிழ் நாடாவது, வையையாற்றின் வடக்கும் மருத யாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்கும் என்ப. இவ்வாறு உரைத்தற்கு ஓர் இலக்கணம் காணாமை யானும் வையையாற்றின் தெற்காகிய கொற்கையும், கருவூரின் மேற்காகிய கொடுங்கோளூரும், மருதயாற்றின் வடக்காகிய காஞ்சியும் [2]தமிழ் திரிநிலமாதல் வேண்டுமாதலானும் அஃது உரையன்று என்பார் உரைக்குமாறு :—

வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடி.

என்றமையானும், இதனுள் தமிழ் கூறும் நல்லுலகம் என விசேடித்தமையானும், கிழக்கும் மேற்கும் எல்லை கூறாது தெற் கெல்லை கூறியவதனாற் குமரியின் தெற்காகிய நாடுகளை யொழித்து வேங்கடமலையின் தெற்கும் குமரியின் வடக்கும் குணகடலின் மேற்கும் குடகடலின் கிழக்குமாகிய நிலம் செந் தமிழ் நிலம் என்றுரைப்ப.

---

2. தமிழ் திரிநிலம் - கொடுந் தமிழ்நிலம் அல்லது தமிழ் திரிந்த தெலுங்கு நிலம் கன்னடநிலம் மலையாளநிலம்.

அந்நிலத்து வழக்கொடு சிவணித் தம்பொருள் வழாமல் இசைக்குஞ் சொற்களாவன :- சோறு, கூழ், மலை, மரம், உண்டான், தின்றான், ஓடினான், பாடினான் என்னுந் தொடக்கத்தன.

இவை அந்நிலத்துப்பட்ட எல்லா நாட்டினும் ஒத்து இயற லின் இயற்சொல்லாயின. இவற்றைச் செஞ்சொல் எனினும் அமையும்.

நச்

இது, நிறுத்த முறையானே இயற்சொற்கு இலக்கணம் கூறுகின்றது.

இ-ள் : அவற்றுள் இயற்சொல்தாமே-அந்நான்கனுள் இயற் சொல் என்று கூறிய சொல்தாம், செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணி-செந்தமிழ் நிலத்தின் கண்ணே வழங்குதலோடு பொருந்தி, தம்பொருள் வழாமை இசைக்கும் சொல்லே - அச்செந்தமிழ் நிலத்தும் கொடுந்தமிழ் நிலத்தும் கேட்டோர்க்குத் தத்தம் பொருள் வழுவாமல் ஒலிக்கும் சொல்லாம், எ-று.

திரிபு இன்றி இயல்பாகிய சொல்லாவன :- நிலம், நீர், தீ, வளி, சோறு, கூழ், பால், மக்கள், மரம், தெங்கு, கமுகு என்னுந் தொடக்கத்தன.

செந்தமிழ் நிலமாவது வையை யாற்றின் வடக்கும், மருத யாற்றின் தெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்குமாம்

வெள்

இஃது இயற் சொற்கு இலக்கணம் கூறுகின்றது.

இ-ள் : அவற்றுள், இயற் சொல்லாவன செந்தமிழ் நிலத் தார் வழங்கும் வழக்குடன் பொருந்தித் தம் பொருளின் வழுவா மல் நடக்கும் சொல்லாம், எ-று.

திரிபின்றி இயல்பாய்ப் பொருளுணர நிற்றலின் இயற்சொல் எனப்பட்டன. அவையாவன; நிலம், நீர், தீ, வளி, சோறு, கூழ், பால், தயிர், மக்கள், மா, தெங்கு, கமுகு என்னுந் தொடக்கத்தன.

'செந்தமிழ் நிலமாவன வையை யாற்றின் வடக்கும்மருத யாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்கும்' என்பர் இளம்பூரணர் முதலியோர். இவ்வாறு கொள்ளுதற்குத் தக்க ஆதாரம் இல்லாமையானும், வையையாற்றின் தெற்காகிய மதுரையும் கருவூரின் மேற்காகிய வஞ்சியும், மருதயாற்றின் வடக்காகிய காஞ்சியும் அன்னோர் கருத்துப்படித் தமிழ்திரி நிலமாதல் வேண்டும் ஆதலானும் அவர் கூற்றுப் பொருந்தாது. "வடவேங்கடம் தென்குமரி, ஆயிடைத் தமிழ்கூறு நல்லுகம்" எனவரும் சிறப்புப் பாயிரத்துள் வேங்கடத்திற்கும் குமரிக்கும் இடைப்பட்ட நிலப்பகுதி முழுவதையும் 'தமிழ்கூறும் நல்லுலகம்' எனப்பனம்பாரனார் கூறுதலானும், கிழக்கும் மேற்கும் எல்லை கூறாது வடக்கின் வேங்கடமும் தெற்கின் குமரியும் எல்லை கூறியதனால் வேங்கடத்தின் தெற்கும் குமரியின் வடக்கும் குணகடலின் மேற்கும் குடகடலின் கிழக்கும் ஆகிய நான்கு பேரெல்லைக்குட்பட்ட தமிழகம் முழுவதையுமே செந்தமிழ் நிலமெனத் தொல்காப்பியர் காலத் தமிழ் மக்கள் வழங்கினர் எனக்கொள்ளுதலே பொருத்தமுடையதாம் என்பது தெய்வச் சிலையார் உரையாற்புலனாம்.

ஆதித்தர்

பொருள் மாறாட்டத்துக்கு இடமின்றி யாவரும் உணரத் தக்க முறையில் பயிலப்பெறும் சொல் எல்லாம் இயற்சொல். திரிசொல் இலக்கணம்.

393. ஒருபொருட் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருட் குறித்த வொருசொல் லாகிய
மிருபாற் றென்ப திரிசொற் கிளவி.

(ஒருபொருள் குறித்த வேறுசொல் ஆகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் ஆகியும்
இருபாற்று என்ப திரிசொல் கிளவி).

ஆ. மொ. இல.

The 'Thiricol' - words are of two kinds
Which are synonyms and homonyms.

பி. இ. நூ.

நன். 272.

ஒருபொருள் குறித்த பலசொல் லாகியும்
பலபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் லாகும்.

இ. வி. 173.

ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி.

தொ .வி. 44

திரிசொல் ஒருபொருள் தெரிபல சொல்லும்
பலபொருட் கொருசொலும் பயன்படற் குரியன.

முத்து. ஒ. 50

ஒருபொருள் குறித்த பலசொல் லாகியும்
பலபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
எனஇரு பாற்றே திரிசொற் கிளவி.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், முறையானே திரிசொல் இவையென்று இலக்கணத்தாற் பகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை : ஒரு பொருளைக் கருதிப் பல சொல்லான் வருதலும் பல பொருளைக் கருதி ஒரு சொல்லான் வருதலும் என இரு கூற்றனவாகும் திரிசொற்கள், எ-று.

ஒருபொருளைக் குறித்த வேறு சொல்லாகி வருவன : [1]அடுக்கல், பிறங்கல், விண்டு, ஓங்கல் என இவை

வேறு பொருள் குறித்த ஒருசொல் உந்தி என்பது. ஆற்றிடைக் குறையும், கொப்பூழும், தேர்த்தட்டும், யாழகந்ததோர் உறுப்பும் (மனஎழுச்சியும்) என இவையெல்லாம் விளங்கி நிற்கும்.

1. இவையாவும் மலை என்னும் ஒரு பொருள் குறித்தன.

இனி, கிள்ளை, மஞ்ஞை என்னுந் தொடக்கத்தன [2]ஒருகூறு நிற்ப ஒருகூறு திரிந்தன ; உந்தி, அடுக்கல் என்னுந் தொடக்கத்தன [3]முழுவதூஉம் வேறுபடத்திரிந்தன. பிறவும் அன்ன.

சேனா

இ-ள் : ஒரு பொருள் குறித்துவரும் பல சொல்லும் பல பொருள் குறித்துவரும் ஒரு சொல்லும் என இருவகைப்படும் திரிசொல், எ-று.

வெற்பு, விலங்கல், விண்டு என்பன ஒருபொருள் குறித்த வேறு பெயர்க்கிளவி. எகினம் என்பது அன்னமும் கவரிமாவும் புளிமாவும் நாயும் உணர்த்தலானும் ; உந்தியென்பது யாழ்ப் பத்தலுறுப்பும், கொப்பூழும், தேர்த்தட்டும், கான்யாறும் உணர்த்தலானும் இவை வேறுபொருள் குறித்த ஒருசொல்.

திரி சொல்லது திரிவாவது [1]உறுப்புத் திரிதலும் முழுவதுந் திரிதலும் என இருவகைத்து. கிள்ளை, மஞ்ஞை என்பன உறுப்புத்திரிந்தன. விலங்கல், விண்டு என்பன [2]முழுவதுந் திரிந்தன. முழுவதுந்திரிந்தனவற்றைக் [2]'கட்டியவழக்கு' என்பாரும் உளர். அவை கட்டிய சொல்லாமாயின் செய்யுள் வழக்காமாறில்லை; அதனான் அவையுந்திரி வெனல் வேண்டும் என்பது.

---

2. ஒரு கூறு நிற்ப ஒரு கூறு திரிதல் - ஒரு சொல்லில் உள்ள எழுத்துகளுள் ஒன்றோ பலவோ எழுத்துக்கள் அப்படியே இருக்க ஒன்றோ பலவோ எழுத்துக்கள் மாறுபடுதல் - கிளி என்பதில் கி நிற்க ளி திரிந்து கிள்ளை எனவந்தது. ஒன்று நிற்க ஒன்று திரிந்தது. பிறவும் அன்ன.

3. முழுவதும் திரிதலாவது சொல்லே வேறு சொல்லாதல். மலை என்னும் பொருளையுணர்த்தும் சொல்லாக அடுக்கல் என்பது வந்தது காண்க.

1. உறுப்புத்திரிதல்—ஒன்று அல்லது பல எழுத்துத்திரிதல்.

2. கட்டியவழக்கு—புதியதாக ஆக்கிக்கொண்ட (சொல்) வழக்கு.

[3]அஃதேல், பல சொல் ஒரு பொருட்குரியவாதலும், ஒரு சொல் பல பொருட்குரிய வாதலும் உரிச்சொல் முதலாகிய இயற்சொற்கும் உண்மையான் அது திரிசொற்கு இலக்கணம் ஆமாறு என்னையெனின், அது திரிசொற்கு இலக்கணம் உணர்த்தியவாறன்று; அதனது பாகுபாடுணர்த்தியவாறு திரிபுடைமையே திரிசொற்கு இலக்கணமாதல் 'சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்' என்பதனாற் பெற வைத்தார். கிள்ளை மஞ்ஞை என்பன ஒரு சொல் ஒரு பொருட்குரித்தாகிய திரிசொல்லாதலின் இருபாற் றென்றல் நிரம்பா தெனின், அற்றன்று; ஆசிரியர், 'இருபாற் றென்ப திரிசொற்கிளவி' எனத் தொகை கொடுத்தாராகலின் [4]கிள்ளை மஞ்ஞை என்பனவற்றோடு ஒரு பொருட்கிளவியாய் வரும் திரிசொல் உளாவாகல் ஒன்றோ இவை [5]பிறபொருள் படுதல் ஒன்றோ இரண்டனுள் ஒன்று திட்ப முடைத்தாதல் வேண்டும். என்னை? ஆசிரியர் பிற கூறாமையின் என்பது.

திரித்துக் கொண்டது இயற்கைச் சொல்லான் இன்பம் பெறச் செய்யுளீட்டலாகாமையானன்றே? அதனால் திரி சொல் எனவே செய்யுட்குரித்தாதலும் பெறப்படும்.

தெய்

திரிசொல்லாமா றுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : ஒரு பொருள் குறித்த வேறு வேறு சொல்லாகியும், வேறு வேறு பொருள் குறித்த ஒரு சொல்லாகியும் அவ்விரு பகுதியது என்பதிரிசொல், எ-று.

எனவே, இயற் சொல்லால் உணர்த்தப்படும் பொருள் மேல் வேறுபட்ட வாய்பாட்டால் வருவன திரி சொல்லாகும் என்ற வாறாம்.

---

3. இப்பகுதிக்கு உரையிறுதியில் சிவ. விளக்கம் பார்க்க.
4. ''கிள்ளை மஞ்ஞை,..... உளவாகல்'' — கிள்ளையுடன் ஒரு பொருட் கிளவியாய் வரும் சொற்கள் தத்தை, சுகம். மஞ்ஞையுடன் ஒரு பொருட் கிளவியாய் வரும் சொல் தோகை.
5. இவை பிறபொருள்படுதல் — கிள்ளை கிளியேயன்றிக் குதிரை என்னும் பொருளும், மஞ்ஞை மயிலேயன்றிக் கோழி என்னும் பொருளும் படுதல்.

அஃதேல், உரிச்சொல்லோடி தனிடை வேறுபாடு என்னை யெனின், உரிச்சொல் குறைச் சொல்லாகிவரும்; திரிசொல் முழுச் சொல்லாகிவரும் என்க.

இதனை இயற்சொல்லைச் சார வைத்ததனால் செந்தமிழ் நாட்டுப் பட்டதேயந்தோறும் தாம் அறிகுறியிட்டாண்ட சொல் லென்று கொள்க.

[1]அவையாவன : மலை என்பதற்குக் குன்று, வரை என வும்; குளம் என்பதற்குப் பூழி, பாழி எனவும்; வயல் என்பதற்குச் செய், செறு எனவும் வருவன. இவை ஒரு பொருள் குறித்தன.

அரங்கம் என்பது யாற்றிடைக் குறையையும், ஆடும் இடத் தையும், இல்லின்கண் ஒரு பக்கத்தினையும் உணர்த்தும். துருத்தி என்பது யாற்றிடைக் குறையையும், தோற்கருவியையும் உணர்த் தும். ஆழி என்பது கடலையும், நேமியையும், வட்டத்தையும் உணர்த்தும். இவை வேறு வேறு பொருள் குறித்தன. இவ்வாறு திரிந்து வருதலிற் றிரிசொல்லாயிற்று.

நச்

இது திரிசொற்கு இலக்கணம் கூறுகின்றது.

இ-ள் : திரிசொற்கிளவி—அவ்வியற்சொல் திரிந்த திரி சொல்லாகிய சொல்லை, ஒரு பொருள் குறித்த வேறு சொல்ல கியும்—வேறு பொருள் குறித்த ஒரு சொல்லாகியும் இருபாற்று என்ப—ஒருபொருளைக் குறித்துவரும் பல சொல்லாகியும் பல பொருளைக் குறித்துவரும் ஒரு சொல்லாகியும் இருவகைப்படும் என்று கூறுவர் ஆசிரியர், எ—று.

அவ்வியற் சொல்லைத் திரிக்குங்கால் தம் எழுத்துச் சிறிது நிற்பத்திரிப்பனவும், அவ்வியற் சொல் தம்மையே பிறசொற் கொணர்ந்து முழுவதூஉம் திரிப்பனவும் என இருவகையவாம்.

---

1. பூழி நாட்டார் சிறுகுளத்தைப்பாழி யென்பர், நாட்டார் வயலைச் செறு என்பர். தெய்வச்சிலையார் செந்தமிழ் சேர்ந்த பன்னிருநிலங்களையும் தமிழ் நிலமாகவே கொண்டமையால் பாழி, செறு முதலியவற்றைத் திசைச் சொல் எனக் கொள்ளாமல் செந்தமிழ்ச் சொல்லாகக் கொண்டு இவ்வாறு எழுதினார்.

உதாரணம் : கிளி, மயில் என்பவற்றைக் 'கிள்ளை', 'மஞ்ஞை' எனச்சிறிது நிற்பத் திரித்தும், அவற்றைத் 'தத்தை', 'பிணிமுகம்' எனப்பிறசொற் கொணர்ந்து முழுவதூஉம் திரித்தும் கூறுதல். மலைக்கு, வெற்பு, விலங்கல், விண்டு என்பன முழுவதூஉந் திரித்தன. இவை ஒரு பொருள் குறித்த வேறு சொல்.

'உந்தி' என்பது யாழ்ப்பத்தலும், கொப்பூழும், தேர்த் தட்டும், கானியாற்றிடையும் உணர்த்துதல் முழுவதூஉந் திரிந்தது. இது வேறு பொருள் குறித்த ஒருசொல்.

'அளகு' என்பது கோழி, கூகை, மயில் என்னும் மூன்று சாதியிற் பெண்பாற்கும் பெயராதலின், இதுவும் வேறு பொருள் குறித்ததாம். இவை முழுவதூஉந் திரிந்தன.

இவையெல்லாம் பெயர்த்திரிசொல்.

[1]கேட்டீவாயாயின், செப்பீமின், ஈங்குவந்தீத்தாய், புகழ்ந் திகு மல்லரோ, என்மனார், என்றிசினோரே, பெறலருங் குரைத்து என்பன போல்வன வினைத்திரிசொல். இவை சிறிது நிற்பத் திரித்தன.

[2]பைங்கண், பைந்தார், பச்சிழை, காரா, சேதா என்றாற் போலும் பண்புத் தொகையாகிய சொற்களைப் பசுமை, கருமை, செம்மை எனப் பண்புப் பெயராக நிறுத்தி, ஈற்றுயிர் மெய்யும் ஈற்றயல் உயிரும் கெட்டு வரு மொழிக்கு ஏற்ப ஒற்றுத்திரிந்தும்

---

1. கேட்பாய், செப்புமின், ஈங்குவந்தாய், புகழ்ந்தா ரல்லரோ, என்ப, என்றார், பெறலரிது என்பன இவற்றின் இயற்சொற்கள்.

2. பசுமை + கண் = பசு + கண்→ ப + கண்→ பை + கண் பைங் + கண் = பைங்கண். பசுமை + தார் இப்படியே
பசுமை + இழை = பசு + இழை→ பச் + இழை → பச்ச் + இழை→பச்சிழை
கருமை + ஆ → கரு + ஆ→கர் + ஆ→ கார் + ஆ→காரா.
செம்மை + ஆ→செம் + ஆ→செத் + ஆ→சேத் + ஆ → சேதா. இப்படிப் பிரித்துத்திரித்தல் கூடாது. கூடும் என இலக்கணம் கூறியவர் நச்சினார்க்கினியருக்குப் பின் வந்த பவணந்தியார். "ஈறு போதல் இடையுகரம் இ ஆதல்" (நன். ) என்பது அவர் சூத்திரம்.

திரியாதும் ஆதி நின்ற அகரம் ஐகாரமாயும் திரிந்தன என்றும், ஈற்றுயிர் மெய்யும் ஈற்றயல் உயிரும் கெட்டு ஆதி நீண்டது என்றும், ஈற்றுயிர் மெய்யும் இடையில் ஒற்றும் கெட்டு ஆதி நீண்டது என்றும் பின்னுள்ளோர் சந்தி முடிக்கின்றது பொருந்தாது என்னை? 'பைங்கண்' என்புழிப் 'பசியதாகிய கண்' எனப் பண்பு உணர்த்தும் ஈற்றை விரித்தல் அன்றிப் 'பசுமைக்கண்' எனத் தாம் தொகுத்த பண்புப் பெயரை விரித்தலாகாமையின், இவை செய்யுட்குப் புலவர் சிறிது நிற்பத் திரித்துக் கொண்ட பெயரெச்ச வினைக்குறிப்புப் பெயரென்று உணர்க. எழுத்ததிகாரத்துச் செய்யுட்கு இவ்வாறு முடிக்க என ஆசிரியர் முடிபு கூறியவற்றை எல்லாம் 'செய்யுள் முடிபு' எனக் கூறலும், வழக்குச் சொல் இவ்வாறு திரிந்து வந்தனவற்றை 'வினைத்திரி சொல்' என்று பெயர் கூறலும் ஆசிரியர் கருத்தாம்.

இடையும் உரியும் திரிசொல்லாய் வருமேனும் உணர்க.

வெள்

இது திரிசொற்கு இலக்கணம் கூறுகின்றது.

இ-ள் : ஒரு பொருள் குறித்துவரும் பல சொல்லும் பல பொருள் குறித்துவரும் ஒரு சொல்லும் என இருவகையினையுடையது திரிசொல் என்பர் ஆசிரியர், எ-று.

உ-ம் வெற்பு, விலங்கல், விண்டு என்பன 'மலை' என்னும் ஒரு பொருள் குறித்த பல பெயர்த்திரி சொல். 'எகினம்' என்பது, அன்னம், கவரிமா, புளி, நீர்நாய் என்னும் பல பொருள் குறித்த ஒரு பெயர்த் திரி சொல்.

படர்ந்தான் சென்றான் என்றற் றொடக்கத்தன ஒரு பொருள் குறித்த பல வினைத் திரிசொல். துஞ்சினார், ஒதுங்கினார், மாண்டது என்றற் றொடக்கத்தன பல தொழில் குறித்த ஒரு வினைத் திரிசொல்.

தில், மன், மற்று, கொல் என்னுந் தொடக்கத்தன பல பொருள் கருதிய ஓரிடைத்திரி சொல்.

கடியென் கிளவி முதலாயின பல குணந்தழுவிய ஓர் உரித் திரி சொல்.

ஆதி

களபம், மாதங்கம், கைம்மா, கடமா, பகடு — இவை யானையைக் குறிக்கும் வெவ்வேறு சொற்கள். 'கடி' வேறு வேறு பொருள் தரும் ஒரு சொல்.

திரிசொல் இடங்கண்டு நாம் பொருள் கொள்ளுமாறு உள்ள சொல்.

சுப்பிரமணிய சாஸ்திரியார்

சேனாவரையத்திற் கூறப்பட்ட 'கிள்ளை, மஞ்ஞை என்பன ஒரு சொல் ஒரு பொருட்குரித்தாகிய திரிசொல்லாதலின் இருபாற்றென்றல் நிரம்பாது எனின்' என்ற ஆசங்கைக்கு மூலம், ஒரு சொல்லே ஒரு பொருள் குறித்த வேறு கிளவியாயும் வேறு பொருள் குறித்த ஒரு சொல்லாயும் இருப்பினே அது திரிசொல்லாகும் என்று சூத்திரத்திற்குப் பொருள் என்ற கருத்துப்பற்றி. அவ்வாசங்கைக்கு விடை, திரிசொல் என்பது ஒரு பொருள் குறித்த வேறு கிளவியாகவேனும் வேறு பொருள் குறித்த ஒரு சொல்லாகவேனும் இருக்கும் என்பதே.

சிவலிங்கனார் (சேனாவரையம் : "அஃதேல்......கூறாமையின் என்பது"—விளக்கம்)

1. இச்சூத்திரம் "திரிசொல்லானது ஒரு பொருள் குறித்த பல சொல்லாகியும் பலபொருள் குறித்த ஒரு சொல்லாகியும் வரும்" என்பது உணர்த்தியது. இதனால் இவ்விருவகையது திரிசொல் எனப்படும். இது அதாவது இவ்விருவகைப்படுவது திரிசொற்கு இலக்கணம் என்றால், உரிச்சொல்லும் ஒரு பொருள் குறித்த பல சொல்லாகியும் பல பொருள் குறித்த ஒரு சொல்லாகியும் வரும் என்று கூறப்படுதலின் உரிச் சொல்லும் திரிசொல் ஆகுமா?—இது வினா.

விடை : இச்சூத்திரம் திரிசொல்லாவது யாது என இலக்கணம் கூறவில்லை. திரிசொல் இரண்டுவகைப்படும் என்றே கூறுகிறது.

2. அப்படியானால் திரிசொல் இலக்கணம் எங்குக் கூறப்பட்டது - இதுவினா.

விடை : திரிசொல் என்ற சொல்லே திரிந்து வரும் சொல் என்ற பொருள்தருதலின் அச்சொல்லிலேயே பொருள் வெளிப்படையாகப் பொருந்தியுள்ளது. இப்படிச் சொற்பொருள் இலக்கணத்தினைச் சொல்லிலேயே தெரியும் படியாக அமைப்பது, 'சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்' என்னும் உத்தியினாலாகும்.

3. ஒரு சொல், ஒருபொருளைக் குறிக்கும்—இதுஇயற்சொல், ஒரு சொல் பல பொருளைக் குறிக்கும்; பல சொல் ஒருபொருளைக் குறிக்கும்; இவை திரிசொல். நீவிர் (சேனாவரையர்) கிள்ளை, மஞ்ஞை என்பன உறுப்புத்திரிந்த திரி சொல்லுக்கு உதாரணம் காட்டியுள்ளீர். அவை கிளி, மயில் என்னும் ஒரு பொருளைத்தானே காட்டுகின்றன? திரிசொல்லின் வகையிரண்டனுள் அடங்கவில்லையே?-இதுவினா.

விடை : ஆசிரியர் திரிசொல் இருபாற்று என்ப என வகைப்படுத்திவிட்டார். கிள்ளை, மஞ்ஞை என்பன வெளிப்படையாகப் பொருள்காட்டவில்லை என்பதால் திரிசொல் எனல் வேண்டும். ஆனால் இருவகையில் எதில் அடக்கவேண்டும் என நாம் பார்க்க வேண்டும். கிள்ளை என நான் இங்குத்தனிச் சொல்லைக்கூறியிருந்தாலும் அதனுடன் கிளிஎன்னும் பொருளைத் தரக்கூடிய தத்தை முதலிய சொற்களைச் சேர்த்துக்கிள்ளை, தத்தை என்பன கிளி என்னும் ஒரு பொருள் குறித்த திரி சொற்கள் என்று விளக்கம் கொள்ளல் வேண்டும். மயிலைக் குறிக்கும் மஞ்ஞை என்பதை மட்டும் கூறியிருந்தாலும் மஞ்ஞை, தோகை முதலிய சொற்களைச் சேர்த்து, மஞ்ஞை, தோகை என்பன மயில் என்னும் ஒரு பொருள் குறித்த திரிசொற்கள் என்று விளக்கம் கொள்ளல் வேண்டும்.

அல்லது கிளியை யுணர்த்தும் கிள்ளை என்ற சொல்லே குதிரையையும் உணர்த்துமாகலின் கிள்ளை என்பது பல பொருள் குறித்த திரிசொல் என்று கொள்ள வேண்டும். அவ்வாறே மயிலையுணர்த்தும் மஞ்ஞை என்ற சொல்லே கோழியையும் உணர்த்துமாகலின் மஞ்ஞை என்பது பலபொருள் குறித்த திரிசொல் என்று கொள்ள வேண்டும்.

திரிசொல்—சங்கர நமச்சிவாயர் கூற்று (மிகப் பொருந்தும்.)

''இயற்சொல் திரிசொல் என்றது அவற்றின் எழுத்துகள்

திரியாமையும் திரிந்தமையும் கருதியன்று. வானரத்தின் முகம் தன் இயல்பாய் இருந்ததேனும் நரர் முகச்செல்விக்கு மறுதலைப்பட்டமை கருதி 'வலிமுகம்' எனப்பட்டது போலக்கல்வி யேதுவானன்றி இயல்பாகத் தம் பொருளை யுணர நிற்றலின் இயற்சொல் என்றும், அவ்வியல்பிற்கு மறு தலைப்பட்டுக் கல்வியேதுவால் தம்பொருளையுணர நிற்ற லின் திரிசொல் என்றும் கூறப்பட்டது என்க'' (நன். பெயரியல் 15-உரை).

கா. மீனாட்சி சுந்தரம்.

கற்ற அறிஞர்களால் ஆக்கிக்கொள்ளப்பட்ட சொற்களே திரிசொற்கள் என்ற கருத்து உரையாசிரியர்கள் சிலரிடம் இருந்திருக்க வேண்டும் என்பது சேனாவரையர் உரையிலிருந்து தெரிகிறது. முழுவதும் திரிந்த வற்றைக் கட்டிய வழக்கு என் பாரும் உளர் எனச் சேனாவரையர் குறிக்கின்றார். கட்டிய வழக்கு என்பது ஆக்கிக் கொள்ளப்பட்ட வழக்கு என்ற பொருளைத்தரும். ஆதலால் இந்நூற்பாவிற்கு அறிஞர்கள் அமைத்துக்கொண்ட சிறப்புச் சொற்களே திரிசொல் ஆகும் எனக்கூறும் உரையாசிரியர்களும் இக்கருத்தினர் என்பதும் தெளிவு. எனவே சிறப்பு மொழி என்பதும் திரிசொல் என்பதும் ஒருங்கு வைத்து எண்ணத் தகுந்தவை என்பது என்கருத்தாகும்.

பொது மொழியிலிருந்து சிறப்பு மொழி பிறக்கலாம். கற்றுத்துறை போகியவர்கள் ஒரே சொல்லைப் பொதுப் பொருளி லிருந்து பிரித்துச் சிறப்புப் பொருள்களில் பயன்படுத்தலாம். அப்போது, ஒருசொல் பல பொருளைக் கொண்ட தாகின்றது. ஒரே சொல்லை ஆகுபெயராகவும் உருவகமாகவும் வழங்கி னால் பொருள் வேறுபடுகின்ற தன்றோ ? மேலும் பொது மொழிச் சொற்களை ஒருவரையறுத்த பொருளில் கலைச்சொற் களாக அறிஞர்கள் அமைத்துக் கொள்கின்றனர். ஒரே பொருளைக் குறிக்கப் பல சொற்களை ஆக்கிக்கொள்வதும் உண்டு இவ்வாறு அமைகின்ற சொற்களைச் சிறப்பு மொழிச் சொற்கள் என்று மொழி நூலார் விரித்துக்காட்டுகின்றனர்.

(சொற்பகுப்பு-அன்றும் இன்றும்-ஆய்வுக்கோவை-5 1973).

செ. வை. சண்முகம்

பெயர் என்பது உலக வழக்கில் ஆள் பெயரையும் இலக்கணத்தில் பெயர்ச் சொல்லையும் குறிக்கும். முன்னது இயற்சொல்; பின்னது திரிசொல். இயற்சொல்லாய் ஒரு பொருள் குறித்த ஒரு சொல்லாய் இருந்தது, திரிசொல்லாகிப் பல பொருள் குறித்த ஒரு சொல்லாக மாறிவிட்டது. அப்படியே முல்லையென்பது செடி. பூ என்ற தொடர்புடைய பொருளை (ஆகு பெயராக) இயற்சொல்லைக் குறித்தது. அகப்பொருளில் இருத்தல் என்ற பொருளைக் குறிக்கப் பயன்படுத்தியதும் திரிசொல்லாகிவிட்டது. குறிஞ்சி நெய்தல் பாலை போன்ற பூப் பெயர்களும் ஐந்திணைப் பெயர்களாகப் பயன்படும்போது திரிசொல்லாகவும் பல பொருள் ஒரு சொல்லாகவும் ஆகிவிட்டன. திரிசொல்லாக மாறியதும் அந்தச் சொல்லுக்கு இன்னொரு புதிய பொருள் சேர்ந்து விடுகிறது.

நெருநல் (நேற்று) என்று இயற்சொல் குறிக்கும் பொருளை இலக்கணத்தில் இறந்த காலம் என்று கூறுகின்றார்கள்· இது ஒரு பொருள் குறித்த பல சொல்லாகும். இன்று என்பது நிகழ்காலம் என்பதும், நாளை என்பது எதிர்காலம் என்பதும் இந்த வகையைச் சார்ந்தனவே. கணவனுடன் சேர்ந்து வாழும் வாழ்க்கை இல்வாழ்க்கை அல்லது இல்லறம் என்று குறிப்பிடுவதே அகப் பொருளில் கற்பு எனப்படுகிறது. எனவே இல் வாழ்க்கை, கற்பு என்ற இரண்டும் ஒரு பொருள் குறித்த பல சொல் ஆகும்.

அடுத்துத் திரிசொல் என்பது செய்யுள் ஈட்டச் சொல்லாக உரை நடையில் மட்டும் அல்லாமல் கவிதையிலும் கூடப் பயன் படுத்தப் படுகிறது. உயர்திணை என்ற இலக்கணத் திரிசொல் 'ஊமையான மனிதன்' என்ற கருத்தைக் குறிக்க 'உயர்திணை யூமன்' என்று குறுந்தொகையில் (224) வழங்கியிருப்பதும் சுட்டிக் காட்டத் தகுந்தது. எனவே செய்யுள் என்ற பொதுப் பொருளுக்கு ஏற்பத் திரிசொல் செய்யுள் இலக்கியத்தில் சிறுபான்மையும் உரை நடையில் சிறப்பாக இலக்கியம் தவிரப் பிற துறைகளில் பெரும்பான்மையும் வழங்குகிறது.

ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உருவென் றாலவ்
வுருவையிஃ தொருத்தன் என்கோ ஒருத்தி யென்கோ

இருவருக்கும் உரித்தாக ஒருவர் எல்றோர்
இயற்சொல் இலதெனின் மற்றென்சொல் கேனே
(குமரகுருபரர்-சிதம்பரச் செய்யுட்கோவை. 54)

என்ற பாடலில் இயற்சொல் என்ற கலைச்சொல் திரிசொல்லாகச் செய்யுளில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

(சொல்லிலக்கணக் கோட்பாடு தொல்காப்பியம் முதற் பகுதி (பக்-84-85) 1984. அனைத்திந்தியத் தமிழ் மொழியியல் கழகம், அண்ணாமலைநகர்)

## திசைச்சொல் இலக்கணம்

394 செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தினுந்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி. (4)

(செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தினும்
தம்குறிப் பினவே திசைச்சொல் கிளவி)

ஆ. மொ. இல.

'Thisaiccol' or the dialectal words are those which are spoken with their meanings unchanged in the twelve divissions of Tamil land where correct Tamil is in use.

பி. இ. நா:

நன். 273.

செந்தமிழ் நிலம்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற் றிரண்டினில் தமிழொழி நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொல் என்ப

இ. வி. 174 ஷை ஷை ஷை

முத்து. ஒ. 52.

செந்தமிழ் நிலனைச் சேர்ந்த ஈராறு
நிலத்தினும் தங்குறிப்பின திசைக்கிளவி.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்தமுறையானே திசைச்சொல் இவையென இலக்கணத்தாற் பகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை : செந்தமிழ் நாட்டை [1] அடையும் புடையும் கிடந்த பன்னிரு நிலத்தார்தம் குறிப்பினையே இலக்கணமாகவுடைய திசைச்சொற் கிளவிகள் எ—று.

வரலாறு : தாயைத் 'தள்ளை' என்ப குடநாட்டார்
நாயை 'ஞமலி' என்ப பூழிநாட்டார். பிறவும்
அன்ன.

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலமாவன :

[2]பொதுங்கர் நாடு, தென்பாண்டிநாடு, ஒளிநாடு, குட்டநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு, பூழிநாடு, மலைநாடு, அருவாநாடு, அருவா வடதலைநாடு,, [3]குடநாடு என இவை.

'தங்குறிப்பினவே' என்றது அவை ஒரு வாய்பாட்டவே யல்ல; தத்தம் மரபினும் பின் வேறு வேறு வாய்பாட்ட என்றற்கும், அவர் எவ்வாறு குறித்து வழங்கினாரோ அஃதே அவற்றிற்கு இலக்கணம் என்றற்கும் என்பது.

சேனா.

இ—ள் : செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு நிலத்துந் தாங் குறித்த பொருள் விளக்குந் திசைச்சொல், எ-று என்றது, அவ்வந்நிலத்துத் தாம் குறித்த பொருள் விளக்குவதல்லது. அவ்வியற்சொல் போல எந்நிலத்தும் தம் பொருள் விளக்கா என்றவாறாம்.

பன்னிரு நிலமாவன : பொங்கர்நாடு, ஒளிநாடு, தென்பாண்டி நாடு, குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு,

---

1. அடையும் புடையும் கிடந்த - அடைந்தும் (சேர்ந்தும்) பக்கத்தும் கிடந்த
2. பொங்கர்நாடு—சேனா. பாடம்
3. சில பிரதிகளில் இது வெற்றிடமாக விடப்பட்டுள்ளது என்னும் கழகப்பதிப்பு (1973)

பூழிநாடு, மலைநாடு, அருவாநாடு, அருவா வடதலை எனச் செந்தமிழ்நாட்டுத் தென்கீழ்பான் முதலாக வடகீழ்பாலிறுதியாக எண்ணிக் கொள்க.

தென்பாண்டி நாட்டார் ஆ, எருமை என்பவற்றைப் பெற்றம் என்றும், தம்மாமி என்பதனைத் தந்துவை யென்றும் வழங்குப. பிறவும் அன்ன.

[4]தங்குறிப்பின என்று தனிமொழி தம்பொருள் உணர்த்து மாற்றுக்குச் சொல்லினார்; இருமொழி தொடருமிடத்துத் தள்ளை வந்தான் என வேண்டியவாறு வரப்பெறும் என்றாரல்லர் என்பது.

தெய்

திசைச்சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று

இ-ள் : செந்தமிழ் நாட்டைச் சேர்ந்த பன்னிரு நிலத்து முன்ளார் தத்தங் குறிப்பினையுடையது திசைச் சொல்லாகிய சொல், எ-று.

பன்னிருநிலமாவன : வையையாற்றின் தென்கிழக்காகிய பொதுங்கர்நாடு, ஒளிநாடு, தென்பாண்டி நாடு, கருங்குட்டநாடு குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு, பூழிநாடு, மலாடு, அருவா நாடு, அருவாவடதலை என்பன. இவை செந்தமிழ் நாட்டகத்த.

---

4. தங்குறிப்பின-குறிப்பால் தத்தம் பொருள் உணர்த்துவன. திசைச்சொற்கள் அவ்வத்திசைகளில் இயற்சொல்லாக இருப்பினும் தமிழ் நிலத்தில் அவ்வியற் சொற்பொருளையே குறிப்பால் உணர்த்தும் என்றது தனிமொழியைப் பற்றியதேயன்றி தொடர்மொழியைப் பற்றியதன்று தள்ளை எனும் திசைசொல் தாய் என்னும் பொருள் தருவது. அது தமிழ்நாட்டில் வந்து வழங்குங்காலும் குறிப்பால் தாய் என்னும் பொருளே தரும். தொடர் மொழியில் அது வருங்கால் தள்ளை வந்தாள் என்று வரவேண்டுமே தவிர 'தள்ளைவந்தான்' என ஆண் பால் வினைமுற்றுடன் வந்தால் குறிப்பாகத் 'தாய் வந்தாள்' எனப்பொருள் கொள்ள வேண்டும் என்று கூறினாரல்லர். தள்ளைவந்தாள் என்றே கூற வேண்டும்.

செந்தமிழ் சேர்ந்த நாடென்றமையால், பிறநாடாகல் வேண்டும் என்பார் உதாரணம் காட்டுமாறு :-

"கன்னித் தென்கரைக் கடற்பழந் தீபம்
கொல்லங் கூபகம் சிங்களம் என்னும்
எல்லையின் புறத்தவும் கன்னடம் வடுகம்
கலிங்கம் தெலுங்கம் கொங்கணம் துளுவம்
குடகம் குன்றகம்"

என்பன.

"குடபா லிருபுறச் சையத்துட னுறையுபு கூருந் தமிழ்திரி நிலங்களும், முடியுடை மூவர் இருநில ஆட்சியின் அரசுமேம் பட்ட குறுநிலக் குடுமிகள், பதின்மரும் உடனிருப்பிருவரும் படைத்த, பன்னிருதிசையில் சொன்னய முடையவும், என்பது அகத்தியச் சூத்திரம். இதனுள் எல்லையின் புறத்தவும், தமிழ்திரி நிலங்களுமாகிய பன்னிரு அரசரும் படைத்த பன்னிரு தேயத்தினும் தமிழ்ச் சொல்லாதற்கு விருப்புடையனவும் என்ற மையானும், "தமிழ்கூறு நல்லுலகத்து, வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின் எழுந்துஞ் சொல்லும் பொருளும் நாடி" என நிறுத்துப் பின்னும் "செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத் தொடு முந்து நூல்கண்டு" என ஓதிய வதனால், சிவணிய நிலமாவது எல்லை குறித்த நிலத்தைச் சார்ந்த நிலம் என வேண்டுதலானும், பன்னிரு நிலமாவன :- குமரியாற்றின் தென் கரைப்பட்ட பழந்தீபமும் கொல்லமும் கூபகமும் சிங்களமும், சையத்தின் மேற்குப்பட்ட கொங்கணமும் துளுவமும் குடகமும் குன்றகமும், கிழக்குப்பட்ட கருநடமும் வடுகும் தெலுங்கும் கலிங்கமும் என்று கொள்ளப்படும்.

இவற்றுள் கூபகமும் கொல்லமும் கடல் கொள்ளப்படு தலின், குமரியாற்றின் வடகரைக்கண் அப்பெயரானே கொல்ல மெனக் குடியேறினார் போலும். பஞ்சத் திராவிடம் எனவும் வடநாட்டார் உரைப்ப வாகலான் அவையைந்தும் வேங்கடத் தின் தெற்காதலும் கூடாமையுணர்க.

அந்நிலத்து வழங்குஞ் சொல்லாகிச் செஞ்சொல்லின் வேறு பட்டுச் சான்றோர் செய்யுளகத்து வருவன நீக்கப்படா, எ-று.

[1]'குடாவடியுளியம்' என்றவழிக் 'குடா' என்பது குடகத்தார் [2]பிள்ளைகட்கு இட்டபெயர். 'அந்தோ' என்பது 'ஐயோ' என்பதற் கிட்ட பெயர். 'யான் தற்கரைய வந்து' என்றவழிக் கரைதல் என்பது கருநாடர் விளிப்பொருள் உணரக் கூறுவது. செப்பு என்பது வடுகர் சொல்லுதற்குப் பெயராக வழங்குவது. பாண்டில் என்பது தெலிங்கர் பசுவிற்கும் எருத்திற்கும் பெயராக வழங்குவது. கொக்கு என்பது துளுவர் [3]மாவுக்குப் பெயராக வழங்குவது. பிறவும் இவ்வாறு வருவன பலவற்றையும் வந்தவழிக் கண்டு கொள்க.

நச்

இது திசைச்சொற்கு இலக்கணம் கூறுகின்றது.

இ-ள் : திசைச் சொற்கிளவி—திசைச் சொல்லாகிய சொல், செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும் தம் குறிப்பினவே-செந்தமிழ்நாட்டைச் சூழ்ந்த பன்னிரண்டு நிலத்தும் பன்னிரண்டையும் புறம் சூழ்ந்த பன்னிரண்டு நிலத்தும் தாம் தாம் குறித்த பொருளையே விளக்கும் தன்மையை யுடையன, எ-று.

உம்மையை எச்சவும்மையாக்கிப் பொருள் உரைக்க. எனவே, இயற்சொற் போல எந்நிலத்தும் தம் பொருள் விளக்காவாயின.

பன்னிரு நிலமாவன : பொங்கர்நாடு, ஒளிநாடு, தென்பாண்டிநாடு, குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு, பூழி நாடு, மலையமானாடு, அருவாநாடு, அருவா வடதலை எனத் தென்கீழ்பால் முதலாக வடகீழ் பால் ஈறாக எண்ணுக.

இனிப் பன்னிரண்டையும் சூழ்ந்த பன்னிரண்டாவன : சிங்களமும், பழந்தீவும், கொல்லமும், கூபமும், கொங்கணமும், துளுவும், குடகமும், கருநடமும், கூடமும், வடுகும், தெலுங்கும், கலிங்கமும் ஆம்.

தென்பாண்டி நாட்டார் ஆ, எருமை என்பனவற்றைப் 'பெற்றம்' என்றும், குட்ட நாட்டார் தாயைத் 'தள்ளை'

---

1. திருமுருகாற்றுப்படை 318.
2. பிள்ளைகள்-சிறுவர்கள்
3. மா-மாமரம்.

என்றும் நாயை 'ஞெள்ளை' என்றும், குட நாட்டார் தந்தையை அச்சன் என்றும், கற்கா நாட்டார் வஞ்சரைக் 'கையர்' என்னும், சீதநாட்டார் 'ஏடா' என்பதனை 'எலுவன்' என்றும், தோழியை 'இகுளை' என்றும், தம்மாமி என்பதனைத் 'தந்துவை' என்றும், பூழி நாட்டார் நாயை 'ஞமலி' என்றும், சிறு குளத்தைப் 'பாழி' என்றும், அருவா நாட்டார் செய்யைச் 'செறு' என்றும், சிறுகுளத்தைக் 'கேணி' என்றும், அருவா வடதலையார் குறுணியைக் 'குட்டை' என்றும் வழங்குப.

இனிச் சிங்களம் 'அந்தோ' என்பது. கருநடம் [1]'கரைய' சிக்க, குளிர' என்பன. வடுகு 'செப்பு' என்பது தெலுங்கு எருத்தைப் 'பாண்டில்' என்பது. துளு மாமரத்தைக் 'கொக்கு' என்பது.

ஒழிந்தவற்றிக்கும் வந்தவழிக் காண்க.

வெள்

இது திசைச்சொற்கு இலக்கணம் கூறுகின்றது.

இ-ள் : செந்தமிழ் வழக்கைப் பொருந்திய பன்னிரு நிலங்களிலும் அவ்வந்நிலத்து வாழ்வார்தம் குறிப்பினையே பொருளாகக் கொண்டு வழங்குவன திசைச்சொற்களாம், எ-று.

வடவேங்கடம் தென்குமரி யிடைப்பட்ட தமிழகம் தொல்காப்பியனார் காலத்துப் பன்னிரு நிலங்களாகப் பகுக்கப்பட்டிருந்த தென்பது 'செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்' என்னும் இச்சூத்திரத் தொடராற் புலனாம்.........

ஆதி

பிற மொழிச் சொற்கள் தமிழில் வருவனவற்றைத் திசைச்சொல் என்பதேசாலும். ஏன் ? அவை பிற திசைகளிலிருந்து வந்தவையாதலின். மோட்டார், விற்றர்கில்லோ, மீற்றர், பென்.

---

1. கரை—அழை, கூப்பிடு. சிக்க—சிறிய

சுப்.

உரையாசிரியர் 'பொதுங்கர் நாடு' என்றும் சேனாவரையர் 'பொங்கர் நாடு' என்றும் கூறுகின்றனர். ஒரு கால் 'பொதுங்கர்' என்பதில் 'து' என்பது விடுபட்டுப் 'பொங்கர்' என்று எழுதப் பட்டிருக்கலாம்.

சிவ.

சூத்திரப் பொருள் : செந்தமிழ் மொழி சேர்ந்துள்ள பன்னிரு நிலத்தினும் வழங்கும் சொற்கள், அந்த அந்த நிலத்தில் குறிக்கும் பொருள்கள் அங்கங்குள்ளார். யாவர்க்கும் எளிதில் விளங்கக் கூடியனவாய இயற்சொற்களே ; அவை அடுத்த நிலத்தார்க்குப் பொருள் விளங்க அரியவாயிருப்பின் அச்சொற்கள் திரிசொற் களாகும்

'செந்தமிழ் நிலம் சேர்பன்னிரு நிலம்' என்பதற்குச் செந் தமிழ் நாட்டைச் சேர்ந்த பிற பன்னிரு நிலங்கள் என்பது பொருளன்று. செந்தமிழ் மொழி வழங்கும் பன்னிரு நிலம் என்பதே பொருள். 'செந்தமிழ் சேர் ஏதமில் - பன்னிருநாடு' என்பதற்கும் இதுவே பொருளாகக் கொள்க. தென்பாண்டி என்றது தமிழகத் தெற்கின் கண்ணதாகிய பாண்டியநாட்டு நிலம் எனப் பொருள் கொள்க. ஒரு நிலத்து வழங்கும் ஒரு சொல் தனக்குரிய பொருளைப் பிறிதொருநிலத்து எளிதில் புலப்படுத்தாதாயின் அது தன் நிலத்துக்கு இயற் சொல்லாகவும் பிற நிலத்துக்குத் திசைச் சொல்லாகவும் ஆம். சிரட்டை என்னும் சொல் பாண்டிய நாட்டில் தேங்காய் ஓட்டைக்குறிக்கும் இயற் சொல். அது தொண்டை நாட்டில் வழங்குவதன்று. அச்சொல் செய்யுளில்-தொண்டை நாட்டுப் புலவன் ஆளின் திசைச் சொல்லாகும். செய்யுளில் வரும் திசைச் சொற்கள் சிலர்க்கு இயற்சொல்லாகவும் சிலர்க்கு அரிதான திசைச்சொல்லாகவும் காணப்படற்கு இதுவே காரணம் என்க. சில திரி சொற்களும் திசைச் சொற்கள் போலவே இயற்சொல் திரிசொல் என அமையும்.

# வடசொல் தமிழில் வழங்குமாறு

395. வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
யெழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே (5)
(வடசொல் கிளவி வடஎழுத்து ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல் ஆகும்மே).

ஆ. மொ : இல.

The words of Northern language ('Vadacol')
become fit to be used in Tamil
when they adopt the Tamil phonetics
discarding their northern ones

பி. இ. நூ.

நன் 274.

பொதுவெழுத் தானும் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானும் இயைவன வடசொல்

இ. வி. 175. ஷ ஷ ஷ

இல்க்கணக்கொத்து 87, 88.

பொதுவெழுத் தானும் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானும் இயைந்து மொழி பெயர்ந்தும்
பொதுவெழுத் துள்ளும் பொதுவாய்த் திரிந்தும்
தமிழ்ச்சிறப் பெழுத்து ஐந்தானும் திரிந்து
மொழிமுதல் இடைகடை எனுமூன் றிடத்தும்
தோன்றல் முதலா விகாரம் தோன்றியும்
வருமே தமிழில் வடமொழி யென்க.

பொதுவெழுத் தானும் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானும் இலங்கும் தமிழ்மொழி.

முத்து. ஒ. 51

பொதுவெழுத் தானும் சிறப்பெழுந் தானும்
ஈரெழுத் தானும் இயைவன வடசொல்

இளம்

இச்சூத்திரம் நிறுத்த முறையானே வடசொல் இவை என்ற வற்றிற்கு இலக்கணத்தான் அறிய உணர்த்துதல் நுதலிற்று.

உரை : வடசொற்கிளவி என்று சொல்லப்படுவது ஆரியத் திற்கே யுரிய எழுத்தினை ஒரீஇ இருதிறத்தார்க்கும் பொதுவாய எழுத்தினை யுறுப்பாக வுடைய வாகுஞ்சொல், எ-று

அவை உலகம், குங்குமம், [1]நற்குணம் என்னுந் தொடக் கத்தன.

குங்குமம் என்றவிடத்து இருசார்க்கும் பொதுவெழுத் தினான் வருதலுடைமையும் ஆரியத்தாலும் தமிழாலும் ஒரு பொருட்கே உரியவாகி வழங்கி வருதலுடைமையும் அறிக.

சேனா

இ-ள் : வடசொற்கிளவியாவது வடசொற்கே உரியவெனப் படும். சிறப்பெழுத்தனீங்கி இருசார்மொழிக்கும் பொதுவாகிய எழுத்தானியன்ற சொல்லாம், எ-று.

எனவே, பொதுவெழுத்தானியன்ற வடசொல்லும் செய்யுட் செய்தற்குச் சொல்லாம் என்றவாறாயிற்று.

அவை : வாரி, மேரு, குங்குமம், மணி என்னுந் தொடக் கத்தன.

[2]'வடசொல்லாவது வடசொல்லோ டொக்கும் தமிழ்ச் சொல்' என்றாரால் உரையாசிரியர் எனின், அற்றன்று; ஒக்கும் என்று

1. நற்குணம் என்பதில் உள்ள நல் என்பது ஆரியத்தில் இல்லை. ஆரியத்தில் சத்குணம் என்பதே உண்டு. இளம்பூரணர்காலத்தில் நற்குணம் ஆரியத்தும் காணப் பட்டது போலும்.

௨. 'வடசொல்லாவது........ உரையாசிரியர் எனின்'' இத் தொடர் இளம் பூரணத்தில் இல்லை. என்றாலும் இத் தொடர்க் கருத்துண்டு. அதை ''இயற்சொல் திரிசொல்'' (சொல்.391)என்னும் சூத்திரத்தில் 'வடசொல் என்பது ஆரியச் சொற்போலும் சொல்' என்று அவர் கூறிய தால் அறியலாம். உரையாசிரியர் இளம் பூரணரல்லர் என்பதற்கு இத்தொடரும் ஒரு சான்று.

சொல்லப்படுவன ஒரு புடையான் ஒப்புமையும் வேற்றுமையும் உடைமையான் இரண்டாதல் வேண்டும். இவை எழுத்தானும் பொருளானும் வேறுபாடின்மையாகிய ஒரு சொல் இலக்கண முடைமையான் இரண்டு சொல் எனப்படா. அதனான் ஒத்தல் யாண்டையது? ஒரு சொல்லேயாம் என்பது. [2] ஒரு சொல் லாயினும் ஆரியமும் தமிழுமாகிய இடவேற்றுமையான் வேறா யினவெனின், அவ்வாறாயின் வழக்குஞ் செய்யுளுமாகிய இட வேற்றுமையாற் சோறு கூழ் என்னும் தொடக்கத்தனவும் இரண்டு சொல்லாவான் செல்லும்; அதனான் இடவேற்றுமை யுடைய வேனும் ஒரு சொல் இலக்கணம் உடைமையான் ஒரு சொல்லேயாம். ஒரு சொல்லாயவழித் தமிழ்ச்சொல் வட பாடைக்கட் செல்லாமையானும், வடசொல் எல்லாத் தேயத்துக் கும் பொதுவாகலானும் இவை வடசொல்லாய் ஈண்டு வழங்கப் பட்டன வெனல் வேண்டும்; அதனான் அது போலியுரை யென்க. அல்லதூஉம் அவை தமிழ்ச் சொல்லாயின் 'வடவெழுத் தொரீஇ, யென்றல் பொருந்தாமையானும் வடசொல்லாதலறிக.

தெய்

வடசொற் கிளவியாமாறுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வடசொல்லாகிய சொல்லாவது வடமொழிக்கே யுரியவாகிய எழுத்தை நீக்கித் தமிழ் மொழிக்குரிய எழுத்தோடு புணர்ந்த சொல்லாகும், எ-று.

எல்லா நாட்டிற்கும் பொதுவாயினும் வடநாட்டில் பயில வழங்குதலின் வடசொல்லாயிற்று. வடசொல் என்றதனால் தேய வழக்காகிய பாகதச் சொல்லாகிவந்தனவும் கொள்க.

வடமொழியாவன : வாரி, மணி, குங்குமம் என்னுந் தொடக்கத்தன. வட்டம், நட்டம், பட்டினம் என்பன பாகதம். பிறவும் அன்ன.

---

2. ஒரு சொல்லாயினும் ........... ஒரு சொல்லேயாம்: இக் கருத்து பொருந்தாது. ஆரியமும் தமிழும் என்ற இடம் என்பது வேறு வேறு நிலத்து வழங்கும் மொழி களிடம். வழக்கு செய்யுள் என்பது ஒரு நிலத்து வழங்கும் ஒரு மொழியின் ஆட்சியிடம் ஆதலின் மறுப்புக் கருந்து பொருந்தாது-சிவ.

நச்

இது வடசொற்கு இலக்கணம் கூறுகின்றது.

இ-ள் : வடசொற்கிளவி - வடசொல்லாகிய சொல், வட எழுத்து ஒரீஇ-உரப்பியும் எடுத்தும் கனைத்தும் கூறும் வட வெழுத்துக்களின் நீங்கி, எழுத்தொடு புணர்ந்த சொல் ஆகும். இருசார் மொழிக்கும் பொதுவாகிய எழுத்தான் இயன்ற சொல் லாம், எ-று.

அவை, வாரி, மேரு, குங்குமம், மணி, மானம், மீனம், வீரம், வேணு, காரணம், காரியம், நிமிர்த்தம், காரகம் என்றாற் போலச் சான்றோர் செய்யுட்கண் வருவன.

இனி ஒழிந்தோர் செய்யுட்கண்வருவன, கமலம், அமலம், மூலம், கோபம், ஞானம், நேயம், தமாலம், தாரம், திலகம், நாமம், யானம், யோனி, உற்பலம் இவைபோல்வன பிறவுமாம்.

வெள்

இது வடசொல்லாமாறிது எனக் கூறுகின்றது.

இ-ள் : வடசொற் கிளவியாவது வடசொற்கேயுரிய வெனப் படும் சிறப்பெழுத்தின் நீங்கி இருசார் மொழிக்கும் பொது வாகிய எழுத்தான் இயன்ற சொல்லாம், எ-று.

வடவெழுத்தாவன உரப்பியும் எடுத்தும் கனைத்தும் கூறத் தோன்றுவனவாகிய ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்தால் வருவன தமிழ் ஒலிக்கு ஏலாமையின் 'வடவெழுத்தொரீஇ எழுத்தொடுபுணர்ந்த சொல்' என்றார் ஆசிரியர். எழுத்தொடு புணர்தலாவது தமிழுக்கும் வடமொழிக்கும் பொதுவான எழுத் தினால் இயன்று வழங்குதல்.

அவ்வை, வாரி, மேரு, குங்குமம், வீரம், காரணம், காரியம், நிமித்தம் என்றாற் போலச் சான்றோர் செய்யுட்கண், வருவன. வடசொல் என்பது ஆரியச் சொற் போலுஞ் சொல்' என்பர் இளம்பூரணர். வடவெழுத்தா னமைந்த ஆரியச் சொற்களும் பொது வெழுத்தா னமைந்த தமிழ் திரி சொற்களும் ஆக வடநாட்டில் வழங்கிய இருவகைச் சொற்களை யுமே

தொல்காப்பியர் வடசொல் எனத் தழுவிக் கொண்டார் என்பது இளம் பூரணர் கருத்தாம்.

ஆதி

வடசொல் என்பது வடவெழுத்து முறையை நீக்கித் தமிழ் எழுத்து முறை பெற்ற (வட) சொற்களாம்.

மாத்தா, பித்தா என்பன மாதா, பிதா எனத் தமிழ் உருப் பெற்றன. ராமா, சீத்தா என்பன இராமன், சீதை என உருப் பெற்றன. இவ்வாறு தமிழ் வடிவில்வரும் வடமொழிச்சொற்கள் வடசொல் எனப்படும்.

சுப்

இச்சூத்திரவுரையிற் சேனாவரையர், ''வடசொல்லாவது வடசொல்லோ டொக்கும் தமிழ்ச்சொல் என்றாரால் உரையாசிரியர் எனின்,'' என்று கூறி, ''அற்றன்று; ஒக்கும் என்று சொல்லப்படுவன ஒருபுடையான் ஒப்புமையும் வேற்றுமையும் உடைமையான் இரண்டாகல் வேண்டும். இவை எழுத்தானும் பொருளானும் வேறுபாடின்மையாகிய ஒரு சொல் லிலக்கணம் உடைமையான் இரண்டு சொல் எனப்படா; அதனான் ஒத்தல் யாண்டையது? ஒரு சொல்லேயாம் என்பது'' என்று அவரை மறுத்தனர். இச்சூத்திரவுரையில் உரையாசிரியர் அவ்வாறு கூற வில்லை. 'இயற்சொல் திரிசொல்' (397) என்ற சூத்திரவுரையில் 'வடசொல் என்பது ஆரியச் சொற்போலுஞ் சொல்' என்று கூறியுள்ளார். ஆயினும் அவருடைய கருத்து சேனாவரையர் கருதியவாறே என்பது இச்சூத்திரவுரையிலுள்ள ''குங்குமம் என்ற விடத்து இருசார்க்கும் பொது வெழுத்தினான் வருதலுடைமையும் ஆரியத்தானும் தமிழானும் ஒரு பொருட்கே பெயராகி வழங்கி வருதலுடைமையும் அறிக'' என்ற சொற் றொடரால் அறியப்படுகின்றது.

இளம்பூரணத்தில் உலகம், நற்குணம் என்பனவும், நச்சினார்க்கினியத்தில் காரியம், உற்பலம் என்பனவும், இச் சூத்திரத்துக்கு உதாரணமாகக் காட்டப்பட்டன. அவை மேல் வருஞ் சூத்திரத்துக்குத்தான் உதாரணமாம். அதனால்

இளம்பூரணத்தில், உலகம், நற்குணம் என்ற இரண்டுமே ஏட்டிற் சேர்க்கப்பட்டனவோ அல்லது சற்குணம் பின்னர் என்பது நற்குணம் என்று எழுத்துத்தவற்றால் மாறுபட்டு எழுதப்பட்டதோ தெரிந்திலது. அவற்றைச் சேனாவரையர் மறுக்காமையின் இவ்வையம் வலியுறுகின்றது.

நச்சினார்க்கினியத்தில் 'வடவெழுத் தொரீஇ' என்பதற்கு 'உரப்பியும் எடுத்தும் கனைத்தும் கூறும் வடவெழுத்துக்களின் நீக்கி' என்று பொருள் கொடுக்கப்பட்டுள்ளது. உரப்பொடு கூடிய எழுத்துகள் க வர்க்க முதல் ப வர்க்கம் முடிய ஐவர்க்கங்களிலுமுள்ள இரண்டாம் எழுத்துகள்; எடுப்பொடுகூடிய எழுத்துக்கள் அவ்வவ் வர்க்கங்களிலும் மூன்றாம் எழுத்துக்கள்; கனைப்பொடு கூடிய எழுத்துக்கள் அவற்றில் நான்காம் எழுத்துக்கள்.

UU ஷ, ஸ, ஹ இவற்றை மறந்துவிட்டனர் போலும்.

வட்டம் முதலிய பாகதச் சொற்களை இச்சூத்திரத்திற்கு உதாரணமாகக் காட்டினர் தெய்வச்சிலையர். அவற்றைமேல் வருஞ்சூத்திரத்துக்கு உதாரணமாக்கினர். சேனாவரையரும் நச்சினார்க்கினியரும். உரையாசிரியர் அவற்றைப்பற்றி இரண்டு சூத்திரங்களிலும் கூறவில்லை.

இச் சூத்திரத்தில் 'வடசொல்' என்பதனால் இலக்கண இலக்கியங்களில் வழங்கும் சமஸ்கிருதச் சொல்லை மாத்திரம் குறித்தனரா, அவற்றோடு வடநாட்டில் பேச்சில் வழங்கும் பாகதச் சொல்லையும் குறித்தனரா ஆசிரியர் என்பது ஆராயத்தக்கது.

சிவ.

இச்சூத்திரத்துக்கு இளம்பூரணர் எழுதிய உரையும் உதாரணமும் கொண்டு, 'வடசொல் என்பது தமிழ்ச் சொல்லே என்பதும், அது வடசொல்லோடு ஒத்திருத்தலின் வடசொல் எனப்படும் என்பதும் குங்குமம் முதலியன தமிழ்ச்சொற்களே என்பதும்' அவரது கொள்கை என அறியலாம். 'இயற்சொல் திரிசொல்' (391) என்னும் சூத்திரவுரையில் வடசொல் என்பது 'ஆரியச் சொற்போலும் சொல்' என்று அவர் கூறியதும் காண்க. அதற்கேற்பவே அடுத்த சூத்திரமாகிய "சிதைந்தன வரினும்

இயைந்தன வரையார்'' என்பதற்கு உரையாக, ''இருசார் எழுத்திற்கும் ஒத்த வழக்கினான் வாராது சிதைந்து வந்தவை யாயினும் பொருந்தி வந்தன. வரையப்படா வடசொல்லாதற்கு என்பது'' என எழுதியதிலும், 'சிதைந்து' வருதலை தமிழில் உள்ள எழுத்து ஆரிய மொழியில் அதன் சிறப்பெழுத்தாகத் திரிந்து வருதலைக் கருதினார். தசம் (பத்து) எனும் வட சொல்லில் 'ச' எனும் தமிழ் எழுத்து ஆரியத்தில் 'ஸ' எனத் திரிந்து வந்தது என்பது இளம்பூரணர் கருத்து. ஆரியமும் திசைச் சொல்லில் அடங்குமாதலின் வடசொல் என்பதும் தமிழ்ச்சொல்லே எனக் கொண்டார் இளம்பூரணர். அவர் கருத்தே சிறப்புடையது.

**396. சிதைந்தன வரினு மியைந்தன வரையார் (6)**
(சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்)

ஆ. மொ. இல.

Even if they become deformed in usage to suit the Tamil phonetics, they are not excluded.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் வடசொற் கிளவியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : இருசார் எழுத்திற்கும் ஒத்த வழக்கினான் வாராது சிதைந்து வந்தனவாயினும் பொருந்தி வந்தன வரையப்படா வடசொல்லாதற்கு என்பது.

[1] அவை, 'நிதியந் துஞ்சும்' (அகம் 227) எனவும், 'தசநான் கெய்திய பணைமருள் நோன்றாள்' (நெடுநல் 115) எனவும் வரும்.

---

1. நிதி, தசம் என்பன ஆரியத்துக்கேயுரியன. ஆரியத் துக்கேயுரிய எழுத்துகளும் உடையன.

**சேனா.**

இ-ள் : பொதுவெழுத்தா னியன்றனவே யன்றி, வடவெழுத்தானியன்ற வடசொற் சிதைந்து வரினும் பொருத்தமுடையன செய்யுளிடத்து வரையார், எ-று.

உ-ம் : 'அரமிய வியலகத் தியம்பும்' (அகம் 124) எனவும், தசநான் கெய்திய பணைமருள் நோன்தாள்' (நெடுநல் 115) எனவும் வரும்.

'சிதைந்தன வரினும்' எனப் பொதுப்படக்கூறிய வதனான் ஆணை, வட்டம், நட்டம், கண்ணன் எனப் [2]பாகதமாய்ச் சிதந்து வருவனவும் கொள்க.

[3]இச்சூத்திரத்தானும் அவை தமிழ்ச் சொல் அன்மையறிக.

**தெய்.**

மேலதற்கோர் புறனடையுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : எழுத்தொரு பொருந்திய சொல்லேயன்றிச் சிதைந்த சொற்கள் வரினும் தமிழ்வழக்கிற்குப் பொருந்தினவை நீக்கப் படா, எ-று.

அவையாவன : கந்தம், தசநான்கு, சாகரம், சத்திரம், [1]முத்து, பவளம் எனவரும் பாகதச் சிதைவாகி வருவனவும் கொள்க.

---

2. பாகதம் - பிராகிருதம் - இழிசனர் வழக்கு. 'ஆக்ஞா' உயர்ந்தோர் வழக்கு ஆணை - இழிந்தோர் வழக்கு. நஷ்டம் - நட்டம். கிருஷ்ணன் - கண்ணன். வட்டம் என்பது தமிழ்ச்சொல்லே.

3. இது முன்சூத்திரத்தில் உரையாசிரியர்க்குக் கூறிய கருத்தையுட் கொண்டது.

1. முத்து பவளம் எனும் தமிழ்ச்சொற்கள் முத்தா, பிரவாளம் என ஆரியத்தில் சிதைந்தன என்பதே சாலும்-சிவ.

இவை நான்கு சொல்லினும் இயற்சொல் பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லுமாகி வரும். திரிசொல்லும் திசைச்சொல்லும் பெரும்பான்மை பெயரும் சிறு பான்மை வினையுமாகிவரும். வடசொல் பெயராயல்லது வாராது.

நச்.

இதுவுமது.

இ-ள் : சிதைந்தன வரினும்—பொது எழுத்தான் இயன் றனவேயன்றி வடவெழுத்தான் இயன்ற வடசொல் சிதைந்து வரினும், இயைந்தன வரையார்—பொருத்தமுடையன செய்யு ளிடத்து நீக்கார், எ-று.

[2] உ-ம் : 'அரமிய வியலகத் தியம்பும்' (அகம் 124)
'தசநான் கெய்திய பணைமருள் நோன்தாள்' (நெடுநல் 115)
'வாதிகையன்ன கவைக்கதிர் இறைஞ்சி' (மலைபடு 113)
'கடுந்தேர் இராமன் உடன்புணர் சீதையை' (புறம் 378)
'பேதையல்ல மேதையங் குறுமகள்'
'தைப்பமை சருமத்து'

என்றாற்போல்வன சான்றோர் செய்யுட்கண் சிதைந்து வந்தன.

இனி, தந்திரம், சூத்திரம், விருத்தி, அருத்தாபத்தி, உத்தி என்றாற் போல்வன நூலுள் சிதைந்து வந்தன. பங்கயம், இடபம், விசயம், இருடிகள், மேகம், பந்தம், மயானம், விடம், துங்கம், பலம், பாரம், சர்ச்சனா, சாதி, சேனை, கித்தி, சாதனம், அயன், அரி, அரன், ஆரம், அருகம், சிங்கம், மோக்கம், காமம், பக்கம், சூலம், சதம், போதகம், போகம், சுத்தம், சலம், மோகம், யோகம், வந்தனை, வேலை, சாலை, மாலை, உவமை, வனிதை, புரி, மேதினி, குமரி, கதி, அரங்கம், இலங்கை, இயக்கன், உலோபம், உலோகம், நிருத்தம், கீதம், வாச்சியம், வச்சிரம், அருத்தம், கருமம், கருப்பம், காப்பியம்,

---

2. அரமியம், தசம், வாதி, இராமன், சீதை, மேதை, சருமத்து என்பன சிதைந்தன.

பருப்பதம் என்றாற் போல்வன பின்னுள்ளோர் செய்யுட்கண் திரிந்து ஏற்கும் எழுத்துகளால் மருவி வந்தன.

இனி, சிதைந்தன வரினும் எனப் பொதுப்படக் கூறியவதனால், ஆணை, வட்டம், நட்டம், கண்ணன் எனப் பாகதமாகச் சிதைந்தனவும் கொள்க.

## வெள்

இதுவும் அது.

இ-ள் : பொது வெழுத்தான் இயன்றனவேயன்றி வட மொழிச் சிறப்பெழுத்தாலாகிய சொற்களும் தமிழ் ஒலிக்கு இயைந்தனவாகச் சிதைந்துவரின் அவற்றையும் நீக்காது ஏற்றுக் கொள்வர் ஆசிரியர், எ-று.

'இயைந்தன வரையார்' எனவே, தமிழ் ஒலிக்கு இயையாதன நீக்கப்படும் என்பதாம்.

உ-ம். 'அரமிய வியலகத் தியம்பும்'
'தசநான் கெய்திய பணைமருள் நோன்றாள்'
'வாதிகை யன்ன கவைக்கதிர்'
'கடுத்தோ ரிராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன்'

என்றாற் போல்வன சான்றோர் செய்யுட்கண் சிதைந்து வந்தன.

'சிதைந்தன வரினும்' எனப் பொதுப்படக் கூறியவதனால் ஆணை, வட்டம், நட்டம், கண்ணன் எனப் பாகதமாகச் சிதைந்தனவும் கொள்ளப்படும்.

## ஆதி

வடசொற்கள் தம்முறையிற் சிதைந்துவரினும் தமிழ் முறைக்கு இயைந்தவற்றை நீக்கமாட்டார் ஏற்று நிற்பர்.

இராவணா - இராவணன் என உருச் சிதைந்து வருகிறது. விபீஷணா - வீடணன் எனச்சிதைந்து வருகிறது. ஆயினும் தமிழ் நடைக்கு இயைந்து வருவதால் அவை தமிழாக ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

**க. வா. சச்சிதானந்தம்**

பொருள் : செய்யுள் ஈட்டச் சொற்களாக இயற்சொல் முதலிய நான்குமேயன்றி அவற்றின் சிதைவுச் சொற்களும் பொருத்த முடையன வரையப்படா என்றவாறு.

உலகவழக்கில் எளிதிற் பொருள் விளங்கும் நிலம், நீர், காற்று முதலிய இயற் சொற்கள் போலவே இயற் சொற்களின் சிதைவுச் சொற்களும் உலக வழக்கில் எளிதிற் பொருள் உணர்த்து வனவும் உண்டு. அவை இலக்கணப் போலி மரூஉ வகையில் வரும் சொற்களாம். கோயில், பொதியில் முன்றில் என்பன இலக்கணப் போலிகள். ‘அருமருந்தன்ன’ எனும் சொற்றொடர் ‘அருமந்த’ என வருவது மரூஉ *“அருமந்த அரசாட்சி அரிதோ மற்றெளிதோ” எனச் செய்யுளில் ஆளப்பட்டமை காணலாம்.

இனித் திரிசொல் என்பது திரித்துக் கொள்ளப்பட்ட சொல் என்பர் சேனா வரையர். அப்படியாயின் அது சிதைவுச் சொல் என்பதில் ஐயமில்லை. கிளியை யுணர்த்தும் ‘கிள்ளை’ என்பது, உறுப்புச் சிதைந்தது. மலையை யுணர்த்தும் ‘விலங்கல்’ என்பது முழுவதும் சிதைந்தது என்பர் அவர். நாம் எழுத்துச் சிதை வில்லாத விலங்கல், வெற்பு என்பன போன்ற சொற்களைத் திரிசொற்கள் என்றும், கிள்ளை, மஞ்ஞை போன்ற சொற் களைத் திரிசொற் சிதைவுகள் என்றும் கொள்ளலாம். எனவே, இவ்விருவகைச் சொற்களும் செய்யுளீட்டச் சொற்களாம்.

திசைச் சொல்லிலும் சிதைவுச் சொற்கள் உண்டு. ஆவினைப் பெற்றம் என்பது தென்பாண்டி நாட்டார் கூறுவது. அந் நாட்டாரே தாயைத் ‘தள்ளை’ என்றும் கூறுவர். ‘தள்ளை என்னும் சொல், தெலுங்கில் ‘தல்லி’ என்று வழங்கும். எனவே, ‘தல்லி’ என்ற தெலுங்குச் சொல் தென்பாண்டி நாட்டில் ‘தள்ளை’ எனச் சிதைந்து வழங்கியது என்னலாம். (தமிழில் தாய்க்குத் தள்ளை என்பது பெருவழக்கன்று). எனவே, சிதை வின்றியும் சிதைந்தும் வழங்கும் திசைச் சொற்களும் செய்யுளீட்டச் சொற்களாகும்.

வாரி, குங்குமம், மணி முதலியன போன்ற சொற்கள் தமிழுக்கும் வடமொழிக்கும் பொதுவான எழுத்துகளால் ஆன வடசொற்களாம். சுகி, போகி போன்ற சொற்கள் வடமொழிச்

---

* பெரிய புராணம் 4: 14

சிறப் பெழுத்துகளால் ஆனவை. நட்டம், ஈசுவரன் போன்ற சொற்கள் சிறப்பும் பொதுவுமான எழுத்துகளால் ஆன சொற்கள். இம்மூவகைச் சொற்களுள் 'வடசொற்கிளவி' என்ற நூற்பாவுக்கு வாரி, குங்குமம் போன்ற சொற்களையும், "சிதைந்தன வரினும்" என்ற நூற்பாவுக்கு சுகி, போகி, நட்டம், ஈசுவரன் போன்ற சொற்களையும் எடுத்துக் காட்டுகளாகக் கொள்ளலாம்.

எனவே, 'சிதைந்தனவரினும் இயைந்தன வரையார்' என்ற நூற்பா 'வடசொற்கிளவி' என்ற நூற்பாவை மட்டும் நோக்காமல் இயற்சொல் திரிசொல் திசைச்சொல் என்பவை பற்றிய மூன்று நூற்பாக் களையும் சேர்த்தே நோக்குவதாகும். (இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், பதினோராவது கருத்தரங்கு (1979) ஆய்வுக் கோவை, தொகுதி 2.)

## செய்யுள் விகாரம்

**397 அந்நாற் சொல்லுந் தொடுக்குங் காலை வலிக்கும் வழி வலித்தலு மெலிக்கும்வழி மெலித்தலும் விரிக்கும் வழி விரித்தலுந் தொகுக்கும்வழித் தொகுத்தலு நீட்டும்வழி நீட்டலுங் குறுக்கும்வழிக் குறுக்கலு நாட்டல் வலிய வென்மனார் புலவர். (7)**

(அந்நால் சொல்லுந் தொடுக்கும் காலை
வலிக்கும்வழி வலித்தலும் மெலிக்கும்வழி மெலித்தலும்
விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும்வழித் தொகுத்தலும்
நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்
நாட்டல் வலிய எனமனார் புலவர்)

### ஆ. மொ. இல.

The poets say that when those four kinds of words are used in construction (of poetry), sonant may change into surd and Vice-Versa, phoneme may be added or elided, and phoneme may be lengthened or shortened; these changes are inevitable.

பி. இ. நூ.

**நேமிநாதம்**-சொல்லதிகாரம் 66

மெலித்தல் குறுக்கல் விரித்தல் தொகுத்தல்
வலித்தலே நீட்டல் வரினும்-ஒலிக்கும்
வரிவளாய் தொல்குறைச்சொல் வந்திடினும் உண்மை
தெரிதலாம் கற்றோர் செயல்.

**நன். 155**

வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி.

**இ.வி. 57** ௸ ௸ ௸

**தொ. வி. 37**

மெலிவுறின் பாவிடை மென்மை வன்மை
குறுமை நீட்சி குறுந்தொகை விரிவே
மற்றொருமொழி மூவழிக் குறைதலும் என
வேண்டுழித் தனிமொழி விகாரம் ஒன்பதே

**முத்து. ஒ. 53**

அந்நாற் சொல்லும் தொடுக்குங் காலை
வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தலும் வரும் செய்யுள் வேண்டுழி.

**இளம்**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், அந்நான்குவகைச் சொல்லானும் செய்யுட் செய்யுமிடத்து அவ்வறு வகைப்பட்ட விகாரமும்படச் செய்யுட் செய்யப் பெறுப என்பது உணர்த்திய வாறு.

உரை: நாட்டல் வலிய என்றது ஒருவன் நாட்டுதல் வன்மையிலக்கணத்தினை அவையுடைய, எ-று.

வலிக்கும் வழி வலித்தல் 'குறுந்தாட்கோழி' என்பதனைக் 'குறுத்தாட்கோழி' என வலித்தல்.

மெலிக்கும் வழி மெலித்தல், 'தட்டை' எனற்பாலதனைத் 'தண்டை' என மெலித்தல்.

விரிக்கும்வழி விரித்தல், 'தண்டுறைவன்' எனற் பாலதனைத் 'தண்ணந்துறைவன்' (குறுந். 296) எனவிரித்தல்.

தொகுக்கும் வழித் தொகுத்தல் மழவரையோட்டிய எனற் பாலதனை 'மழவரோட்டிய (அகம் 1) எனத் தொகுத்தல்.'

நீட்டும்வழி நீட்டல், 'பச்சிலை' எனற்பாலதனைப் 'பாசிலை' என நீட்டல்.

குறுக்கும் வழிக்குறுக்கல், 'உண்டார்ந்து' என்பதனை ,உண்டருந்து' எனக் குறுக்கல்.

பத்துவகை விகாரத்துள் அறுவகை விகாரம் ஈண்டுக் கூறினார். [1] இனமில்லாதன இனமுள்ளது போலச் சொல்லுதலும், இனமுள்ளதனை இனமல்லது போலச் சொல்லுதலும் 'இனச்சுட்டில்லாப் பண்பு கொள் பெயர்க்கொடை' (கிளவி 18) என்பதனுட்சொல்லிப் போந்தாம்.

இனி இடைச் சொற் போக்கல் புடைச்சொல் புகுத்தல் என இரண்டும் 'நிரனிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று' (எச்ச. 8) எனப்பட்டு அடங்கும்.

சேனா

இ-ள் : இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்னும் நான்கு சொல்லையும் செய்யுளாகத் தொடுக்குங்கால் மெலியதனை வலிக்க வேண்டும் வழி வலித்தலும், வலியதனை மெலிக்கவேண்டும் வழி மெலித்தலும், குறைவதனை விரிக்க வேண்டும் வழி விரித்தலும், மிகுவதனைத் தொகுக்க வேண்டும் வழித் தொகுத்தலும், குறியதனை நீட்டவேண்டும் வழி நீட்டலும், நெடியதனைக் குறுக்க வேண்டும் வழிக் குறுக்கலும் ஆகிய அறுவகை விகாரமும் செய்யுளின்பம் பெறச் செய்வான் நாட்டு தலை வலியாகவுடைய, எ-று.

உ-ம் : [2]'குறுக்கை யிரும்புலி' (ஐங். 266)
'முத்தை வருடங்காலந் தோன்றின்' (தொல்.எழு. 194)

---

1. இனமில்லதை இனமுள்ளது போலச் சொல்லுதல் : செஞ்ஞாயிறு இனமுள்ளதை இல்லது போலச் சொல்லுதல் : பெருஞ்சாத்தன். பெரியசாமி என இக்காலத்துப் பெயரிடுதல் காண்க.
2. குறுங்கை-குறுக்கை. முந்தை—முத்தை

என்பன வலிக்கும் வழி வலித்தல்.

[3]'சுடுமண் பாவை'
'குன்றியலுகரத் திறுதி' (கிளவி.8)

என்பன மெலிக்கும் வழி மெலித்தல்.

[4]'தண்ணந் துறைவன்' (குறுந். 296)
என்பது விரிக்கும் வழி விரித்தல்.

[5]'மழவர் ஓட்டிய' (அகம் 1)
என்பது தொகுக்கும் வழித் தொகுத்தல்

'குன்றி கோபம் கொடிவிடு பவளம்
ஒண்செங் காந்தன் ஒக்கும் நின்னிறம்'

என்புழிச் [6]செவ்வெண்ணின் தொகை தொக்கு நிற்றலின் இதுவுமது.

'வீடுமின்'
என்பது நீட்டும்வழி நீட்டல்.

'பாசிலை' (புறம் 54)
என்பது காட்டுவாரும் உளர்.

'உண்டார்ந்து' என்பது 'உண்டருந்து' எனக் குறுகி நிற்றலின் குறுக்கும் வழிக் குறுக்கல்.

'அழுந்துபடு விழுப்புண்' (நற் 97) என்பதுமது.
பிறவும் அன்ன.

'நாட்டல் வலிய' என்றது இவ்வறுவகை விகாரமும் இன்னுழியாம் என்று வரையறுக்கப்படா; செய்யுள் செய்யும் சான்றோர் அணிபெற நாட்டலைத் தமக்கு வலியாகவுடைய வென்றவாறு. நாட்டல் நிலைபெறச் செய்தல்.

---

3. மட்பாவை—மண்பாவை. குற்றியலுகரத்திறுதி—குன்றியலுகரத்திறுதி.
4. தண்துறைவன்-தண்ணந்துறைவன்-அம் விரித்தது
5. மழவரை என்பது மழவர் என்றாக்கப்பட்டது. இரண்டாம் வேற்றுமைத் தொகை என்னலாமாயினும் முதல் வேற்றுமைத் தொடராகவும் ஆம் ஆதலின் தொடுக்கும் வழித் தொகுத்தல் எனப்பட்டது.
6. குன்றியும் கோபமும் எனவரும் உம்மை தொக்கது.

தெய்

மேற் சொல்லப்பட்ட நால்வகைச் சொல்லும் செய்யுளகத்து விகாரப்படுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் அந்நாற்சொல்லுமாவன இயற் சொல்லும் திரி சொல்லும் திசைச்சொல்லும் வடசொல்லும் என்றவாறு. தொடுக்குங்காலை என்பது ஒன்றோடொன்று தொடர்பு படச் செய்யுளாக்குங்காலத்து என்றவாறு. வலிக்கும் வழி வலித்தல் என்பது மெல்லெழுத்தினை வல்லெழுத்தாகத் தொடுக்க வேண்டும் வழி வல்லெழுத்தாகத் தொடுத்தல். மெலிக்கும் வழி மெலித்தல் என்பது வல்லெழுத்தினை மெல்லெழுத்தாகத் தொடுக்க வேண்டும் வழி மெல்லெழுத்தாகத் தொடுத்தல். விரிக்கும் வழி விரித்தல் என்பது பொருளுணர்த்துஞ் சொல்லின் மேல் ஒன்றும் இரண்டும் எழுத்து விரிக்க வேண்டும்வழி விரித்துத் தொடுத்தல். தொகுக்கும் வழித்தொகுத்தல் என்பது பொருளுணர்த்துஞ் சொல்லின்கண் ஒன்றும் இரண்டும் எழுத்துத் தொகுத்துத் தொடுக்க வேண்டும் வழித் தொகுத்துத் தொடுத்தல். நீட்டும் வழிநீட்டல் என்பது குற்றெழுத்தாகி நின்று பொருள்படுஞ் சொல்லை நெட்டெழுத்தாகத் தொடுக்க வேண்டும்வழி நெட்டெழுத்தாகத் தொடுத்தல். குறுக்கும்வழிக் குறுக்கலாவது நெட்டெழுத்தாகி நின்று பொருள்படுஞ் சொற்களைக் குற்றெழுத்தாகத் தொடுக்க வேண்டும் வழிக் குற்றெழுத்தாகத் தொடுத்தல். நாட்டல் வலிய என்மனார் புலவர் என்பது இவ்வாறாகச் செய்யுட்கண் வைத்தல் வலியுடைய வென்று சொல்லுவர் ஆசிரியர், என்றவாறு; குற்றம் இல என்றவாறு.

விகாரப்படாமல் தொடுத்தல் சொல்லாமல் முடிந்ததாம்.

உ-ம்: தத்தங் கிளவி தம்மகப் பட்ட
முத்தை வரூஉங் காலந் தோன்றின்
ஒத்த தென்ப ஏயென் சாரியை (தொல். எழுத 164)

என்றவழி 'முந்தை' என்பது 'முத்தை' என வல்லெழுத்தாயிற்று. 'தண்டை யினக்கிளி கடிவோள்' என்பதனுள் 'தட்டை' எனற்பாலது 'தண்டை' என மெல்லெழுத்தாயிற்று.

'தண்ணந் துறைவன் தகவிலர்' என்றவழித் 'தண்' என்பது 'தண்ணம்' என விரிந்து நின்றது.

'வேண்டார் வணக்கி விறல்மதில் தான்கோடல்' என்றவழி 'வேண்டாதாரை' என்பது 'வேண்டார்' எனத் தொக்குநின்றது. தொகுத்தல் என்பது சுருக்குதல். அஃதேல் அத் 'தா' என்பது இவ்விலக்கணத்தால் தொகுக. 'ஐ' என்பது 'உருபு தொக வருதல்' (எழுத் 157) என்புழி அடங்காதோ எனின், ஐகாரம் உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும் என ஓதப்படுதலின் அஃது உயர்திணைக்கண் தொகாது நிற்றல் வேண்டும். ஆயினும் செய்யுளின்பம் வேண்டித் தொகப் பெறும் என்பது இவ்விலக்கணத்தாற் கொள்ளப்படும்.

'பாசிழைபாகம் பசப்பித்தான்'
என்றவழி 'பச்சிழை' எனற்பாலது 'பாசிழை' என நீண்டு நின்றது.

'திருத்தார் நன்றென்றேன் தியேன்'
இதனுள் 'தீயேன்' என்பது 'தியேன்' எனக் குறுகி நின்றது.

அந்நாற் சொல்லும் இவ்வாறு விகாரப்படும் என்றமையான் ஒரு மொழிக்கண்ணே இவை வருவன வுணர்க.

நச்

இது செய்யுள் விகாரம் ஆமாறு கூறுகின்றது.

இ-ள் : அந்நாற் சொல்லும் தொடுக்குங்காலை-முற்கூறிய நான்கு சொல்லையும் செய்யுளாகத் தொடுக்குங்கால், வலிக்கும் வழி வலித்தலும் - மெல்லொற்றை வல்லொற்றாக்க வேண்டும் வழி வல்லொற்றாக்கலும், மெலிக்கும் வழி மெலித்தலும் - வல் லொற்றை மெல்லொற்றாக்க வேண்டும்வழி மெல்லொற்றாக்கலும், விரிக்கும் வழி விரித்தலும் — சந்தி நிரம்புதற்கு ஓர் சொல்லை விரிக்க வேண்டும்வழி விரித்தலும், தொகுக்கும் வழித் தொகுத் தலும் — சந்தம் உளவாதற்கு ஓர் சொல்லைத் தொகுக்க வேண்டும் வழித் தொகுத்தலும், நீட்டும் வழி நீட்டலும்- குற் றெழுத்தினை நீட்ட வேண்டும் வழி நீட்டலும், குறுக்கும் வழிக்

குறுக்கலும்— நெட்டெழுத்தினைக் குறுக்க வேண்டும் வழிக் குறுக்கலும் ஆகிய அறுவகை விகாரமும், நாட்டல் வலிய என்மனார் புலவர்— செய்யுள் இன்பம் பெறச் செய்வார் நாட்டு தலை வலியாகவுடைய என்று கூறுவர் புலவர், எ-று.

உ-ம் : 'முத்தை வருஉங் காலந் தோன்றின்' (தொல். தொகை. 22)
'குன்றிய லுகரத் திறுதியாகும்' (தொல். கிளவி.8)
'தண்ணந் துறைவன் கொடுமை' (குறுந்.8)
[1]'இடையெனப் படுப' (தொல். இடை. 1)
'வெள்வளை நல்காள்[2] வீடுமென் உயிரே'
'திருத்தார் நன்றென்றேன்[3] தியேன்'
என முறையே காண்க.

[4]'பாசிலை' (புறம். 54), 'அழுந்துபடு விழுப்புண்' (நற். 97) என்றாற்போல இரண்டு விகாரம் வருவனவற்றை 'நாட்டல் வலிய, என்றதனாற் கொள்க.

## வெள்

இது செய்யுள் விகாரம் ஆமாறு கூறுகின்றது. இ-ள். இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் அந்நான்கு சொல்லையும் செய்யுளாகத் தொடுக்குங்கால் மெல் லொற்றை வல்லொற்றாக்க வேண்டுமிடத்து வல்லொற்றாக்கலும், வல்லொற்றை மெல்லொற்றாக்க வேண்டுமிடத்து மெல்லொற்றாக் கலும், குறைவதனை விரிக்க வேண்டுமிடத்து விரித்தலும், மிகுவதனைத் தொகுக்க வேண்டுமிடத்துத் தொகுத்தலும், குற் றெழுத்தை நெட்டெழுத்தாக்க வேண்டுமிடத்துக் நீட்டலும் நெட் டெழுத்தைக் குறுக்க வேண்டுமிடத்துக் குறுக்கலும் ஆகிய அறுவகை விகாரமும் செய்யுளின்பம் பெறச் செய்யும் சான்றோர் அணிபெற நாட்டுதலை வலியாக வுடைய, எ-று. நாட்டல்-நிலை பெறச் செய்தல்.

---

1. 'என்று சொல்லப்படுப' என்பது 'எனப்படுப' எனத் தொகுக்கப்பட்டது இதில் 'சொல்' என்பது தொகுத்தது.
2. விடும் என்பகு வீடும் என்று நீட்டப்பட்டது.
3. 'தீயேன்' என்பது 'தியேன்' எனக் குறுக்கப்பட்டது.
4. பசுமை என்பது மை தொகுத்துப்பகரம் நீட்டிக் கூறப் பட்டது. ஆழ்ந்து என்பது ஆகாரம் அகரமாகக் குறுக்கிழகர மெய்யில் உகரம் விரித்துக் கூறப்பட்டது.

உ-ம் : குறுந்தாட்கோழி எனற்பாலது 'குறுத்தாட்கோழி' எனவருதல் வலிக்கும்வழி வலித்தல். 'குற்றியலுகரம்' என்பது 'குன்றியலுகரம்' எனவருதல் மெலிக்கும் வழி மெலித்தல். 'தண் டுறைவன், எனற்பாலது 'தண்ணந்துறைவன்' என வருதல் விரிக்கும் வழி விரித்தல். 'மழவரை ஓட்டிய என: உருபு விரிந்து வரற்பாலது 'மழவர் ஓட்டிய' என வருதல் தொகுக்கும் வழித் தொகுத்தல். 'விடுமின்' எனற்பாலது 'வீடுமின்' என வருதல் நீட்டும் வழி நீட்டல். 'தீயேன்' எனற்பாலது 'தியேன்' என வருதல் குறுக்கும் வழிக்குறுக்கல்.

ஆதி

உ-ம் : கன்று ஆ — கற்றா — வலித்தல்
வெற்றி — வென்றி — மெலித்தல்
மனிதர் — மனித்தர் — விரித்தல்
செய்களென — செய்கென — தொகுத்தல்
நிழல் — நீழல் — நீட்டல்
ஆறுவகை — அறுவகை — குறுக்கல்

சிவ

வலிக்கும் வழி வலித்தல் முதலிய யாவும் இலக்கணத்துக்கு மாறாக அமைக்கப்படுவன என்பதும் அவை வழுவாயினும் செய்யுளின்பம் நோக்கி அமைக்கப்பட்டன என்பதும் கொள்க. ஆதித்தர் குறுக்கலுக்குக் காட்டிய உதாரணம் பொருந்தாது.

## பொருள்கோள் வகை

398. **நிரனிறை சுண்ண மடிமறி மொழிமாற்**
***றவைநான் கென்ப மொழிபுண ரியல்பே** (8)

(நிரல் நிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று
அவை நான்கு என்ப மொழிபுணர் இயல்பே)

ஆ. மொ. இல.

The scholars say that the syntax in poetry is of four kinds which are 'Niral nirai', 'Sunnam' 'Adimari' and Molimarru.

---

* எனநான் கென்ப பொருள்புணரியல்பே—தெய்-பாடம்.

பி. இ. நா.

நேமி. சொ. 67

அடிமொழி சுண்ணம் நிரனிறை விற்பூட்டு
அடிமறி யாற்று வரவும்—துடியிடையாய்
தாப்பிசை தாவில் மொழிமாற்று அளைமறி
பாப்புப் பொருளோடொன் பான்.

நன். 411

யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை விற்பூண்
தாப்பிசை யளைமறி பாப்புக்கொண்டு கூட்டு
அடிமறி மாற்றெனப் பொருள்கோள் எட்டே.

இ. வி. 361 ஷெ ஷெ ஷெ

இளம்

என்பது நிரனிறை, சுண்ணம், அடிமறி, மொழி மாற்று என நான்கு வகையான் மொழிகள் தம்முள் புணருஞ் செய்யுளகத்து என்பது உணர்த்தியவாறு.

அவையாமாறு அவற்றவற்றுச் சிறப்புச் சூத்திரங்களால் அறிக.

சேனா

இனிச் செய்யுளிடத்து விகார வகையான் மொழிகள் தம்முள் புணருமாறு கூறுகின்றார்.

இ-ள்,: நிரனிறையும் சுண்ணமும் அடிமறியும் மொழி மாற்றும் என நான்கென்று சொல்லுப அந்நான்கு சொல்லும் செய்யுளிடத்துத் தம்முட் புணருமுறைமை, எ-று.

நான்கு சொல்லும் என்பதூஉம் செய்யுளிடத்து என்பதூஉம் அதிகாரத்தாற் பெற்றாம்.

நிரனிறையும் சுண்ணமும் மொழிமாற்றாதல் ஒக்குமாயினும் நிரனிற்றலும் அளவடியெண்சீரைச் சுண்ணமாகத் துணித்தலு மாகிய வேறுபாடுடைமையான் அவற்றைப் பிரித்து அவ்வேறு

பாட்டாற் பெயர் கொடுத்து வேறிலக்கணமில்லாத மொழி மாற்றை மொழிமாற்றென்றார்.

இச்சூத்திரத்தான் மொழிபுணர் இயல் நான்கு என வரையறுத்தவாறு.

தெய்

செய்யுளகத்துப் பொருளுணரச் சொற்றொடுக்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : நிரனிறையும் சுண்ணமும் அடிமறியும் மொழி மாற்றும் என நான்கென்று சொல்லுப பொருள்மேல் மொழி புணர்க்கும் இயல்பு, எ-று.

செய்யுளகத்துத் திரிந்து பொருள்படுஞ்சொல் எடுத்தோதினார், வழக்கின்கண் இயல்பாகிச் செய்யுட்கண்ணும் இயல்பாகி நடக்கும் பொருள்கள் ஓத வேண்டாமையின். அவையாமாறு தத்தஞ் சிறப்புச் சூத்திரத்துட் காட்டுதும்.

நச்

இது செய்யுள் செய்வழி அதன் பொருட்கிடை கூறுகின்றது.

இ-ள் : இயல்பு புணர்மொழி — இயற்கையாகவே தம்முள் கூடிப்பொருள் உணர்த்தும் சொற்கள் அங்ஙனம் இயற்கையாகக் கூடிப் பொருள் உணர்த்தாது விகாரப்பட்டுப் பொருள் உணர்த்துங்கால், அவை—அவ்விகாரவகை, நிரல் நிறை சுண்ணம் அடிமறி மொழி மாற்று நான்கு என்ப—நிரல் நிறையும் சுண்ணமும் அடிமறியும் மொழி மாற்றும் என நான்கு என்று கூறுவர் ஆசிரியர், எ-று.

நிரல் நிறையும் சுண்ணமும், நிரலே நிறுத்தலும் துணித்துக் கூட்டுதலுமாகிய வேறுபாடு உடைமையின் மொழிமாற்றின் வேறு ஆயின.

வெள்

இது, செய்யுளகத்து மொழிபுணரியல்பாகிய பொருள் கோள் இவையெனக் கூறுகின்றது.

இ-ள் : மேற்குறித்த நான்கு சொல்லும் செய்யுளிடத்துத் தம்முட் புணரும் முறைமை நிரனிறையும் சுண்ணமும் அடிமறியும் மொழிமாற்றும் என நான்கென்று சொல்லுவர் ஆசிரியர், எ-று.

'மொழிபுணரியல்பு நிரனிறை, சுண்ணம், அடிமறி, மொழி மாற்று ஆகிய அவை நான்கு என்ப' என இயையும். 'செய்யுளிடத்து' என்பது அதிகாரத்தான் வந்து இயைந்தது.

## நிரல்நிறைப் பொருள்கோள்

**399. அவற்று**
**ணிரனிறை தானே**
**வினையினும் பெயரினு நினையத் தோன்றிச்**
**சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல் (9)**
(அவற்றுள்,
நிரல்நிறை தானே
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பெயர் வேறு நிலையல்)

ஆ. மொ. இல.
of them,
'Niral nirai' is the mode in which the words
stand in a group of verbs and nouns
separately in such a way as to join the
predicates or governing words to the
subjects or the words governed in respective order.

பி. இ. நூ.
**நன். 414**
பெயரும் வினையுமாம் சொல்லையும் பொருளையும்
வேறு நிரல் நிறீஇ முறையினும் எதிரினும்
நேரும் பொருள்கோள் நிரனிறை நெறியே.
இ. வி. 364 ஷை ஷை ஷை

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், நிரனிறைப் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : இச்சொல்லப்பட்டவற்றுள் நிரனிறையென்று சொல்லப்படுவது யாதோ வெனின், வினையினானும் பெயரினானும் ஆராயத் தோன்றிச் சொல் வேறு வேறு நிற்பப் பொருள் வேறு வேறு நின்று உணரப்படும், எ-று.

அவற்றுள் வினையிற் றோன்றியது :-

[1] "உடலும் உடைந்தோடும் ஊழ்மலரும் பார்க்கும்
கடலிருளாம் பல்பாம் பென்னக்—கெடலருஞ்சீர்த்
திங்கள் திருமுகமாய்ச் [2]சேர்ந்து"

என்பது உடலும் உடைந்தோடும் பார்க்கும் மலரும் என்ற வினைச் சொற்கள் தம்முள் பொருளியைபு இன்றி வேறு நின்றன. இனிக் கடல் இருள் ஆம்பல் பாம்பு என நின்ற பெயர்ச் சொல்லும் அவ்வாறே நின்றமை அறிக.

அவை தம்முள் பொருள் இயையுமாறு : உடலுங் கடல், உடைந்தோடும் இருள், மலரும் ஆம்பல், பார்க்கும் பாம்பு எனக் கூட்டுக.

இனிப்பெயர் நிரனிறை வருமாறு :

"கொடி குவளை கொட்டை நுசுப்பு உண்கண் மேனி" எனவரும். இனி அவை பொருள் கொள்ளுங்கால், கொடி நுசுப்பு, குவளை உண்கண், கொட்டைமேனி என வரும்.

---

1. பொருள்: அழகிய முகத்தைத் திங்களாகக்கருதி கடல் பொங்கும்; இருள் உடைந்தோடும்; ஆம்பல் முறையாக மலரும்; பாம்பு கவ்வப்பார்க்கும் இது சிந்தியல் வெண்பா. இதை நேரிசை வெண்பாவாகத் திரித்துக் காட்டினர் தெய்வச்சிலையார்.

2. செத்து—பாடம்.

நினையத் தோன்றும் என்றதனால் [3]மொழி மாற்றுப் போல நிற்கும் நிரனிறையும் உள என்பது.

[4]"களிறும் கந்தும் போல நளிகடற்
கூம்பும் கலனுந் தோன்றும்"

எனவரும். களிறும் கந்தும் முறையானே கலனும் கூம்பும் எனற்பால; அவ்வாறு கூறாது 'கூம்பும் கலனும்' என்றமையான் மயக்க நிரனிறையாயிற்று என்பது.

சேனா

இ-ள் : அந்நான்கினுள், நிரல் நிறையாவது வினையானும் பெயரானும் ஆராயத்தோன்றிச் சொல்வேறு நிற்பப் பொருள் வேறு நிற்றலாம், எ-று.

தொடர் மொழிப் பொருள் முடிக்குஞ் சொற்கண்ண தாகலான் முடிக்குஞ் சொல்லைப் பொருள் என்றார்.

வினையினும் பெயரினும் என்றதனான் வினைச்சொல்லான் வருவதூஉம், பெயர்ச் சொல்லான் வருவதூஉம், அவ்விரு சொல் லான் வருவதூஉம், என நிரனிறை மூன்றாம்.

உ-ம். "மாசு போகவும் காய்பசி நீங்கவும்
கடிபுனல் மூழ்கி அடிசில் கைதொட்டு"

என, முடிவனவும் முடிப்பனவுமாகிய வினைச்சொல் வேறு வேறு நிற்றலின், வினை நிரனிறையாயிற்று. அவை மாசுபோகப் புனல் மூழ்கி, பசிநீங்க அடிசில் கைதொட்டு என இயையும்.

"கொடி குவளை கொட்டை நுசுப்பு உண்கண்மேனி" என, முடிவனவும் முடிப்பனவுமாகிய பெயர்ச்சொல் வேறு வேறு நிற்றலின் பெயர் நிரல்நிறையாயிற்று. அவை நுசுப்புக் கொடி, உண்கண் குவளை, மேனி கொட்டை என இயையும்.

---

3. இது எதிர் நிரல் நிறை எனப்படும். மயக்க நிரல் நிறையும் ஆம்.
4. 'தோன்றல் மறந்தோர் துறை கெழு நாட்டே' என்னு மடியுடன் இப்பாடல் முடிவு பெறுகிறது சேனா வரையர் உதாரணத்தில்.

"உடலும் உடைந்தோடும் ஊழ்மலரும் பார்க்கும்
கடலிருள் ஆம்பல்பாம் பென்ற—கெடலருஞ்சீர்த்
திங்கள் திருமுகமாச் செத்து"

என, முடிப்பன வாகிய வினையும் முடிவனவாகிய பெயரும் வேறு வேறு நிற்றலின் பொது நிரல் நிறையாயிற்று. அவை கடல் உடலும், இருள் உடைந்தோடும், ஆம்பல் ஊழ் மலரும், பாம்பு பார்க்கும் என இயையும்.

'நினையத் தோன்றி' என்றதனால் சொல்லும் பொருளும் வேறு வேறு நிற்குங்கால் நிரல்பட நில்லாது

"களிறும் கந்தும் போல நளிகடற்
கூம்பும் கலனுந் தோன்றும்
[1]தோன்றல் மறந்தோர் துறைகெழு நாட்டே"

என மயங்கி வருதலும் கொள்க.

## தெய்

நிரல் நிறை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மேற் சொல்லப்பட்டனவற்றுள் நிரனிறையாவது வினையானும் பெயரானும் ஆராயப் புலப்படுஞ் சொற்களைச் சேரநிறுத்தி அவற்றிற்கு முடிபாக வருஞ் சொற்களைச் சேர நிறுத்துதல், எ-று.

அடல்வே லமர்நோக்கி நின்முகம் கண்டே
உடலும் இரிந்தோடும் ஊழ்மலரும் பார்க்கும்
கடலும் கனையிருளும் ஆம்பலும் பாம்பும்
தடமதியம் ஆமென்று தாம்.

என்பதனுள் உடலும்,ஓடும், ஊழ்மலரும், பார்க்கும் என்னும் வினை, கடல், இருள், ஆம்பல், பாம்பு என்பனவற்றோடு கடல் உடலும், இருள் ஓடும், ஆம்பல் மலரும், பாம்பு பார்க்கும் என அடைவே முடிந்தவாறு கண்டு கொள்க.

"கொடி குவளை கொட்டை நுசுப்பு உண்கண் மேனி" என்றவழி, கொடி, குவளை, கொட்டை என்னும் பெயர் நுசுப்பு,

---

1. மற்றையோர் காட்டும் உதாரணத்தில் இம்மூன்றாம் அடியில்லை.

உண்கண், மேனி என்னும் பெயரோடு கொடி நுசுப்பு, குவளைக் கண், கொட்டைமேனி என அடைவே முடிந்தவாறு காண்க.

*வினையும் வினையுமாக வருவன உளவேல், வந்த வழிக் கண்டு கொள்க.

'நினையத் தோன்றி' என்றதனால் பொருள் விளங்க நில்லாது நினைத்தாற் றோன்று மாறாக மயங்கி வருவனவும் கொள்க.

> ''களிறுங் கந்தும் போல நளிகடற்
> கூம்பும் கலனுந் தோன்றும்''

என்றவழிக் களிற்றிற்குக் கூம்பும் க்ந்திற்குக் கலனும் உவமை யன்மையின் களிறு போலும் கலம், கந்து போலுங் கூம்பு எனவும் மயங்கி வந்தவாறு கண்டு கொள்க.

நச்

இது நிறுத்த முறையானே நிரல் நிறை கூறுகின்றது.

இ-ள் : அவற்றுள் நிரல் நிறை தானே—அந்நான்கனுள் நிரல் நிறையாவது, வினையினும் பெயரினும் நினையத் தோன்றி—வினையானும் பெயரானும் ஆராயத்தோன்றி, சொல்வேறு நிலைஇப் பொருள் வேறு நிலையில்—முடிக்கப்படுஞ் சொல்லும் வேறே நிலை பெற்று முடிக்குஞ் சொல்லும் வேறே நிற்றலாம்' எ-று.

தொடர்மொழிப் பொருள் முடிக்குஞ் சொற்கண்ணது ஆகலான் முடிக்குஞ்சொல்லைப் 'பொருள்' என்றார்.

'வினையினும் பெயரினும்' என்றதனான் வினைச் சொல்லான் வருவதூஉம் பெயர்ச் சொல்லான் வருவதூஉம் அவ்விரு சொல்லான் வருவதூஉம் என நிரல் நிறை மூன்றாம்.

---

* 'மாசு போகவும் காய் பசி நீங்கவும் கடிபுனல் மூழ்கி அடிசில் கைதொட்டு' என்பது வினை நிரல் நிறைக்குச் சேனாவரையர் காட்டிய உதாரணம். அது அவரே காட்டியது போலும். சான்றோர் செய்யுளாயின் தெய்வச் சிலையார் அறிந்திருப்பர்.

உ-ம் : "மாசு போகவும் காய்பசி நீங்கவும்
கடிபுனல் மூழ்கி அடிசில்கை தொட்டு"

என்புழி, முடிவனவும் முடிப்பனவுமாகிய வினைச் சொல் வேறு வேறு நிற்றலின் வினை நிரல்நிறை.

"கொடி குவளை கொட்டை நுசுப்பு உண்கண் மேனி" என, முடிவனவும் முடிப்பனவுமாகிய பெயர்ச்சொல் வேறு வேறு நிற்றலின் பெயர் நிரல் நிறை.

"உடலும் உடைந்தோடும் ஊழ்மலரும் பார்க்கும்
கடலிருள் ஆம்பல்பாம் பென்ற—கெடலருஞ்சீர்த்
திங்கள் திருமுகமாச் செத்து"

என்புழி, முடிவனவாகிய பெயரும் முடிப்பனவாகிய வினையும் வேறு வேறு நிற்றலின் பொதுநிரல் நிறை.

'நினைய' என்றதனால் சொல்லும் பொருளும்' நிரல்பட நில்லாது,

"களிறும் கந்தும்போல நளிகடற்
கூம்பும் கலனும் தோன்றும்"

என மயங்கி வருதலும் கொள்க.

## வெள்

இது நிரல் நிறைப் பொருள்கோள் ஆமாறு கூறுகின்றது.

இ-ள் : அந்நால்வகைப் பொருள்கோளுள் நிரல் நிறை யாவது வினையாலும் பெயராலும் ஆராயத் தோன்றி முடிக்கப் படும் சொல் வேறு நிற்ப, முடிக்குஞ் சொல்லாகிய பொருள் வேறு நிற்றலாம், எ-று.

வினையினும் பெயரினும் என்றதனால் வினைச்சொல்லால் வரும் வினை நிரல் நிறையும் பெயர்ச் சொல்லால் வரும் பெயர் நிரல் நிறையும் அவ்விருசொல்லால் வரும் பொது நிரல் நிறையும் என நிரல் நிறை மூன்றாம்.

உ-ம் : "மாசு போகவும் காய்பசி நீங்கவும்
கடிபுனல் மூழ்கி அடிசில் கைதொட்டு"

என முடிவனவும் முடிப்பனவுமாகிய வினைச்சொல் வேறு வேறு நிரலே நிற்றலின் வினை நிரல் நிறையாயிற்று. இது மாசு போகப் புனல் மூழ்கிப் பசி நீங்க அடிசில் கைதொட்டு என இயையும்.

"கொடி குவளை கொட்டை நுசுப்பு உண்கண் மேனி" என முடிவனவும் முடிப்பனவுமாகிய பெயர்ச்சொல் வேறு, வேறு நிரலே நிற்றலின் பெயர் நிரல் நிறையாயிற்று. இது கொடி நுசுப்பு, குவளை யுண்கண், கொட்டை மேனி என இயையும்.

உடலும் உடைந்தோடும் ஊழ்மலரும் பார்க்கும்
கடலிருள் ஆம்பல் பாம்பென்ற—கெடலருஞ் சீர்த்
திங்கள் திருமுகமாச் செத்து.

என முடிப்பனவாகிய வினையும் முடிவனவாகிய பெயரும் வேறு வேறு நிரலே நிற்றலின் பொது நிரல் நிறையாயிற்று. இது, திருமுகம் திங்களாகக்கருதி கடலும் உடலும், இருளும் உடைந்தோடும், ஆம்பலும் ஊழ் மலரும், பாம்பும் பார்க்கும் என இயையும்.

நினையத் தோன்றி என்றதனால், முடிவனவாகிய சொல்லும் முடிப்பனவாகிய பொருளும் நேர்முறையில் நிரல் பட நில்லாது எதிர் முறையில் மயங்கி வருதலும் கொள்வர்.

"களிறும் கந்தும் போல நளிகடல்
கூம்பும் கலனும் தோன்றும்"

எனவரும். இதன் கண், 'களிறும் கந்தும் போலக் கலனும் கூம்பும்' எனவருதல் வேண்டும். அவ்வாறு கூறாது 'கூம்பும் கலனும்' என எதிர்மாற்றிக் கூறினமையால் 'மயக்க நிரல்நிறை' ஆயிற்று. இதனை 'எதிர் நிரல் நிறை' என வழங்குதலும் உண்டு.

ஆதி

உ-ம்: 1. சர்க்கரை வேம்பு உப்பு பாக்கு
இனிக்கும் கசக்கும் கரிக்கும் துவர்க்கும்

2. ஒருகண் முக்கண் ஊசி தேங்காய்க்கு ஆம்

3. முகப்பல் இதழ்முலை நான்கும் முறையே
முழுமதி முத்து பவளம் மலையாய்
அகப்பொருள் வல்லார் அறிவிக்கின்றார்

# சுண்ணப் பொருள்கோள்

400. சுண்ணந் தானே
பட்டாங் கமைந்த வீரடி யெண்சீ
ரொட்டுவழி யறிந்து துணித்தன ரியற்றல் (10)

(சுண்ணம் தானே
பட்டாங்கு அமைந்த ஈரடி எண்சீர்
ஒட்டுவழி அறிந்து துணித்தனர் இயற்றல்)

ஆ. மொ. இல.

'Sunnam' is the mode in which two lines of eight 'Sir' (measured word) grammatically formed may be split up and joined in such way as to express the proper meaning of the poetry.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே சுண்ணம் என்னும் பொருளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : சுண்ணம் எனப்படுப இரண்டடியால் எட்டுச் சீராற் பொருந்துமாறு அறிந்து துணித்து இயற்ற வரும், எ-று

வரலாறு : சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை

எனவரும். இதனை ஒட்டுமாறு : மொழிகளை, சுரை மிதப்ப, அம்மி ஆழ, யானைக்கு நிலை, முயற்கு நீத்து எனத் துணித்து இயற்றுக.

'பட்டாங் கமைந்த' என்பது இயைபுடைய செய்யுள் நடைக் கொத்த அடியாகல் வேண்டும் என்றற்கு என்பது.

சேனா

இ-ள் சுண்ணமாவது இயல்பாக அமைந்த ஈரடிக்கண் உளவாகிய எண்சீரைத் துணித்து இயையும் வழியறிந்து கூட்டி இயற்றப்படுவதாம், எ-று.

அளவடி யல்லாதன விகாரவடியாகலிற், 'பட்டாங்கமைந் திலவாதலின்', 'பட்டாங்கமைந்தவீரடி' யெனவே அளவடியாதல் பெறப்படும். ஈரடி யெண் [1]'விகாரவடியானும் பெறப்படுதலின் அவற்றை நீக்குதற்குப்'பட்டாங்கமைந்த வீரடி,என்றார். எனவே, சுண்ணம் அளவடியிரண்டனுள் அல்லது பிறாண்டு வாரா தென்பது.

உ-ம் : சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலை யென்ப
கானக நாடன் சுனை

என்புழி ஆழ, மிதப்ப, நீத்து, நிலை என்பனவும், சுரை, அம்மி, யானைக்கு, முயற்கு என்பனவும் நின்றுழி நிற்ப இயையாமையின் சுரை மிதப்ப, அம்மியாழ, யானைக்கு நிலை, முயற்கு நீத்து எனத் துணித்துக் கூட்ட இயைந்தவாறு கண்டு கொள்க.

[2]சுண்ணம் போலச் சிதராய்ப் பரந்து கிடத்தலிற் சுண்ணம் என்றார்.

## தெய்

சுண்ணமாகிய பொருள்கோள் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : சுண்ணமாவதுதான் அளவடியான் அமைந்த ஈரடிக் கண் எண் சீரும் ஒரோவொரு சீராகத் துணித்துப் பொருந்து வழி யறிந்து கூட்டிப் பொருளுரைக்க, எ-று.

பட்டாங்கு என்பது இயல்பு. அது மிகுதலும் குறைதலு மில்லாத அளவென்று பொருளாயிற்று.

சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலை யென்ப
கானக நாடன் சுனை.

---

1. விகாரவடியானும் பெறப்படுதலாவது முதலடி ஐந்து சீரும் இரண்டாவது அடிமூன்று சீருமாக ஈரடியெண் சீர் அமைதலாம். இதை நீக்கவே பட்டாங்கமைந்த ஈரடி எண்சீர் என்றார்.
2. சுண்ணம்-பொடி

இதனுட் சுரை மிதப்ப, அம்மி ஆழ, யானைக்கு நிலை, முயற்கு நீத்து எனத் துணித்து ஒட்டப் பொருள் விளங்கிய வாறு கண்டு கொள்க. இது நாற்சீர்க்கண்ணே துணித்து ஒட்டியது.

தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
அஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்

இதன் பொருள் : அஞ்சனத்தன்ன பைங்கூற்தல் ! மாமை பொருந்தின மேனிமேல் தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட கோழி முட்டையுடைத்தா லொத்த பசலை, வங்கத்துச் சென் றார் வரின் தணிவேம், எ-று * இதனுள் எண்சீருள் ஒட்டி வந்தது. எண்சீர் என வரையறுத்தமையால் அதன்மேற் சென்று ஒட்டா தென்க.

நச்

இது, சுண்ணம் ஆமாறு கூறுகின்றது.

இ-ள் : சுண்ணந்தானே — சுண்ணமாவது, பட்டாங்கு அமைந்த ஈர் அடி எண்சீர்—இயல்பாக அமைந்த ஈரடிக் கண் உளவாகிய எண்சீரை, துணித்தனர் ஒட்டு வழி அறிந்து இயற் றல்—துணித்து இயையும் வழி அறிந்து கூட்டி இயற்றப்படுவ தாம், எ-று.

ஈரடி யெண்சீர் அளவடி அல்லா விகார அடியானும் பெறப்படுதலின், அவற்றை நீக்குதற்கு ‘அளவடியான் அமைந்த, என்பார் ‘பட்டாங் கமைந்த ஈரடி’ என்றார்.

உ-ம் : சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலை யென்ப
கானக நாடன் சுனை.

---

* இத்தொடர் ‘‘இதனுள் பலவடி எண்சீருள் ஒட்டி வந்தது; ‘ஈரடியெண்சீர் என வரையறுத்தமையால் அதன்மேற் சென்று ஒட்டாதென்க’’ என்றிருப்பின் நன்றாம்—சிவ

சுரை மிதப்ப, அம்மி ஆழ, யானைக்கு நிலை, முயற்கு நீத்து எனத் துணித்துக் கூட்ட இயையும்.

சுண்ணம் போலச் சிதர்ந்து கிடத்தலின் சுண்ணம் ஆயிற்று.

இதனுள் ஆழ அம்மி நீத்து முயற்கு என ஒட்டிப்பொருள் தந்து நின்றனவேனும் சுரைக்கும் யானைக்கும் சொல்முடிவு நோக்குப்பட நின்று பொருள் உணர்த்தாமையின் மாற வேண்டிற்று.

## வெள்

இது சுண்ணமாமாறு கூறுகின்றது.

இ-ள் : சுண்ணமாவது இயல்பாக அமைந்த ஈரடிக்கண் உளவாகிய எண்சீரை இயையும் வழியறிந்து கூட்டி இயற்றப் படுவதாம், எ-று.

பட்டாங்கு-இயல்பு. இயல்பாக அமைந்த ஈரடி எண்சீர் எனவே நாற்சீரடியாக அமைந்த ஈரடியெண்சீர் என்பதாம். எனவே, சுண்ணமாகிய பொருள்கோள் அளவடி யிரண்டனுள் அல்லது பிறவிடத்து வாராது என்பதாயிற்று

உ-ம் : சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை.

என்புழி முதல் இரண்டடிகளிலும் உள்ள சீர்களை, சுரை மிதப்ப, அம்மி ஆழ, யானைக்கு நிலை, முயற்கு நீத்து எனத் துணித்துக் கூட்டத் தம்முள் இயைந்தவாறு கண்டுகொள்க.

சுண்ணம் (பொடி) போலச் சிதராய்ப் பரந்து கிடத்தலின் இதனைச் சுண்ணம் என்றார் ஆசிரியர்.

இப்பொருள்கோள் அருகியல்லது வாராமையின் இதனை மொழிமாற்றினுள் அடக்கினார் பவணந்தியார்.

## ஆதி

பொருள் : சுண்ணம் என்பது செய்யுளினுற்ற இரண்டடி எட்டு சீர்களின் மொழிகளைத் தெரிந்தும் எடுத்தும் பொருத்த மான முறையில் இணைத்தும் பொருள் கோடல்.

இஃதே கொண்டு கூட்டு எனப்படும்.

உ-ம்: குயிலே அகவும் மயிலே சேவல்
கூவும் கூவும் பெட்டை கொக்கரிக்குமே

இதுகுயிலே கூவும் எனப்பொருள் தருவது.

நிலத்தில் நீந்தலாம் நீரில் படுக்கலாம்
மரத்தில் பறக்கலாம் வானில் ஏறலாம்

நிலத்தில் படுக்கலாம் மரத்தில் ஏறலாம் எனக் கொண்டு கூட்டுகிறோம்.

## சுப்

உரையாசிரியர் சேனாவரையர் நச்சினார்க்கினியர் இம் மூவரும் 'சுரையாழ அம்மி மிதப்ப' என்பதனை மாத்திரம் இச்சூத் திரத்துக்கு உதாரணமாகக் கொடுத்தனர். தெய்வச்சிலையார் அதனோடு தெங்கங்காய்போலத் ........... சென்றார்வரின்' என்பதனையும் உதாரணமாகக் காட்டினர். மேலும் சுரை யாழ அம்மி மிதப்ப' என்பது 'நாற்சீர்க் கண்ணே துணித்து ஒட்டியது, என்றும் 'தெங்கங்காய்' என்பதனுள் எண்சீருள் ஒட்டி வந்தது' என்றும் கூறினர். இதனை நோக்குமிடத்துச் சூத்திரத்திலுள்ள 'ஈரடியெண்சீர், என்பதற்கு ஈரடிக்குரிய எண் சீர் என்பது பொருள் என்றும், ஒட்டுதல் எண்சீருக்குள் இருத்தல் வேண்டுமேயன்றி ஈரடி கொண்ட எண் சீருக்குள் இருத்தல் வேண்டும் என்ற நியதியில்லை யென்றும் தெய்வச் சிலையார் கருதினர் என்று தோன்றுகின்றது. *

## வை. தங்கமணி

*சுண்ணமாவது ஈரடி யெண்சீருள், எதிர் நிரல் நிறையாக வருவது. எனக்கூறி,

---

* 'தெங்கங்காய்போல' எனும் பாடற் சீர்களைத் தெய்வச் சிலையார் எண்சீரளவில் துணித்துக் கூட்டாமல் பல சீரளவில் கூட்டலால் இக்கருத்து பொருந்தாது-சிவ.

* இவ்வுரையும் உதாரணமும் தங்கமணியவர்கள் பொருள் கோள் என்ற தலைப்பில் எனக்கு அனுப்பிவைத்த கட்டுரையிலிருந்து எழுதப்பட்டன.

உ-ம்: "களிறும் கந்தும் போல நளிகடற்
கூம்பும் கலனுந் தோன்றும்
தோன்றல் மறந்தோர் துறை கெழு நாட்டே"

என்பதில் களிறும்போல் கலனும் கந்துபோல் கூம்பும் எனக் கூட்டுதல் வேண்டும் என்றும் கூறினார்.

"சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை"

என்பதில் ஓரடியுள்ளேயே சுரை மிதப்ப அம்மி ஆழ யானைக்கு நிலை முயற்கு நீத்து என முடிதலின் ஈரடியெண்சீர் என்றதற்கு மாறுபடுதலின் உரையாளர் காட்டும் சுரையாழ என்னும் உதாரணம் பொருந்தாது என்பர் வை. தங்கமணி*

## அடிமறிப் பொருள்கோள்

**401 அடிமறிச் செய்தி யடிநிலை திரிந்து**
**சீர் நிலை திரியாது தடுமா றும்மே. (11)**
(அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே).

ஆ. மொ. இல.

'Adimari' is the mode in which the position of the lines may be altered without changing the place of the 'Sirs' (measured words) and the lines may exchange places

பி. இ. நா.

அடுத்த சூத்திரத்துக் காண்க.

---

* ""களிறும் கந்தும் போல நளிகடற், கூம்பும் கலனுந் தோன்றும்" என்னும் அடிகளில் எண்சீர் இல்லாமையால் இவர் இவ்வுதாரணம் காட்டுவது பொருந்துமா எனக்கருதுதல் வேண்டும்—சிவ.

இளம்

இச்சூத்திரத்தில் என்னுதலிற்றோவெனின், அடிமறிப் பொருள் கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : அடிமறி என்று சொல்லப்படுவது சீர் கிடந்துழியே கிடப்ப, அடிகள் முதலும் இடையும் கடையும் படச்சொல்லிக் கண்டு கொள்க.

சேனா

இ-ள் : அடிமறிச் செய்யுளாவது சீர் நின்றாங்கு நிற்ப அடிகள் [1]தத்த நிலையிற் றிரிந்து ஒன்றன் நிலைக்களத்து ஒன்று சென்று நிற்கும், எ-று.

எனவே, எல்லா வடியும் யாண்டுஞ் செல்லும் என்பதாம்.

[2]உ-ம் : மாறாக் காதலர் மலைமறந் தனரே
யாறாக் கட்பணி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழி யான்வாழு மாறே.

எனவரும். இதனுள் சீர் நின்றாங்கு நிற்பப் பொருள் சிதை யாமல் எல்லாவடியுந் தடுமாறியவாறு கண்டு கொள்க.

பெரும்பான்மையும் நாலடிச் செய்யுட்கண் அல்லது இப் பொருள்கோள் வாராதென்க.

நிரனிறைதானே; சுண்ணந்தானே, மொழிமாற்றியற்கை என்பனபோல ஈண்டும் "அடிமறிச் செய்தி" யென்பதனைக் குறளடியாக்கி "அடி நிலை திரிந்து சீர்நிலை திரியாது தடுமா

---

1. தத்த நிலையிற்றிரிதலாவது வரிசையில் மாறுபடுதல்.

2. பொருள் : தோழீ! நம்மிடம் அன்பு மாறத் தலைவர் நம் மறந்தார்; அதனால் என் கண்ணீர் ஆறாக வருதல் ஒழியாது; என் மென்ற தோளிலிருந்து தனி யாக வளை நெகிழும்; இனியான் வாழுமாறு கூறாய்.

றும்மே பொருள் தெரி மருங்கின்" என்று சூத்திரமாக [1]அறுப்பாரும் உளர்.

தெய்

அடிமறியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : அடிமறி யென்பதன் செய்தி சீர்நிலை திரியாது அடிநிலைமை திரிந்து தடுமாறும், எ-று.

உ-ம் : சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளிர் ஆரணங்கினரே
வாரல் எனினே யான்அஞ் சுவலே
சாரல் நாடநீவர லாறே

இது 'சாரல்நாட! நீவருகின்ற நெறி சூரல்பம்பிய சிறுகான்யாறு; சூரரமகளிர் வருத்தஞ்செய்வர்; வாராது ஒழியென யான் அஞ்சாநின்றேன்' என அடிமாறிப் பொருளுணர்த்தியவாறு கண்டு கொள்க.

அஃதேல் இதனை யாப்பிலக்கணத்துள் ஆராய்தல் வேண்டும். சொல் நிலை திரியாமையால் எனின், இது தொடர் மொழித் திரிபாகலான் ஈண்டுக் கூறப்பட்டது என்க.

நச்

இஃது அடிமறி யாமாறு கூறுகின்றது.

இ-ள் : அடிமறிச் செய்தி — அடிமறி என்பதன் செய்தி, சீர்நிலை திரியாது அடிநிலை திரிந்து தடுமாறும் — சீர் நின்றாங்கு நிற்ப அடிகள் தத்தம் நிலையில் திரிந்து ஒன்றின் நிலைக் களத்து ஒன்று சென்று நிற்கும், எ-று.

உ-ம் : மாறாக் காதலர் மலைமறந் தனரே
ஆறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழி யான்வாழு மாறே

இது சீரும் பொருளும் திரியாது, அடி திரிந்தவாறு காண்க. இது நான்கடிச் செய்யுட்கல்லது பெரும்பான்மை வாராது.

---

1. 'யார் என்பது தெரியவில்லை' 'பொருள் தெரி மருங்கின்' என்பது அடுத்த சூத்திரத்தில் காணப்படுவது.

வெள்

இஃது அடிமறியாமாறு கூறுகின்றது.

இ-ள் : அடிமறிச் செய்யுளாவது, சீர் நின்றாங்கு நிற்ப அடிகள் தத்தம் நிலையிற் றிரிந்து ஒன்றன் நிலைக்களத்து ஒன்று சென்று நிற்கும், எ-று.

சீர்கள் கிடந்துழியே கிடப்பச் செய்யுளின் அடிகள் முதலும் இடையும் கடையும் மறித்துப் பொருள் கொள்ளப்படுதலின் அடிமறி என்னும் பெயர்த்தாயிற்று.

உ-ம் : மாறாக் காதலர் மலைமறந் தனரே
யாறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழி யான்வாழு மாறே

எனவரும்.

ஆதி

உ-ம் : பூவெனப் படுவது தாமரைப் பூவே
பழமெனப் படுவது தேமாம் பழமே
இலையெனப் படுவது வாழை யிலையே
நூல்எனப் படுவது முப்பால் நூலே
கவியெனப் படுவதுகம்பன் கவியே

இவற்றில் எந்த அடியை யெடுத்து எங்கு மாற்றினும் செய்யுளின் சீர் கெடுவதில்லை.

கள்ளருந் துவதே கருத்தை யழிக்கும்
காமம் பெரிய இழிகுணம் ஆகும்
களவு என்பது பிழைபடு நெறியாம்
கவறு என்பது தவறான செயலாம்
பொய்யனை எவரும் கையன் என்பரால்

அடிமாறினும் சீர்மாறுவதில்லை.

# மேலதற்குப் புறனடை

402. பொருடெரி மருங்கி
னீற்றடி யிறுசீ ரெருத்துவயின் [1]திரியுந்
தோற்றமும் வரையா ரடிமறியான (12)

(பொருள் தெரி மருங்கின்
ஈற்றுஅடி இறுசீர் எருத்துவயின் திரியும்
தோற்றமும் வரையார் அடிமறி யான)

ஆ. மொ. இல.

When knowing the meaning of the stanza
it is not forbidden that the final 'Sir' of
the last line of the stanza may be
connectcd with the penullimate line of the stanza.

பி.இ.நா:

(முன்சூத்திரத்தையும் நோக்கியது)

நன் 419

ஏற்புழி எடுத்துடன் கூட்டுறும் அடியவும்
யாப்பு ஈறு இடைமுதல் ஆக்கினும் பொருளிசை
மாட்சியும் மாறா அடியவும் அடிமறி

இ.வி 369

அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

உரை : அடிமறிப் பொருள்கோள் ஆராயுமிடத்து, ஈற்றடியின் இறுதிச்சீர் எருத்தத்துச் சீராய்க்கிடந்தும் வரையப்படாது, எ-று.

---

1 றிரிபுந்—பாடம்.

வ-று : சூரல்பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளிர் ஆரணங் கினரே
சாரல் நாட [1]நீவர லாறே
வாரல் எனினே யானஞ் சுவலே

என்புழி'அஞ்சுவல்யான்' எனஇறுதிச்சீர் எருத்துவயிற்றிரிந்த வாறு கண்டு கொள்க. இவ்வாறுஎங்கும் மாற்றுக.

சேனா

இ-ள் : பொருளாராயுங்கால் அடிமறிச் செய்யுட்கண் ஈற்றடியது இறுதிச்சீர் எருத்தடியிற் சென்று திரிதலும் வரையார் எ-று.

'சீர்நிலை திரியாது தடுமாறும்' என்றாராகலின் சீர் நிலை திரிதலும் ஒருவழிக்கண்டு எய்தியது இகந்து படாமற்காத்தவாறு.

இலக்கியம் வந்தவழிக் கண்டு கொள்க,

எருத்துவயின் என்பதற்கு ஈற்றயற் சீர்வயின் என்று பொருளுரைத்து,

சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளிர் ஆரணங் கினரே
சாரல் நாட நீ வரு தீயே
வாரல் எனினே யானஞ் சுவலே

என்புழி 'அஞ்சுவல்யான்' என இறுதிச்சீர் ஈற்றயற் சீர்வயின் சென்று திரிந்த தென்று உதாரணம் காட்டினாரால் உரையாசிரியர் எனின், 'யானஞ்சுவல்' என நின்றாங்கு நிற்பவும் பொருள் செல்லும் ஆதலின், இவ்வாறு திரிதல் பொருந்தாமையின் அவர்க்கு அது கருத்தன்றென்க.

எல்லாவடியும் யாண்டுஞ் செல்லுமாயினும் உரைப்போர் குறிப்பான் எருத்தென்றும் ஈற்றடியென்றும் கூறினார்.

உரைப்போர் குறிப்பின் உணர்வகை யன்றி
இடைப்பான் முதலீ றென்றிவை தம்முள்
மதிக்கப் படாதன மண்டலயாப்பே

---

1 நீ வரு தீயே சேனா - பாடம்

என உரைப்போர்குறிப்பான் முதலும் இடையும் ஈறும் கோடல் [1]பிறரும் கூறினார் என்பது.

## தெய்

மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : பொருள் ஆராயும்வழி ஈற்றடிக்கண்வரும்இறுதிச் சீர் ஈற்றயலடிக்கண் திரிந்து பொருள்படும் நிலைமையும் நீக்கார், எ-று.

இவ்வாறு வருவதும் அடிமறி என்றவாறாம். உதாரணம் வந்தவழிக் கண்டு கொள்க.

## நச்

இது மேலதற்கோர் புறனடை

இ-ள் : அடிமறியான—அடிமறிச் செய்யுளிடத்து, பொருள் தெரிமருங்கின்—பொருள்முடிவை ஆராயுமிடத்து, ஈற்று அடி—அப்பொருள் முடிவினையுடைய அடியில், எருத்துவயின் இறு சீர்—முடிக்கின்ற சீர்க்கு முதற்சீரிடத்துப் பொருளே தன் பொருளாய் இறும்சீர், திரியும் தோற்றமும் வரையார்—ஏனையடிகள்போல் நேராய் முடியாது மீண்டு சென்று முன் நின்றதோர் சொல்லோடே பொருள் முடியும் தோற்றரவும் நீக்கார் ஆசிரியர், எ-று.

'கூறாய் தோழி யான்வாழு மாறே'

என்பது, யாண்டு நிற்பினும் பாட்டில் பொருள் முடிக்கின்ற அடி அதில் 'வாழும்' என்பது எருத்துச்சீர். 'மாறு' என்னும் இடைச்சொல்லாகிய இறுதிச்சீர்தான் பிரிந்து நின்று உணர்த்து தற்குத் தனக்கு ஓர் பொருள் இன்றி 'வாழும்படியை' என எருத்துச்சீரின் பொருளையே யுணர்த்தி, உருபையேற்றுக் 'கூறாய்' என முன் நின்ற சொல்லோடு முடிந்தவாறு காண்க.

உம்மையான், இங்ஙனம் முடிதல் சிறுபான்மை ஆயிற்று.

---

1 பிறர்—காக்கைபாடினியார்

வெள்

இது மேலதற் கோர்புறனடை

இ-ள் : பொருள் ஆராயுங்கால், அடிமறிச் செய்யுட்கண், ஈற்றடியது இறுதிச்சீர் ஈற்றயற்சீர்வயின் சென்று திரிந்து நிற்றலும் நீக்கார் ஆசிரியர், எ-று.

மேற் சூத்திரத்தில் 'சீர் நிலை திரியாது தடுமாறும்' என்றார், ஈண்டு ஒரோவழிச் சீர்நிலை திரிதலும் உண்டு எனத் தழுவினார். எருத்து—ஈற்றின் அயல்; ஈண்டு ஈற்றயற் சீரைக் குறித்தது. ஈற்றடியென அடியைக் குறித்த ஆசிரியர் 'எருத்தடி' என்னாது 'எருத்து' எனப் பொதுப்படக் குறித்தலின் எருத்து என்பது ஈற்றடியின் எருத்தாகிய ஈற்றயற் சீரைக் குறித்ததெனக் கொண்டார் இளம் பூரணர்.

உ-ம் : சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளிர் ஆரணங் கினரே
சாரல் நாட நீவரு தீயே
வாரல் எனினே யானஞ் சுவலே

என்புழி 'அஞ்சுவல்' என்னும் இறுதிச்சீர் 'யான்' என்னும் ஈற்றயற் சீராய எருத்துவயிற் சென்று 'அஞ்சுவல்யானே' எனத்திரிந்து நின்றவாறு கண்டு கொள்க.

இதன்கண் 'எருத்து' என்பதற்கு 'எருத்தடி' எனப்பொருள் கொண்ட சேனாவரையர், தாம் கூறுமாறு ஈற்றடி இறுதிச்சீர் எருத்தடியிற்சென்று திரிதற்கு இலக்கியம் காணாது 'இலக்கியம் வந்தவழிக் கண்டு கொள்க, என உதாரணம் காட்டாது சென்றமையைக் கூர்ந்து நோக்குங்கால், இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் கூறிய பொருளே தொல்காப்பியனார் கருத்துக்கு ஏற்புடைய தென்பது உய்த்துணரப்படும்.

அடிமறிச் செய்யுளில் எல்லாவடியும் யாண்டும் செல்லுமாயினும் உரைப்போர் குறிப்பின் வழி அச்செய்யுளின் ஈற்றடியாக் குறிக்கத்தகும் அடியுண்மையால் ஈற்றடி எனக்குறித்தார் ஆசிரியர்.

உரைப்போர் குறிப்பின் உணர்வகை யன்றி
இடைப்பால் முதல் ஈறு என்றிவை தம்முள்
மதிக்கப் படாதன மண்டில யாப்பே

என்றார் பிறரும்.

## ஆதி

அடிமறியின் பொருள் - செய்யுளின் ஈற்றடியின் ஈற்றுச்சீர் அதற்கு அடுத்த சீரில் உற்று இடம்மாறி வரும்இயல் பையும் கடிவதற்கில்லை. எருத்து-கழுத்து

உ-ம் : வள்ளுவர் வழுவிலா முப்பால் எழுதினார்
வில்லி பாரதம் விரிவாய் விளக்கினார்
அருண கிரியார் திருப்புகழ் உரைத்தனர்
சயங்கொண் டாரே பரணி பாடினார்
அண்ணா மலையர் சிந்துநன் கிசைத்தார்
சுப்பிர தீபர் நற்பதம் பாடினார்
எல்லாம் இசைப்பவர் ஆவர் கம்பரே

ஈற்றுச்சீர் 'கம்பர்' எருத்தம 'ஆவர்'. இவை இடம்மாற 'எல்லாம் இசைப்பவர் கம்பரே ஆவர்' என நிற்பினும் குற்ற மன்று. அடிதொறும் பொருள் நிறைவுற்று, யாண்டு மாறினும் பொருள் சிதையா நிலை பெறவேண்டும். அடிமாறி சீர் மாறலாம் என்ற கருத்துக் கொண்டே முந்திய சீர்நிலை திரியாது என்பதற்குப் பாட்டின் சிறப்புக்கெடா முறையில் எனப் பொருள் சொல்லப்பட்டது.

## சுப்

இச்சூத்திரத்திலுள்ள 'ஈற்றடி யிறுசீர் எருத்துவயின்' என்பதற்கு உரையாசிரியர், 'ஈற்றடியின் இறுதிச்சீர் எருத்துச் சீர்வயின்' என்றும், சேனா வரையரும் தெய்வச்சிலையாரும் 'ஈற்றடியது இறுதிச்சீர் எருத்தடியிற் சென்று' என்றும், நச்சி னார்க் கினியார் 'ஈற்றடி யெருத்துப் பொருளே தன் பொருளாக் கொண்ட இறுதிச்சீர்' என்றும் பொருள் கொண்டமை கவனிக்கத்தக்கது.

இச்சூத்திரம் 'அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து-சீர் நிலை திரியாது தடுமாறும்மே' என்ற முற்சூத்திரத்தில் உணர்த்தப்பட்ட அடிமறியின் வேறு வகையைக் கூறுதலின்

சேனா வரையர், தெய்வச்சிலையார் இருவருங் கூறும் பொருளே சிறந்தது. ஆகவே 'யானஞ்சுவல்' என நின் நாங்கு நிற்பவும் பொருள் செல்லுமாகலின் இவ்வாறு திரிதல் பொருத்தமின்மையின் அவர்களது கருத்தன் றென்க என்று' சேனாவரையர் உரையாசிரியரை மறுப்பது பொருந்தும்.

நச்சினார்க்கினியர் 'கூறாய் தோழியான் வாழுமாறே' என்னுமிடத்து 'மாறு' என்னும் இடைச்சொல் தனக்கோர் பொருளின்றி 'வாழும்படியை யென எருத்துச்சீரின் பொருளையே யுணர்த்திற்று' என்றார், 'மாறு' என்பது 'அனையை யாகன் மாறே' (புறம். 20), 'நீதுஞ்சாய் மாறே' (புறம். 22) 'நீ அருளன் மாறே' (புறம். 92) முதலிய இடங்களில் ஏதுப் பொருளில் வருதலின் அதற்குப் பொருளில்லை யென்று கூறுவது எவ்வாறு பொருந்தும் ?*

**சிவ**

'அடிமறிச் செய்தியின்' என்னுஞ் சூத்திரமும் இச்சூத்திரமும் அடிமறிப் பொருள்கோள் பற்றியன. அடிமறிப் பொருள்கோள் செய்யுளானது சீர்கள் நின்ற இடத்தே நிற்ப அடிகள் மட்டும் எவ்வடியும் எவ்வடியிடத்தும் மாற்றி வைக்கும் படி அமைவது. மாற்றி வைப்பதால் பொருள் கெடாது. இதற்கு உதாரணம் ''சூரல் பம்பிய சிறுகான் யாறே'' என்னும் பாடல். இதனால் அடிமறிச் செய்யுளில் அடிநிலை திரியும் என்பதும் சீர்நிலை திரியாது என்பதும் பெறப்பட்டது.

சீர்நிலை திரிந்தும் அடிமறிப் பொருள்கோட் செய்யுள் வரும் என்பது பொருள் தெரிமருங்கின் என்னும் சூத்திரத்தில் கூறப்பட்ட செய்தி. அவ்வாறு சீர்திரிவது பற்றி மூவகைக் கருத்து உண்டு.

1. ஈற்றடியின் இறுதிச்சீர் அதன் அயற்சீர்க்கு முன்னர் நின்று பொருளமைதிப் படுவது என்பது இளம்பூரணர் கோட் பாடு. 'சாரல்நாட யானஞ் சுவலே' என்னும் அடியில் 'அஞ்சுவல்

---

* 'யான் வாழுமாறே' என்ற விடத்துமாறு என்னும் இடைச் சொற்குப் பொருள் இல்லை என்றாரே தவிர மாறு என்னும் சொற்கே பொருள் இல்லை என்றாரல்லர் நச்சினார்க்கினியர்.

என்னும் இறுதிச்சீர் யான் என்னும் சீர்க்கு முன்னர்ச் சென்று 'அஞ்சுவல்யானே' என நிற்கும். இவ்வாறு நிற்பதே ஈற்றடியிற்சீர் நிலை திரிவது என்றார் அவர்.

யானஞ்சுவல் என்பது எழுவாய்த்தொடர்; 'அஞ்சுவல்யான்' என்பது வினைமுற்றுத் தொடர். எழுவாய்த் தொடரான 'யானஞ்சுவலே' என்பதும் பொருள் சிறந்து செல்லக்கூடியதே யாதலின் சீர் மாற்றம் தேவையில்லை எனச் சேனாவரையர் அவர் கருத்தை மறுத்தார். மறுப்பு நன்றே.

2. இனிச் சேனாவரையர் கூறுவது: ஈற்றடிக்கண் உள்ள இறுதிச் சீரானது ஈற்றடியின் அயலடியிற் சென்று சேர்ந்து பொருள் தருமாயினும் அதுவும் அடிமறிச் செய்யுளாம் என்பது. இதற்கு உதாரணம் அவர்க்குப் புலப்பட வில்லை.

அடிமறிச் செய்யுள் எத்தனையடியினால் அமைவதாயினும் நாற்சீர் அடியாலேயே அமைதல் வேண்டும். சேனாவரையர் கருத்துப்படி ஈற்றடியின் இறுதிச்சீர் எருத்தடியில் சென்று பொருள் தருவதாயின் அவ்வெருத்தடியை வேறிடத்தில் மாற்ற இயலாது. ஏனெனின் அது ஐஞ்சீரடியாகிவிடும். அதனால் அது அப்படியே நிற்க மற்றைய அடிகளையே மாற்றலாம். அன்றியும் இறுதியடியையும் மாற்ற முடியாது. எனவே ஈற்றடியும் ஈற்றயலடியும் அப்படியே நிற்க மற்றைய முன்னடிகளே மாற்றற்குரியனவாம். ஆனாலும் பொருள் உரைக்குமிடத்து எவ்வடியையும் எங்கும் மாற்றிய நிலையில் பொருளுரைக்கலாம். செய்யுளாகக் கூறும்போதும் எழுதும் போதும் இறுதியிரண்டடிகளை நீக்கியே மாற்றல் வேண்டும்.

3. நச்சினார்க்கினியா 'கூறாய் தோழி யான் வாழுமாறே' என்பதில் மாறு என்னும் இறுதிச்சீர் தனக்கெனப் பொருளின்றி வாழும்படி என்னும் முன்சீரின் பொருளே தனக்கும் பொருளாய் அமைதலின் அந்த மாறு என்னுஞ்சீர் முன்சீராகிய 'வாழும்' என்பதுடன் சென்றியைந்தது எனக்கூறி அடிமறிச் செய்யுளில் ஈற்றடியின் இறுதிச்சீர் அதன் முதற்சீரோடு முடியின் அதுவும் அடிமறிச் செய்யுள் வகையாம் என்றார். அவர் கருத்து இறுதிச் சீர்க்குப் பொருள் இராது என்பது.

சீர்நிலைதிரிதல் திரியாமை என்பன பொருளைப் பற்றியன வல்ல. சொல்லைப் பற்றியனவே. 'கூறாய் தோழியான் மாறு வாழ' எனச்சீர் மாறிவருதல் இல்லை. அதனால் நச்சினார்க் கினியர் கருத்து ஏற்பதற்கில்லை.

இனிச் சேனாவரையர் கருத்தையே நாம் ஏற்கலாம். அதற்குதாரணமாகப் பின்வரும் பாடலைக் காட்டலாம்.

திருவுறு மனைவி சிறக்க நாளும்
மருவுறு மக்கள் மாண்புடன் வளர்க
பொருவறு நல்லறம் பொலிக
மருவுறு மனையறம் வாழிய நன்றே.

இப்பாடலில் 'மருவுறு மனையறம் வாழிய' எனஒரு கருத்து முடிய நன்றே என்பது தனித்தது. அதனை 'பொருவறு நல்லறம் பொலிக நன்றே' எனக் கூட்டிப் பொருள் கொள்க. இப்பாடலில் முதல் இரண்டடிகளை முன்னும் பின்னும் மறிக் கலாம். இறுதி யிரண்டடிகளை மறிக்க இயலாது. ஆனால் பொருளளவில் நான்கு வரிக் கருத்துகளையும் மாறி மாறிக் கூறலாம்.

## மொழி மாற்றுப் பொருள்கோள்

403. **மொழிமாற் றியற்கை**
**சொன்னிலை மாற்றிப் பொருளெதி ரியைய**
**முன்னும் பின்னுங் கொள்வழிக் கொளாஅல் (13)**

(மொழி மாற்று இயற்கை
சொல் நிலை மாற்றிப் பொருள்எதிர் இயைய
முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல்)

ஆ. மொ. இல

The mode of 'Molimarru' is changing the position of words to bring out the correct meaning of the stanza and placing them before and after as need be.

பி. இ. நா.
நன். 413.

ஏற்ற பொருளுக்கு இயையும் மொழிகளை
மாற்றி ஓரடியுள் வழங்கல்மொழி மாற்றே

இ. வி. 363 ஷை ஷை ஷை

இளம்

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின் ஒழிந்து நின்ற மொழி மாற்றுப் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : மொழிமாற்றினது தன்மையாவது, நின்ற சொல்லை மொழிமாற்றி, முன்னும் பின்னும் கொள்ளுமிடம் அறிந்து கொள்க, எ-று.

வ-று : குன்றத்து மேல குவளை குளத்துள
செங்கோடு வேரி மலர்.

எனவரும். இதனைக் குவளை குளத்துள, செங்கோடு வேரிமலர் குன்றத்துள என மொழி மாற்றுக.

மற்றுச் சுண்ணத்தோடு இதனிடை வேற்றுமையென்னை யெனின், சுண்ணம் ஈரடியெண்சீருள் அவ்வாறு செய்யப்படும்; இதற்கு [1]அன்னதோர் வரையறை யில்லை யென்றவாறாம்.

சேனா

இ-ள் : மொழிமாற்றின தியல்பு, பொருளெதிர் இயையுமாறு சொன்னிலையை மாற்றி முன்னும் பின்னும் கொள்ளும் வழிக் கொளுவுதலாம், எ-று.

உ-ம் : ஆரிய மன்னர் பறையின் எழுந்தியம்பும்
பாரி பறம்பின்மேற் றண்ணுமை—காரி
விறன் முள்ளூர் வேங்கைவீ தானாணுந் தோளாள்
நிறன் உள்ளூர் உள்ள தலர்.

என, இதனுள் பாரி பறம்பின்மேற் றண்ணுமைதான் நாணுந் தோளாள் எனவும், நிறன் விறன் முள்ளூர் வேங்கைவீ எனவும்,

---

1. ஈரடி எண்சீர் என்ற வரையறையில்லை; ஈரடியெழு சீரிலும் வரலாம். பலவடி பல சீரிலும் வரலாம்

உள்ளூர் உள்ளதாகிய அலர் ஆரியமன்னர் பாறையின் எழுந்தியம்பும் எனவும், முன்னும் பின்னும் கொள்வழி யறிந்து கொளுவப் பொருள் எதிர் இயைந்தவாறு கண்டு கொள்க. மொழிமாற்று நின்று ஒன்றற் கொன்று [2]செவ்வாமை கேட்டார் கூங்டியுணரு மாற்றாற் [3] கடாவல் வேண்டும்.
அல்லாக்கால், [4]அவாய் நிலையும் தகுதியும் உடைய வேனும் அண்மையாகிய காரணம் இன்மையாற் சொற்கள் தம்முள் இயையாவாம் என்க,

தெய்

மொழிமாற்று உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மொழி மாற்றினது இயல்பு சொல் நின்ற நிலைமை மாற்றி முன்னும் பின்னும் பொருள் இயைய ஏற்கும்வழிக் கொளுவுதல், எ-று.

மேல், அடிமறி மொழிமாற்றென ஓதினமையானும், சுண்ண மொழிமாற்று ஈரடியெண்சீரென ஓதுதலானும், ஈண்டுச் சொன்னிலை மாற்றியெனப் பொதுப்பட வோதினமையானும் ஓரடிக் கண் நின்ற சொல்லை அவ்வடிக்கண்ணும் பிறவடிக்கண்ணும் முன்பாயினும் பின்பாயினும் ஏற்கும்வழிக் கொளுவப் பெறும், எ-று.

பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அந்நா லைந்தும் மூன்றுதலை யிட்ட
முன்னுறக் கிளந்த உயர்திணை யவ்வே

(தொல். சொல் .வினை 11)

என்றவழி 'மூன்றுதலையிட்ட அந்நாலைந்து' என ஓரடிக்கண் மொழிமாறி நின்றது. 'ஆலத்துமேல குவளை குளத்துள, வாலின் நெடிய குரங்கு' என்ற வழி குரங்கு ஆலத்து மேல, எனப் பிற அடிக்கண் மொழிமாறி நின்றது. பிறவும் அன்ன.

---

2. செவ்வாமை—நிலைவரு மொழிகளாய் இயையாமை
3. கடாவல்—சொற்களைச் செலுத்துதல்
4. அவாய் நிலை—ஒருசொல் ஒருசொல்லை அவாவிநிற்றல், தகுதி—ஒருசொல் தான் கொண்டு முடியும் சொல் தனக்குத் தகுதியாதல். அண்மை — நிலைவருமொழி யென அணிமையில் நிற்றல்.

அஃதேல் பூட்டுவிற் பொருள்கோள், புனல்யாற்றுப் பொருள் கோள், தாப்பிசைப் பொருள்கோள், அளைமறி பாப்புப் பொருள் கோள், கொண்டுகூட்டுப் பொருள்கோள் எனவும் ஒரு சார் ஆசிரியர் உரைப்பவால் எனின், அவற்றுள் யாற்றொழுக்கும், அளைமறிபாப்புப் பொருள்கோளும் திரிவின்றிப் பொருள்படுத லின் இயல்பாம். கொண்டு கூட்டு சுண்ண மொழிமாற்றுள் அடங்கும். பூட்டு விற் பொருள்கோள் மொழிமாற்றுள் அடங் கும். தாப்பிசைப் பொருள்கோட்கண் முன் ஒருசொல் வருவிக்க வேண்டுதலின், இது, 'பிரிநிலை வினை' (எச்ச. 20) என்னுஞ் சூத்திரத்துள் அடங்கும்.*

நச்

இது, மொழிமாற்று ஆமாறு கூறுகின்றது.

இ-ள் : மொழிமாற்று இயற்கை— மொழிமாற்றினது இயல் பாவது, சொல் நிலைப் பொருள் எதிர் இயைய முன்னும் பின் னும் மாற்றி— செய்யுட்கண் 'பா' என்னும் உறுப்பிற்கு ஏற்பச் சொல் நின்ற நிலைப் பொருள்தராதவழிச்சொல் நின்ற நிலைக்குப் பொருள் எதிரே வந்து பொருந்தும்படி அச்சொல்லின் முன் நின்ற சொல்லைப் பின்னேயும் பின் நின்ற சொல்லை முன் னேயும் மாற்றி, கொள்வழிக் கொளாஅல்— பொருள் கொள்ளு மிடத்தே கொளுத்துதலாம், எ-று.

உ-ம் : குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி

[1]"நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரிய" (அகம். 4)

'புரவியினது வாங்குவள் நரம்பு ஆர்ப்பு அன்ன பரிய' என முன் நின்ற சொல்லைப் பின்னே மாற்றியவாறு காண்க. இச் சூத்திரமும் அது.

"இடை முலைக்கிடந்து" (குறுந். 178)

என்பது 'முலையிடை' எனப் பின்னின்ற மொழியை முன்னே மாற்றியவாறு காண்க.

[2]'கடற்படை குளிப்ப மண்டி' (புறம். 6)

என்பதும் அது.

---

* எவ்வெச்சத்துள் அடங்கும் என்பது ஆய்வுக்குரியது.

1. நரம்பார்த்தன்ன—பாடம்

2. படைக்கடல் எனமாற்றுக.

"இரும்பு திரித்தன்ன [3]மாயிரு மருப்பிற்
பரல்அவல் அடைய இரலை தெரிப்ப" (அகம். 4)

என்பதும் அது.

*'பொன்னோடைப் புகரணிநுதல்
துன்னருந்திறல் கமழ்கடாஅத்து
எயிறுபடையாக வெயிற்கத விடாஅக்
கயிறுபிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கிற்
பெருங்கை யானை யிரும்பிடர்த் தலையிருந்து
மருந்தில் கூற்றத் தருந்தொழில் சாவா' (புறம். 3)

என்றாற்போல வருவன எல்லாம் [4]'அணுசிவந்த மாட்டு' என்னும் உறுப்பு.

'ஆரிய மன்னர் பறையின் எழூந்தியம்பும்' (யா. வி. 95 உரை மேற்) என்பதும் அது.

[5]'அகன்றுவந்தமாட்டு' முருகாற்றுப்படை முதலியவற்றுட் காண்க.

மொழிமாற்றாவது, கேட்டோர் கூட்டி உணருமாற்றான் ஈரடிக்கண்ணே வருவது என்றும், 'மாட்டு' என்னும் உறுப்பாவது, இரண்டிறந்த பலவடிக்கண்ணும் பல செய்யுட் டொடரின்கண்ணும் அகன்றும் அணுகியும் வரும் என்றும் உணர்க. அஃது,

---

3. இருமா என மாறுக

* பொருள் : பொன்னாலாகிய பட்டத்தையும் புள்ளி களையும் உடைய அழகிய நெற்றியையும், நெருங்க அரிய திறலையும், மணநாறும் மதநீரையும், கயிற்றாற் கட்டப்பட்ட கவிழ்ந்த மணிகளையுடைய இருபக்கங் களையும், பெரிய கையையும் உடைய-பல்லே படை யாகக் கொண்டு மதில் கதவை விட்டு நீங்காத யானை யது பெரிய பிடர்த்தலையில் இருந்து.

4. அணுகிவந்தமாட்டு = அணிமைக்கண்வந்த கொண்டு கூட்டு.

5. அகன்றுவந்தமாட்டு — நெடுந்தொலைவில் சென்று பொருள் கொள்ளும் கொண்டு கூட்டு.

'அகன்று பொருள்கிடப்பினும் அணுகிய நிலையினும்
இயன்று பொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்
மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்' (செய். 210)

என்னும் செய்யுளியற் சூத்திரத்தான் உணர்க. உதாரணங்கள் ஆண்டுக் காட்டுதும்.

பூட்டுவிற் பொருள்கோளும், அளைமறி பாப்புப் பொருள் கோளும் தாப்பிசைப் பொருள்கோளும் கொண்டு கூட்டுப் பொருள்கோளும் 'மாட்டு' என்னும் உறுப்பின்கண் அடங்கு மாறும், யாற்றொழுக்குப் பொருள்கோள் 'யாப்பு' என்னும் உறுப்பின்கண் அடங்குமாறும் உணர்க.

வெள்

இது மொழி மாற்றாமாறு கூறுகின்றது.

இ-ள் : மொழிமாற்றினது இயல்பாவது பொருள் எதிர் இயையுமாறு நின்ற சொல்லை இடம் மாற்றி முன்னும் பின்னும் பொருள் கொள்ளுமிடம் அறிந்து பொருத்துதலாகும், எ-று.

கொளாஅல்—கொளுவுதல் பொருத்துதல்.

உ-ம் : குன்றத்து மேல குவளை குளத்துள
செங்கோடு வேரி மலர்

எனவரும். இதனைக் 'குவளை குளத்துள், செங்கோடு வேரி மலர் குன்றத்துமேல' என மொழிமாற்றுக.

ஆதி

பொருள் : நன்கு பொருந்துமாறு சீர்களின் சொற்களை மாற்றி முன்னும் பின்னுமாகத் தக்க வழியில் அமைத்துக் கொள்ளுதல் மொழிமாற்று.

*இராமனே இலங்கை மன்னன்
இராவணன் அயோத்தி மன்னன்
பொராவரும் போர்கள் செய்து
தம்புகழ் நிறுவி யுள்ளார்

---

* இப்படியாரும் செய்யுள் செய்ய மாட்டார். உதாரணத்துக் காகக் கட்டியது. இது 'சுரை யாழ அம்மி மிதப்ப' என்பது போலவேயாம். ஆனால் ஈரடி யெண் சீராக இல்லை யாதலின் இப்படிக் காட்டினார் போலும்.

இங்கு அயோத்தியை இராமனுடன் சேரும்படி மொழிமாற்றம் செய்யவேண்டும். அவ்வாறே இலங்கை இராவணனுடன் சேர மொழி மாற்றம் செய்தல் வேண்டும்.

குறிப்பு : *மொழிமாற்றுக்கோ, சுண்ணத்துக்கோ 'சுரையாழ அம்மி மிதப்ப' யானைக்கு நீத்து முயலுக்கு நிலை' என்ற உரையாசிரியர்களின் எடுத்துக்காட்டு தவறு. இது மொழிமாற்றிப் பொருள்தர வேண்டிய இடம் அன்று. இறைச்சிப் பொருளாகத் தலைவி ஊடலில் தலைவனைக் கடிகின்றாள். இவனுக்கு எல்லாம் நேர்மாறுதான். நல்லவர் கெட்டவராகத் தெரியும்; கெட்டவர் நல்லவராகத் தெரியும்'' என்பது. 'மனைவிகசப்பாள் மற்றவள் இனிப்பாள்' என்று இடித்துரைக்கும் உரையிது.

மற்றொன்று : செய்யுளுக்குப் பொருள் கொள்ளும் முறையிது. இதனைச் செய்யுளியலில் அமைக்கலாம். ஆசிரியர் சொல்லதிகாரத்தில் எச்சவியலில் அமைத்தது அத்துணைச் சிறப்புடைத்தன்று. அவ்வாறே பொருளதிகார மரபியல் சொல்லதிகாரத்தில் வரவேண்டிய ஒன்று. அதனைப் பொருளதிகாரத்தில் அமைத்ததும் சிறப்புடைத்தன்று; வழுவே.

சொல்வகை, விகாரம், பொருள்கோள் பற்றிக் கூறிய ஆசிரியர் இனித் தனித்தனிச் செய்திகள் தருகின்றார்.

வை. தங்கமணி

*மொழிமாற்றினைப் பற்றிப்பேசும் ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியருக்கும், பல்கலைக் குரிசில் பவணந்தியாருக்கும் ஒரு சிறு வேறுபாடு. என்னவென்றால், நன்னூலார் ஓரடியுள் மாற்றுதல் என்பர். காப்பியர் 'முன்னும் பின்னும் கொள்வழி என்பர். முன்னும் பின்னும் என்றால் பல அடிகளிலும் இருக்கும் சொற்களைப் பொருள் இயைய முன்னும் பின்னும் கொள்வதா? அல்லது, ஓரடியுள் இருக்கும் சொற்களைப் பொருள் இயைய முன்னும் பின்னும் கொள்வதா ? என்றால்-பலவடிகளில் இருக்கும் சொற்களைப் பொருளுக்கியைய முன்னும் பின்னும் பொருள் பொருத்தமுறப் பொருத்திப் பொருள் கொள்வோமேயானால் கொண்டு கூட்டுக்கும், மொழி

* இக்கருத்து கே. குஞ்சிதபாதனாரால் செந்தமிழ்ச் செல்வி சிலம்பு பரல் ல் எழுதப்பட்டுள்ளது.

* பொருள்கோள் என்னும் தலைப்பில் எனக்கு அனுப்பி வைத்த கட்டுரையிலிருந்து எடுத்து எழுதப்பட்டது.

மாற்றுக்கும் வேறுபாடு இல்லாதுபோய் விடும். ஆகையால் மொழி மாற்றானது அண்மையில் இருக்கும் மொழியை முன்னும் பின்னும் மாற்றுதல்—அதாவது ஓரடியுள் மாற்றுவது என்று மொழிமாற்றுக்கும் கொள்வோமேயானால் நன்னூலார் எண்ணமும் காப்பியர் கூற்றும் ஒன்றாம் என்பது அங்கை நெல்லிக்கனிபோலப் புலனாம்*

## பிரிக்கப்படாக் கிளைநுதற் பெயர்கள்

404. **தநநு வெவெனு மவைமுத லாகிய**
**கிளைநுதற் பெயரும் பிரிப்பப் பிரியா** (14)
(தநநு எ எனும் அவைமுதல் ஆகிய
கிளைநுதல் பெயரும் பிரிப்பப் பிரியா)

ஆ. மொ. இல.

The nouns which denote relationship, having 'tha', 'na', 'nu' and 'e' as initials cannot be split into parts.

**இளம்**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், ஐய மறுத்தல் நுதலிற்று.

**உரை :** த ந நு எ எனச் சொல்லப்பட்ட நான்கு எழுத்தினையும் முதலாகவும், ன ள ர என்னும் மூன்று எழுத்தினையும் ஈறாகவும் உடையவாகிய தொடர்ச்சிக் கிழமை கருதிவரும் பெயரவற்றைப் பிரித்து இடையறுத்து

---

* தொல்காப்பியர் கொண்டுகூட்டு என்ற பொருள்கோளை மொழிமாற்றில் அடக்கிக் கூறிவிட்டபடியால் மொழி மாற்றே கொண்டுகூட்டு என்பது அவர்கருத்தாகக் கொள்ளப்படும். அதனால் நன்னூலார் மொழி மாற்று வேறு கொண்டுகூட்டு வேறு எனக்கொண்டு கூறியதை இங்குக் காட்ட வேண்டுவதில்லை. இருவர் கருத்தும் ஒன்றே என்னவும் தேவையில்லை—சிவ.

உணர லாங்கொல்லோ எனின், அவை பிரிப்பப் பிரியா; நன்ற வாற்றானே நின்று பொருள்படினன்றி என்பது.

வ-று :[1] தமன், தமள், தமர்; நமன், நமள், நமர்;
நுமன், நுமள், நுமர்; எமன், எமள், எமர்

எனவரும்.

உம்மையாற் பிறவும் பிரிப்பப்பிரியாதனவுள; அவை : தாய், ஞாய், யாய் எனவரும். [2]வில்லி, வாளி எனவும் பிறவும் அவ்வாறு வருவன பிரிப்பப் பிரியா என்று கொள்க. இவை[3] ஒட்டுச் சொற்பொருளோடு நிற்பன என்றும், இவற்றை ஒரு சொல் அன்று என்றும் மயங்கற்க; ஒரு சொல்லே என்பது கருத்து.

சேனா

செய்யுட்குரிய சொல்லும், சொற்றொடுக்குங் காற்படும் விகாரமும், அவை செய்யுளாக்குங்காற் றம்முட்புணர்ந்து நிற்கு மாறுமாகிய செய்யுளொழிபு உணர்த்தி, இனி வழக்கிலக்கணத் தொழிபு கூறுகின்றார்.

இ-ள் : த ந நு எ என்பனவற்றை முலாக வுடைய வாய்க் கிளைமை நுதலி வரும் பெயரும் பிரிக்கப்படா’ எ - று.

அவையாவன : தமன், தமள், தமர்; நமன், நமள், நமர்; நுமன், நுமள், நுமர் ; எமன், எமள், எமர் ; தம்மான், தம்மாள், தம்மார் ; நம்மான், நம்மாள், நம்மார்; நும்மான், நும்மாள், நும்மார் ; எம்மான், எம்மாள், எம்மார் என வரும்.

உமையாற் பிற கிளைநுதற் பெயரும் பிரிக்கப் பிரியா வென்பதாம். அவை ; தாய், ஞாய், தந்தை, தன்னை என்னுந் தொடக்கத்தன.

---

1. இவை பிரிப்பப் பிரியாமையைச் சேனா வரையர் விளக்கத்தால் அறிக.
2. வில்லி, வாளி என்பன ஓர் இனத்தாரைக் குறிப்பன வில்லையுடையவன், வாளையுடையவன் எனின் வில் + இ, வாள் + இ எனப்பிரிக்கப்படும்.
3. ஒட்டுச்சொற்கள்—விகுதி முதலியன.

இவற்றைப் பிரிப்பப் பிரியா என்பது என்னையெனின், வெற்பன், பொருப்பன் என்னும் தொடக்கத்து ஒட்டுப்பெயர் வெற்பு + அன், பொருப்பு + அன் எனப்பிரிந்தவழியும், வெற்பு, பொருப்பு என்னும் முதல் நிலை தம் பொருள் இனிது விளக்கும். தமன், எமன் என்பனவற்றைத் தம் + அன், எம் + அன் எனப் பிரிக்கலுறின்,, தம், எம் முதனிலையாய்ப் பொருள் உணர்த்துவன வாதல் வேண்டும்.[1] அவை பொருளு ணரத்தாமையான், தமன், எமன் என வழங்கியாங்குக் கொள்வ தல்லது பிரிக்கப் படாமையின் அவ்வாறு கூறினார் என்பது. பிறவுமன்ன.

[2]அஃதேல், தாம், யாம் என்பனவற்றிற்கு முதனிலையாகப் பிரிக்கவே, அவையும் தம்பொருள் உணர்த்தும் எனின், தமன், எமன் என்பன தன்கிளவி, என்கிளவி எனவும், தங்கிளை, எங்கிளை எனவும் முதல்நிலை வகையான் ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாதலுடைய ஒருமையுணர்த்துங்கால் தாம் யாம் என்பன பொருந்தாமையின் தான் யான் என்பனவே, முதல் நிலை எனல் வேண்டும். வேண்டவே, இவ்வாறு பிரிப்பின் தமன் எமன் என ஓரொன்றிரண்டு சொல்லாதல்

1. அவை பொருள் உணர்த்தாமையாவது : தமன் என்பது தம்மைச்சார்ந்தவன் என ஒருமையையுணர்த்து கிறது. தம் + அன் எனப்பிரித்தால் தம் என்பது ஒருமையில்லை. அதனால் அதற்குப் பொருள் உணர்த்து மாற்றல் இல்லை.

2. தமன் - தம்மைச்சார்ந்தவன் அதாவது தம்கிளை என்னும் பொருளது. அதுவே தன்னைச்சார்ந்தவன் அதாவது தன் கிளை என்னும் பொருளும் உடையது. இருவகைப் பொரு ளுடைமையால் தமன் என்பது இரு சொல் எனப்படுமா என்றால் இல்லை ஒரு சொல்லே. தம்கிளை என்னும் போதும் தன்கிளை என்னும்போது தமன் என்றே நிற் றலின் தமன் என்பதை அவ்வாறு பிரித்தல் கூடாது. தம் கிளை என்ற பொருளில் தம் - அன் எனப் பிரிப்ப தாயின் தன்கிளை என்ற பொருளில் தன் + அன் எனப்பிரித்தல் வேண்டும். தனன் என்பது சொல் இல்லை. அதனால் தமன் என்பது இரண்டற்கும் பொதுவான பிரிக்கப்படாத ஒரு சொல். இப்படியே பிறவும்.

வேண்டுதலான், எழுத்தானும் பொருளானும் வேறுபாடின்மை யின் ஒரு சொல்லெனவேபடும்; இரண்டு சொல் என்றல் நிரம் பாமையின், அவ்வாறு பிரித்தலும் பொருத்தம் இன்று என்பது

[3]கிளைநுதற்பெயர் விளிமரபின்கட் பெறப்பட்டமையாற் பெயரியலுள் உணர்த்தாராயினார். அதனான் ஆண்டியையு பட்டின்றாகலின் பிரிப்பப்பிரியா ஒரு சொல்லடுக்கோடியைய இதனை ஈண்டு வைத்தார்.

தெய்

ஓட்டுப்பெயர்க்கு உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தநநுஎ என்னும் இவை முதலாகியவும், கிளையை நுதலிய பெயரும் பொருள் நிலையாற்பிரிக்க நினைக்கின் பிரிந்து பொருள்படா. ஒட்டிநின்றே பொருள்படும், எ-று.

ஆகியும் என்னும் உம்மை தொக்கு நின்றது.

தநநுஎ என்னும் அவை முதலாகியவாவன: தான், தாம், நாம், யாம், யான், நீ, நீர், நீயிர் என மூன்றிடத்துப் பெயர் களும், ஆறாம் வேற்றுமைக் கிழமைப் பொருள்குறித்து, முன் னிலை குறுகியும் திரிந்தும் வந்து கிழமைப்பொருள் உணர்த்துஞ் சொல்லின் ஈற்றெழுத்தோடு ஒட்டி நின்று தமன், தமள், தமர், தமது, தம எனப்படர்க்கையினும்; நுமன், நுமள், நுமர், நுமது, நும என முன்னிலையினும்; நமன், நமள், நமர், நமது, நம, எமன், எமள், எமர், எமது, எம எனத்தன்மையிலும் வரும்.

---

3. கிளை நுதற்பெயர்கள் யாவை என்பதும் அவை விளி யேலா என்பதும் விளிமரபில் (சூ.37) பெறப்பட்டன. அதனால் அவை பெயரியலில் பெயர்களைக் கூறும் இடத்தில் கூறப்படவில்லை. இச்சூத்திரக் கருத்தை விளிமரபிலேயே கூறிவிடலாமே யெனின் ஆண்டு விளி யேற்பன ஏலாதன மட்டும் கூறப்படுதலின் பிரிப்பப் பிரியாமையாகிய இலக்கணம் கூறப்படவில்லை. காரணம் யாதும் இயைபுஇன்மையே. அதனால் ஈண்டுக் கூறினார்.

கிளை நுதற்பெயராவன : இம்மூன்றிடத்தும் ஒட்டுப்பட்ட பெயர்கள், ஆறாம் வேற்றுமை முறைமையைக் குறித்து மேற் சொல்லியவாற்றான் தந்தை, நுந்தை, எந்தை எனவும்; தாய், ஞாய், யாய் எனவும்; தம்முன்நும்முன், எம் முன் எனவும்; தம்பி, நும்பி, எம்பி எனவும் முதல்வனையும் ஈன்றாளையும் முன் பிறந்தானையும் பின்பிறந்தானையும் உணர்த்தும் பன்மைச் சொற்கள் எல்லாம் பொருள் முகத்தாற் றம்மையும் பிறரையும் உணர்த்துவன. இச்சொற்கள் எல்லாம் ஏனைய போலப் பிரிக்கப் படா; ஒட்டி நின்றே பொருள்படும் என்றவாறு.

வந்தது கொண்டு வாராதது முடித்தல் என்பதனால், [1]காரணப் பெயராகிவரும் தொழிற்பெயரும், உடையபெயரும், பண்புப் பெயர், முதலாயினவும் பிரிப்பப் பிரியா வென்று கொள்க. பிறன், பிறள், பிறர் என்பவோ வெனின் அவை ஒட்டுப் பெயரல்ல வென்க.

நச்

இதுமேல் தொகைச் சொற்கூறுவான், தொகைபோல இரு பொருள்படுவன இவை என்கின்றது.

இ-ள் : தநநுஎ எனும் அவை முதலாகிய கிளைநுதல் பெயரும் தநநுஎ என்கின்ற எழுத்துக்களை முதலாகவுடைய ஒருவரோடு ஒருவர்க்குள்ள தொடர்ச்சிக் கிழமையைக் கருதின ஒட்டுப் பெயர் களும், பிரிப்பப் பிரியா—தொகைச் சொற்போல இருபொருள் பட்டு நிற்பினும் அவைபோலப் பின்வருஞ் சொல் தம்பொருள் உணர்த்தாமையின் பிரிக்கப்படா, ஒருசொல்லேயாய் நிற்கும், எ-று.

உ-ம்: தமன், தமள், தமர்
நமன், நமள், நமர்
நுமன், நுமள், நுமர்
எமன், எமள், எமர்

எனவரும். விளிமரபில் முதலும் ஈறும்பற்றி ஓதி இடையின் விகற்பங் கூறாமையின், தம்மான், நம்மான், நும்மான், எம்மான் என்றாற்போலும் வாய்பாட்டு விகற்பமும் கொள்க.

---

1. தொழிற்பெயர்—உண்ணல், உடைப்பெயர் பொன்னன், பண்புப்பெயர் கரியன்.

சேனாவரையர், தங்கிளை, நங்கிளை, நுங்கிளை, எங்கிளை என்பனவற்றை ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நிற்கும் என்றாரால் எனின், ஆசிரியர்,

'தாமென் கிளவி பன்மைக் குரித்தே' (பெயரி. 30)
'யாம்நாம் எனவரூஉம் பெயரும்' (பெயரி. 8)

என இவ்வதிகாரத்து எடுத்தோதிய பன்மைச் சொற்களை எழுத் ததிகாரத்துள் அவை எழுவாயும் பயனிலையுமாய் நிற்கும் வழித் திரியாது புணரும் என்று கூறி,

'தாம் நாம் என்னும் மகர இறுதியும்' (உருபியல் 16)
என்னுஞ் சூத்திரத்தான் உருபு ஏற்கும் வழித் திரிந்து புணரும் என்றுகூறி, நும் என்பதனை,

'நும்மென் ஒருபெயர்' (புள்ளிமயங்கியல் 30)

என்னுஞ் சூத்திரத்தான் உருபு ஏற்குமாறு கூறி 'அல்லதன் மருங்கின்' என்னுஞ் சூத்திரத்தான் (புள்ளி ம. 31).

அஃது எழுவாயும் பயனிலையுமாய் நிற்கும் வழி 'நீயிர்' எனத் திரிந்து பன்மையாயே நிற்கும் எனவும் கூறிப் போந்தார் ஆத லின், ஈண்டும் அதற்கு ஏற்பத் தம்முடையகிளை, எம்முடைய கிளை எனப் பன்மை யுணர்த்துதல் அன்றி ஒருமை யுணர்த் தாமை யுணர்க. ஏனையவும் அன்ன.

'தம் பொருள் என்ப தம் மக்கள்' (குறள் 63)
எனவும்,

'நம்மனோர்க்கே' (மலைபடு. 402)
எனவு,ம்

''நும்ம னோருமற் றினைய ராயின்
எம்ம னோரிவண் பிறவலர் மாதோ'' (புறம். 210) எனவும் இந்நான்கு சொல்லும் அம்முடிவு பெற்று, முதல்நிலை திரிந்து நின்று, பன்மைப் பொருள் உணர்த்தியவாறு காண்க.

*ஈண்டு இவை வெற்பன், பொருப்பன் போலத் தம், நம், நும், எம் என்பன பிரிந்துநின்று பொருள் உணர்த்திப் பின்வருகின்ற அன், அள், அர் என்பன பொருள் உணர்த்தாது இடைச்சொல்லாயே நிற்றலின் பிரிப்பப் பிரியா என்றார்.

இனி, உம்மையை எச்சப்படுத்திப் பிற ஒட்டுப் பெயர்களும் பிரிப்பப் பிரியா எனப் பொருள்கூறி; இம்பர், உம்பர், இம்மை, உம்மை, எம்மை என்றாற் போல்வன பிறவும், இவ்விடம், உவ்விடம், இப்பிறப்பு, உப்பிறப்பு, எப்பிறப்பு என்னும் பொருள் உணர்த்தி நிற்கும் என்று கொள்க.

## வெள்

செய்யுட் குரிய சொல்லும், சொல் தொடுக்குங்காற்படும் விகாரமும் முதலிய செய்யுளொழிபு உணர்த்திய ஆசிரியர், இனி இச்சூத்திரமுதலாக வழக்கிலக்கணத்தது ஒழிபு கூறு கின்றார்.

இ-ள்: த ந நு எ என்பனவற்றை முதலாக வுடையனவாய்ச் சுற்றம் என்னும் உறவுப் பொருள் உணர்த்திவரும் பெயரும் பிரித்தாற் பிரிந்து நில்லா, எ-று.

கிளைநுதற் பெயராவன உறவுப் பொருள் உணர்த்திவரும் தமன், தமள், தமர்; நமன், நமள், நமர்; நுமன், நுமள், நுமர் எமன், எமள், எமர்; தம்மான், தம்மாள், தம்மார்; நம்மான், நம்மாள், நம்மார்; நும்மான், நும்மாள், நும்மார்; எம்மான், எம்மாள், எம்மார் எனவரும்.

வெற்பன் பொருப்பன் எனவரும் ஒட்டுப் பெயர்கள் வெற்பு + அன், பொருப்பு + அன் எனப் பிரிக்குமிடத்து முதல் நிலையும் இறுதி நிலையுமாகப் பிரிந்து நின்று தம் பொருள் உணர்த்துமாறு போன்று கிளை நுதற் பெயராகிய இவை, தம் + அன், எம் + அன் எனப் பிரிப்புழிப் பொருள் உணர்த் தாமையாம் 'பிரிப்பப் பிரியா' என்றார்.

---

* இப்பகுதி விளக்கமும் பொருத்தமும் இல்லாதது. வெற்பு + அன் = வெற்பன் என ஆண்பாலில் வருவது போலத் தம் + அன் = தமன் என ஆண்பாலில் வருகிறது. எனவே விகுதிக்குப் பொருள் இல்லை என்பது எப்படிப் பொருந்தும். தமள், தமர் என்பனவும் அன்ன.

### ஆதி

த ந நு எ — இவற்றை முதல் எழுத்தாக் கொண்ட கிளைப் பெயர்கள் பிரிக்கப்படா.

தமன் தமள் தமர்
நமன் நமள் நமர்
நுமன் நுமள் நுமர்
எமன் எமள் எமர்

இவற்றைத் தம், நம், நும், எம் என நிலை மொழி கொண்டு பிரித்தலாகாது.

ஆய்வு : இச்சொற்கள் தாம், நாம், நீர், யாம் என்னும் முதல் நிலையுடன் அன், அள், அர் விகுதி பெற்று வந்தவை என்று கூறின் இழுக்கு என்னை?

தாமென் கிளவி (பெய 30), 'நீயிர் நீ என வருங் கிளவி' (பெய. 34), 'யாம் நாம் எனவரும் பெயரும்' (பெய. 8) இவற்றால் தாம், நாம், நீர், யாம் என்ற சொற்களுக்கு ஆசிரியர் இடந்தருகின்றார். இவை பிறசொற் சேர்க்கையின் தம், நம், நும், எம் எனத்திரியும் என்று கூறுதலே நேரிய முறை. பிரிப்பப்பிரியா என்பது முறை கேடே.

### சுப்

இச்சூத்திரத்திற்குச் சேனாவரையர் தமன், நமன் முதலியவற்றை உதாரணமாகக் கூறாது தம்பி, தங்கை முதலியவற்றை உதாரணமாகக் கூறுதல் மிகவும் ஏற்புடைத்தாகும். ஏன்எனில் தம்பி தங்கை என்னுமிடத்து, பி, கை இவை எவற்றைக் குறிப்பன என்பதைக் கூறுவது ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்தே இயலாத தாயிற்று என்னலாம்.

### சிவ

தமன் தமள் முதலியன பிரிப்பப் பிரியா என்றதற்கு விளக்கம்.

வெற்பன் என்பதை வெற்பு+அன் எனப்பிரிக்கலாம். வெற்பையுடையவன் என்னும் பொருள் தரும் அது. வெற்பு

என்னும் பகுதி மலையையும் அன் என்னும் விகுதி ஆண் பாலையும் தரும். தமன் என்பது தம் கிளை அல்லது தன் கிளை என்னும் பொருளது. ஒருமை பன்மைகளுக்குப் பொது வான சொல் அது. அதனால் அதனைப் பிரித்தல் கூடாது. இது ஒரு கொள்கை.

தமன் என்பதற்குத் தன் அல்லது தம் கிளைஞன் என்பது பொருள். இதை, தம்+அன் எனப்பிரித்தால் அன் என்பது ஆண்பாலைக்குறிக்கும் தம் என்பது கிளை என்னும் பொருளைக் குறியாது. ஆனால் தமன் என்பது தன் அல்லது தம் கிளை என்னும் பொருளைக் குறிக்கும் போது 'ன்' என்பது நோக்கி ஆண்பால் என்னலாம். தமள் என்பதில் 'ள்' என் பதை நோக்கிப் பெண்பால் என்னலாம் அவ்வளவே. பகுதி விகுதியாகப் பிரித்தால் பகுதிக்குத்தனிப் பொருள் இல்லை. அதனால்தான் தமன் என்பது பிரிப்பப் பிரியாது பிறவும் அன்ன இது ஒருவகை.

இவ்வகையான விள்க்கங்களையும் கொள்ளலாம்.

## ஒருசொல் அடுக்கு

405. *இசைநிறை யசை நிலை பொருளொடு புணர்தலென்
றவைமூன் றென்ப வொருசொல் லடுக்கே (15)
(இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தல் என்று அவை மூன்று என்ப ஒருசொல் அடுக்கே)

ஆ. மொ. இல.

'Isanirai' (making sweet melody) 'asainilai' (making syllable), 'Porulodu punarthal (making variation in meanings) are those three which appear in reduplication (doublets) — so say the scholars.

---

* இச்சூத்திரத்தை "வாரா மரபின வரக் கூறுதலும்" (26) என்றும் சூத்திரத்தின் பின்னர் வைத்தார் தெய்வச் சிலையார் - எனினும் அவர் உரை இங்கேயே தொடர் பாக அமைக்கப்பட்டுள்ளது,

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் வழக்கிற்கும் செய்யுட்கும் பொதுவாயதோர் முடிவு கூறுதல் நுதலிற்று.

உரை : ஒரு சொல் பல கால் அடுக்கி மூன்று காரணமும் படச் சொல்லப்படும், எ-று.

இசைநிறை யெனவே, அது செய்யுள் இலக்கணம் என்பது போந்தது.

வ-று : 'ஏஎ ஏஎ [1]வம்பல் மொழிந்தனள்' எனவரும். ஒழிந்தன இரண்டும் வழக்கினுள் அடுத்து வரும். அசைநிலை,

ஒக்கும் ஒக்கும்

எனவும்,

மற்றோ மற்றோ

எனவும் வரும்.

பொருளொடு புணர்தல். பாம்பு பாம்பு, கள்ளர் கள்ளர், படை படை, தீத்தீ எனவரும் அவற்றை இனைத்தால் அடுக்கி வரும் என்பதனை முன்னர்ச் சொல்லு தும்.

சேனா

இ-ள் : இசை நிறைவும், அசை நிலையும், பொருள் வேறு பாட்டோடு புணர்வதும் என ஒருசொல்லடுக்கு அம்மூன்று வகைப்படும், எ-று.

உ-ம் : 'ஏஎ ஏஎ அம்பல் மொழிந்தனள்' என்றது இசை நிறை. மற்றோ மற்றோ, அன்றோ அன்றோ என்பன அசை நிலை. பாம்பு ''பாம்பு, அவனவன், வைதேன் வைதேன், உண்டு உண்டு, போம் போம் என்பன, முறையானே, விரைவும், துணிவும், உடம்பாடும், ஒரு தொழில் பல்கால் நிகழ்தலும் ஆகிய பொருள் வேறுபா டுணர்த்தலிற் பொருளொடு புணர்தல். பொருள் வேறுபாடு பிறவும் உளவேல் வழக்கு நோக்கிக் கண்டு கொள்க.

---

1. அம்பல் - அலருக்கு முன் நிகழும் பழிச்சொல்

அடுக்கு ஒரு சொல்லது விகாரம் னப்படும். இரண்டு சொல்லாயின் இருபொருள் உணர்த்துவது அல்லது இப்பொருள் வேறுபாடு உணர்த்தாமையின் என்பது.

## தெய்

ஒரு பொருள் மேல் ஒருசொல் அடுக்கி வரு வழி வரும் வேறுபாடுஉணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : ஒரு சொல்மேல் அடுக்கி வருஞ் சொல் இசை நிறைவாகி அடுக்குதல், அசை நிலையாகி யடுக்குதல், பொரு ளொடு புணர்ந்து வருதல் என மூவகைய என்ப ஆசிரியர், எ-று.

ஒரு சொல்லடுக்கு எனப் பொதுவாக ஓதினமையாற் பெயர் முதலாகிய நான்குசொல்லும் அடுக்கப் பெறும் என்று கொள்க.

* உ-ம் :துறக்குவ னல்லன் துறக்குவ னல்லன்
தொடர்வரை வெற்பன் துறக்குவ னல்லன்
தொடர்புள் இனையவை தோன்றின் விசும்பிற்
சுடருள் இருள்தோன்றி யற்று. (கலி.41)

இதனுள் முந்துற்ற சொற்பொருள் உணர்த்திற்று. ஏனைய இசைநிறைக்கண் வந்தன.

இசைநிறையாவது பாட்டுக்குறித்து வரும். அசைநிலை செய்யுளின்பங் குறித்து வரும்.

''குறங்கென மால்வரை யொழுகிய வாழை வாழைப்
பூவெனப் பொலிந்த வோதி'' (புறம்.67)

---

*பொருள் : தொடர்ந்தமலையடுக்கத்தையுடைய வெற்பன் (தலைவன்) நம்மைத் துறக்கமாட்டான்; அப்படி நம் மிடையுள்ள நட்பில் துறத்தல் என்பது அவனிடம் தோன்றின் அது சூரியனிடம் இருள் தோன்றியது போலாம்.

முந்துற்றசொல்-துறக்குவன் அல்லன் என்பது ஏனைய-மற்றை இரண்டு.

என்றவழி வாழை யென்னுஞ் சொல் இரண்டனுள் [1]ஒன்று அசை நிலையாயிற்று.

[2] நின்றன நின்றன நில்லா வெனவுணர்ந்து
ஒன்றின ஒன்றின வல்லே செயிற்செய்க'' (சிறுபாண் 20)
என்றவழி நின்றன பலவாதலின் அடுக்கிவந்த சொல்லும் பொருள் குறித்து நின்றது. பிறவுமன்ன.

**நச்**

இதுவும் தொகைச் சொற்போல அடுக்கி வருவன கூறு கின்றது.

இ-ள் : ஒரு சொல் அடுக்கே—ஒரு சொல்லை அடுக்கும் அடுக்கு, இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தல் என்று அவைமூன்று என்ப-இசை நிறையும் அசைநிலையும் பொருளொடு புணர்தலும் என்று சொல்லப்பட்ட அவை மூன்றும் என்று சொல்லுவர் ஆசிரியர், எ-று.

உ-ம் : 'ஏஎ ஏஎ அம்பல் மொழிந்தனள்'—இஃது இசை நிறை.

மற்றோ மற்றோ இஃது அசைநிலை

வந்தது வந்தது கூற்று (நாலடி 4) அவன் அவன், வைதேன் வைதேன், போம் போம் என்பன விரைவும், துணிவும், உடம்பாடும் ஒரு தொழில் பலகால் நிகழ்தலுமாகிய பொருள் வேறுபாடு உணர்த்தலின் பொருளொடு புணர்தல்.

---

1. பின்னுள்ள வாழை அசைநிலை. முன்னர் வாழை எனவந்தமையால் பின்னர்ப் பூ என்றாலே வாழைப் பூவைக் குறிக்கும். மீட்டும் வாழை என்றது தேவை யில்லை; ஆதலின் அசைநிலை.

2. நின்றன நின்றன என்பன நின்ற பொருள்களின் வகை களைக் குறித்தலின் பின்னர் நின்ற 'நின்றன' என்பது அசை நிலையாகாமல் பொருள் குறித்த அடுக்காய் வந்தது.

வெள்

இஃது ஒரு சொல்லடுக்காவன இத்துணைய என்கின்றது.

இ-ள் : இசைநிறையும் அசைநிலையும் பொருள்வேறு பாட்டோடு புணர்வதும் என ஒரு சொல்லடுக்கு அம்மூன்று வகைப்படும் எ-று.

உ-ம் : 'ஏஎ ஏஎ அம்பல் மொழிந்தனள்' என்பது இசைநிறை. மற்றோ மற்றோ, அன்றே அன்றே என்பன அசைநிலை. அவன் அவன், வைதேன் வைதேன், உண்டு உண்டு, போம் போம் என்பன முறையே விரைவும், துணிவும், உடன் பாடும், ஒரு தொழில் பலகால் நிகழ்தலும் ஆகிய பொருள் வேறுபாடு உணர்த்தலின் பொருளொடு புணர்தலாம்.

அடுக்கு என்பது ஒரு சொல்லினது விகாரம் எனப்படும். அதனை இரண்டு சொல்லாகக் கொள்ளின் அஃது இரு பொருள் உணர்த்துதல் வேண்டும். அவ்வாறுணர்த்தாமையின் அதனை ஒரு சொல்லெனவே கொள்ளுதல் வேண்டும்.

ஆதி

சொல்லடுக்கு, இசைநிறை, அசைநிலை, பொருள்தரு முறை என மூன்றுவகையாகும்.

ஓஒ ஓஒ உரைப்பது அழகு—இசைநிறை
ஏஏ இதனைக் கேட்டுப் பின் உரை—அசைநிலை
வாழ்க வாழ்க நீடூழிவாழ்க—பொருட்புணர்வு
இசைநிறை—செய்யுள்சீர் இசைபற்றியது.
அசைநிலை—பொருளற்றது.
பொருட்புணர்தல்—கருத்துடைய சொல் மீண்டும் மீண்டும் அடுக்கி வருவது.

## தொகை மொழித் தொடர் வகை

406. **வேற்றுமைத் தொகையே யுவமத் தொகையே**
**வினையின் றொகையே பண்பின் றொகையே**
**யும்மைத் தொகையே யன்மொழித் தொகையென்**
**றவ்வா றென்ப தொகைமொழி நிலையே. (16)**

(வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே
வினையின் தொகையே பண்பின் தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித் தொகை என்று
அவ் ஆறு என்ப தொகைமொழி நிலையே)

ஆ. மொ. இல.

Case-compound, simile-compound,
Verbal-compound, quality-compound,
Conjunctive-compound, non-word-compound-
these six are said to be elliptical compounds

பி. இ. நூ.

**வீரசோழியம். 45, 50**

தற்புருடன் பலநெல் கன்மதாரயம் தாங்கியசீர்
நல்துகுவித் தொகை நாவார் துவந்துவம் நல்ல தெய்வச்
சொற்பயன் மாந்தர்கள் அவ்விய பாவமிதென்று தொன்மை
கற்பக மாப் பகர்ந்தார் தொகையாறும் கனங்குழையே.
வேற்றுமை உம்மை வினைபண் புவமை யொடு அன் மொழி யென்று
ஆற்றுந் தொகை செந்தழிணர்களா றென்பர் ஆய்ந்த பண்பில்
தோற்று மளவு வடிவு நிறம்சுவை சொல்பிறவும்
ஏற்றும் இருபல் அளவு நிறை எண் பெயரும்மையே.

**நேமி. சொ. 60**

வேற்றுமை யும்மை வினைபண்பு உவமையும்
தோற்றிய அன்மொழியும் தொக்கவிடத்—தேற்ற
இருசொல்லும் ஒன்றாம் இலக்கணத்தாற் பல்சொல்
ஒரு சொல்லாய்ச் சேறலும் உண்டு.

**நன். 362**

வேற்றுமை வினைபண்பு உவமை உம்மை
அன்மொழி யெனவத் தொகையா றாகும்.

**பிரயோக விவேகம். 20**

தற்புருடன் துவிகுப் பலநெற் கர்மதாரயனோடு
உற்பலவாள் நெடுங்கண் பசுந்தே மொழி ஒண்டொடியாய்
சொற்பயில் அவ்விய யிபாவம் ஏனைத்து வந்தன் எனக்
கற்பவர் கூறும் சமாசன்களே தொகைக் கட்டளையே:

**இ. வி. 335**

வேற்றுமைத்தொகை உவமத்தொகை வினைத்தொகை
பண்புத்தொகை உம்மைத்தொகை அன்மொழித்தொகை
யெனக் கிளந்த அத்தொகை ஆறாகும்.

**தொ. வி. 89.**

தொகைநிலை வகைப்படின் தொகும் வேற்றுமைவினை
உவமை பண்பு உம்மையோடு அன்மொழி ஆறே.

**முத்து. ஒ. 94.**

வேற்றுமை வினை பண்பு உவமை உம்மை
அன்மொழி எனத்தொகை அறுவகைப் படுமே.

**இளம்**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், தொகைச் சொற்களைப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

பெயரும் முறையும் தொகையும் அதுவே. வேற்றுமைத் தொகையை முன் வைத்தார் [1]அப்பகுதிப்படும் ஆகலான். அன்மொழித் தொகையைப் பின்வைத்தார். அஃது எல்லா வற்றையும் பற்றிப் பிறக்குமாகலான்.

**சேனா**

இனித் தொகையிலக்கணம் உணர்த்துகின்றார்.

---

1. அப்பகுதிப்படும் - அவ்வறுவகைப்படும். அறுவகை என்பது உருபுகளை 'அது பகுதிப்படு மாகலான்' என்றிருப்பின் நன்று என்பது கழகப்பதிப்பின் அடிக் குறிப்பு. அவ்வாறாயின் பகுதி என்பதற்கு எட்டுவகை என்க.

இ-ள் : வேற்றுமைத் தொகை முதலாகத் தொகைச்சொல் ஆறாம், எ-று.

வேற்றுமையுருபும் உவமஉருபும் உம்மையும் வினைச் சொல்லீறும் பண்புச் சொல்லீறும் தொகுதலிற் றொகையாயின வென்பாரும், அவ்வப் பொருள்மேல் இரண்டும் பலவுமாகிய சொற்கள் பிளவுபடாது ஒற்றுமைப்படத் தம்முள் இயைதலிற் றொகையாயின என்பாரும் என இருதிறத்தர் ஆசிரியர். செய்தான் பொருள், இருந்தான் மாடத்து என உருபு தொக்கு ஒரு சொல் நீர்மைப் படாதனவும் தொகையாவான் சேறலின் அவற்றை நீக்குதற்கும்; வேழக் கரும்பு கேழற் பன்றி என்புழித் தொக்கன வில்லை யெனினும் தொகையென வேண்டப்படு மாகலான் அவற்றைத் தழுவுதற்கும், உருபு முதலாயின தொகுதலிற் றொகை யென்பார்க்கும், ஒட்டி ஒரு சொல் நீர்மைப்படுதலும் தொகையிலக்கணம் எனல் வேண்டும்; அதனான் உருபு முதலாயின தொகுதல் எல்லாத் தொகைக் கண்ணும் செல்லுமாறு ஒட்டி ஒருசொல்லாதல் தொகையிலக் கணமாய் முடிதலின் இவ்வாசிரியர்க்கு இதுவே துணிவெனப் படும் என்பது. அற்றாயின், 'உருபு தொக வருதலும்' (சொல். 114) எனவும், 'வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்' (சொல். 418) எனவும், 'உம்மை தொக்க பெயர்வயி னானும் (சொல். 418) எனவும், 'உவமை தொக்க பெயர்வயினானும் (சொல். 418) எனவும் ஓதலால் அவை ஆண்டுத் தொக்கன வெனப்படுமன்றோ வெனின், அற்றன்று; 'அது வென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்' (சொல். 94) என்புழி அதுவென் உருபு நின்று கெட்டதாயின் நின்ற காலத்துத் திணைவழுவாம். அத்திணை வழு அமைவுடைத்து எனின் விரிக்கின்றுழி நான்காம் உருபு தொடராது அது தன்னையே விரிப்பினும் அமைவுடைத்து; அதனான் முறைப் பொருள் தோன்ற 'நம்பிமகன்' என இரண்டு சொல்தொக்கன என்பதே ஆசிரியர் கருத்தெனல் வேண்டும். அதனான் உருபும் உவமையும் உம்மையும் தொகுதலாவது தம் பொருள் ஒட்டிய சொல்லால் தோன்றத் தாம் ஆண்டுப் புலப்படாதே நிற்றலேயாம். அல்லதூஉம் வினைத் தொகை பண்புத்தொகை அன்மொழித் தொகை என்பனவற்றின் கண் வினையும் பண்பும் அன்மொழியும் தொக்கு நில்லாமையானும் அஃதே கருத்தாதல் அறிக.

வேற்றுமைத் தொகையென்பது வேற்றுமைப் பொருளை யுடைய தொகை யென்றானும் வேற்றுமைப் பொருள் தொக்க தொகையென்றானும் விரியும். உவமத்தொகை, உம்மைத் தொகை, அன்மொழித் தொகை என்பனவும் அவ்வாறு விரியும். அன்மொழியாவது தொக்க சொல் அல்லாத மொழி. வினைத் தொகை பண்புத்தொகை என்பன, வினையினது தொகை பண்பினது தொகையென விரியும். வினை பண்பு என்றது அவற்றை யுணர்த்தும் சொல்லை ஒரு சொல்லாம் தொகை யின்மையின் பிறிதோர் சொல்லொடு தொகுதல் பெறப்படும்.

இச்சூத்திரத்தால் தொகைச்சொல் இனைத்தென வரை யறுத்தவாறு.

## தெய்

தொகைச் சொல்லாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வேற்றுமைப் பொருள் குறித்த தொகையும் உவமப் பொருள் குறித்த தொகையும் வினைத் தொழில் குறித்த தொகையும் பண்புகுறித்த தொகையும், உம்மைத் தொகை செய்யும் தொகையும், அல் பொருள் குறித்த தொகையும் என அறுவகைப்படும் தொகைச் சொல்லது நிலைமை, எ-று,

தொகைச் சொல்லாவது பொருளுணர்த்துஞ் சொல்லாயினும் தொழிலுணர்த்துஞ் சொல்லாயினும் இரண்டு சொல் விட்டி சைத்து நில்லாது ஒட்டி நிற்பது. இஃது ஒட்டுப்பெயர் என்னும் குறியும் பெறும். உதாரணம் வருகின்ற சூத்திரத்துட் காட்டுதும்.

## நச்

இது, தொகைச் சொற்களுக்குப் பெயரும் முறையும் தொகையும் கூறுகின்றது.

இ-ள் : வேற்றுமைத் தொகையே — வேற்றுமையுருபுகள் தொக்க தொகை, உவமத் தொகையே—உவமவுருபுகள் தொக்க தொகை, வினையின் தொகையே—வினைச்சொல் ஈறுகள் தொக்க தொகை, பண்பின் தொகையே — பண்பு உணர்த்தும் ஈறுகள் தொக்க தொகை, உம்மைத் தொகையே—உம் என்னும் இடைச்சொல் தொக்க தொகை, அன்மொழித் தொகை — இத்தொகைச் சொற்களின் இறுதிக்கண் வந்து

பொருள்தரும் வேறோர்சொல் தொக்க தொகை, என்று அவ் ஆறு என்ப — என்று சொல்லப்பட்ட அவ்வாறும் என்று சொல்லுவர் ஆசிரியர், தொகைமொழி நிலையே — தொகைச் சொல்லினது நிலைமையை, எ-று.

'ஐம்பாலறியும் பண்புதொகு மொழியும்' (தொல். எழு. குற்.77) எனவும்,

''செய்யும் செய்த என்னும் கிளவியின்

மெய்யொருங் கியலும் தொழில் தொகு மொழியும்'' (ஷ) எனவும்,

''உருபுதொக வருதலும்'' (வேற். மயங். 21) எனவும்,

''மெய்யுருபு தொகாஅ இறுதியான'' (வேற். ம. 22) எனவும்,

''பண்புதொக வரூஉம் கிளவி யானும்'' (எச்ச.22) எனவும்,

''உம்மை தொக்க பெயர்வயி னானும்'' (எச்ச.22) எனவும்,

''வேற்றுமை தொக்க பெயர் வயி னானும்'' (எச்ச.22) எனவும்,

உம்மையெஞ்சிய இருபெயர்த் தொகை மொழி (உயிர் ம.21) எனவும்,

ஆசிரியர் தொக்கே நிற்கும் எனச் சூத்திரம் செய்தலின், வேற்றுமையுருபும் உவமவுருபும் உம்மும் வினைச் சொல்லீறும் பண்பு உணர்த்தும் ஈறும் இத்தொகைச் சொற்கள் அல்லாத தோர் சொல்லும் தொக்கு நிற்றலின், தொகைச்சொல் என்பதே அவர் கருத்தாயிற்று. ஆயின், கேழற்பன்றி, வேழக்கரும்பு என்பனவற்றிற்குத் தொக்கன இன்மையின் தொகைச்சொல் ஆமாறு என்னையெனின், அவற்றிற்கும் ஒன்றை யொன்று விசேடித்து நிற்கின்ற தன்மையை உணர்த்துதற்கு வரும் 'ஆகிய' என்னும் வாசகம் தொக்கு நின்றது என்றே கோடும். அன்றித் தன்கண் தொக்கன இன்றி அங்ஙனம் வாசகம் தொக்கு நின்றது தொகை என்றற்குச் சாலாமையின், அதனை யொட்டி ஒரு சொல்லாய் நின்று தம் பொருள் உணர்த்தும் என்று கொண்டு ஏனையவற்றையும் அவ்வாறே கோடும் எனின், எடுத்தோத்தினும் இலேசு சிறத்தல் யாண்டும் இன்மையின் அது பொருந்தாது.

என்னை? அவ்விருபெயரொட்டுப் பண்புத் தொகை அறு வகைத் தொகைச் சூத்திரங்களுள் எடுத்தோத்து இன்றி 'என்னகிளவியும் (எச்ச. 20) என்ற இலேசினால் கொண்ட தாகலின். ஆயின், "வண்ணத்தின் வடிவின்" (எச்ச. 20) என்பதன்கண் இருபெயரொட்டாய் ஐம்பால் அறியாத வடிவினையும் எடுத்தோதினாரால் எனின், வடிவு முதலிய வற்றிற்கும் அறுவகைத் திரிபினுள் ஏற்பன கொணர்ந்து முடித்தலின், குன்றலும் தொகையாம் என்று உணர்க. 'என்ன கிளவியும்' (எச்ச. 20) என்றதனால் கொள்வன வரு மொழி இன்றி நிலைமொழியும் பொருள் உணர்த்தி நிற்கும் என்பது ஆண்டுக் கூறுதும்.

அன்றியும், 'செய் தான் பொருள்', 'இருந்தான் குன்றத்து என வழங்குவன, ஒட்டி ஒரு சொல் ஆகாமையும், செய்யுட்கண்'

'கழூஉ விளங்காரம் கவைஇய மார்பே' (புறம். 19)

எனவும்,

'மாற்றுமைக் கொண்ட வழி (கலி. 12 : 19)

எனவும் இறுதிக்கண் இரண்டாவது தொக்கன,

'முயங்கினெ னல்லனோ (புறம். 19)

எனவும், 'போற்றாய்' எனவும் வரும் முடிக்கும் சொற்களோடு ஒட்டி ஒருசொல் ஆகாமையும்,

'தோன்றல் மறந்தோர் துறைகெழு நாட்டே'

எனவும்,

சிறுகுரல் நெய்தல் எம் பெருங்கழி நாட்டே' (அகம் 120) எனவும் இறுதிக்கண் ஏழாவது தொக்கன; தோன்றும் எனவும் சேர்ந்தனை செலினே' எனவும் வரும் முடிக்குஞ் சொற்களோடு ஒட்டி ஒருசொல் ஆகாமையும் உணர்க.

இன்னும்,

'வல்லே மறைவல் ஓம்புமதி எம்மே'

என இடைக்கண் தொக்கனவும்,

"பொன்னோடைப் புகரணிநுதல்
துன்னருந்திறல் கமழ் கடாத்து

எயிறுபடை யாக எயிற்கத விடாஅக்
கயிறுபிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கிற்
பெருங்கை யானை'' (புறம் 3)

என அடுக்கி வருவனவும் ஒட்டி ஒருசொல் ஆகாமையும் உணர்க.

'அதுவென் வேற்றுமை' (வே. ம. 11) என்னும் சூத்திரத்து 'அதுவென் உருபு கெட' என்றதனால் 'அது என் உருபு நின்றால் அல்லது கெடுதல் இன்மையின், அது நின்று கெட்டது என்னும் பொருள் தரல் ஆண்டுக் கூறிப் போந்தாம். அதனால் ஈண்டுச் சேனாவரையர் கூறிய பொருட்டு விடை யின்மை யுணர்க.

இவற்றுள் வினைத் தொகையும் பண்பின் தொகையும் சிறிது தொக்குத் தொகையாதலும், ஏனைய முழுவதூஉம் தொக்குத் தொகையாதலும் உணர்க.

## வெள்

இது தொகைச் சொற்களின் பெயரும் முறையும் தொகையும் கூறுகின்றது.

இ-ள் : வேற்றுமைத் தொகை, உவமத் தொகை, வினைத் தொகை, பண்புத் தொகை, உம்மைத் தொகை, அன்மொழித் தொகை எனத் தொகைச்சொற்கள் ஆறு என்பர் ஆசிரியர், எ-று.

வேற்றுமை யுருபு முதலாயின இடையே மறைந்து நிற்றலே யன்றி இரண்டு முதலிய சொற்கள் ஒட்டி ஒரு சொல்லாதலும் தொகையிலக்கணமாம் என்னும் (சேனாவரையர்) இக்கருத்து ''எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய'' (எச்ச 24) என வரும் சூத்திரத்தில் இடம் பெற்றுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும்.

## ஆதி

தொகை மொழிகள் : வேற்றுமைத் தொகை உவமத்தொகை வினைத் தொகை பண்புத் தொகை உம்மைத் தொகை அன் மொழித் தொகையென அவை ஆறு வகைப்படும்.

தொகு—தொடர் என்றும் மறை என்றும் இருபொருள் தரும் இங்கு மறைதல் என்னும் பொருளே தருகின்றன.

சிவ

(தொகை என்னும் பெயர்க்காரணம்)

வேற்றுமைத் தொகை முதலிய ஆறு தொகைகளும் தொகை யெனப் பெயர் பெற்றமைக்கு இரு வேறு காரணங்கள் கூறப்படுகின்றன.

1) விரிந்து நிற்க வேண்டிய உருபுகள் தொக்கி (மறைந்து) நிற்றலின் தொகை யெனப் பெயர் பெற்றன.

| | விரி. | தொகை. |
|---|---|---|
| உ-ம்: | சோற்றை யுண்டான் | சோறுண்டான்-வேற்றுமைத் தொகை |
| | மதிபோலும் முகம் | மதிமுகம்-உவமத்தொகை |
| | கொன்ற யானை | கொல் யானை-வினைத்தொகை |
| | கருமையாகிய குழல் | கருங்குழல்-பண்புத்தொகை |
| | கபிலனும் பரணனும் | கபிலபரணர்-உம்மைத்தொகை |
| | பொன்னாலாகிய தொடியுடையாள் | பொற்றொடி-அன்மொழித் தொகை. |

2) வேற்றுமை உவமை முதலிய பொருள்களில் இரண்டு அல்லது பலசொற்கள் ஒட்டி ஒருசொல்போல நிற்றலின் தொகை எனப்பெயர் பெற்றன. தொகை என்பது பிளவுபடாது ஒட்டி நிற்றலைக் குறிக்கும்.

உ-ம்: சோறுண்டான் முதல் பொற்றொடி வரையுள்ளன போல்வன. முதற்கருத்தினர் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் இரண்டாங் கருத்தினர் சேனாவரையரும் தெய்வச் சிலையாரும்.

முதற் கருத்தைச் சேனாவரையர் மறுக்குமாறு:

1) உருபு தொகுதல். இரண்டு (முதலிய) சொற்கள் ஒட்டி ஒருசொல் போலாதல் என்னும் இரண்டு கருத்துகளையும் ஏற்கலாம். ஆனால் முதற்கருத்தை ஏற்பதற்கு ஒரு தடங்கல் உண்டு.

இரண்டாம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் இருமொழி யிடையேயன்றி ஈற்றிலும் தொகும். செய்தான் பொருள், இருந்தான் மாடத்து என்பன ஈற்றில் தொக்கன. இவ்வுதாரணம் இரண்டும் வினைமுற்றுத் தொடர்கள். ஒட்டி ஒருசொல் போல இசைக்காமல் பிளவுபட்ட நிலையில் இசைப்பன. அதனால் ஒட்டி ஒரு சொல்போல் இசைப்பது தொகை என்னும் இலக்கணத்தோடு மாறுபடுகின்றது. அதனால் இவையிரண்டும் தொகையாகா என்பது பட்டு நீக்கப்படும்.

2) வேழக் கரும்பு என்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகை. இதில் இருபெயர்ப் பண்பை விளக்கும் உருபு இல்லை. இரு பெயர் ஒட்டி நின்றன அவ்வளவே. உருபே இல்லாதபோது உருபு தொகுதல் தொகை என்னும் இலக்கணம் இங்கு எவ்வாறு பொருந்தும்? அதனால் ஒட்டி ஒருசொல்போல் நிற்றலே தொகை இலக்கணம் என்பது நன்று. உருபு தொகுதலே தொகை என்பாரும் 'வேழக்கரும்பு' என்பதை அதாவது உருபே இல்லாது ஒட்டிநின்ற சொற்களைத் தொகை என்று கூறுதலின் அவர் கட்கும் ஒட்டி ஒருசொல்போல் நிற்றல் தொகை இலக்கணமாம் என்ற கருத்தை உடன் படுவாராவர்.

ஒட்டி ஒருசொல் போல் நிற்பன தொகை என்னும் கருத்தினரால் செய்தான் பொருள் இருந்தான் மாடத்து என்பன தொகையாகா என நீக்கப்படுதலாலும், உருபு தொகுவன தொகை என்னும் கருத்தினரால் உருபு இல்லாமையால் தொகுதலும் இல்லாத வேழக்கரும்பு போல்வன ஒட்டி ஒருசொல் போல்வன இருபெயர் ஒட்டுப்பண்புத் தொகை எனத் தொகைப்பாற் படுத்துக் கூறப் படுதலானும் இரண்டாவது கருத்தே ஏற்கத்தக்கது.

சேனாவரையர் காலத்தவர் முதற்கருத்தை—அதாவது உருபு தொகுவதே தொகை என்பதை ஏற்று ஒருவினா எழுப்பினர். அவ்வினா:—

'உருபு தொக வருதலும், ( )
'வேற்றுமை தொக்க பெயர்வயினானும்' (எச்ச. 22)
'உம்மை தொக்க பெயர்வயினானும்' ( ,, )
உவமை தொக்க பெயர்வயினானும் ( ,, )

என ஆசிரியர் தொல்காப்பியர் ஓதலால் உருபு தொகுவதே தொகை என்பது அவர்கருத்தென அறியலாமே?

இதற்குவிடை : தொகுதல் என்பது உருபு தொகுதல் இல்லை; உருபின் பொருள்பட இருசொல் ஒட்டி நிற்றலேயாம். இவ்விடைக்கு நேரேசான்று காட்டாமல் வேறுசான்று காட்டி நிறுவுவர் சேனாவரையர் அது :

நம்பி மகன் என்பது நம்பியது மகன் என விரிக்கப்பட வேண்டும். ஏன்எனின் மகன் நம்பிக்கு உரிமை (கிழமை) யுடைய வன். அதனால் ஆறாம் வேற்றுமையுருபாகிய அது என்பது அஃறிணை வாய்பாட்டது. நம்பியது கை என்னலாம். மகன் என்பது உயர்திணை. நம்பியது என்னும் அஃறிணை வாய்பாட்டுச் சொல் மகன் என்னும் உயர் திணைச் சொல்லைக் கொண்டு முடிவுது வழு. அதனால் நான்காம் வேற்றுமைக்குரிய 'கு' உருபு கொடுத்து 'நம்பிக்குமகன்' எனவிரித்தல் வேண்டும். இதை ஆசிரியர்.

அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்
அதுவென் உருபுகெடக் குகரம். வருமே (வேற். ம )

என்றார். இச்சூத்திரத்தில் 'உருபு கெட' என ஆசிரியர் கூறியது கொண்டு 'நம்பியதுமகன்' என அதுவுமரு விரிந்திருந்தது என்றும், பின்னர் அது கெட்டு நம்பிக்கு மகன் என குகரம் வந்தது என்றும் கொள்ளலாகாது. ஏன் எனின் முன்னர் இருந்ததாயின் நம்பியது மகன் என்பது வழுவன்று என்றாகும். வழுவாதலால்தான் குகரம் சேர்க்க வேண்டுவதாயிற்று. ஆதலின் நம்பிமகன் என்பதில் அதுவுருபு இருந்து தொக்கது என்பது தவறு. அதனால் 'உருபு கெட' என்பதற்கு 'வாரா திருக்க' என்னும் பொருளே கொள்ளல் வேண்டும். அதுபோலவே 'உருபுதொக வருதலும்' எனவருவன போலும் இடங்களிலும் 'உருபு வாராதே உருபின் பொருள்பட ஒட்டி ஒரு சொல்லாய் வருதலும்' என்னும் பொருளே கொள்ளல் வேண்டும்.

வேற்றுமைத் தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை ஆகியவற்றுக்கு உருபு உண்மையால் அவை தொகுவது தொகை என்னலாம்; ஆனால் வினைத் தொகை, பண்புத்தொகை, அன் மொழித்தொகை ஆகியவற்றுக்கு உருபு இன்மையால் உருபு தொகுவது தொகை என்னும் கொள்கை தவறாகும். அதனால் உருபுப் பொருள்பட ஒட்டி நிற்றலே தொகை என்பதே பொருந்தும்.

இனிச் சேனா வரையர்க்குப் பிற்காலத்தவரான நச்சினார்க் கினியர் கருத்தைக் காணலாம்.

உருபு தொகுவதே தொகை என்னும் கருத்தினர் நச்சினார்க் கினியர்.

தொழில் தொகு மொழியும் (குற். புண. 77)
'உருபு தொக வருதலும்' ( ,, )
'பண்பு தொக வருஉம் கிளவியானும்' (எச்ச. 22)
'உம்மை தொக்க பெயர்வயி னானும்' ( ,, )
'வேற்றுமை தொக்க பெயர்வயி னானும் ( ,, )
'உம்மை யெஞ்சிய இருபெயர்த் தொகைமொழி' (உயிர்ம. 21)

என ஆசிரியர் உருபு தொகுவதே தொகை என்றார் எனக் கூறுவர். இரு பெயரொட்டுப் பண்புத் தொகைக்கு உருபு இன்மையால் வேழக்கரும்பு என்பது உருபு தொக்கது என்னலாமோ எனின், இரு பெயரும் ஒன்றையொன்று விசேடித்த நிலையை விளக்கும் 'ஆகிய' என்பது அங்குத் தொக்கது என்னல் வேண்டும்.

தனக்கெனத் தனியுருபு இல்லாத இருபெயரொட்டானது ஒட்டி ஒரு சொல்லாய் நிற்றலின் அதன் இலக்கணமே தமக் கெனவுருபுகளுடைய பிறதொகைகட்கும் இலக்கணமாம்; அதா வது உருபு தொகுதல் காரணம் இன்றி ஒட்டி ஒரு சொல்லாய் நிற்றலே தொகையிலக்கணம் என்னலாமே என்பது ஒருவாதம். வேற்றுமைத் தொகை முதலிய ஐந்தும் தமக்கென ஒருபுடையன, அன்றியும் அவ்வைந்தையும் ஆசிரியர் விதந்து கூறினார். இருபெயரொட்டுப் பண்புத்தொகையை "வண்ணத்தின் வடிவில்" (எச்ச. 15) என்பதில் என்ன கிளவியும் என இலேசினால் தழுவிக்கொண்டார். அதனால் எடுத்து ஓதாது இலேசினால் தழுவிக் கொள்வதற்குச் சிறப்புக் கொடுத்துக் கூறல் கூடாது. அதனால், சிறப்பாக உருபுகளையுடைய தொகைகளைப் பற்றித் 'தொகுவது தொகை' எனும் கொள்கையே வலியுறும் என்பது நச்சினார்க்கினியர் கொள்கை.

## என் கருத்து

இனி உருபு தொகுவதால் தொகையாயிற்று என்றும், இரு சொல் ஒட்டி ஒரு சொல் போல நடப்பதால் தொகையாயிற்று என்றும் கூறப்படும் இரண்டு கருத்துகளுள் ஒன்றே சிறந்த காரணமாக அமையும்.

தொகை ஆறனுள் தமக்கென உருபுடையன வேற்றுமைத் தொகை பண்புத்தொகை உவமைத்தொகை உம்மைத்தொகை என்னும் நான்கே. வினைத்தொகைக்கும் அன்மொழித் தொகைக்கும் உருபு இல்லை. உருபு இல்லாத அவ்விரண்டும் தொகையென்றே கூறப்படுதலின் உருபு தொகுதல் தொகை என்னும் இலக்கணம் தவறுபடும்.

உருபு என்பது தான் சார்ந்த சொல்லின் பொருளை விளக்குவது. அவ்வுருபு வெளிப்பட்டிருக்கும் போது தான் சார்ந்த சொல் எவ்வாறிருக்குமோ அவ்வாறே தான் வெளிப் படாது மறைந்து நிற்கும் போதும் அச்சொல் முழுவடிவில் இருக்கும்.

| | | |
|---|---|---|
| உ-ம் : | கல்லால் எறிந்தான் | கல்லெறிந்தான். |
| | கரிதாகிய குதிரை | கருங் குதிரை |
| | மதிபோலும் முகம் | மதிமுகம் |
| | கபிலரும் பரணரும் | கபிலபரணர் |

வினைத் தொகையில் அவ்வாறு இல்லை. வளர்ந்த பிறை என்பது 'வளர்பிறை' என வரும் போது தனியுருபு என்பது மறையவில்லை. ஆனால் 'வளர்ந்த என்பதில் உள்ள பெய ரெச்ச விகுதியும் இறந்த கால இடைநிலையும் மறைந்துள்ளன. வினைச் சொல்லில் வரும் இடைநிலை விகுதிகளும் உருபு எனப்படும். அதனால் உருபு என்பது அகவுருபாகவும் புற வுருபாகவும் வரும் எனக் கொள்ளலாம். வேற்றுமையுருபு முதலியன புறவுருபாகவும் இடைநிலை விகுதி முதலியன (வினைச் சொல்லின்) அகவுருபாகவும் கொள்ளல் வேண்டும். அங்ஙனம் கொள்ளின் உருபு தொகுதல் வினைத்தொகைக்கும் உண்டு என்னலாம். அதனால் தான் நச்சினார்க்கினியர் வினைத்தொகையின் ஈறுதொகுதல் என்றார்.

இனி அன்மொழித் தொகையிலும் 'பொற்றொடி வந்தாள்' என்பதில் 'பொற்றொடியள்' என விகுதியுருபும் (அகவுருபும்) 'தகரஞாழல் வந்தாள்' என்பதில் 'தகரஞாழலள்' என விகுதி யுருபும் அல்லது தகரஞாழற்சாந்து பூசினாள் எனப் பிற சொல்லுருபும் மறைந்து காணப்படுதலின் அதுவும் தொகை யெனப்படும்.

இவ்வாறு கொள்ளும் போது உருபு தொகுதல் தொகை என்னும் இலக்கணம் மிகப் பொருந்தும்.

'அவன் வீடு கட்டினான்', 'வீடு கட்டினான் வந்தான்' என்னும் இவ்விரண்டு தொடர்களில் 'வீடு கட்டினான்' என்பன இரண்டாம் வேற்றுமைத் தொகையாக வுள்ளன. முதலில் உள்ள 'வீடு கட்டினான்' என்பதில் கட்டுதல் தொழிலுக்கு உரிய செயப்படு பொருள் 'வீடு' என்பதாக அமைந்து வீடு சிறப்புறுகிறது. பின் உள்ள 'வீடு' கட்டினான்' என்பதில் வந்தவன் யார் என்பதற்கு 'வீடு என்பதோ 'கட்டினான்' என்பதோ தனித்தனியாக எழுவாயாக வராமல் ஒட்டியே-அதாவது வீடு கட்டினான்' எனச் சேர்ந்தே எழுவாயாக வந்தது. முன்னது 'வீடு கட்டினான்' எனப் பிரித்துக் காணப்படுவது, பின்னது 'வீடு கட்டினான்' என ஒட்டிக் காணப்படுவது, பிரித்துக் கண்டாலும் ஒட்டிக்கண்டாலும் 'வீடு கட்டினான்' என்பது இரண்டாம் வேற்றுமைத் தொகையேயாம். அதனால் உருபு தொகுவதே தொகை என்றும், ஒட்டி ஒரு சொல்லாய் வருவதே தொகை என்பது அத்துணைச் சிறப்பின்று என்றும் கொள்ளலாம்.

ஆசிரியர் 'எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய' என்றது தனித் தொகைகளுக்கு அன்று. அத்தொகைகள் தொடர்மொழியில் வருங்காலத்து அவற்றின் நிலை என்ன என்பதற்கு ஆகும். 'வீடு கட்டினான்' என்பதைக் கருதியது அன்று அச்சூத்திரம்; 'வீடு கட்டினான் வந்தான்' என்பதைக் கருதியது என்க.

எனவே தொகை என்பது உருபு தொக வருவதே என்றும், அது தொடர் மொழியில் வருங்கால் அதாவது தன்னை மேல் வந்து முடிக்கும் சொல்லோடு தொடருங்கால் ஒட்டி ஒரு சொல்லாம் என்றும் கொள்வதே பொருந்தும்.

# வேற்றுமைத் தொகை

**407. அவற்றுள்**

**வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல (17)**
(அவற்றுள்
வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல)

**ஆ. மொ. இல.**

Of them,
case-compound is in the nature of case declension.

**பி. இ. நூ.**

**வீர. 46**

எழுவாய் முதலெழு வேற்றுமையோடும் எழுந்தடையில்
வழுவாத நஞ்ஞொ டெட்டாம் தற்புருடன், வளர்துவிகு
தழுவார்ந்த எண்மொழி முன்னாய்வரும் தத்திதப் பொருள்மேல்
குழுவார் ஒருமை ஒப்புப் பன்மை ஒப்புக்குறி இரண்டே

**நேமி. சொ. 61**

உருபு உவமை உம்மை விரியின் அடைவே
உருபு உவமை உம்மைத் தொகையாம் - ஒரு காலம்
தோன்றின் வினைத் தொகையாம் பண்பும் இரு பேரொட்டும்
தோன்றுமேல் பண்புத் தொகை.

**நன். 363**

இரண்டு முதலா இடைஆறு உருபும்
வெளிப்படல் இல்லது வேற்றுமைத் தொகையே.

**பிரயோக 21**

தற்புருடத் தொகை வேற்றுமை எட்டனுள் சார்ந்த நஞ்ஞுச்
சொற்பொரு ளன்மை மறையின்மை காட்டும் தொகை துவிகு

முற்பதம் எண் பிற்பதம் தத்தி தார்த்த முடித்தும்
எழூஉம்

பற்பல ஏகவற்பாவி அநேக வற்பாவி என்றே.

இ. வி. 336.

வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல.

மூத்து. ஒ. 95

இரண்டு முதலா இடைஆறு உருபும்
வெளிப்படல் இல்லது வேற்றுமைத் தொகையே.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்தமுறை யானே வேற்றுமைத் தொகையது இலக்கணம் கூறுதல் நுதலிற்று.

உரை : வேற்றுமையுருபு தொக்கு நின்ற தொகைச் சொற்கள் அவ்வுருபு இருந்தாங்கே பொருள்படும், எ - று.

அவையாவன : நிலங்கடந்தான், தாய்மூவர், கருப்புவேலி, வரைவீழருவி, யானைக்கோடு, குன்றக்கூகை என இவை. இவற்றையும் அவ்வுருபு விரிந்தாங்கே பொருள்படுமாறு அறிந்து கொள்க. அத்தொகுதிக்கண் உருபுகள் பலவகையும் புலப் படாதே *நின்றன என்ப [1]ஒரு சாரார்; [2]ஒருசாரர் இல்லை யென்ப.

சேனா

இ-ள் : வேற்றுமைத்தொகை அவ்வேற்றுமையுருபு தொடர்ப் பொருள் உணர்த்தியாங்கு உணர்த்தும், எ-று.

---

1. சேனாவரையர். உருபு புலப்படாது உருபின் பொருள் பட வரும் என்பர்.

2. நச்சினார்க்கினியர். உருபு விரிந்திருப்பது மறைந்து வருவம் என்பர்.

[3]எனவே, சாத்தனொடு வந்தான் என்னும் பொருட்கண் சாத்தன் வந்தான் எனவும், சாத்தற்குக் கொடுத்தான் என்னும் பொருட்கண் சாத்தன் கொடுத்தான் எனவும், உருபு தொடர்ப் பொருள் உணர்த்தும் ஆற்றல் இல்லன தொகா ; அவ்வாற்ற லுடையனவே தொகுவன என்றவாறாம்.

இரண்டாம் வேற்றுமைத் தொகை முதலாக வேற்றுமைத் தொகை அறுவகைப்படும். நிலங்கடந்தான், குழைக்காது எனவும் ; தாய்மூவர் பொற்குடம் எனவும் ; கருப்பு வேலி, கடிசூத்திரப் பொன் எனவும் ; வரைபாய்தல், கருவூர்க்கிழக்கு எனவும், சாத்தன் புத்தகம், கொற்றன் உணர்வு எனவும் மன்றப் பெண்ணை, மாரியாமா எனவும் வரும். இவை முறை யானே நிலத்தைக் கடந்தான், குழையையுடைய காது ; தாயொடு மூவர், பொன்னானியன்ற குடம் ; கரும்பிற்கு வேலி, கடி சூத்திரத்திற்குப் பொன் ; வரையினின்றும் பாய்தல், கருவூ ரின் கிழக்கு ; சாத்தனது புத்தகம், கொற்றனது உணர்வு ; மன்றத்தின் கண் நிற்கும் பெண்ணை, மாரிக்கண் உளது ஆமா என்னும் உருபு தொடர்ப்பொருளை இனிது விளக்கிய வாறு கண்டு கொள்க. பிறவுமன்ன.

## தெய்

வேற்றுமைத் தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வேற்றுமையியல்புடையன வேற்றுமைத் தொகை, எ-று.

வேற்றுமையியல என்றதனான், வேற்றுமைகட்கு ஓதிய செயப்படுபொருள் முதலாக இடம் ஈறாக வரும் பொருண்மைக் கண் தொகுஞ்சொல் வேற்றுமைத் தொகையாம் என்று கொள்க. முதல் வேற்றுமை பெயர்ப் பயனிலை கொள்வழியும் விட்டி சைத்தே நிற்றலானும் எட்டாவது விரிந்து நிற்றலானும் இவை யிற்றை யொழித்து ஏனைய தொகும் என்று கொள்க. ஏகாரம் தேற்றேகாரம்.

---

3. சாத்தன் வந்தான் சாத்தன் கொடுத்தான் என்பன முறையே மூன்றாம் வேற்றுமைப் பொருளும் நான்காம் வேற்றுமைப் பொருளும் தாராமல் எழுவாய்த் தொடராக அமைதலின் உருபு தொகும் ஆற்றல் இல்லாதன.

அவை தொகுமாறு :— படையைப் பிடித்தகை, குழையை யுடையகாது, குதிரையாற் பூட்டப்பட்டதேர், தாயொடு கூடிய மூவர், கடி சூத்திரத்திற்கு வைத்த பொன், வரையினின்றும் விழா நின்ற அருவி, யானையது கோடு, குன்றத்துக்தண் வாழா நின்ற கூகை என்பன, படைக்கை, குழைக்காது, குதிரைத்தேர், தாய் மூவர், கடி சூத்திரப் பொன், வரையருவி, யானைக்கோடு, குன்றக்கூகை யெனத்தொகும்.

நிலத்தைக் கடந்தான், வாளால் வெட்டினான் கொலைக் குடம்பட்டான், வரையினின்றும் பாய்ந்தான், குன்றத்துக் கண் இருந்தான் என்றவழி, இறுதி நின்றசொல் தொழில் உணர்த்தாது அது செய்தார்க்குப் [1]பெயராய் வந்துழி, நிலங்கடந்தான், வாள் வெட்டினான், கொலையுடம் பட்டான், வரை பாய்ந்தான், குன்றத்திருந்தான் என இரண்டு பெயரும் ஒட்டி ஒரு சொல்லாகி வரும். கள்ளையுண்டல், வாளால் வெட்டல், கொலைக்குடம் படுதல், வரையினின்றும் பாய்தல், மாடத்துக்கண் இருத்தல் என்பன, கள்ளுண்டல், வாள் வெட்டல், கொலையுடம் படுதல், வரைபாய்தல், மாடத்திருத்தல் எனத்தொகும்.

அஃதேல் இவ்வாறு வருவன உருபு தொகைஎன அடங் காவோ எனின், ஆண்டு அவ்வேற்றுமைகட்கு ஓதிய வாய் பாட்டால் தொழிலோடும் பெயரோடும் முடிவழி, உருபு மாத்திரம் தொக்கு இரண்டு சொல்லாகி நிற்கும் ; ஈண்டு ஒரு சொல்லாகி வரும். ஆறாவதன்கண் வரும் தொகை [2]உருபு தொகையும் பொருட்டொகையுமென வேறுபாடின்றால் எனின், ஆண்டும்

---

1. பெயராய்—வினையாலணையும் பெயராய்

2. உருபுத் தொகை - உருபு மறைந்து இரண்டு சொல் நிலையில் இருப்பது. பொருள் தொகை - உருபு மறைந்தது என்றாலும் ஒட்டி ஒரு சொல் நிலையில் இருப்பது. மரக்கோடு , மரத்தின் கோடு என்பன ஆறாம் வேற்றுமைத் தொகையாயினும் மரக்கோடு ஒட்டி ஒரு சொல்லாகும். மரத்தின் கோடு என்பது இன்சாரியை யிடைவந்து பிரித்த இருசொல்லாகும். அதனால் முன்னது பொருள் தொகை ; பின்னது உருபுத் தொகை.

வேறுபாடு உள். 'மரக்கோடு' என்றவழி ஒட்டுப்பட்டுப் பொருட்டொகையாகி நின்றது. 'மரத்தின் கோடு' என்றவழி உருபு தொகையாகி இரண்டு சொல்லாகி நின்றது. இவை சொல் நோக்கான் உணர்க.

'வேற்றுமைத் தொகையே வேற்றுமையியல் என்றதனால், அவ்வேற்றுமை மொழிமாறி நிற்குமாகலின் அத்தொகைச்சொல் மொழிமாறி நின்று ஒட்டுப்படுதலும் கொள்க. மலையதிடை மலையதகம் என்பன இடைமலை, அகமலை எனவும் வரும். பிறவு மன்ன.

அஃது அற்றாக, 'உலக முவப்ப............வாணுதல் கணவன்' (திருமுருகு 18) என்பது பல சொல்லாகி வந்த கணவன் என்பதனோடு முடிந்து கிடத்தலான், இரண்டு சொல் ஒரு தொகையாம் என்றல் பொருந்தாதால் எனின்'' எவ்வாறு வரினும் இரண்டு சொல்லாகி வந்தல்லது ஒட்டுப்படாது என்று கொள்க. அஃதாயவாறு என்னை யெனின், [3]பூந்தொடை போலக் கொள்க. அஃது இரண்டாயவாறு என்னை யெனின், முற்பட இரண்டு பூவையெடுத்து ஒன்றாகக் கட்டும். அதன் பின் அவ்விரண்டும் ஒன்றாகி நின்ற தொடையோட கூடப் பின்னும் ஒரு பூவை யெடுத்துக் கட்டும். அதன்பின் அம்மூன்று பூவும் ஒன்றாகக் கட்டப்பட்ட தொடையோட பின்னும் ஒரு பூவை யெடுத்துக் கட்டும். அவ்வாறு கட்டப்பட்ட தொடை களைப் பின்னும் இரண்டு பின்னாகச் சேர்த்தது ஒன்றாக்கும். இவ்வாறே எல்லாப்பூவும் இரண்டொன்றாக இணைத்ததாம். சொற்றொடையும் ஒட்டுப்படுங்கால் அவ்வாறு வரும் என்று கொள்க.

[4]'உலக முவப்ப............வாணுதல் கணவன்' என்பது இரண்டு ஒன்றாக ஒட்டியவாறு என்னையெனின், உலகம்

---

3. பூந்தொடை—பூமாலை.

4. உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓ ஒவற இமைக்கும் சேண் விளங்கு அவிரொளி
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
யுறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாள்
மறுவில் கற்பின் வாணுதல் கணவன் (திருமுருகு-1-6)

என்பது உலகத்துள்ளார்க்குப் பெயராகி 'உவப்ப' என்னும் செய வென்னெச்சத்தோடு முடிந்தது. 'வலனாக' என்னும் எச்சத்துக்கண் 'ஆக' என்பது செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்ற காலத்தும் அதற்கு இயல்பு முற்பட்ட நிலைமையென்று கொள்க. என்போல வெனின், வாலும் செவியும் இழந்த ஞமலியைப் பின்னும் ஞமலி என்றே வழங்கினாற் போல. 'உவப்ப, வலனாக' என்னும் செயவென் எச்சமும், 'ஏர்பு' என நிகழ்காலம் குறித்த செயவென் எச்சமும் 'திரிதரு' என்னும் பெயரெச்சத்தோடு முடிந்தன. 'பலரால்' என்னும் மூன்றாம் வேற்றுமை ஏற்ற பெயர் உருபு தொக வருதல் என்னும் இலக்கணத்தால் தொக்குப் 'பலர்' என நின்றது. அது 'புகழப்பட்ட என்பதற்கு அடையாகி நின்றது. அடையெனினும் விசேடணம் எனினும் ஒக்கும். 'புகழப்பட்ட' என்னும் பெயரெச்சம் 'உண்சோறு' என்றாற்போலப் பொருள் மேல் வந்து வினைத் தொகையாகிப் 'புகழ் ஞாயிறு' என ஒட்டி ஒரு சொல்லாகி நின்றது. அது 'திரிதரு' என்னும் பெயரெச்சத்திற்கு முடிபாயிற்று. 'ஞாயிறு' என்பதற்கு முன்னுள்ள சொல்லெல்லாம் தொகுத்து நோக்க ஞாயிற்றிற்கு அடையாகி நின்றன. 'ஞாயிற்றை' என்னும் உருபு தொக்கு நின்றது. 'கடலின்கண்' என்னும் உருபு தொக்கு நின்றது. 'கண்டாங்கு' என்பது கண்டாற் போலும் என்னும் உவமப் பொருள் உணர நின்றது. இத்துணையும் உணர்த்தப்பட்டது 'உதய ஞாயிறு போல' என்னும் பொருண்மை. 'ஓவற, என்பது - ஓவு ஒழிவு. அற என்பது இல்லையாக என்னும் செயவென் எச்ச வாய்பாடு. அதற்கு ஓவு என்பது அடையாகி நின்றது. 'அற' என்பது 'இமைக்கும்' என்னும் பெயரெச்சத்தோடு முடிந்தது. 'சேணின்கண்' என்பது 'சேண்' என உருபு தொக்கு நின்றது. அது 'விளங்கும்' என்பதற்கு அடையாகி நின்றது. 'அவிர்' என்பது விளக்கத்தின் மிகுதியைக் குறித்து வந்து 'ஒளி' என்னும் பெயரோடு வினைத் தொகையாகி, 'அவிரொளி' என ஒரு சொல்லாயிற்று. அது 'விளங்கு' என்பதனோடு ஒட்டி வினைத் தொகையாகி, 'விளங்கவிரொளி' என ஒரு சொல் நீர்மைப்பட்டது. அஃது 'இமைக்கும்' என்னும் பெயரெச்சத்திற்கு முடிபாயிற்று. உலகம் என்பது முதலாக இத்துணையும் கூறப்பட்டது, 'ஞாயிறு போல் விளங்கும் ஒளி' என ஒளிக்கு அடைகூறுதலான் அவ்வொளி யோடே எல்லாச் சொல்லும் முற்றி நின்றன. 'உறுநரை என்பது 'உறுநர்' என உருபு தொக்கு நின்றது. 'தாங்கிய'

என்பது பெயரெச்சம். அதற்கு 'உறுநர்' என்பது அடையாகி நின்றது. 'மதன்' என்பது வலி. அது 'மத' என்னும் உரிச்சொல் ஈறு திரிந்து நின்றது. 'மதனை' என்னும் ஐகாரம் தொக்கு நின்றது. நோன்மை—பொறை. திருவடியடைவார் பலராதலின் அவரெல்லாரையும் பொறுக்க வல்ல தாள் என்னும் பொருண்மைத்தாகி, 'நோன்றாள்' என வேற்றுமைத் தொகை யாகி ஒருசொல் நீர்மைப் பட்டது. அது 'மதனுடை நோன்றாள்' என அடையடுத்து 'உறுநர்த்தாங்கிய' என்னும் பெயரெச்சத் திற்கு முடிபாயிற்று. 'செறுநரை' என்பது 'செறுநர்' என உருபு தொக்கு நின்றது. தேய்த்த என்பது பெயரெச்சம். அதற்குச் 'செறுநர்' என்பது அடையாகி நின்றது. 'செல்' என்பது மழை. உறழ்தல் என்பது ஒத்தல். அது 'தடக்கை' என்பதற்கு உவம நிலையின் அடையாகி நின்று, 'செல்லுறழ் தடக்கை' என்று ஒருசொல் நீர்மைப்பட்டது. அது 'தேய்த்த' என்னும் பெயரெச் சத்திற்கு முடிபாயிற்று. 'மறு' என்பது குற்றம். இல் என்பது இல்லாமை. 'குற்றமில்கற்பு' எனக் கற்பிற்கு அடையாயிற்று. 'வாள்' என்பது ஒளி. அது 'ஒளிறுதல்' என அடையடுத்து நின்று 'சினையிற்கூறு முதலறிகிளவி' யாகி அதனையுடை யாட்குப் பெயராகி நின்றது. அது 'மறுவில் கற்பின் வாணுதல்' எனப் பண்புத் தொகையாகி ஒருசொல் நடையாயிற்று. அது 'கணவன்' என்னும் பெயரோடு கிழமைப் பொருட்டாகிய ஆறாம் வேற்றுமைத் தொகையாகி 'மறுவில் கற்பின் வாணுதல் கணவன்' என இரண்டாம் வேற்றுமைத்தொகையாகிய ஒரு பெயராயிற்று. அது, 'செல்லுறழ் தடக்கைக் கணவன்' என இரண்டாம் வேற்றுமைத் தொகையாகி ஒரு சொல் நீர்மைப் பட்டது. அது மதனுடை நோன்றாள் என்பதனோடும் அவ்வாறே ஒட்டி 'நோன்றாட் டடக்கைக் கணவன்' என ஒரு சொன்னடையாயிற்று. அது 'சேண் விளங்கவிரொளி' என்பத னோடும் அவ்வாறே ஒட்டிச் 'சேண் விளங்கவிரொளி நோன்றாட் டடக்கைக் கணவன்' என ஒரு சொன்னடையாயிற்று. இவ் வாறே சொல்நிலையுணர இரண்டு சொல்லே தொகையாகியவாறு கண்டு கொள்க. 'எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய' (எச்ச. 22) என்றோதினமையானும் ஆசிரியன் கருத்து இது வென்று கொள்க.

நச்

இது முறையானே வேற்றுமைத் தொகை கூறுகின்றது.

இ-ள் : அவற்றுள்—முற்கூறிய ஆறனுள் வேற்றுமைத் தொகை—வேற்றுமையுருபுகள் தொக்க தொகைச் சொற்கள், வேற்றுமை இயல—அவ்வுருபுகள் தொக்கன வேனும் தொகாது நின்றாற்போலப் பொருள் உணர்த்தும் இயல் பின, எ-று.

[1]உ-ம் : 'பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க' (நாலடி. 2)
'ஒருகுழை ஒருவன் போல்' (கலி. 26)

எனவும்,

'வல்லவர், செதுமொழி சீத்த செவி' (கலி. 68.)

எனவும்,

'பருத்தி வேலிக்கருப்பை பார்க்கும்' (புறம். 324.)

எனவும்,

'வரையிழி மயிலின் ஒல்குவள்'

எனவும்,

'நின் மைந்துடை மார்பிற் சுணங்கு' (கலி. 18.)

எனவும்,

'மன்ற வேம்பின் ஒண்குழை மலைந்து' (புறம்.79.)

எனவும் வரும்.

வழக்கு உதாரணம் வேற்றுமை மயங்கியலிற் காட்டினாம்.

சாத்தனொடு வந்தான், சாத்தற்குக் கொடுத்தான் என்றாற் போல்வன தொக்கால் தொகைப் பொருள் உணர்த்தாது எழுவாயும் பயனிலையுமாய் நிற்றலின், இந்நிகரனதொகா என்றுணர்க.

வெள்

இது வேற்றுமைத் தொகையாமாறு கூறுகின்றது.

இ-ள் : வேற்றுமையுருபுகள் தொக்க தொகைச் சொல்லா வன அவ்வுருபுகள் விரிந்து நின்று பொருளுணர்த்தினாற் போலும் இயல்பினையுடையன, எ-று.

---

1. பொருள்.

எனவே அவ்வியல் பில்லன வற்றின்கண் அவ்வுருபுகள் தொகா என்பதாம்...............

இரண்டாம் வேற்றுமைத் தொகை முதலாக வேற்றுமைத் தொகை ஆறு வகைப்படும்.

உ-ம் : நிலங்கடந்தான், குழைக்காது எனவும்,
தாய்மூவர், பொற்குடம் எனவும்,
கருப்பு வேலி, தாலிப்பொன் எனவும்
வரைபாய்தல், கருவூர்க் கிழக்கு எனவும்,
மன்றப் பெண்ணை, மாரிமா எனவும் வரும்.

இவை முறையே, நிலத்தைக் கடந்தான், குழையையுடையகாது, தாயொடு மூவர், பொன்னான் இயன்றகுடம், கரும்பிற்கு வேலி, தாலிக்குப் பொன், வரையினின்றும் பாய்தல், கருவூரின் கிழக்கு, மன்றத்தின்கண் நிற்கும் பெண்ணை (பனை), மாரிக் கண் உளதாம்மா என உருபுகள் விரிந்து நின்றால் தரும் பொருளைத் தொகையாய் நின்ற நிலையிலும் இனிது விளக்கிய வாறு காண்க.

ஆதி

குறிப்பு : ''வேற்றுமையுருபு வெளிப்படை இல்லாத தொடர் மொழி வேற்றுமைத் தொகையா கும்மே'' என்பது தெளிவும் இலகுவும் ஆகும்.

சிவ

சுப்பிரமணியசாஸ்திரியார் இச்சூத்திரவுரைக் குறிப்பில் தெய்வச்சிலையார் நிலத்தைக் கடந்தான் என்பது அப் பொருளைத் தருதலன்றி நிலத்தைக் கடந்தவனாகிய ஒருவன் என்று (வினையாலணையும்) பெயராகவரின் நிலத்தைக் கடந்தான் என விரிந்து வாராமல் நிலங்கடந்தான் எனத் தொக்கே (ஒட்டி ஒரு சொல்லாய்) வரல் வேண்டும் என்று கூறு வதால், சேனாவரையர், 'பெயரினாகிய தொகையுமாருளவே' (சொல். ) என்னும் சூத்திரவுரையில், ''நிலங்கடந்தான் மாக்கொணர்ந்தான் எனப் பெயரொடு வினைவந்து தொக்க வினையினாகிய தொகையுமுள என்பதாம்'' என்று கூறும் வாக்கியம் பொருந்துமா?'' என வினவியுள்ளார்.

பொருந்தும், நிலங்கடந்தான் என்பதில் கடந்தான் என்பது வினை முற்றாக இருப்பின் இரண்டாம் வேற்றுமைத் தொகை என்பதில் தெய்வச்சிலையார்க்கு மாறுபாடில்லை. அது வினை யாலணையும் பெயராக வரும் போது தான் நிலத்தைக் கடந்தான் என வரலாகாது என்பதே அவர்கருத்து.

## உவமத் தொகை

**408 : உவமத் தொகையே யுவம வியல்** (18)
(உவமத் தொகையே உவம இயல).

**ஆ. மொ. இல.**

Simile- Compound is in the nature of a simile.

**பி. இ. நூ.**

**நன் : 366**
உவம வுருபிலது உவமத் தொகையே.

**இ. வி. 337**
உவமத் தொகையே உவம இயல.

**முத்து. ஒ. 98**
உவம உருபிலது உவமத் தொகையே.

**இளம்**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறை யானே உவமத்தொகை உணர்த்துதல் நுதலிற்று.

உரை : உவமத் தொகைக்கண் அவ்வுருபு தொக்கு நின்றாலும் அவ்வுருபு விரிந்தாங்கே பொருள்படும், எ-று.

உவமம் தொகுங்கால் வினை, பயன், மெய், உரு என்ற நான்கும் பற்றித் தொகும்.

[1]வினையுவமம் : புலிப்பாய்த்துள் என்பது
பயனுவமம் : மழை வண்கை என்பது
மெய்யுவமம் : துடி நடு என்பது
உருவுவமம் : முத்த முறுவல் என்பது

'முத்துப்போலும் முறுவல்' என்று உவமவுருபு விரிந்து நின்றாங்கே அவ்வுருபு தொக்க நிலைமைக் கண்ணும் பொருள் ஒக்கும் என்பது.

மற்று இவ்வுவமத்தொகை யென்று காட்டின வெல்லாம் வேற்றுமையுருபு பற்றியன்றிவாரா; என்னை? 'துடிநடு' என்றவிடத்துத் 'துடியை ஒக்கும் நடு' 'துடிநடு' என்று இரண்டனுருபு பற்றி வருமாகலின், உவமத்தொகை என்பது என்னையெனின் அதற்கு ஒருசாரார் சொல்லுவது :-

[2]துடிநடு என்புழி உவமவுருபும் வேற்றுமையுருபும் என இரண்டும் தொக்க வேனும், 'துடி போலும் நடு' என தொகைக்கு உவமப் பொருளே சிறப்புடைத்தாகலின் அது

---

1 புலிப்பாய்த்துள்—புலிபோலப்பாயும் பாய்ச்சல்
மழைவண்கை—மழைபோல் கொடுக்கும் வண்கை
துடிநடு –துடியின் நடுப்பகுதிபோல் மெலிந்த இடை
(நடு—இடை)

2. துடிநடு-இதில் துடியைப்போலும் இடை என்னும் பொருளில் ஐகார வேற்றுமையுருபும் போலும் என்பதும் மறைந்துள்ளன. ஐகாரம் நோக்கி வேற்றுமைத் தொகை என்னலாமா? வீடுகட்டினான் என்பதை வீட்டைக்கட்டினான் என விரித்தால் ஐகாரம் கட்டினான் என்பதைக் கொண்டு முடிகிறது. துடிநடு என்பதைத் துடியைப் போலும் நடு என விரித்தால் ஐகாரம் நடு என்பதைக் கொண்டு முடியவில்லை போலும் என்பதைக் கொண்டே முடிகின்றது. அதனால் 'துடிநடு' என்பதில் உவமவுருபுக்கே சிறப்புண்டு. அதனால் உவமத்தொகை என்பதே நன்று. பிற உரையாசிரியர் கருத்தும் காண்க. இக்கருத்துமட்டும் போதாது என்று மெய்யுரை......கேட்டுணர்க என்றார்.

தொகையென்பது. ஐகாரவுருபு அவ்வுவம வுருபினை நோக்கி வந்தது என்ப; என்னை? [3]துடியை நடுவாகக் கொள்ளாதாக லின் என்பது இனி, அதற்கு மெய்யுரை வல்லோர்வாய்க் கேட்டுணர்க.

சேனா

இ-ள் : உவமத் தொகை உருமவுருபு தொடர்ப்பொருள் போலப் பொருளுணர்த்தும், எ-று.

எனவே, புலியன்ன சாத்தன், மயிலன்ன மாதர் என்னும் பொருட்கட் புலிச்சாத்தன் மயின் மாதர் என அப்பொருள் விளக்கும் ஆற்றல் இல்லன தொகா; ஆற்றலுடையனவே தொகும் என்பதாம்.

உ-ம் : புலிப்பாய்த்துள், மழைவண்கை, துடிநடுவு, பொன் மேனி என்பன. புலிப்பாய்த்துள் அன்ன பாய்த்துள், மழை யன்ன வண்கை, துடியன்ன நடுவு, பொன் அன்னமேனி எனத் தம் விரிப்பொருளுணர்த்தியவாறு கண்டு கொள்க.

அஃதேல் புலிப்பாய்த்துளை ஒக்கும் பாய்த்துள், மழையை ஒக்கும் வண்கை என விரிதலின் அவையெல்லாம் வேற்றுமைத் தொகையெனப்படும். அதனான் உவமத்தொகையென ஒன்றில்லை யெனின், அற்றன்று; சொல்லுவார்க்கு அது கருத்தாயின் வேற்று மைத் தொகையுமாம்; அக்கருத்தானன்றிப் 'புலியன்ன பாய்த்துள்' 'பொன் மானு மேனி' என வேற்றுமையோடு இயைபில்லா உவமவுருபு தொடர்ப் பொருட்கட் டொக்கவழி உவமத் தொகையாவ தல்லது வேற்றுமைத் தொகை ஆண்டின்மையின்

---

3. துடியை......... என்பது துடியை இடையாக உலகம் கொள்ளாதாகலின். இத்தொடர், துடியை இடை கொண்டதன்று ஆகலின் என்னும் பொருளில் அமைந்தது.

வேற்றுமைத் தொகையாமாறில்லை யென்க. *உவம வுருபு ஒப்பில்வழியாற் பொருள் செய்யும் இடைச்சொல் லாகலான் வினையும் வினைக்குறிப்பும் பற்றிவரும். அவைபற்றி [1]என்போற் பெருவிதுப் புறுக நின்னை யின்னாது உற்ற அறனில் கூற்றே' (புறம் 255) என்புழிப்போல என்பது, [2]குறிப்பு வினையெச்ச

---

* 'உவம வுருபு...............ஏற்புடைமை யறிக' விளக்கம்: போல அன்ன என்னும் உவம வுருபுகள் போல அன்ன எனக்குறிப்பு வினையெச்சமாகவும் போல்வார் அன்னோர் எனக் குறிப்புப் பெயராகவும் வரும். அப்போது அவை இரண்டாம் வேற்றுமை யுருபால் முடிக்கப்படும் 'எம் போல' என்பது எம்மைப் போல' என்றும் 'எம் மன்னோர்' என்பது 'எம்மை அன்னோர்' என்றும் விரிக்கப்படும். இதன் காரணமாகவும் உவமத்தொகை இரண்டாம் வேற்றுமைத் தொகை யாகவும் விரித்தற்கு ஏற்கும்.

''சேனாவரையர் கூறிய அமைதி மூன்றனுள் முதல் அமைதி சிறப்புடைத்தன்று. இரண்டாம் வேற்றுமை யுருபை விரிக்காது உவமவுருபை மட்டுமே விரிக்கின் உவமத் தொகையேயாகும் என்பது சொல்ல வேண்டுவ தின்று. ஈண்டு எடுத்துக் கொண்டது உவம வுருபும் இரண்டனுருபும் ஒருங்கு விரிதற்கேற்ற சொற்கள் தொக்குழி எப்பெயர் பெறும் என்பதே. ஆதலின் இரண்டாவது அமைதியும் அத்துணை அமைவுடைத் தன்று. மூன்றாவதாகக் கூறும் அமைதியே சிறப்பாக வுள்ளது''. — கு. சுந்தர மூர்த்தி.

1. பொருள்: நினக்குச் சாதலைச்செய்த அறமில்லாத எமன் என்னைப் போலப் பெருந்துன்பம் அடைக.

2. 'குறிப்பு' என்பது பற்றிய கணேசய்யர் கருத்தை உரைகளின் முடிவில் காண்க.

மாய் நிற்றலானும், [3]நும்மனோரு மற்றினையராயின், எம்மனோ ரிவட் பிறவலர் மாதோ' (புறம். 210) என்புழி 'அன்னோர்' என்பது இடைச்சொல் முதனிலையாகப் பிறந்தகுறிப்புப் பெயராகலானும், என்னைப்போல, நும்மையன்னோர், எம்மை யன்னோர் என இரண்டாவது விரித்தற்கு ஏற்புடைமையறிக.

## தெய்

உவமைத் தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உவம இயல்புடையன உவமத் தொகையாம், எ-று.

உவமையாவது தொழிலானதால் பயனான் ஆதல், வடிவினான் ஆதல், வண்ணத்தினான் ஆதல் 'இது போலும் இது' என ஒன்றோடொன்று உவமை கூற வருவது. அவ் வுவமையும் உவமிக்கப்படும் பொருளும் விட்டி சைத்து நில்லாது [4]செறிய நிற்பது உவமைத் தொகையாம் என்றவாறு,

புலியன்ன பாய்த்துள், மழையன்ன வண்கை, துடியன்ன இடை, பொன்னன்ன மேனி என்பன, புலிப்பாய்த்துள், மழை வண்கை, துடியிடை, பொன்மேனி எனவரும் பிறவு மன்ன.

இவை விரியுங் காலத்து புலியை யொக்கும் பாய்த்துள், மழையை யொக்கும் வண்கை எனவும் விரிதலானும், 'காப்பின் ஒப்பின்' என இரண்டாவதன்கண் ஒப்பாதலானும் உவமைத் தொகை என்ப தொன்றில்லை; இவையும் வேற்றுமைத்தொகை யாம் எனின், ஒக்கும். மழையன்ன வண்கை யென்றவழி இரண்டாம் உருபு விரியாமலும் தான் நின்று உவமிக்கப்படும் பொருளைக் காட்டுதலின் இவ்வாறு வருஞ்சொற்களை நோக்கி

---

3. பொருள் : நும்போன்றோரும் இத்தன்மையராயின் எம்போன்றோரும் இவ்வுலகில் பிறவார்.

4. செறிய நிற்பது — ஒட்டி ஒரு சொல்லாய் நிற்பது.

உவமத்தொகை யென்றார். [1]அதனானே யன்றே 'உவம இயல் புடையன உவமத்தொகை' என ஓதுவாராயினர்.

இன்னும் 'உவமவியல வுமத்தொகை' யென்றதனான் உவமையும் உவமிக்கப்படும் பொருளும் மாறி நிற்றலும் கொள்க. முகத்தாமரை, கைம்மாரி எனவரும். இவை உருவ கம் அன்றோ எனின் உருவகத்தொகை என்று ஓதாமையானும், [2]பண்புத்தொகையுள் அடங்காமையானும் உவமையுள் அடங்கும். இத்தொகையை வேற்றுமைத் தொகையோடு [3]சேர ஓதியவத னான் அதனோ டிதற்கு ஒற்றுமையுண்டென்று கொள்க.

நச்

இஃது உவமத் தொகை கூறுகின்றது.

இ-ள் : உவமத் தொகையே-உவம உருபுகள் தொக்க தொகைச் சொற்கள், உவம இயல—அவ்வுவமையுருபுகள் தொக்கனவேனும் தொகாது நின்றாற் போலப் பொருள் உணர்த் தும் இயல்பின, எ-று.

மேல் உவம இயலுள் 'வினைபயன் மெய்யுரு' (உவம.1) என்னுஞ் சூத்திரத்தான் 'உவமை நால் வகைய' என்றும், 'அவைதாம், அன்ன ஏய்ப்ப' (உவம. 11) என்னுஞ் சூத்திரத் தான், அவற்றின் உருபு முப்பத்தாறு என்றும் கூறுகின்ற ஆசிரியர், ஈண்டு அவ்வுருபுகள் தொக்கு நிற்குமாறு கூறு கின்றார்.

---

1. உவமத் தொகையில் வேற்றுமைத் தொகைத்தன்மை யிருப்பினும் உவமத்தொகை என்றே கூறப்படும் என் பதற்கு ஆசிரியர் 'வேற்றுமை உவம இயல்புடையன உவமத் தொகை' என்னாமல் 'உவம இயல்புடையன உவமத்தொகை' என்றார்.

2. முகமாகிய தாமரை என விரிதலின் பண்புத் தொகை எனல் கூடாது. ஏன் எனின் பண்பும் பண்பியும் அல்ல அவை. அதனால் பண்புத் தொகையுள் அது அடங் காது.

3. சேர ஓதியது 16-ஆம் சூத்திரத்தில். ஒற்றுமையாவது வேற்றுமைத் தொகையாகவும் விரிக்கப்படுதல்.

ஒப்பில் வழியால் பொருள் செய்யும் அவ்வுவமவுருபுகள் தாம் முதல் நிலையாய் நின்றும், பெயரெச்சங்கட்கும் முற்றிற்கும் வினையெச்சங்கட்கும் உரிய ஈறுகளை ஏற்ற சொல்லாயே நின்று, அவற்றிற்கு ஏற்ற முடிவு கொள்ளும் என்று உணர்க.

ஆசிரியர் செய்யுள் இன்பம் நோக்கி அவ்வுவம உருபுகளை பெரும்பான்மை செயவென் எச்ச வாய்பாட்டானும் சிறுபான்மை செய்த என்னும் பெயரெச்ச வாய்பாட்டானும் ஓதினாரேனும் ஏனை வாய்பாடுகளும் அம் முதல் நிலைக்கண் விரியுமாறு ஆண்டு உணர்க.

புலிப்பாய்த்துள், மழை வண்கை, துடிநடுவு, பொன்மேனி என வினை, பயன், மெய், உருவின்கண் வந்த இவ்வுவமத் தொகைகள் விரிந்துழிப் 'போலும்' என்னும் உருபானும், 'அன்ன' என்னும் உருபானும் பிற உருபானும் விரிந்து, செய்யும், செய்த என்னும் பெயரெச்சக் குறிப்பு ஆமாறு உணர்க. அவற்றுள் 'போலும்' என்பது செய்யும் என்னும் குறிப்பு முற்று ஆமாறும் உணர்க. உணர்த்துங்கால், 'புலி போலும் பாய்த்துள், புலி அன்ன பாய்த்துள் என விரித்தால் உணராதானை, இதன் பொருள், 'புலியினது பாய்த்துளை ஒத்த பாய்த்துள்' என்றவாறு காண் என ஒப்பு என்னும் வழக்கு வாசகத்தால் செய்யும், செய்த என்னும் பெயரெச்சக்குறிப்பு வாசகம் தோன்ற உணர்த்துக.

'முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு' (குறள் 1113)

என்புழி 'வேய்த்தோளவட்கு முறிபோலும் மெனி, முத்தம் போலும் முறுவல், தெய்வமணம் போலும் இயற்கை நாற்றம், வேல் போலும் கண் என விரித்தால் உணராதானை, இதன் பொருள், "வேய்த்தோளாட்குத் தளிரினது நிறத்தை ஒக்கும் நிறம்; முத்தினது நிறத்தை ஒக்கும் பல்லு; தெய்வமணத்தை ஒக்கும் இயல்பான நாற்றம்; வேலினது கொலைத் தொழிலை ஒக்கும் கண் என்றவாறு காண்" என ஒப்பு என்னும் வழக்கு

வாசகத்தால் [1]'செய்யும்' என்னும் குறிப்பு முற்று வாசகம் தோன்ற உணர்த்துக.

'கண் மலர்ந்த காவி' என்புழிக் 'கண்போல மலர்ந்த காவி' என்றால் உணராதானை, இதன் பொருள் 'கண்ணை ஒக்க மலர்ந்த காவி' என்றவாறு காண் என ஒப்பு என்னும் வழக்கு வாசகத்தால் [2]செயவென் எச்ச வாசகம் தோன்ற உணர்த்துக.

இங்ஙனம் கூறிய இருவகை யெச்சத்தையும் முற்றையும் இவ்வுவம வுருபுகள் தருமாறு காண்க.

இனி, முறிமேனி முதலியன உருவகமாம் எனின், ஆசிரியர்க்கு உருவகமும் உவமையாமாறு [3]ஆண்டு உணர்க.

இங்ஙனம் வேற்றுமையுருபும் உவமஉருபும் விரித்துழி, வேற்றுமைத் தொகையென்று கோடுமோ உவமத் தொகை என்று கோடுமோ எனின், ஆசிரியர்தாம் மேற்கூறும் உவம வுருபுகளில் சில இரண்டாவதற்கு முடிபாம் என்பது உணர்த்து தற்கு உவம வுருபிற் கெல்லாம் பொதுவாய் வழக்கு வாசகமாய் நிற்கும் 'ஒப்பு' என்னும் உருபினைக் 'காப்பின் ஒப்பின்' (வெற். 11) என எடுத்து ஓதினாராகலின், அவ்விரண்டாவது அவ்வுவம வுருபுகளான் முடிந்து நின்றுழி உவமத் தொடர் மொழி ஒப்புமைப் பொருளே தந்து நிற்றலின் உவமத்தொகை யென்று கோடும்.

ஆயின் எடுத்து ஓதிய 'ஒப்பு' என்பதனோடு அன்றி ஏனை உருபுகளோடும் இரண்டாவது முடியுமோ எனின், முடியும்.

---

1. 'முறி போலும் மேனி' என்பதை 'மேனி முறி போலும்' என மாற்றின் போலும் என்பது செய்யும் என்னும் முற்று வாசகமாம்.

2. 'ஒக்க' என்பது செயவென் எச்ச வாசகம்.

3. ஆண்டு - உவம வியல். 9-ம் சூத்திரம்

பொருளே உவமம் செய்தனர் மொழியினும்
மருளறு சிறப்பின் அஃது உவம மாகும்.

[1]'தீயின் அன்ன ஒண்செங் காந்தள்' (மலைபடு - 145) எனவும்,

[2]'கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்' (குறுந் - 9) எனவும்,

[3]'மானோக்கு நோக்கு மடநடை யாயத்தார் ('உவம.12) எனவும், உரை-மேற்.

[4]'எழிலி வானம் எள்ளினன் தரூஉம்
கவிகை வண்கைக் கடுமான் தோன்றல் (உவம 14. உரை-மேற்.)
எனவும்,

[5]'வீங்கு சுரை நல்லான் வென்ற ஈகை' (உவம.14.உறைமேற்) எனவும் வருவனவற்றின்கண் அன்ன, மானும், நோக்கு, எள்ளி, வென்ற என்னும் உவம உருபுகளை இரண்டாவது கொண்டு முடிந்தவாறு காண்க. இவற்றுள் 'எள்ளி' என்பது செய்து என் எச்சமாகிய உவம உருபு. இங்ஙனம் உவம உருபு விரிந்துழி நின்று உவமப் பொருள் தருகின்ற இரண்டாவது தொக்குழியும் அவ்வுவமப் பொருள் தந்தே நிற்கும் என்றுணர்க.

'என்போல் பெருவிதுப் புறுக' (புறம். 88)
என்புழிப் 'போல்' என்பது 'போல' என்னும் செயவென் எச்சக் குறிப்பாகிய உவம வுருபு.

---

பொருள் :

1. தீயினை ஒத்த அழகிய செங்காந்தள்
2. குளத்தில் மூழ்கும் மகளிர் கண்ணை ஒக்கும்.
3. மானைப் போலும் பார்வையுடைய மடப்பத்தோடு கூடிய நடையுடைய தோழியர்.
4. எழுச்சியுடைய மேகத்தை இகழ்ந்து தரும் கவிந்த கையையுடைய வேகக் குதிரையுடைய தோன்றல்
5. பருத்த பால் மடிச்சுரையுடைய நல்ல பசுவைப் போலும் ஈகை.

'நும்ம னோருமற் றினைய ராயின்' (புறம். 210)
என்புழி 'அன்னோர்' என்பது உவம உருபாகிய இடைச்சொல் முதல் நிலையாகப் பிறந்த பெயர். இனிச் சிறுபான்மை ஏனை யுருபுகள் இத்தொகைக்கண் விரியுமாறு உவம இயலுள் காண்க.

*சேனாவரையர் இவற்றை உவம உருபு அன்று என்றும், உவம உருபுகளை இரண்டாவது கொண்டு முடியாது என்றும் கூறினாராலெனின், அவர் ஆசிரியர் கருத்தும் சான்றோர் செய்யுள் வழக்கமும் உணராமல் கூறினார் என்பது இக் கூறியவாற்றான் உணர்க.

## வெள்

இஃது உவமத் தொகையாமாறு கூறுகின்றது.

இ-ள் : உவமத் தொகையாவது உவம உருபுத்தொடர்ப் பொருள் போன்று பொருள் உணர்த்துவதாம், எ-று.

...............................................

உ-ம் : புலிப்பாய்த்துள் மழைவண்கை
துடி நடுவு, பொன்மேனி

எனவரும். இத்தொகைச் சொற்கள் முறையே புலிப்பாய்த்துள் அன்னபாய்த்துள், மழையன்ன வண்கை, துடியன்ன நடுவு, பொன்னன்னமேனி எனத் தம் விரியாக அமைந்த தொடர் களின் பொருளை உணர்த்தியவாறு காண்க.

## ஆதி

உவமத் தொகை என்பது உவம உருபு மறைந்தும் உவம உருபு இருப்பது போல் பொருள் தந்து நிற்பது.
அன்ன நடை - போல, போன்ற மறைந்தது.
பவளவாய், குருவிகூப்பிட்டான் - போல் மறைந்தது.
'உவமை உருபு மறைதொடர் உவமத் தொகையே'
என்பது தெளிவானவிதி.

---

* சேனாவரையர் கூறியதாக உள்ள இக்கருத்து அவர் உரையில் காணப்படவில்லை. நச்சினார்க்கினியர்க்குக் கிடைத்த ஓலைச் சுவடியில் இருந்திருக்கலாம்—சிவ.

கணேசய்யர் (சேனாவரைய உரைக்குறிப்பு)

'குறிப்பு வினையெச்ச மாகலானும்' என்பதனுள் 'குறிப்பு' என்பது நீக்கப்படல் வேண்டும். குறிப்பு என்பது நச்சினார்க்கினியர் உரையைப் படித்தோராற் சேர்க்கப்பட்டது. சேனாவரையர்க்குப் 'போல' முதலிய வினையெச்சங்கள் தெரிநிலை வினை என்பதே கருத்தாதல், வினையியல் 27ஆம் சூத்திரவுரையுள், 'போறி' என இகர விற்று வினைக் குறிப்பும் உண்டால் எனின், போன்றனன் போன்றான் என்பனபோல வந்து தெரிநிலை வினையாய் நின்றது என மறுக்க எனக் கூறுமாற்றான் அறியப்படும். அங்ஙனேல், வினையியல் 16ஆம் சூத்திரவுரையுள், ஒப்பினானும் என்பதற்குப் பொன்னன்னான், புலிபோல்வான் எனக்காட்டினாரால் எனின், புலிய னையான் என்று அவர் காட்டிய உதாரணத்தை நச்சினார்க்கினியர் உரைபடித்தார் பிற்காலத்தே திருத்தினாராவர். இளம்பூரணரும் பொன்னன்னான் என ஒன்றே காட்டினர். ஒப்பினானும் என்றதனால் உவமவுருபெல்லாம் குறிப்பு வினையாயே வரும் என்பது கருத்தன்று. ஏற்றனவே வரும் என்பது கருத்து. பொருளதிகாரத்து உவமவியலில் இளம்பூரணர், அன்ன இன்ன என்பனவே இடைச்சொல் என்றும், ஏனையுருபுகள் வினையெச்ச நீர்மைய என்றும், இவ்வடிகளால் முற்றும் பெயரெச்ச வினையெச்சங்களும் பிறக்கும் என்றும் கூறுதலானும் உவமவுருபுகள் எல்லாம் குறிப்பு வினைக்கு அடி அன்றென்பது உணர்ந்து கொள்க. இச்சூத்திரத்தும் 'பொன்னன்னமேனி' என்பது 'பொன்மானுமேனி' எனத்திருத்தப்பட்டது. அன்னதாதல் முன்காட்டிய தொகையை விரிப்புழிப் 'பொன்னன்னமேனி' என்று விரித்திருத்தல் காண்க.

## வினைத் தொகை

**409. வினையின் றொகுதி காலத் தியலும்.** (19)
(வினையின் தொகுதி காலத்து இயலும்)

ஆ. மொ. இல.

Verbal-compound is in the nature of denoting tenses when expanded

பி. இ. நா.

நன். 364

காலம் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை

இ. வி. 338

வினையின் தொகுதி காலத் தியலும்

முத்து. ஒ. 96.

காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை

இளம்

உரை : வினைச் சொல் தொகுங்கால் காலந்தோன்றத் தொகும், எ-று.

காலத்தியலும் என்றது எக்காலும் காலமுடையவாய் இயலும் என்றவாறு.

வ-று : கொல்யானை என்பது கொன்றயானை;

கொல்யானை—கொல்லா நின்றயானை; கொல்யானை—கொல்லும்யானை என மூன்று காலத்திற்கும் அதுவே வாய்பாடு, பிறிதில்லை.

மற்றுக் [1]கொல்யானை என்றானேல் நிகழ் காலமும் அறியலாம்; கொல்லிய ஓடுவதனைக் கண்டு 'கொல்யானை' என்றானேல் எதிர் காலம் என்பது அறியலாம். பிறவு மன்ன

சேனா

இ-ள் : வினைத் தொகை காலத்தின்கண் நிகழும், எ-று.

---

1. கொல்லும்யானையைக்கண்டு கொல்யானை என்றானேல் இத்தொடர்க்கு முன்னர் "கொன்று ஓடும் யானையைக்கண்டு கொல்யானை என்றானேல் இறந்த காலம் என்பது அறியலாம்" என்னும் தொடர் இருந்திருத்தல் வேண்டும்—சிவ.

காலத்தியலும் எனப் பொது வகையாற் கூறியவதனான் மூன்று காலமும் கொள்க.

தொகுதி காலத்தியலும் எனவே, அவ்வினை பிரிந்து நின்ற வழித் தோன்றாது தொக்கவழித் தொகையாற்றலாற் காலந் தோன்றும் என்றவாறாம்.

[1]ஈண்டு வினையென்றது எவற்றையெனின், வினைச்சொற் கும் [2]வினைப் பெயர்க்கும் முதல் நிலையாய், உண், தின், செல், கொல் என வினைமாத்திரம் உணர்த்தி நிற்பனவற்றை யென்பது. இவற்றை வடநூலார் தாது என்ப.

உ-ம் : ஆடரங்கு, செய்குன்று, புணர்பொழுது, அரிவாள், கொல்யானை, செல்செலவு என வரும். காலம் உணர்த்தாது [3]வினைமாத்திரம் உணர்த்தும் பெயர் நிலப்பெயர் முதலாகிய பெயரோடு தொக்குழிக் காலம் உணர்த்தியவாறு கண்டு கொள்க. காலம் உணர்த்துகின்றுழிப் பெயரெச்சப் பொருள வாய் நின்றுணர்த்தும் என்பது, 'செய்யுஞ் செய்த வென்னுங் கிளவியின்—மெய்யொருங்கியலுந் தொழில் தொகு மொழியும் (எழு. 482) என்பதனாற் கூறினார். தொகைப் பொருளாகிய தாம் பிரிந்தவழிப் பெறப்படாமையின் ஆசிரியர் இவற்றைப் புணரியல் நிலையிடை யுணரத் தோன்றா (எழு. 482) என்றார். அதனான் இவை தஞ்சொல்லான் விரிக்கப் படாமையிற் பிரிவில் ஒட்டாம்.

---

1. உண் என்னும் முதல் நிலை (பகுதி) யடியாக உண் டான் உண்டேன் உண்டாய் முதலிய வினைச்சொற் களும், உணல் எனும் தொழிற் பெயரும் தோன்றுதல் காண்க. பிறவுமன்ன.

2. வினைப்பெயர் என்றது தொழிற் பெயரை. வினை யாலணையும் பெயரையுமாம்.

3. வினைமாத்திரம் உணர்த்தும் பெயர் என்றது முதல் நிலையை. வினைச்சொற்களின் முதல் நிலைகள் பெயர்களே என்பது சேனா வரையர் கருத்து.

[1]பெயரெச்சம் நின்று தொக்கது என்றாரால் உரையாசிரியர் எனின், அற்றன்று; ஆசிரியர் இவற்றைப் பிரித்துப் புணர்க்கப்படா, வழங்கியவாறே கொள்ளப்படும் என்றது பிரித்தவழித் தொகைப் பொருள் சிதைதலானன்றே? கொன்ற யானை என விரிந்தவழியும் அப்பொருள் சிதை வின்றேல் 'புணரியல் நிலையிடை யுணரத்தோன்றா' (எழு. 482) என்றற்கோர் காரணம் இல்லையாம். அதனாற் பெயரெச்சம் நின்று தொகுதல் ஆசிரியர் கருத்தன்மையின் உரையாசிரியர்க்கும் அது கருத்தன்றென்க. அல்லதூஉம், ஆகுபெயர் உணர்த்தியவழி வினைத்தொகையுளப்பட [2]'இருபெயரொட்டும்' (சொல்.114) என்றாராகலானும் வினை நின்று தொகுதல் அவர்க்கும் கருத்தன்மையறிக.

[3]அஃதேல், வினைத் தொகைக்கு முதல் நிலை பெயராமன்றோவெனின், உரிஞ் என்பது முதலாயினவற்றைத் தொழிற்பெயர் என்றாராகலின் தொழில் மாத்திரம் உணர்த்துவனவெல்லாம் தொழிற்பெயர் என்பது ஆசிரியர் கருத்தென்க.

---

1. 'பெயரச்சம் நின்று தொக்கது' என்ற தொடர் இளம்பூரணத்தில் இல்லை. அடுத்த சூத்திரவுரையில் ''கொல்யானை என்புழிக் கொல்லும் என்னும் வினைச்சொல் ஒருகூறு நிற்ப ஒருகூறு தொக்கமையின் வினைத்தொகையாயிற்று'' என்று காணப்படுதலின் சேனாவரையர் இவ்வாறு எழுதினார்.

2. இருபெயரொட்டு என்றது அன்மொழித்தொகையை என்பது சேனாவரையர் கருத்து. அன்மொழித் தொகைக்குக் காரணமான வேற்றுமை, பண்பு, உம்மைத் தொகைகளின் நிலைமொழி பெயர். அவ்வாறே வினைத் தொகையின் நிலை மொழியும் பெயராம். வினைச்சொல்லின் உறுப்புகள் (காலம், விகுதி முதலியன) தொகுமேயன்றிப் பெயர்ச் சொல் தொகுவதில்லை. அதனால் வினைத் தொகையின் நிலை மொழி பெயராதலின் அது தொகுவது இல்லை.

3. இக்கருத்தை நச்சினார்க்கினியர் மறுப்பர்; ஆண்டுக் காண்க.

தெய்

வினைத்தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வினையின் தொகுதி காலச் சொல்லோடே நடக்கும், எ-று.

வினைச் சொல்லாவது தொழிலும், காலமும், பாலும் உணர்த்தலின் பாலுணர்த்துஞ் சொல் முற்றுச் சொல்லாகி நின்று தொகை நிலையாகாமையானும், பால்காட்டாத வினையெச்சம், பெயரெச்சம் என்னும் இரண்டினுள்ளும் வினையெச்சம் முற்றுவினைச்சொல்லோ டல்லது முடியாமையானும், ஈண்டுத் தொகுவதும் விரிவதும் பெயரெச்சம் என்று கொள்க.

அது தொகுங்காலத்துக் காலப் பொருளை யுணர்த்துஞ் சொல்லே தொகுவதும் விரிவதும் என்று கொள்க. தொழிலும் பொருளும் விட்டிசைத்து நில்லாது ஒற்றுமைப்பட்டதனை வினைத் தொகை யென்றார்.

உ-ம்: கொல்லும்யானை, கொன்றயானை; உண்ணும் நீர்; உண்டநீர்; அரியும்வாள், அரிந்தவாள்; செல்லும் இடம், சென்றஇடம்; உண்ணும் பொழுது, உண்டபொழுது; கொல்லும் கொலை, கொன்ற கொலை என்பன, கொல்யானை உண்நீர், அரிவாள், செல்லிடம், உண்பொழுது, கொல்கொலை எனத்தொகும். பிறவும் அன்ன.

நச்

இது வினைத்தொகை கூறுகின்றது.

இ-ள்: வினையின் தொகுதி — வினைச் சொல்லினது ஈறாய்த் தொக்கு நிற்கும் எழுத்துக்கள், காலத்து இயலும்— காலத்தின் கண்ணே தொக்கு நிற்கும், எ-று.

வினை என்றது உண், தின் முதலிய முதல் நிலைகளை. அவை ஈண்டும் ஆகுபெயராய்த் [1]தம்மாற் பிறந்த பெயரெச்சத்தை

---

1. தன்னாற்பிறந்த—பாடம்.

யுணர்த்தின. தொகுதியாவன [2]அகரமும், நில், கின்று, என்பனவும் உம்முமாம். அவை காலத்து இயலுதலாவது ‘கொல்யானை’ எனத் தொகுத்துக் ‘கொன்றயானை’ என விரித்தால் ‘செய்த’ என்னும் பெயரெச்ச வாய்பாட்டுத் தகர வீறு இறந்தகாலம் உணர்த்துதலும், ‘கொல்லாநின்ற யானை, கொல்கின்றயானை’ என விரித்தால் நின்ற, கின்ற என்னும் பெயரெச்சம் நிகழ்காலம் உணர்த்துதலும், கொல்லும்யானை எனவிரித்தால் செய்யும் என்னும் பெயரெச்சத்து உம் ஈறு நிகழ்வும் எதிர்வும் உணர்த்துதலுமாம்.

[1]ஆயின், ‘உம்’ ஈறு எதிர்காலம் உணர்த்துதல்யாண்டுப் பெறுதும் எனின், ‘காலத்தியலும்’ என மூன்று காலத்திற்கும் பொதுவாகக் கூறிய அதனால் பெறுதும். இக்கருத்தானே பின்பு நூல் செய்தவர்கள் எல்லாரும் உம் ஈறு எதிர்காலமே உணர்த்தும் என்றார். சேனா வரையரும் இக்கருத்தானே, ‘அகன்றவர் திறத்தி[2]னி நாடுங்கால்’’ (கலி.16) என்பதே நிகழ்விற்கும் எதிர்விற்கும் காட்டினார்.

---

2. அகரம்-இறந்த காலத்துக்கும் நிகழ்காலத்துக்கும் உரிய பெயரெச்ச விகுதி. நில் என்றது ஆநின்று என்பதைக் குறிக்கும். நில் கின்று என்பன நிகழ்கால இடை நிலைகள். உம்-எதிர்காலப் பெயரெச்ச விகுதி.

1. உம் ஈறு நிகழ்காலத்துக் குரியது எதிர்காலத்துக்குரிய தாவது எதனாற் பெறுதும்? என்பதுவினா. பெயரெச்ச விகுதிகளுள் அகரம் இறப்பு நிகழ்வுக் காலங்கட் குரியது உம் நிகழ்வுக் குரியது. எதிர்வுக்குப் பெயெரச்ச விகுதி இல்லையாதலின் உம் விகுதியைக் கொள்ளவேண்டும். ஆசிரியர் இன்ன காலம் என்று கூறாது பொதுப்படக் ‘காலத்தியலும்’ என்றதனால் அமைத்துக் கொள்ளல் வேண்டும்.

2. இனி நாடுங்கால் - இப்பொழுது நாடுகின்ற காலத்து என நிகழ் காலத்துக்கும், இனிமேல் நாடும்காலத்து என எதிர் காலத்துக்கும் இதன் பொருள் விரிக்கப்படும்.

கொல்யானை என்பது, அக்காலத்து அஃது உதிரக் கோட்டோடு வந்ததேல் இறப்பும், அதன் தொழிலைக்கண்டு நின்றுழி நிகழ்வும், அது கொல்ல ஓடுதலைக் கண்டுழி எதிர்வும் விரியும்.

இனி, கொல்யானை என்பதன்கண் இரண்டு ஈறும் ஒருங்கு தொக்கு நின்றது என்றற்கு விதி,

''செய்யும் செய்த என்னும் கிளவியின்
மெய்யொருங் கியலும் தொழில் தொகு மொழியும்''

(குற்றி.77) என்றது ஆம். என்றதன் பொருள், செய்யும், செய்த என்னும் பெயரெச்சச் சொற்களினுடையகாலம் காட்டும் உம்மும் அகரமும் ஒரு சொற்கண்ணே சேர நடக்கும் புடை பெயர்ச்சி தொக்கு நிற்கும் சொற்கள் என்றவாறு. இங்ஙனம் இரண்டு பெயரெச்ச வாசகமும் சேரத் தொக்கு நிற்றலான், ஆசிரியர் ஒரு சொல்லாக்கிப் புணர்க்கலாகாது என்று 'புணரியல் நிலையிடையுணரத் தோன்றா (குற்றி.77) என்றார். இவ்வெழுத்திகாரச் சூத்திரத்தானே பெயரெச்சம் நின்று தொக்கது என்னாது, 'பெயரெச்சப் பொருளவாய் நின்று இரண்டு சொல் தொகும்' என்று சேனாவரையர் கூறியது பொருந்தாமையுணர்க. அவை தொகுங்கால் தத்தமக்கு உரிய ஆறு பொருட்கண்ணும் தொகும்.

உ-ம்: ஆடரங்கு, செய்குன்று, புணர்பொழுது, அரிவாள், கொல்யானை, செல்செலவு எனவும்,

[1]'உறைபதி யன்றித் துறைகெழு சிறுகுடி (குறுந். 145)
'செய்பொருட் சிறப்பெண்ணி' (கலி-16)

---

1. உறைபதி—உறையும்பதி—நிகழ்காலம்
செய்பொருள்—செய்யும் பொருள்—எதிர் காலம்
மடி பொழுது—மடிந்த காலம்—இறந்தகாலம்
வென்வேல்—வெல்லும் வேல்—எதிர்காலம்
அரிதொழுவர்—அரியும் உழவர்—எதிர்காலம்
வெல்போர்—வெல்லும் போர்—எதிர்காலம்

'வான்மடி பொழுதினி நீர்நசை இக்குளித்த'
'வெல்வேல் அண்ணல் காணா வாங்கே' (புறம்,141)
'நெல்லரி தொழுவர் கூர்வாள் மழுங்கின் (புறம்.379)
'வெல்போர்ச் சோழர்' (ஐங்குறு.56)

எனவும் வரும். இவற்றிற்குப் பொருட்கேற்ற காலங்கள் விரிக்க.

வெள்

இது வினைத் தொகையாமாறு கூறுகின்றது.

இ-ள்: வினைச்சொல் தொகுங்கால் காலந்தோன்றத் தொகும், எ-று.

'காலத்தியலும்' என்றது எக்காலும் கால முடையவாய் இயலும் என்றவாறு. காலம் எனப் பொதுவகை யாற் கூறிய வதனால் மூன்று காலமும் கொள்ளப்படும். 'தொகுதி காலத் தியலும்' எனவே விரிந்த நின்றவழிப் போன்று தொக்க வழியும் தொகையாற்றலாற் காலந்தோன்றும் என்றவாறாம். ஈண்டு வினைச் சொற்கும் வினைப் பெயர்க்கும் முதல் நிலையாய், உண், தின், செல், கொல் என வினைமாத்திரம் உணர்த்தி நிற்பனவற்றை.

உ-ம்: ஆடரங்கு, செய்குன்று, புணர்பொழுது, அரிவாள், பொருகளிறு, செல் செலவு என வரும்.

காலம் உணர்த்தாது வினை மாத்திரம் உணர்த்தும் வினைப் பகுதியாகிய இப்பெயர்கள், நிலமுதலாகிய பெயரோடு தொக்குழிப் பெயரெச்சப் பொருளவாய் நின்று காலம் உணர்த்தும் என்பர் சேனாவரையர். செய்யும் செய்த என்னும் வாய்பாட்டுப் பெய ரெச்சங்களுள் காலம் உணர்த்தும் இடைநிலையும் பெயரெச்ச விகுதியுமாகிய இடைச் சொற்கள் மறைந்து நிற்க வினைப் பகுதிகள் மட்டும் நில முதலாகிய அறுவகைப் பெயரோடு ஒட்டி நிற்கும் தொகைச்சொல் வினைத் தொகையாம் என்பது,

செய்யும் செய்த என்னுங் கிளவியின்
மெய்யொருங் கியலும் தொழில் தொகு மொழியும்'

(குற்றி. 77)

எனத் தொல்காப்பியர் கூறுவதால், பெயரெச்சம் நின்று தொக்கதே வினைத்தொகை என்பது ஆசிரியர் கருத்தாதல் இனிது புலனாம்.

ஆதி

வினைத் தொகை என்பது காலங் காட்டும் இடைநிலை மறைவது பற்றி வருவதாகும்.

ஆடு அரங்கு—ஆடிய—ஆடுகின்ற-ஆடும் என முக்காலமும் காட்டும் குறிப்பு மறைந்தது.

சுடுகாடு, ஊறுகாய், வளர்பிறை, கெடுமதி, குடிநீர்- இவற்றை விரித்துணர்க.

''வினையின் இடைநிலை விகுதிகள் வெளிப்படாத்
தொடர்மொழி வினைத்தொகை எனச்சொலப் படுமே''

என்பது தெளிவான விளக்கமாகும்.

சுப்

பொருள் : வினைச் சொல் தொகுங்கால் காலந் தோன்றத் தொகும், எ-று.

'வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல', உவமத் தொகையே உவமவியல' என்ற சூத்திரங்களில் 'வேற்றுமைத் தொகையே', 'உவமத் தொகையே' என்ற சொற்கள் போல் இங்குக் 'காலத் தொகையே' என்று சொல்லாது 'வினையின் தொகுதி' என்று சொன்னதற்குக் காரணம் யாதெனின், கால வெழுத்தோடு பெயரெச்ச விகுதியும் தொகுதலால் என்க.

உரையாசிரியர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் இவர்கள்மதம் கொன்றயானை, கொல்லா நின்ற யானை, கொல்லும் யானை என்ற இவை 'கொல்யானை' என்று தொகும் என்பது.

சேனாவரையர் அவ்வாறு கூறாது 'கொல்' என்ற தாதுவும் யானையும் சேர்ந்து 'கொல்யானை' என்றாகிக் காலத்தை யுணர்த்தும் என்றும், அவ்வினை விரிந்து நின்றவழித் தோன்றாது தொக்கவழித் தொகையாற்றலால் காலந்தோன்றும் என்றும் கூறுகின்றனர். இங்குத் தொக்க வழி என்பதற்குச் 'சேர்ந்துவரும்வழி' என்பது பொருளாம். இவ்வாறு கொள்வதற்குப் பிரமாணம் 'செய்யுஞ் செய்த வென்னுங் கிளவியின்

மெய்யொருங்கியலும் தொழில் தொகு மொழியும்-புணரியல் நிலையிடை யுணரத் தோன்றா' (எழுத். 482) என்ற சூத்திரத்திலுள்ள 'செய்யும் ... ... புணரியல் நிலையிடையுணரத் தோன்றா' என்ற வாக்கியம் என்றும், அவ்வாக்கியத்தால் பெயரெச்சம் நின்று தொகுதல் ஆசிரியர்க்குக் கருத்தன்று என்றும் கூறுகின்றனர். அச்சூத்திரத்தால் வினைத் தொகையிற் பெயரெச்சமும் பெயரும் புணரும்போது உலகத்தில் வழங்குமாறு கொள்ளல் வேண்டுமேயன்றி புணரியல் விதிகளைக் கொள்ளக் கூடாது என்பது பெறப்படும் என்பதே உரையாசிரியர் கருத்து. அஃதே சிறந்தது எனத் தோன்றுகின்றது. அன்றியும் கொல் என்னும் தாது யானை என்ற பெயரோடு எவ்வாறு அந்நுவயிக்கும்? வடமொழியில் தேவார்த்தம், கும்பகார முதலிய சொற்களை நித்திய சமாசனாகக்கொண்டாற்போல இங்குக் கொல்யானை முதலியவற்றைச் சேனாவரையர் நித்யசமாசனாகக் கொண்டனர் போலும். அன்றியும் இச்சூத்திரத்தில் வினையென்பது தாதுவென்றும், அது தொழில் மாத்திரம் உணர்த்துகின்ற தென்றும், அப்போது அது தொழிற் பெயர் என்பது ஆசிரியர் கருத்து என்றும் அவர் கூறுவது பொருந்துமா? நட கொல் முதலிய தாதுக்களைப் பெயர் என்று கொள்ளுவதற்குச் சேனாவரையர் கூறும் காரணமாவது:- முதலிற்கூறும் சிவனயறிகிளவியும்...... இருபெயரொட்டும்' (சொல். 114) என்ற சூத்திரத்தில் இருபெயரொட்டு அன்மொழித் தொகையே குறித்தலானும், அவ்வன்மொழித் தொகைக்குள் வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையொன் றாதலானும் என்பதாம். வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையை ஆசிரியர் கூறாமையானும் இருபெயரொட்டு அன்மொழித் தொகையைக் குறிக்கவில்லை யென்ற தெய்வச்சிலையார் கொள்கை வலியுறுதலானும் சேனாவரையர் கூறியவாறு கொள்ளவேண்டா.

சிவ

### வினைத்தொகை—காலமொடுவரும்.

வினை யெனப்படுவது காலமொடு தோன்றுவ தாகலின் வினைத் தொகையும் காலம் காட்ட வேண்டும். 'உயர்மரம்' என்பது உயர்ந்த மரம், உயர்கின்றமரம், உயரும் மரம் என முக்காலமும் காட்டும். அதனால் ஆசிரியர் தொல்காப்பியர் 'வினையின் தொகுதி காலத்தியலும்' என்றார். 'உயர்மரம்'

என்பதற்கு மனதளவில் உயர்ந்தமரம் முதலியவாகக் காலம் நினைந்து பொருள் கொள்ள வேண்டுமே தவிர எழுதிக் காட்டும் படியான நிலையில் ‘உயர்ந்த மரம்’ முதலியவாகப் பொருள் காணக் கூடாது. ஏன்?

### முன்மொழி பெயர்ச்சொல்

உயர்ந்த மரம் என்பதில் ‘உயர்ந்த’ என்பது பெயரெச்ச மாக வந்த வினைச்சொல். இறந்த காலத்து ‘உயர்மரம்’ என்பதில் முன்மொழியாகிய ‘உயர்’ என்பது பெயர்ச்சொல். அஃதாவது உயர்ந்தது, உயர்ந்த, உயரும் முதலிய வினைச் சொற்கள் தோன்றுவதற்கு அடிப்படையான வேர்ச்சொல். வேர்ச்சொல் யாவும் பெயர்ச்சொற்களே. “தொழில் மாத்திரம் உணர்த்துவன எல்லாம் தொழிற் பெயர் என்பது ஆசிரியர் கருத்து” என்றார் சேனாவரையர். அதனால் உயர் என்பது பெயர்ச் சொல். பிற தொகைகளை நோக்கின் இது தெரியும். கற்கோயில் (வேற்றுமைத் தொகை), செந்தாமரை (பண்புத் தொகை), புலிக்கொற்றன் (உவமத்தொகை,) கபில பரணர் (உம்மைத்தொகை) என்பனவற்றின் முன்மொழிகள் பெயரா யினமை போல வினைத் தொகையின் முன்மொழியும் பெயரே. அதனால் சேனா வரையரும், இந்நூற்பாவில்,

> ஆண்டு வினை யென்றது எவற்றையெனில் வினைச்சொற் கும் வினைப்பெயர்க்கும் முதல் நிலையாய் உண், தின், செல், கொல் என வினை மாத்திரம் உணர்த்தி நிற்பன வற்றை யென்பது”

என எழுதினார்.

### வினைத் தொகை—பெயர்க்காரணம்

முன்மொழி பெயர்ச் சொல்லாயின் பெயர்த்தொகை என் னாமல் வினைத்தொகை என்பானேன்? அவ்வாறு கூறின் பிற தொகைகளும் பெயர்த் தொகை எனப்பட்டு வேறுபாடறிய இய லாதாம். அதனால் தனிப்பெயரே வேண்டும். மேலும், வினைத் தொகை காலமொடு வருவதாதலினானும், காலம் காட்டுவது வினையே யாதலினாலும், முன்மொழியானது வினையும் வினைப் பெயரும் தோன்றுதற்குரிய வேர்ச்சொல் ஆதலினாலும், வினைத்தன்மை அதில் இருப்பதினாலும் வினைத்தொகை எனப் பெயர் கொடுக்கப்பட்டது. வினைத் தொகை என்பதற்கு

வினைத்தன்மை அதாவது காலங் காட்டும் நிலை தொக்கது எனக்கொள்ளல் வேண்டும். வேற்றுமைப் பொருளை விளக்கும் உறுப்பு (ஐ முதலிய உருபுகள்) தொக்கது வேற்றுமைத்தொகை யானாற் போல வினைப் பொருளைத்தரும் உறுப்பு (காலம் காட்டுவன) தொக்கது வினைத்தொகை யெனப்பட்டது.

**உரையாசிரியர்**

''பெயரெச்சம் நின்று தொக்கது வினைத் தொகை'' என்பது உரையாசிரியர் கருத்து. 'உயர்ந்த மரம்' என்ற விடத்து 'உயர்ந்த' என்பது இறந்த காலமும் ஈற்று அகரமாகிய பெயரெச்ச உறுப்பும் கொண்ட வினைச் சொல். இச்சொல்லில் உள்ள காலங் காட்டும் உறுப்பு '(த்' இடை நிலை) பெயரெச்ச உறுப்பும் அகர விகுதி) மறைந்து 'உயர் மரம்' என வருவது வினைத் தொகை என்பதும், உயர் மரம் என்பது உயர்ந்தமரம் எனப் பிரிக்கப்படும் என்பதும் அவர்கருத்து.

**சேனா வரையர்**

வினைத் தொகையைப் பிரிப்பது கூடாது என்பதும், பிரித்தால் பொருள் சிதையும் என்பதும் சேனாவரையர் கருத்து. வினைத் தொகை காலம் காட்டுவது எப்படி எனக் கூறவந்த அவர், ''வினையின் தொகுதி காலத்தியலும் எனவே, அவ் வினை விரிந்து நின்றவழித் தோன்றாது தொக்கவழித் தொகை யாற்றலால் காலந்தோன்றும் என்றவாறாம்'' என்றும், ''காலம் உணர்த்துகின்றுழிப் பெயரெச்சப் பொருளவாய் நின்றுணர்த்தும் என்பது'' என்றும் எழுதினார். பெயரெச்சச் சொல்லாக விரிந்து நின்று உணர்த்தும் 'என்னாது', பெயரெச்சப் பொருள வாய் நின்றுணர்த்தும்' என்றது காணத்தக்கது, தம்கொள்கைக்கு ஆசிரியரையே சான்றாகக் கொண்டு,

> ''ஆசிரியர் இவற்றை (வினைத் தொகை பண்புத் தொகைகளை) பிரித்துப் புணர்க்கப்படா; வழங்கியவாறே கொள்ளப்படும் என்றது (தொல். எழு. 482) பிரித்தவழித் தொகைப் பொருள் சிதைதலானன்றே ? கொன்றயானை என விரித்த வழியும் அப்பொருள் சிதை வின்றேல், ''புணரியல் நிலையுணரத் தோன்றா' என்றதற்கோர் காரணம் இல்லையாம்; அதனால் பெயரெச்சம் நின்று தொகுதல் ஆசிரியர் கருத்தன்மையால் உரையாசிரியர்க்கும் அது கருத்தன் றென்க''.

என்றெழுதிக் காட்டினார். இதில் உள்ள ஒரு வியப்பு உரையாசிரியர்க்கும் அது கருத்தன்று என்று கூறியதே.

## இரு பெயரொட்டு

தொல்காப்பியர் ஆகு பெயரிலக்கணமாக 'முதலிற்கூறும் சினையறி கிளவியும்' (சொல். வேற். மய. 31) என்னும் சூத்திரத்தில் இருபெயரொட்டு நிலையிலும் ஆகு பெயர் வரும் என்றார். அது இருபெயரொட்டாகு பெயர் எனப்படும். இவ்விருபெயரொட்டாகு பெயர் என்பது அன்மொழித் தொகையேயாம் என்பது சேனாவரையர் கருத்து. இதை அன்மொழியாகு பெயர் என்றும் கூறுவர். இருபெயரொட்டாகு பெயரும் அன்மொழித் தொகையும் ஒன்றே என்றும், ஆகு பெயர் நிலையில் ஆகுபெயர் எனவும், தொகை நிலையில் அன்மொழித் தொகையெனவும் பெயர் பெறும் என்றும் அவர் கூறுவர். உரையாசிரியர்க்கும் இதுவே கருத்தாதல் வேண்டும்என நாம் கருதலாம். ஏன்எனின், இரண்டும் வேறு வேறே எனக் கொண்டிருப்பரேல் சேனாவரையர் அதை எழுதி மறுத்திருப்பர். அதனால் உரையாசிரியர்க்கும் இரண்டும் ஒன்றே என்ற கருத்துண்டு என்னலாம்.

ஐந்தொகை மொழி மேல் பிற தொகல் அன்மொழியாகலின் அவ்வைந் தொகைகளின் பின்முன் மொழிகள் பெயராதலின் அவை இருபெயரொட்டு எனப்பட்டன. இக்கருத்தை உரையாசிரியர் கொண்டிருந்தவராயின் வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகிய ஆகு பெயர்க்கும் முன்மொழியும் பின் மொழியும் பெயர்ச் சொற்களே என்பது அவர்க்கும் உடன்பாடாம். அப்படியாயின் பெயரெச்சம் நின்று தொக்கது வினைத் தொகை என்றால் பெயரெச்சத் தொடரின் முன்மொழி வினைச் சொல் ஆதலின் இருபெயரொட்டு என்பதற்கு மாறுபடும். அதனால் தான் உரையாசிரியர்க்கும் கருத்தன்று என்றார் சேனாவரையர்.

> "அல்லதூஉம் ஆகு பெயர் உணர்த்தியவழி வினைத் தொகை யுளப்பட இருபெயரொட்டும் என்றாராகலானும் வினை நின்று தொகுதல் அவர்க்கு (தொல்காப்பியர்க்கு) க் கருத்தன்மை யறிக"

என்ற கருத்தையும் எழுதினார். (இதிலும் உரையாசிரியர்க்கும் கருத்தன்று என்று கொள்ளல் வேண்டும்)

இது காறும் கூறியவற்றால் வினைத்தொகை என்பது இரு சொற்றொடராயினும் பிரிக்கக் கூடாத ஒரு சொல் நிலையதே என்பதும், அது பெயரும் பெயரும் சேர்ந்த சொற்றொடரே என்பதும், அதனால் பெயரெச்சம் நின்று தொக்கது என்பது பொருந்தாது என்பதும், உரையாசிரியரும் சேனா வரையர்கருத்தினரே என்பதும் பெறப்படும்.

(இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் ஒன்பதாவது கருத்தரங்கு, ஆய்வுக் கோவை, தொகுதி 2 (1977) அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணா மலை நகர்).

## பண்புத் தொகை

**410. வண்ணத்தின் வடிவி னளவிற் [1]சுவையினென்**
**றன்ன பிறவு மதன் குண நுதலி**
**யின்ன திதுவென வருஉ மியற்கை**
**யென்ன கிளவியும் பண்பின் றொகையே. (20)**

1சுவையின் அன்ன பிற—பாடம்-தெய்.

(வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையின் என்று
அன்ன பிறுவும் அதன்குணம் நுதலி
இன்னது இதுஎன வருஉம் இயற்கை
என்ன கிளவியும் பண்பின் தொகையே)

ஆ. மொ. இல.

Quality—compound is that which is made of two words, the first—word denoting colour, shape, extent, taste, etc. and the second word being described by the former in such a way as to indicate its true nature

பி. இ. நா.

**வீர. 48**

முன்மொழிப் பண்பும் இருமொழிப் பண்பும் ஒழிந்த
மைந்த

பின்மொழி யொப்பொடு முன்மொழி யொப்பும்
பிணக்கொன்றிலா
முன்மொழி நற்கருத்தும் முன்மொழி நற்றுணிவுமென
நன்மொழியார் கன்மதாரய மாறென்ன நாட்டினரே,

**நன். 365**

பண்பை விளக்கும் மொழி தொக்கனவும்
ஒரு பொருட் கிருபெயர் வந்தவும் குணத்தொகை.

**பிரயோ. 22**

முன்மொழிப் பண்பு இருபண்பு விசேடியம் முன்
மொழிதன்
முன்மொழித் துல்லியம் பின்மொழித் துல்லியம்
மொய் குழலாய்
முன்மொழிச் சம்பாவனை அவதாரண முற்றுமிவை
நன்மொழிப் பண்புத் தொகைக் கன்மதாரய் நற்
றமிழ்க்கே.

**இ வி. 339**

வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையினென்று
அன்ன பிறவும் அதன்குணம் நுதலி
இன்னது இதுவென வரூஉம் இயற்கை
என்ன கிளவியும் பண்பின் தொகையே.

**இலக்கணக் கொத்து. 98, 99**

பண்புத் தொகைவிதி பகரிற் பெருகும்
ஆயினும் சிலவிதி அறைகுவன் கேள் நீ
பண்பு முன் வருதலும் இருபண்பு அடுத்தலும்
இருபண்பொடு பொருள் இயைதலும் அவ்விரு
பண்புகள் தாமே பொருளை விளைத்தலும்
இயற்பெயர் சிறப்புப்பெயர் மாறுதலும்
சிறப்புப் பொதுப் பெயர் முறையே சிறத்தலும்
பொதுச்சிறப் புப்பெயர் முறையே பொருந்தலும்
பின்மொழி யாகு பெயராய்ப் பிறத்தலும்
முன்மொழி யாகு பெயராய் முடிதலும்

இருமொழி யாகு பெயராய் இருத்தலும்
ஒரு பொருட் கிருபெய ராகி யொட்டலும்
முற்பதம் தமிழ்மொழி முற்பதம் வடமொழி
இருபதம் தமிழ்மொழி இருபதம் வடமொழி
ஆகி வருதலும் ஆதியாப் பலவே.
சிலபெயர் எச்சமும் சில வினைத் தொகையும்
இருவகை யுவமையும் வண்ணச் சினைச் சொலும்
பண்புத் தொகையெனப் பகரும் வடநூல்.

**முத்து. ஒ. 97**

வண்ணம் சுவையே வடிவே அளவே
என்பவும் பிறவும் இதன்குணம் நுதலி
வரூஉம் இயற்கை பண்பின் தொகையே.

**இளம்**

உரை : பண்பு தொகுமிடத்து இந்நான்கும் பற்றித் தொகும் என்பது கருத்து.

வண்ணம் பற்றித் தொக்கது : கருங்குதிரை என்பது. இது விரியுங்காலை 'கரியது குதிரை' என விரியும். கரியதும் அதுவே குதிரையும் அதுவே கருமையுடைமையிற் குதிரை 'கரியது' எனப்பட்டது. இன்னது இது என நிற்றல் அதற்கு இலக்கணம். இன்னது என்பது கரியது என்றல். இது என்பது குதிரை என்றல்.

இனி வடிவுபற்றித் தொகுத்தல் : 'வட்டப்பலகை' என்பது. அது விரியுங்கால் 'வட்டமாகியது பலகை' என விரியும். ஆண்டும் இன்னது இது என்னும் குணம் நுதலிற்று. நிற்கும்.

இனி, அளவுபற்றித் தொக்கது : 'குறுங்கோல்' என்பது. அது விரியுங்கால், 'குறியது கோல்' என விரியும். ஆண்டும் இன்னது இது என நிற்கும்.

இனிச் சுவைபற்றித் தொக்கது : தீங்கரும்பு என்பது. அது விரியுங்கால் 'தீவியது கரும்பு' எனவிரியும். ஆண்டும் இன்னது இது என்னும் குணம் நுதலிற்று.

இனி, அன்ன பிறவும்' என்றதனால் [1]தண்ணீர், நறும்பூ, நன்னுதல், பருநூல், மெல்லிலை, நல்லாடை என எத்துணை

1. தண்ணியதுநீர், நறுவியது பூ, நல்லதுநுதல், பரியதுநூல், மெல்லியது இலை, நல்லது ஆடை என விரிக்க.

யுளமன் அப்பொருள் குணம்? அக்குணம் நுதலி இன்னது இது என வருமவை யெல்லாம் பண்புத் தொகையே யென்று கொள்க என்பதாம்.

இனி, 'என்ன கிளவியும்'' என்றதனால், கேழற் பன்றி' வேழக் கரும்பு, சகரக் கிளவி, அகரமுதல், மாமரம் என இவை யும் கொள்க. இவை ஒரு பொருட்கண் இருபெயர் படவரும். இவற்றுக் கண்ணும் இன்னது இது என நிற்றல் ஒக்கும். கேழல் எனப்பட்டதுவும் [1]அதுவே. பிறவும் அன்ன.

மற்று, வேற்றுமைத் தொகையும் உவமத் தொகையும், வேற்றுமையுருபும், உவமவுருபும் தொக்கமையாற்றொகை யென்றல் அமையும்; ஒழிந்த வினைத் தொகையும், பண்புத் தொகையும் அவ்வாறு தொக்கு நின்றிலவால் எனின், அவ்வாறு தொகுதலே யன்று தொகையாவது. [2]'கொல்யானை' என்புழிக் கொல்லும் என்னும் வினைச்சொல் ஒரு கூறு நிற்ப ஒரு கூறு தொக்கமையின் வினைத் தொகை யாயிற்று. 'கருங் குதிரை' என்புழிக் 'கரியது' என்னும் பண்புப் பெயர் ஒருகூறு நிற்ப ஒருகூறு தொக்கமையின் பண்புத் தொகையாயிற்று.

சேனா

இ-ள் : வண்ணம் வடிவு அளவு சுவை என்பனவும், அவை போல்வன பிறவுமாகிய குணத்தை நுதலிப் பின் தொக்க வழிக் குணச்சொற் குணமுடையதனை யுணர்த்தலான் இன்னது

---

1. அதுவே — பன்றியே 2 கொல்லும் என்பதில் கொல் என்னும் ஒரு கூறு நிற்ப உம் என்னும் ஒரு கூறு தொக்கது. கரியது என்பதில் கரு என ஒரு கூறு நிற்பது அ,து என்னும் சாரியையும் விகுதியுமாகிய கூறுகள் தொக்கன.

2. வரும் என்பதின் வருதல் தொழில் என்னகிளவியும் என்பதால் குறிக்கப்படும் (பண்பும் பண்பியும் ஒட்டிய) இரு பெயர்த் தொகையின் தொழில். நுதலி என்பதின் நுதலுதல் தொழில் அவ்விரு பெயர்த்தொகை யின் முதற் பெயரைச் சார்ந்தது அதனால் இருபொருள் ஒருபெயர் சினையெனப்பட்டு அதன் தொழிலாயிற்று. அதனால் ''நுதலி என்னும் ...... முடிந்தது'' என்றார்.

இதுவென ஒன்றனை யொன்று விசேடித்து இரு சொல்லும் ஒரு பொருள்மேல் வரும் இயல்பையுடைய எல்லாத் தொகைச் சொல்லும் பண்புத் தொகையாம் என்றவாறு.

நுதலி என்னும் சினைவினை யெச்சம் வரும் என்னும் முதல் வினையோடு முடிந்தது.

'இயற்கை' என்றது தொக்குழிப் பண்புடைய தனைக் குறித் தல், அத்தொகைச் சொல்லது இயல்பு என்பதல்லது காரணங் கூறப்படாது என்றவாறு. தொகைக் கண்ணல்லது அச்சொல் தனிநிலையாய், உண், தின், செல், கொல் என்பனபோலப் [3]பொருளுணர்த்தாமையின் பண்புத் தொகையும் வினைத் தொகைபோலப் பிரிக்கப் படாதாம்.

உ-ம் : கருங்குதிரை யென்பது வண்ணப் பண்பு. வட்டப் பலகை என்பது வடிவு நெடுங்கோல் என்பது அளவு. தீங்கரும்பு என்பது சுவை. அவை கரிதாகிய குதிரை, வட்ட மதாகிய பலகை எனப் [4]பண்புச் சொல்லும் பண்புடைப் பொருளே குறித்தலான் இரு சொல்லும் ஒரு பொருளவாய் 'இன்னது இது' என ஒன்றையொன்று பொதுமை நீக்கியவாறு கண்டு கொள்க. பிறவு மன்ன.

அன்ன பிறவும் என்றதனான் நுண்ணூல், பராரை, மெல்லிலை, நல்லாடை என்னுந் தொடக்கத்தன கொள்க.

---

3. 'கருங்குதிரை' 'செந்தாமரை என்பனவற்றில் 'கரும்' 'செம்' என்பன தனிந்துப் பொருளுணர்த்தாமையறிக.

4. 'கருங்குதிரை' என்பதில் உள்ள 'கரும்' எனும் பண்பும் 'கரிது' என அப்பண்புடைய பொருளையே (குதிரையையே) குறித்தது. குதிரையானது கரியதன் மையுடையது என்னும் பொருளைக் 'கரும்' என்பது குறித்தலின் 'கரும்' என்பது இன்னது எனப்படும். குதிரை என்பது இது எனப்படும். குதிரை எத்தகையது எனின் கரிது என்றும் கரிது எது எனின் குதிரை என்றும் ஒன்றை யொன்று விசேடித்து நின்றன— அதாவது பொதுமை நீக்கின. கரிது என்பது வெண் குதிரையை நீக்கியும் குதிரை என்பது கருநிறமுள்ள யானை முதலிய பிறபொருளை நீக்கியும் ஒன்றை யொன்று விசேடிக்கின்றன.

அஃதேல், கரிதாகிய குதிரை, வட்டமாகிய பலகை என்பன அத்தொகையின் விரியாகலிற் பண்புத் தொகை பிரிக்கப்படாது என்றது என்னை யெனின், அற்றன்று; தொகைப் பொருள் உணர்த்துதற்குப் பிற சொற் கொணர்ந்து விரித்ததல்லது, தன் சொல்லான் விரியாமையின் அவை விரியெனப்படா என்க. வடநூலாரும் பிரியாத் தொகையும் பிற சொல்லான் விரிக்கப்படும் என்றார். [1]பிற சொற் கொணர்ந்து விரிக்குங்கால் கரியகுதிரை, கரிதாகிய குதிரை, கரியது குதிரை என அத்தொகைப் பொருள் உணர்த்துவன வெல்லாவற்றானும் விரிக்கப்படும்,

[2]கரியது என்னும் பண்பு கொள் பெயர் கருங்குதிரை யெனத் தொக்கது என்றாரால் உரையாசிரியர் எனின், அதனைப் பெயரெச்சம் வினைத்தொகை நிலைமொழி என்றதற்கு உரைத் தாங்கு உரைத்து மறுக்க.

[3]தனிநிலையாவது கரியன், செய்யன், கருமை, செம்மை என்பனவற்றிற்கெல்லாம் முதனிலையாய்ச் சொல்லாய் நிரம்பாது கரு, செவ் எனப் பண்பு மாத்திரம் உணர்த்தி நிற்பதாம்.

என்னகிளவியும் என்றதளால், சாரைப் பாம்பு, வேழக்கரும்பு, கேழற்பன்றி எனப் பண்பு தொகாது பெயர் தொக்கனவும்

---

1. பிறசொல்—பெயரெச்ச விகுதி, வினை முற்று விகுதி, ஆகிய என்னும் சொல்.
2. "கரியது என்னும்.........உரைத்தாங்கு உரைக்க" விளக்கம்: பிரிப்பப் பிரியக்கூடி தொகைச் சொற்களுக்கு ஆசிரியர் புணர்ச்சிவிதி கூறியுள்ளார். பண்புத் தொகையும் பிரிப்பப்பிரியுமாயின் அதற்கும் புணர்ச்சிவிதி ஆசிரியர் கூறியிருக்க வேண்டும். கூறாமையோடு 'புணரியல் நிலையிடை யுணரத் தோன்றா' என்றும் கூறிவிட்டார். ஆதலின் பண்புத் தொகை பிரிக்கப் படாது என்பது ஆசிரியர் கருத்தாம்.
3. கருங்குதிரை என்பதில் கரு என்பது முதல் நிலைச் சொல் என்பது சேனாவரையர் கருத்து. மற்றையோர் கரிது என்பது முன்மொழி என்பர். தனிநிலையாவது என்பதற்குப் பதிலாக முதனிலையாவது என்றும் பாடம் காணப்படுகிறது;

அத்தொகையாதல் கொள்க. இவற்றது சாரை முதலாகிய நிலைமொழி பிரித்தவழியும் பொருளுணர்த்தலின், இவற்றைப் பிரித்துப் புணர்த்தார். அஃதேல், பாம்பைச் சாரை விசேடித்த தல்லது சாரையைப் பாம்பு விசேடித்தின்றாகலின் ஒன்றை யொன்று பொதுமை நீக்காமையாற் சாரைப்பாம்-பென்பது முதலாயின பண்புத் தொகையாயினவாறென்னை - யெனின், நன்று சொன்னாய்; விசேடிப்பதும் விசேடிக்கப்படுவதும் ஆகிய இரண்டனுள் விசேடிப்பது விசேடியாக்கால் அது குற்றமாம். விசேடிக்கப்படுவது விசேடித்தின் றென்றலும் விசேடிக்கப் -படுத லாகிய தன்தன்மைக் கிழுக்கின்மையான் விசேடியாது நிற்பினும் அமையும் என்க. [4]இவ்வேறுபாடு பெறுதற்கன்றே' 'இன்ன திதுவென வரூஉம்' எனப் பின்மொழியை விசேடிப்பதாகவும், முன்மொழியை விசேடிக்கப்படுவதாகவும் ஆசிரியர் ஓதுவராயிற் றென்பது, அற்றேனும் சாரையெனவே குறித்த பொருள் விளக் கலிற் பாம்பென்பது மிகையாம் பிறவெனின், அற்றன்று. உலக வழக்காவது, சூத்திர யாப்புப்போல மிகைச் சொற்படாமைச் சொல்லப்படுவ தொன்றன்றி, [5]மேற்றொட்டுக் கேட்டார்க்குப் பொருள் இனிது விளங்க வழங்கப்பட்டு வருவதாகலின், அது கடாவன்றென்க. மிகைச் சொற்படாமைச் சொல்லப்படுமாயின், யான் வந்தேன், நீ வந்தாய் என்னாது, வந்தேன், வந்தாய் என்றே வழங்கல் வேண்டும் என்பது. இனி ஒற்றுமைநயத்தால் [6]என்புந்தோலும் உரியவாதலாகிய உறுப்புஞ் சாரையெனப் படுதலின் அவற்றை நீக்கலாற் பாம்பென்பதூஉம் பொதுமை

---

4. "இவ்வேறுபாடு...... ஓதுவாராயிற்றென்பது" விளக்கம் சாரைப் பாம்பு என்பதில் இது என்பது பாம்பு. இன்னது என்பது சாரை. சாரை என்பது பாம்பை விசேடிப்பது. பாம்பு சாரை என்பதால் விசேடிக்கப்படுவது பாம்பானது சாரை என்பதை விசேடிக்கவில்லை. சாரை என்பது பாம்பு என்பதால் விசேடிக்கப்படவுமில்லை, இப்படி வரலாம் என்பதற்காக ஆசிரியர் 'இன்னது இது, இது இன்னது' என இருமுறைகூறாது 'இன்னது இது' யென ஒருமுறையே கூறினார்.

5. மேல்தொட்டு—பண்டுதொட்டு.

6. எலும்புந்தோலுமாகக் காணப்படும் மனிதன் வயிற்றைச் சாரைக் குடல் என்பர்.

நீக்கிற் றென்பாருமுளர். [7]உயர் சொற்கிளவி, இடைச்சொற்கிளவி, உரிச்சொற்கிளவி என்புழியும், உயர்சொல், இடைச் சொல் உரிச்சொல் என்பன சொல்லென்பதன்கட் கருத்துடையவன்றிக் குறிமாத்திரமாய், உயர்வு, இடை, உரி என்ற துணையாய் நின்றனவாகலின், சாரை என்பது பாம்மை விசேடித்தாற்போல அவை கிளவி என்பதனை விசேடித்து நின்றன வென்பது [8]அவ்வாற்றான் அமைவுடைய வாயினும் சூத்திரமாகலின் உயர் சொல், இடைச்சொல், உரிச்சொல் எனவே அமையும்; கிளவி என்பது மிகை எனின், மிகையாயினும் இன்னோரன்ன அமைவுடைய வென்ப துணர்த்துதற்கு அவ்வாறோதினார் என்பது.

தெய்

பண்புத் தொகையாமாறுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வண்ணம், வடிவு, அளவு, சுவை என்பனவற்றினும், அத்தன்மைய பிறவுமாகி ஒரு பொருளினது குணத்தைக் கருதி இன்னது இது என ஒன்றையொன்று விசேடித்து வரும் இயல்பினையுடைய எல்லாச் சொல்லும் பண்புத் தொகையாம், எ-று.

---

7. உயர் சொற்கிளவி என்பதில் உயர்சொல் என்பது உயர்வு என்னும் பொருள் தருவது. (சொல் என்பது வாளா நின்றது.) உயர்கிளவி எனத் தொடர்வது. எனவே உயர்சொல் என்பது ஒரு சொல்லாய்க் கிளவி என்பதை விசேடித்தது. இப்படிப் பிறவும் கொள்க. கிளவியாக்கம் 'ஒருவரைக்கூறும் பன்மைக் கிளவியும்' (27) என்னும் சூத்திரத்தில் "உயர் சொற் கிளவி யென்பது கூறியது கூறலன்மை பண்புத்தொகை யாராய்ச்சிக்கட் சொல்லுதும்" எனக் கூறியதை இங்கே காண்க.

8. உயர்சொல் என்றே ஓதலாம். கிளவி என்பது தேவையில்லை. உயர் சொல் என்று சொல்வதையே உயர்சொற் கிளவி என்றும் சொல்லலாம் என்பதற்கு உயர் சொற் கிளவி என்றார் ஆசிரியர்.

கரியது குதிரை, *வட்டப்பலகை, நெடியதுகோல், தீவிது கரும்பு என்பன கருங்குதிரை, வட்டப்பலகை, நெடுங்கோல், தீங்கரும்பு எனத் தொகும்.

அன்னபிறவும் என்றதனான், தண்ணீர், வெந்நீர் என்பன முதலாயின கொள்க.

அஃதேல் இவை கரிய குதிரை நெடியகோல் எனப் பெயரெச்ச வாய்பாட்டானும் [1]பண்புபற்றி வருஞ்சொல் வினைக் குறிப்பாகி முடிதலானும் வினைத்தொகையுள் அடங்கும்எனின் பண்புத்தொகை [2]ஒருவாய்பாட்டான் விரிக்கப்படா தென்பது [3]எழுத்திகாரத்துக் கூறுதலின் [4]பெயரெச்சவாய்பாடும் வரும் வினைக் குறிப்பாதலானே யன்றே [5]வினைத் தொகையோடு சேர ஓதுவாராயிற்று என உணர்க.

கருமையையுடைய குதிரையென வேற்றுமைத் தொகையாயும் அடங்குமால் எனின், 'இன்னது இது' என ஒற்றையொன்று விசேடித்து வருதல் வேண்டும், அவ்வாறு வருங்கால் வேற்றுமைத் தொகையாகா தென்க. வேற்றுமைத்தொகை, உவமைத் தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை என்பன தம்முள் [6]ஒருபுடை ஒப்புமையுடையவாதலின் பாணினியார் தற்புருட சமாசம் என்று குறிப்பிட்டார்.

---

*வட்டமது பலகை என்றிருத்தல் வேண்டும்.

1. பண்புபற்றி வருஞ்சொல் ஆகிய என்பது. அது குறிப்புப் பெயரெச்சம். கொன்றயானை கொல்யானை என வருதல் போல் நெடியகோல் நெடுங்கோல் என வருதலின் வினைத்தொகையுள் அடங்கும்.
2. ஒருவாய் பாட்டான்-ஒரு முழுச் சொல்லால்.
3. குற்றியலுகரப் புணரியல் சூ.
4. பெயரெச்ச வாய்பாடு கரிய நெடிய முதலியனவும் ஆகிய என்பதும்.
5. பண்புத் தொகையை வினைத் தொகையோடு சேர வைத்தார்.

இனி, 'இன்னது இது என வரூஉம் இயற்கை என்ன கிளவியும்' என்றதனான், பண்புபற்றி வருதலேயன்றிப் பெயரினால் ஒன்றையொன்று விசேடித்து வந்து ஒட்டுப்படினும் பண்புத்தொகையாம் என்று கொள்க. [8]வாணிகச் சாத்தன், சாரைப்பாம்பு எனவரும். [9]ஆயன்சாத்தன், ஆசிரியன் நல்லந்துவன் என எழுவாயும் பயனிலையுமாகி வருதலின்றி ஒட்டுப் படாத நிலைமையவாயினும் முதற்பெயர் விசேடணமாகிவரின் அதுவும் பண்புத் தொகையாம் என்று கொள்க.

**நச்**

இது பண்புத்தொகை கூறுகின்றது.

இ-ள் : இன்னது இது என—ஒரு பொருட்குப் பொதுமையுள்வழி இப்படி இருப்பது இப்பொருள் என்று அதனை விசேடித்துக் கூறும்படியாக, அதன் குணம் நுதலி—பின் வருகின்ற அப்பொருளின் குணத்தைத் தான் கருதி, வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையின் வரூஉம் இயற்கைக் கிளவியும்—அப்பொருட்குணமாகிய வண்ணத்தின் கண்ணும் வடிவின் கண்ணும் அளவின் கண்ணும் சுவையின் கண்ணும் வரும் இயல்பாகிய கிளவியும், அன்ன பிறவும் என்று வரூஉம் கிளவியும்—அவை போல்வன பிறவும் என்று சொல்லப்பட்டு வரும் கிளவியும், என்ன கிளவியும்-எத்தன்மைவாகிய சொற்களும், பண்பின் தொகை—பண்புச் சொல் தொக்க தொகையாம், எ-று.

பண்பு எனப் பண்புச் சொல் உணர்த்திற்று; ஆகுபெயராய். எழுத்ததிகாரத்து.

"உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்

---

6. ஒருபுடை ஒப்புமை — வேற்றுமைத் தொகையாகவும் விரிக்கப்படும் ஒற்றுமை.

7. தற்புருடசமாசம்

8. வாணிகச்சாத்தன்—வாணிகனாகியசாத்தன்.

9. ஆயன் சாத்தன்-ஆயனாகிய சாத்தன் எனின் பண்புத் தொகை; சாத்தன் என்பான் ஆயர்ன் எனவோ ஆயனாவான் சாத்தன் எனவோவரின் எழுவாய்த் தொடராம்.

ஐம்பால் அறியும் பண்புதொகு மொழியும்'' (குற்றி. 77) என்புழிப் 'பண்புத்தொகை ஐந்து பாலையும் உணர நிற்றலின், அங்ஙனம் நின்றன பிரித்தும் புணர்த்தற்கு இயையா' என்றமையான், ஈண்டும் அதற்கு ஏற்ப 'இயற்கை' என்றார். 'ஐம்பாலறியும் பண்புதொகு மொழியும்' என்றதன் பொருள் 'ஐந்து பாலையும் ஒருவன் அறிதற்குக் காரணமாகிய பண்புச் சொல் தொக்க தொகைச் சொல்லும்' என்றவாறாம். பண்பு உணர்த்துகின்ற [1]ஐம்பால் ஈறுகள் தொக்கு நின்றே விரியும் என்பது உணர்த்துதற்கு [2]அவ்வாசகம் தோன்ற 'இன்னது' என்றார். [3]ஐம்பாலும் பொருள் என்றால் அஃறிணையாய் அடங்கும் ஆதலின் பொருளாக்கி 'இது' :என்று அஃறிணையால் கூறினார். இந்நான்கனுள் வண்ணமும் அளவும் சுவையும் ஐம்பாற்கண்ணும் வரும்.

உ-ம். வண்ணம் : கரும்பார்ப்பான், கரும்பார்ப்பனி, கரும்பார்பார், கருங்குதிரை, கருங்குதிரைகள் என்னும் பண்பு உணர்த்தும் ஈறுகள் தொக்கனவற்றை விரிப்புழிக் கரியனாகிய பார்ப்பான், கரியளாகிய பார்ப்பினி, கரியராகிய பார்ப்பார், கரியதாகிய குதிரை, கரியனவாகிய குதிரைகள் எனப் பண்பு உணர்த்தும் ஐம்பால் ஈற்றினையும் விரித்தவாறு காண்க. கரியபார்ப்பான் என்பது [4]ஈறு தோன்றாத பெயரெச்சக் குறிப்பாய் நிற்கும். இனி, வெம்மை முதலியவற்றிற்கும் இவ் வாறே ஒட்டுக. இவற்றுள் 'கரு' ஒழிய [5]ஏனைய தொக்கவாறு காண்க. [6]இவற்றுள் அஃறிணைக்கண் வரும் ஈறுகள் பண்பு கொள் பெயராய் நிற்குமாறும் உணர்க.

---

1. ஐம்பால் ஈறுகள் : ன், ள், ர், து, அ என்பன.
2. அவ்வாசகம்-பாலுணர்த்தும் ஈறுடைய சொல். இன்னது என்பதில் 'து' ஈறு ஒன்றன் பாலையுணர்த்தும்.
3. இன்னன் இவன் இன்னள் இவள் இன்னர் இவர் இன்னன இவை எனக் கூறாமல் இன்னது இது என ஒன்றன் பால் வாசகம் மட்டும் ஏன் கூறினார் என்றால் ஐந்து பால்களுமே பொருள் எனப்படுதலின் யாவறையும் அடக்கி அஃறிணை வாசகத்தான் இன்னது இது எனக் கூறினார் ஆசிரியர்.
4. ஈறு - னகரஒற்று.
5. ஏனைய - பாலுணர்த்தும் ஈறுகள்.
6. விளக்கமில்லை.

இனி, அளவு ; '[7]குறுமுனி, குறுமகளாடிய ஊர்க்குறு மாக்கள், குறுந்தாட் கூதளிர். குறுங்கோட்டன' என்பன வற்றையும் அவ்வாறே விரிக்க, இனி, நெடுமை முதலியவற்றிற் கும் இவ்வாறே ஒட்டுக.

இனிச்சுவை : ஐம்பொறியான் நுகர்தற்கு உரிய இனிமை களை உணர்த்தும் 'சாயல் மார்பிற் கமழ்தார் குழைத்து எனவும், 'தீங்கரும் பனுக்கிய' எனவும், 'தீம்புகை கமழவூட்டி' எனவும், 'உடைதிரை திவலை அரும்புந்தீநீர் எனவும், 'தீந் தொடை நரம்பின்' எனவும் மெய்யானும் நாவானும் மூக்கானும் கண்ணானும் செவியானும் நுகரும் இனிமையை யுணர்த்தின. இவற்றை விரிப்புழி அஃறிணை யிருபாற்கும் ஏற்ப இனிதாகிய மார்பு, தீவியனவாகிய கரும்புகள், தீவிதாகிய புகை, தீவிதாகிய நீர், தீவியனவாகிய நரம்புகள் என விரிக்க. இனி, 'கட்கு இன்புதல்வன், கட்கு இன்புதல்வி, கட்கு இன்புதல்வர்' எனக் கண்ணால் நுகரும் இனிமைக்கண் உயர்திணை முப்பாற்கும் ஏற்ப இனியனாகிய புதல்வன், இனியனாகிய புதல்வி. இனிய ராகிய புதல்வர் என விரிக்க.

இனி வடிவு : இது வட்டம், சதுரம், கோணம் முதலியன வாம். வட்டப்பலகை என்பது வட்டமாகிய பலகை என விரிந்து தனக்கு ஏற்ற ஒருமை பன்மையை உணர்த்தும் ஈறுகள் இன்றி நிற்றலின், இஃது ஐம்பால் அறியாத பண்புத்தொகையாயிற்று. இங்ஙனம் ஐம்பால் அறியாத பண்புத்தொகையை ஆசிரியர் [8]எழுத்தின்கண் நிலைமொழி வருமொழி செய்து புணர்த்தார். அவை 'அகங்கை' முதலியனவாம்.

கரும்பார்ப்பான் என்புழிக் கருமையும் பார்ப்பானும் தம்மின் வேறு இன்றி நின்று மகனாகிய பொருளையே உணர்த்திய

---

7. குறியனாகியமுனி, குறியளாகியமகள் குறியராகிய மாக்கள், குறியதாகிய தாள், குறியனவாகிய கோட்டன.

8. எழுத்ததிகாரத்தில். அகங்கை—அகமாகிய கை, இது அங்கை எனவரும் என்றார் ஆசிரியர். (புள்ளிமயங் கியல் 20)

வாறும், [9]'கருமை' பார்ப்பான் பொதுமையை விசேடித்த வாறும், 'பார்ப்பான்' கருமையின் பொதுமையை விசேடித்த வாறும் காண்க. [10]இவை தொகுங்கால் 'கரு' என்னும் பண்பு மாத்திரம் நின்று பண்புப் பெயராங்கால் பெற்று நிற்கும் 'கருமை' என்னும் மகர ஐகாரம் தொக்கு நிற்கும் என்றால், 'கரியது வெளியது, கரியன, வெளியன' என்னும் பண்பு உணர்த்தும் ஈறுகளின் கண்ணும் அவை தொக்கு இவையும் தொகைச் சொல்லாவான் சேறலின், அது பொருந்தாது; கரியன், கரியள், கரியர், கரியது, கரியன என்னும் பண்பு உணர்த்தும் ஈறுகளே தொக்கு நிற்பன என்று உணர்க, என்னை ? ஆசிரியர், 'இப்படி இருப்பது இப்பொருள்' என்று வினைக்குறிப்பிற்கு ஏற்ற விரிவு தோன்றச் சூத்திரஞ் செய்தா ராகலின். 'இன்னது இது' என ஒரு பொருள் மேல் நிற்றலின் இப்பண்புத் தொகைகள் எல்லாம் பெயரெச்ச வினைக் குறிப்பாய் நிற்பதோர் பெயர் என்று உணர்க, அஃது உருபு ஏற்றும் பயனிலை கொண்டு நிற்றலின்.

---

9. கரும்பார்ப்பான். கரிய செய்ய வெளிய பார்ப்பனர் பலருள் செய்ய வெளியபார்ப்பனரை நீக்கிக் கரியபார்ப் பானையே குறித்தலின் பார்ப்பான் என்பதன் பொதுமை நீக்கி விசேடித்தது கரு என்பது. கருமை நிறமுடைய அந்தணர் அரசர் முதலியோரை நீக்கித் தன்னையே குறித்தது பார்ப்பான் என்பது, அதனால் பார்ப்பான் என்பது யாவர்க்கும் பொதுமையின் நின்ற கரு என் பதைத் தனக்குரியதாக விசேடித்தது.

10. "இவை தொகுங்கால்......உணர்க". விளக்கம். கரி யானாகிய பார்ப்பான் என்பதே கரும்பார்ப்பான் எனத் தொகும். கருமை + பார்ப்பான் என்பது மை விகுதி கெட்டுக் கரும்பார்ப்பான் என நின்றது என்னலாமோ எனின் பொருந்தாது. கரியன் என்பதையும் கருமை + அன் எனப்பிரிக்கலாம் ; அப்படியாயின் மகர ஐகாரம் (மை) தொக்கமையின் கரியன் என்பதும் பண்புத் தொகை எனப்படும். கரியது (கருமை + அ + து) வெளியது (வேண்மை + அ + து) என்பனவும் பண்புத்தொகை ஆதலின் மகர ஐகாரம் தொகுவது என்பது பொருந்தாது. பண்புணர்த்தும் ஈறு தொகுவதே பண்புத் தொகை என உணர்க.

உயர்திணை என்பது வினைத்தொகையோ பண்புத் தொகையோ எனின், 'உயர்' என்னும் முதல் நிலை நின்று 'உயர்ந்ததிணை' என அகர வீற்றுப் பெயரெச்சமாய் இறந்த காலம் தொக்கு நிற்றலின், வினைத் தொகையாம். இதற்கு ஏனைக் காலமும் தொகுமாறு அறிக. இதனைப் பண்புத் தொகையாக்கி விரிக்குங்கால், 'கரியதாகிய குதிரை' என விரித் லாற் போல விரியாது 'உயர்ந்ததாகிய திணை' என விரிக்க வேண்டும். அங்ஙனம் விரிந்துழி, அஃது 'உயர்' என்னும் முதல் நிலைப் பின் வந்த தகர அகரம் இறந்த காலம் உணர்த்தியே நிற்றலின் பண்புத்தொகை யாகாமையுணர்க என்னை ? பண்பும் வினைக்குறிப்பும் முக்காலமும் புலப்படாமை நிற்கும் என்றே முற்கூறலின். அன்றியும், காலம் புலப்பட நின்றதன்மேல் பண்பு கொள் பெயர் விரியாமை யுணர்க.

இனி, 'அன்னபிறவும்' என்றதனான், நுண்ணூல், பராரை, நல்லாடை, வெந்தீ, தண்ணீர், நறும்பூ என்னுந் தொடக்கத்தன கொள்க.

[11]மெல்லிலை வினைத் தொகையுமாம்.

[12]இத்தொகையை வேற்றுமைத் தொகை என்பார், 'கருமையையுடைய பார்ப்பான் என்று பண்புப் பெயராக்கி விரிப்பர். அது பொருந்தாது. 'கரு' என்னும் முதல் நிலை பண்பினையுணர்த்தி 'இதனையுடையது இது' என நில்லாது, 'கரியது' எனப்பண்பு உடைய பொருளை நோக்கி நிற்றலின், வேற்றுமைப் பொருண்மை ஆண்டு இன்று என உணர்க.

'என்ன கிளவியும்' என்றதனால், சாரைப் பாம்பு, கேழற் பன்றி, வேழக் கரும்பு, இடைச் சொற்கிளவி, உரிச்சொற்கிளவி

---

11. மெல்லிலை—மெல்லிதாகிய இலை-பண்புத்தொகை ; மெல்லென்ற மெல்லென்கிற மெல்லென்னும் இலை- வினைத்தொகை.
12. கருமையையுடைய பார்ப்பான் என விரிப்பின் கரு என்பது உடைய என்பதை நோக்கும் ; பார்ப்பானை நோக்காது ; அதனால் நேரா பார்ப்பானை நோக்கும் நிலையில் பொருளமைவதால் பண்புத்தொகையாகுமே தவிர வேற்றுமைத் தொகையாகாது,

என்றாற் போலப் [13]பண்பு உணர்த்தும் ஈறுகள் தொகாது தம்பொருள் உணர்த்தும் பெயர்ப் பெயர் இரண்டுகூடி நின்று விசேடித்தலை யுணர்த்தும் இருபெய ரொட்டுப்பண்புத் தொகையும் கொள்க. அவை 'சாரை' யெனவும் 'கேழல் உழுத கரிப்புனக் கொல்லை' எனவும் (ஐந்திணைஎழு. 11), வேழம் தீவியது எனவும், 'இடைச் சொல் எல்லாம்' (எச்ச.59) எனவும், 'உரிச்சொல் மருங்கினும்' (எச்ச. 60) எனவும் பின் வரும் சொல் இன்றியும் தம்பொருள் உணர்த்துதல் பற்றி எடுத்தோத்தினுள் முடியாமையின், இலேசால் கொண்டார். வட்டப்பலகை, அகங்கை முதலியன பின்வரும் சொல்லோடு அன்றித் தம் பொருள் உணர்த்தாமையின், நிறுத்தச்சொல்லும் குறித்து வருகிளவியுமாய் நிற்கும் என்று அவற்றை முடித்தார். இவற்றிற்குப் பின்வருஞ் சொல் முன்வரு மொழியை விசேடி யாது நிற்கும். இங்ஙனம் வரும் என்றற்கு அன்றே ஆசிரியர் 'இன்னது இது' என்று முன்மொழியை விசேடிப்பதாகவும் பின் மொழியை விசேடிக்கப்படுவதாகவும் கூறுவாராயிற்று என்று உணர்க.

## வெள்

இது பண்புத்தொகையாமாறு கூறுகின்றது.

இ-ள்: வண்ணம், வடிவு, அளவு, சுவை என்பனவற்றி னும் அத்தன்மைய பிறவற்றினும் ஆக, ஒரு பொருளினது குணத்தைக் கருதி 'இத்தன்மையது இப்பொருள் என ஒன்றை யொன்று விசேடித்து வரும் இயல்பினையுடைய எவ்வகைத் தொடர் மொழியும் பண்புத் தொகையாம், எ-று.

உ-ம்: கருங்குதிரை என்பது வண்ணப்பண்பு
வட்டப்பலகை என்பது வடிவப் பண்பு
நெடுங்கோல் என்பது அளவு
தீங்கரும்பு என்பது சுவை

இவை விரியுங்கால், கரியதாகியது குதிரை, வட்டமாகியது பலகை, நெடியதுகோல், தீவியது கரும்பு என விரியும். இத்

---

13. பண்புணர்த்தும் ஈறுகள் ஈன்மையின் தொகாது.

தொகை மொழிக்கண் உள்ள இரு சொல்லும் ஒரு பொருள வாய் 'இன்னதுஇது' என ஒன்றையொன்று பொதுமை நீக்கிய வாறு காண்க.

..................................

'இன்னது இது' என வரூஉம் இயற்கை என்ன கிளவியும் 'பண்பின் தொகையே' என ஆசிரியர் குறித்தமை யால் பண்பு தொகாது இன்னது இது எனப்பட்ட வேழக் கரும்பு, கேழற்பன்றி, சாரைப்பாம்பு எனப் பெயர்தொக்கனவும் பண்புத் தொகையாதல் கொள்ளப்படும்.

## ஆதி

இ-ள் : வண்ணம் வடிவு அளவு சுவையும், அவை போன்ற வையும் அவற்றின் பண்பை வினக்கி இது இத்தன்மைத்து என அறிவிக்கும் எல்லாத் தொடர்மொழியும் பண்புத் தொகையாம்.

வண்ணம்—கருங்குதிரை : கரியதாகிய என அறிவித்தது.
வடிவு—வட்டக்கல் : வட்டமாகிய என அறிவித்தது
அளவு—குறுங்கட்டில் : குறுகியதாகிய என அறிவித்தது.
சுவை—இன்சொல் : இனிமையாகிய என அறிவித்தது.

பண்பின் ஈறு வெளிப்படு கில்லாத் தொகைபற்றிப்பேசுகின்ற மையின், தொக்கதால் தொகை என விதி சொல்வதே முறைமை யாகும்.

## பூவராகம்பிள்ளை

கிளவியாக்கம் 'சிறப்பினாகிய பெயர்நிலைக் கிளவிக்கும்' (41) என்னும் சூத்திரத்தில் "திருவீரவாசிரியன் மாந்தக்கொங் கேனாதி என இயற்பெயர் முன் வந்தனவால் எனின், அவை தொகைச் சொல்லாகலான் அவற்றின் கண்ணதன்று இவ் வாராய்ச்சி யென்பது ஆண்டியற்பெயர் முன்னிற்றல் பண்புத தொகையாராய்ச்சிக்கட் பெறுதும்" என்றார். (சேனாவரையர்) அவற்றை இங்கு எடுத்துக் கூறவில்லையாயினும், திருவீரவா சிரியன் மாந்தக் கொங்கேனாதி என்பன ஒரு பொருள்மேல் இருபெயர் ஒட்டி ஒரு சொல்லாக வந்தனவாதலின் சாரைப் பாம்பு வேழக்கரும்பு கேழற்பன்றி என்பனபோல அவைகளும் இருபெயரொட்டுப் பண்புத்தொகைகள் எனக் கொள்க.

## சுந்தர—சண்முகனார்

நன்னூல் உரையாசிரியர்களும் தொல்காப்பிய வுரையாசிரியர்களும் பண்புத் தொகையில் ஏதேதோ தொக்கதாகத் தத்தம் விருப்பம்போல் கூறியிருப்பவை பொருந்தா. பண்புத் தொகைகளில் தொக்கிருப்பன எவை என்பதைத் தொல்காப்பியர் தெளிவாகக் கூறியுள்ளார். கையில் வெண்ணெய் வைத்துக் கொண்டு நெய்க்கு அலைவது ஏன்?

''வண்ணத்தின் வடிவின்......பண்பின் தொகையே'' என்பது நூற்பா. தொக்கனவாகத் தொல்காப்பியர் கூறியிருப்பவை வண்ணம் வடிவு அளவு சுவை, அவை போன்ற இன்னும் பிறவுமாம்' அன்ன பிறவும் என்பதில் நன்மை தீமை வெம்மை மென்மை மேன்மை உண்மை பெருமை தன்மை வன்மை கீழ்மை முதலிய இயல்பு (தன்மை)ப் பண்புகளை அடக்கலாம். எனவே தொல்காப்பியர் கூறியுள்ள நான்கரோடு இயல்பு என்பதையும் சேர்த்துக் கொள்ளலாம். வண்ணம் வடிவு முதலியவற்றை எண்ணியே நன்னூலார், ''பண்பை விளக்கும் மொழி'' (நன்) என்று கூறியிருக்க வேண்டும். ஈண்டு 'விளக்கும்' என்னும் சொல்லின் பொருளை ஊன்றி நோக்க வேண்டும். 'ஆகிய' என்பது விளக்கம் ஆகாது.

கருவண்ணக் குதிரை என்பது கருங்குதிரை எனத்தொக்கது—இது வண்ணம். வட்டவடிவப் பலகை என்பது வட்டப்பலகை எனந் தொக்கது—இது வடிவு. குறுகிய அளவு கோல் என்பது குறுங்கோல் எனத்தொக்கது—இது அளவு. தீஞ்சுவைக் கரும்பு என்பது தீங்கரும்பு எனத்தொக்கது—சுவையிது. நல்ல தன்மை (இயல்பு) உள்ள மாணாக்கர் என்பது நன்மாணாக்கன் எனத் தொக்கது—இயல்பு இது. ஆக வண்ணம் வடிவு அளவு சுவை இயல்பு முதலியவற்றைக்குறிக்கும் சொற்கள் தொக்கிருப்பன பண்புத்தொகையாம். பண்புத் தொகையைப் பொருள் சிதையாமல் ஒன்றுக்கு மேற்பட்ட சொற்களால் விரித்துக் கொள்ளலாம்.

..........................

1) பண்பு பண்பிப் பண்புத்தொகை—செந்தாமரை

2) இருபெயரொட்டுப் பண்புத்தொகை—சாரைப்பாம்பு என்னும் இரண்டுக்கும் இடைப்பட்டதாக, 3) இருபண் பொட்டுப் பண்புத் தொகை ஒன்றும் கூறலாம். அந்த பண்புத் தொகையே கருநிறம், இன்சுவை முதலியன.

சாரைப்பாம்பு என்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகையில் சாரை என்னும் பெயரும் பாம்பையே குறிக்கிறது. பாப்பு என்னும் பெயரும் பாம்பையே குறிக்கிறது. பாம்பு என்பது பொதுப்பெயர்; சாரை என்பது பாம்பினங்களுள் ஒன்றைக் குறிக்கும் சிறப்புப் பெயராகும். இதுபோலவே கருநிறம் இன்சுவை போன்றவற்றையும் கொள்ளல் வேண்டும் கருநிறம் என்பதில் நிறம் என்பது (பாம்பு என்பதைப்போல) எல்லா நிறங்களையும் குறிக்கும் பொதுப்பெயர். கரு என்பது (சாரை என்பது போல) எல்லா நிறங்களுள் ஒன்றாகிய கறுப்பைக் குறிக்கும் சிறப்புப் பெயராகும். இன்சுவை என்பதில் சுவை என்வது எல்லாச் சுவைகளையும் குறிக்கும் பொதுப் பெயர். இன் என்பது இனிப்புச் சுவையைக் குறிக்கும் சிறப்புப் பெயர். எனவே, சாரைப்பாப்பு, ஆயன் சாத்தன் போன்றவற்றை இரு பெயரொட்டுப் பண்புத்தொகை எனக் கூறுவது போல, கருநிறம் இன்சுவை போன்றவற்றுக்கு இரு பண்பு ஒட்டுப் பண்புத் தொகை எனப்பெயரிட்டுப் பண்புத் தொகையை மூவகைப்பபடுத்தலாம்.

(ஒரு புதிய பார்வை—பண்புத் தொகைகளில் தொகுவன எவை—செந்தமிழ்ச்செல்வி சிலம்பு 60. பரல் 3, 4 1985)

சிவ

'கருங்குதிரை' என்பது கரியது குதிரை, கருமையாகிய குதிரை என இருவகையிற் பிரிக்கப்படும். கரியதாகிய குதிரை எனப்பிரிப்பதைச் சேனாவரையர் தவிர மற்றையோர் ஏற்பர். அவர்கள் பண்புத் தொகையாவது பண்மையுணர்த்தும் *ஐம்பால் ஈறுகள் தொகுவது என்பர். ன், ள், ர், து, அ என்பன ஐம்பாலீறுகள். கரியது என்பதில் துகரவீறு ஒன்றன் பால் எனும் பண்பு உணர்த்துவது. அது தொக்குக் கருங்குதிரை என வந்தது.

---

*ஐம்பாலீறுகள் பண்புணர்த்தும் என்றது பொருந்துமா?

கருமை + குதிரை = கருங்குதிரை எனவரும் போது மை எனும் மகர ஐகாரம் தொக்கமையின் பண்புத் தொகையாயிற்று என்ப தால் ஒரு சிக்கல் ஏற்படுகின்றது. குதிரை கரியது என்னும் போது, கரியது என்பது, கருமை + அ + து எனப் பிரிக்கப்படுதலின் அதில் 'மை' என்பது தொக்கிநிற்றலின் அக்கரியது என்னும் ஒரு சொல்லையும் பண்புத் தொகை என்னல் வேண்டும். என்னாமையின் மகர ஐகாரம் தொகுவது பண்புத் தொகை என்பது பொருந்தாது. அன்றியும் வட்டப் பலகை என்பதில் வட்டமை என மகர ஐகாரம் விரிக்கப்படவில்லை. அவ்வாறே சாரைப்பாம்பு போல் வனவற்றிலும் மகர ஐகாரம் விரிக்கப்பட வில்லை.

இனிச் சேனாவரையர் தொகை என்பது பிரிக்கப்படாமல் ஒட்டி ஒரு சொல் போல்வது என்னும் கொள்கையினராதலின் கருங்குதிரை என்பதைப் பிரித்தல் கூடாது என்பர். அதற்கு அவர் கொண்டசான்று தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தில் 'பண்புதொகு மொழி புணரியல் நிலையிடையுணரத் தோன்றா' (எழு. குற். 77) எனக்கூறியதேயாம்.

உரையாளர் யாவரும் சாரைப்பாம்பு போலும் இரு பெய ரொட்டுப் பண்புத் தொகைப் பற்றிக் கருத்து வேறுபாடு கொள்ள வில்லை.

நச்சினார்க்கினியர் பண்புத் தொகையை மூவகையில் கொண்டார் (1) ஐம்பாலறியும் பண்பு தொகுமொழி- அது கரும்பார்ப்பான், கருங்குதிரை போல்வன (2) ஐம்பாலறியும் பண்பு தொகுமொழியல்லாத பிறமொழி தொகுவது. அது வட்டப் பலகை போல்வன. (வட்டம் ஆகிய பலகை).

(3) இரு பெயரொட்டுப் பண்புத் தொகை. —அது சாரைப்பாம்பு போல்வன.

ஆசிரியர் தொல்காப்பியர் புணரியல் நிலையிடை புணரத் தோன்றா (எழு. குற். 77) என்றது, கருங்குதிரை கரும்பார்ப் பாண் போல்வனவற்றையே வட்டப்பலகை போல் வனவற்றைப் பிரித்துப் பிரித்துப் புணர்க்கலாம் என்பது ஆசிரியர் கருத்து. அதற்கேற்பவே அக+கை=அங்கை எனப் பிரித்துப்புணர்ந் தார். (எழு. புள்ளி. 20) இப்படிக் கருதியவர் நச்சினார்க். கினியர்.

வேற்றுமைத் தொகையில் வேற்றுமையுருபு தொக்கது. உவமத் தொகையில் உவமவுருபு தொக்கது உம்மைத்தொகை யில் உம் தொக்கது. வினைத்தொகையில் வினைக்குரிய சிறந்த உறுப்பான காலம் காட்டும் உருபு தொக்கது. அவை போலப் பண்புத் தொகையில் பண்பைக்காட்டும் உருபு தொக் கதாகல் வேண்டும். பண்பு உருபு யாது ?

பண்பெனப்படுவன அளவு, அறிவு, வடிவு, நிறம், கதி, சாதி, குடி, சுவை, சிறப்பு முதலியன. அவற்றுள் ஆசிரியரால் கூறப்பட்டன வண்ணம், வடிவு, அளவு, சுவை என்பன. மற்றையன பிற என்பதால் தழுவப்பட்டன. இப்பண்புகளைக் குறிக்கும் உருபுகள் அல்லது பொது உருபு என்ன ? ஆசிரியர் கூறவில்லை.

சுந்தர-சண்முகனார் கொண்டவாறு வண்ணம் - வடிவு முதலியவற்றையுணர்த்தும் சொற்கள் தொகுவதே பண்புத் தொகை எனத் கொள்வது மிகப்பொருந்தும். ஆனால் அவர் இருபண்பு ஒட்டுப் பண்புத் தொகையென மூன்றாவதாக ஒன்று கொள்வது இருபெயரொட்டுப்பண்புத் தொகையிலேயே யடங்கி விடும் ஆதலின் தேவைதானா என்பது கருதற்குரியது

ஆயன் சாத்தன் – இருபொருளொட்டுப் பண்புத்தொகை
சென்னை நகர் — ஈரிடவொட்டுப் பண்புத்தொகை
மாரிக்காலம் – இருகால வோட்டுப்பண்புத்தொகை
தலைச்சினை — இருசினையொட்டுப் பண்புத்தொகை
நடத்தல் தொழில் — இருதொழில் வொட்டுப் பண்புத் தொகை:

இப்படிப் பிறவும் கூறவேண்டுதலின் இருபண்பு ஒட்டுப்பண்புத் தொகையென ஒன்று தனியே வேண்டுவதில்லை யென்னலாம்.

## உம்மைத் தொகை

411. இருபெயர் பலபெய ரளவின் பெயரே
யெண்ணியற் பெயரே நிறைப் பெயர்க் கிளவி
யெண்ணின் பெயரோ டவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே யும்மைத் தொகையே (21)

(இருபெயர் பலபெயர் அளவின் பெயரே
எண் இயற் பெயரே நிறைப் பெயர்க் கிளவி
எண்ணின் பெயரோடு அவ்அறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே)

ஆ. மொ. இல.

Two nouns, many, nouns, noun of measurment, noun of numerical order, noun of weight, noun of number, these six words are said to be conjunctive compounds.

பி. இ. நா.

வீர. 49.

முன்மொழி அவ்வியம் சேர்தொகை பேர்முன் மொழித்
தொகையே
சொன்மொழி அவ்வியபாவம் மருவும்; துவந்துவமும்
வன்மொழி யாம்இதரே தரம் வாய்ந்த சமாகாரமாம்
நன்மொழியான் உணர்ந்தார்கள் சமாசம் நறுநுதலே,

நேமி. சொ. 64.

உலைவில் உயர்திணைமேல் உம்மைத் தொகைதான்
பலர்சொல் நடைத்தாய்ப் பயிலும் – சிலை நுதலாய்
முற்றுமை எச்சப்படுதலும் உண்டாம் இடைச்சொல்
நிற்றலுமுண் டீறு திரிந்து.

நன் 368.

எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல்
எனுநான் களவையுள் உம்மில தத்தொகை.

**பிரயோ. 23**

முன்மொழிப் பேர்ச்சொல்லிடைச் சொல் லிரண்டு முரணி நிற்கும்
நன்மொழி அவ்விய விபாவம் உம்மைச் சாகரத்திலே
இன்மொழித் தெரந்தன் சமாகாரத்தோடு இதரேதரமாம்
அன்மொழித் தோற்றம் சமுச்சயத்தோடும் அன்வாசயமே.

**இ. வி. 340.**

இருபெயர் பலபெயர் அளவின் பெயரே
எண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
எண்ணின் பெயரோடு அவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே

**முத்து. ஒ. 99.**

எண்ணல் எடுத்தல் நீட்டல் முகத்தல்
அளவையுள் உம்இலது அத்தொகை யாகும்.

**இளம்**

என்பது இவ்வாறிடத்தும் உம்மை தொகற்பாலது என்று உணர்த்தியவாறு.

இரு பெயர்க்கண் தொக்கது: உவாப் பதினான்கு என்பது. அது விரியுங்கால், உவாவும் பதினான்கும் எனவிரியும்.

பலபெயர்க்கண் தொக்கது: புலி விற்கொண்டை என்பது; அது விரியுங்கால் புலியும், வில்லும், கெண்டையும் என விரியும்.

அளவு பற்றித் தொக்கது: தூணிப்பதக்கு என்பது. அது விரியுங்கால் தூணியும் பதக்கும் என விரியும்.

[1]எண்ணியற் பெயர்பற்றித் தொக்கது: பதினைவர் என்பது. அது விரியுங்கால் பதின்மரும் ஐவரும் என விரியும்.

---

1. எண் இயல் பெயர் என விரித்து எண்ணால் இயலும் பெயர் எனக் கொள்க. பதினைவர் என்பதில் அர் விகுதி பலர்பாலை யுணர்த்துகின்றது. பதின்மரும் ஐவரும் எனவிரியும் போது அவ்விரண்டும் எண்ணால் வருபெயர் களாம்.

நிறைப் பெயர் பற்றித் தொக்கது : தொடியரை என்பது. அது விரியுங்கால் தொடியும் அரையும் எனவிரியும்.

[2]எண்ணின் பெயர் பற்றித் தொக்கது : பதினொன்று என்பது. அது பத்தும் ஒன்றும் என விரியும்.

மற்றும் 'பலபெயர்' என அமையாதே 'இருபெயர்' என வேண்டியது என்னை? இரண்டையும் பல என்பவால் எனின், அற்றன்று; இரண்டனையும் பன்மை யென்று வேண்டான் இவ் வாசிரியன் என்பது. ஆயின் மேல்,

'ஒன்றறி சொல்லே பலவறி சொல்' (கிளவியாக். 3) என்புழி இரண்டையும் பல என்று வேண்டினானால் எனின், அதுவிகாரம்; என்னை? இரண்டும் இரண்டிறந்த பன்மையும் வந்தன, போயின என ஒரு பன்மைச் சொல்லே ஏற்குமாகலின், ஆண்டு இரண்டினைப் பலவற்றுள் அடக்கிக் கூறினார் என்பது.

சேனா

இ-ள் : இருபெயர் முதலாகச் சொல்லப்பட்ட அறுவகைச் சொற்றிரளையும் தனக்குச் சார்பாகக் குறித்து நிற்கும் உம்மைத் தொகை, எ-று.

உ-ம் : 'உவாப்பதினான்கு' என்பது இரு பெயரானாய உம்மைத் தொகை. 'புலிவிற்கெண்டை' என்பது பல பெயரானாய உம்மைத் தொகை. 'தூணிப்பதக்கு' என்பது அளவுப் பெய ரானாய உம்மைத் தொகை. 'முப்பத்து மூவர்' என்பது எண் ணியற் பெயரானாய உம்மைத்தொகை. 'தொடியரை' என்பது நிறைப் பெயரானாய உம்மைத்தொகை. 'பதினைந்து' என்பது எண்ணுப் பெயரானய உம்மைத்தொகை.

இனி அவை விரியுங்கால், உவாவும் பதினான்கும் எனவும், புலியும் வில்லும் கெண்டையும் எனவும், தூணியும் பதக்கும் எனவும், முப்பதின்மரும் மூவரும் எனவும், தொடியும் அரையும் எனவும், பத்தும் ஐந்தும் எனவும் விரியும்.

---

2. எண்ணின் பெயர் என்பது ஓர் எண்ணினது பெயர். 11இந்த எண் பத்தும் ஒன்றும் சேர்ந்ததாதலின் பதி னொன்று எனப்பட்டது.

வேற்றுமைத் தொகை முதலாயின பல சொல்லாற் றொகுதல் சிறுபான்மை; அதனான் உம்மைத்தொகை இருசொல்லானும் பல சொல்லானும் ஒப்பத் தொகும் என்பது அறிவித்தற்கு இரு பெயர் பலபெயர் என்றார். கற்சுனைக் குவளையிதழ், பெருந் தோட்பேதை எனப் பிறதொகையும் பெரும்பான்மையும் பல சொல்லான் வருமால் எனின், கல் என்பதும் சுனை என்பதும் 'கற்சுனை' எனத்தொக்கு ஒரு சொல்லாய்ப் பின் 'குவளை' என் பதனோடு தொக்கு ஒருசொல்லாய்ப் பின் 'இதழ்' என்பதனோடு தொக்குக் 'கற்சுனைக் குவளையிதழ்' என்றாயிற்று. பெருந்தோள் என்னும் தொகை ஒருசொல்லாய்ப் 'பேதை' என்பதனோடு தொக்குப் 'பெருந்தோட் பேதை' என ஒன்றாயிற்று. அவை இவ்வாற்றா னல்லது தொகாமையின் இருசொற் றொகையே யாம். [1]புலிவிற் கெண்டை யென்புழி மூன்று பெயரும் தொகும் என்னாது முதற் பெயரொழித்தும், இறுதிப் பெயர் ஒழித்தும், ஏனையி ரண்டும் தம்முட்டொக்கு ஒரு சொல்லாய்ப் பின்மற்றையதனோடு தொகும் எனின், முன் தொகும் இரண்டற்கும் ஓரியைபு வேறு பாடின்மையானும் இரு தொகைப்படுத்தல் பலசெய்கைத் தாக லானும், அவை மூன்று பெயரும் ஒருங்கு தொக்கன எனவே படும் என்பது.

---

1. புலிவிற் கெண்டை : முதற்பெயர் ஒழிந்துத் தொகுவது புலி + விற்கெண்டை இறுதிப் பெயர் ஒழிந்துத் தொகுவது புலிவில் + கெண்டை.

'கற்சுனைக்குவளையிதழ்' என்பதில் கற்சுனை என்ப தற்குக் கல்லில் உள்ள சுனை என ஓர் இயைபும் சுனைக்குவளை என்பதற்குச் சுனையில் உள்ள குவளை என்ற இயைபும், குவளை இதழ் என்பதற்குக் குவளை யது இதழ், என்ற இயைபும் ஆகிய வேறுபாடுகள் இருத் தல் போலப் புலிவிற் கெண்டை' என்பதில் புலிவில் என்பதற்கும் ஓர் இயைபு இல்லை; 'விற்கெண்டை' என்பதற்கும் ஓர் இயைபு இல்லை; அதனால் தனித் தனித் தொகையாக்கிச் சேர்த்தற்கு இயைபு வேறு பாடில்லை. அதனால் 'புலிவிற்கெண்டை' என்பது முன் இரண்டு சொல் தொக்கு ஒரு சொல்லாய்ப் பின்ஒரு சொல்லுடன் தொக்கது என்றற்கில்லை. தனித்தனிச் சொற்களாய் நின்றே தொக்கது என்ன வேண்டும்.

அளவின்பெயர் முதலாயின இருபெயராயல்லது தொகா வென வரையறுத்தற்கு இருபெயர் பல்பெயரென அடங்குவன வற்றைப் பெயர்த்துக் கூறினார். கலனே தூணிப்பதக்கு, தொடியே கஃசரை, நூற்று நாற்பத்து நான்கு என்புழித் தூணிப் பதக்கு, கஃசரை, நாற்பத்து நான்கு என்பன ஒரு சொற் போல அளவுப் பெயரும் நிறைப் பெயரும் எண்ணுப் பெயரு மாய் வழங்கப்பட்டு வருதலின் கலமுந்தூணிப்பதக்கும், தொடி யும் கஃசரையும், நூறும் நாற்பத்து நான்கும் என இருமொழி நின்று தொக்கன வென்றலே பொருத்தம் உடைமை யறிக.

உம்மைத்தொகை இன்ன பொருள்பற்றித் தொகும் என்னாது அவ்வறு கிளவியும் எனச் சொல்லேபற்றி ஓதினா ரேனும், ஏற்புழிக்கோடல் என்பதனான் "உயர்திணை மருங் கின் உம்மைத்தொகையே பலர் சொல் நடைத்து" (சொல்.421) என்பதனான் எண்ணும்மைப் பொருட்கண் தொகும் என்பது பெறப்படும். [2]எண்ணின்கண் வரும் இடைச்சொற் பலவேனும் தொக்கு நிற்கும் ஆற்றலுடையது உம்மைப் பெயராகலான் உம்மைத் தொகையாயிற்று.

தெய்

உம்மைத் தொகையாமா றுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இருபெயர் முதலாகச் சொல்லப்பட்ட அறுவகை யும் உம்மைத் தொகை, எ-று.

---

2. என்றா, எனா, என முதலிய இடைச்சொற்களும் எண்ணுப் பொருளில் வரும்; அவை மறைந்து வரும் தொடர்களை என்றாத்தொகை, எனாத் தொகை, எனத்தொகை எனப்பெயர் கொடாமல் உம்மை தொக்கி வரும் தொடர்கே உம்மைத்தொகை எனப் பெயர் கொடுக்கப்பட்டது. ஏன் எனின் தொக்கு நிற்கும் ஆற்றல் என்றா முதலியவற்றுக்கில்லை; உம்மைக்கேயுண்டு ஆதலின் என்க.

உ-ம் : [1]இரு பெயராவது பொருட்பெயரும் தொழிற் பெயரும். அவையாவன : கபிலன், பரணன்; ஆடல், பாடல்.

[2]பல பெயராவது பன்மை குறித்த பெயர். அவை பார்ப்பார் சான்றோர் என்பன. மேற்சொல்லப்பட்டன ஒருமை குறித்தலின் இதுவே றோதப்பட்டது.

அளவின் பெயராவது அளக்கப்பட்ட பொருளைக் குறியாது அளவு தன்னைக் குறித்து நிற்பது. அவை, உழக்கு, நாழி, குறுணி பதக்கு, தூணி, கலம் என்பன. [3]கூப்பிடு, காதம் என்பனவும் அதுவே.

எண்ணியற் பெயராவது எண்ணினாற் பொருள் குறித்து இயலும் பெயர். அவையாவன பதின்மர் ஐவர் என்பன.

நிறைப் பெயர்க்கிளவி என்பது நிறுக்கப்பட்ட பொருளைக் குறியாது நிறையின் பொருந்தி வருவது. அவை குன்றி, மஞ்சாடி, கால, அரை, கழஞ்சு என்பன.

எண்ணின் பெயராவது எண்ணப்பட்ட பொருளைக் குறியாது எண் தன்னைக் குறித்து நிற்பது. அவை ஒன்று, இரண்டு, பத்து, நூறு என்பன.

அவ்வறு கிளவியும் கண்ணிய நிலைத்தே உவமைத் தொகையே என்பது அறுவகைப்பட்ட பெயரையும் குறித்த நிலைமைத்து உம்மைத்தொகை என்றவாறு.

---

1. இருபெயர் என்பதற்கு மற்றையோர் தொடரில் வரும் இரண்டு பெயர் எனப்பொருள் கொண்டனர். இவர் பொருட்பெயர் தொழிற் பெயர் எனக்கொண்டார்.

2. பலபெயர் என்பதற்கு மற்றையோர் இரண்டுமேற்பட்ட பெயர் என்றனர்.

3. கூப்பிடு என்பது கூப்பிடுதூரத்தைக் குறிக்கும்.

[4]வரையறுத்து ஓதாமையால் இரண்டும் பலவும் வரப்பெறும் என்று கொள்க. கபிலனும் பரணனும் வந்தார் எனற்பாலது, கபிலபரணர் வந்தார் எனவரும். ஆடலும் பாடலும் தவிர்ந்தார் என்பது ஆடல் பாடல் தவிர்ந்தார் எனவரும். பார்ப்பாரும் சான்றாரும் வந்தார் எனற்பாலது பார்ப்பார் சான்றார் வந்தார் எனவரும். [5]தூணியும் பதக்கும் குறையும் எனற்பாலது தூணிப்பதக்குக் குறையும் எனவரும். பதின்மரும் ஐவரும் போயினார் எனற்பாலது பதினைவர் போயினார் எனவரும். கழஞ்சும் அரையும் குறையும் எனற்பாலது கழஞ்சரை குறையும் எனவரும். பத்தும் இரண்டும் குறையும் எனற்பாலது பன்னிரண்டு குறையும் எனவரும்.

இனி, புலிவிற்கெண்டை, அந்தணரசர் வணிகர், தூணிப் பதக்கு முந்நாழி, நூற்றிருபத்தைவர், மாகாணியரைக்காணி, நூற்று முப்பத்து மூன்று எனவும் வரும். பிறவு மன்ன.

[6]ஏற்புழிக் கோடல் என்பதனால் எண்ணும்மையே ஈண்டுத் தொகுவது என்று கொள்க.

இடைச்சொல் ஓத்தினுள்ளும் உம்மை தொகும் என்றாரால் எனின், ஆண்டு விரிந்து நின்ற சொல்லின்கண் உம்மை தொகவும் பெறும் என்றார். ஈண்டு ஒட்டி நிற்கும் சொல்லினது இலக்கணம் கூறினார் என்க.

நச்

இஃது உம்மைத்தொகை கூறுகின்றது.

---

4. இத்தனைச் சொற்பெயர்களில் எனவரையறுத்து ஓதாமையால்

5. மற்றையோர் இரண்டு பெயர்க்குமேல் அளவு உம்மைத் தொகை வாராது என்ன இவர் வரும் என்று கொண்டு தூணியும் பதக்கும் குறையும் என உதாரணம் காட்டினார்.

6. எண்ணுப் பொருளில் வரும் என்றா, எனா முதலிய இடைச்சொற்கள் தொகா என்பது கருத்து.

இ-ள் :- உம்மைத்தொகை—உம்மை தொக்கு நிற்கும் தொகை, இருபெயர்—இரண்டாகிய பெயரும், பலபெயர்—பலவாகிய பெயரும், அளவின் பெயர்—அளத்தலால் உளதாகிய பெயரும், எண் இயல் பெயர்—எண் இயலான் ஆகிய உயர்திணைப்பெயரும், நிறைப்பெயர்கிளவி—நிறுத்தலான் ஆகிய பெயர்ச்சொல்லும், எண்ணின் பெயரொடு—எண்ணினான் உளதாகிய அஃறினைப் பெயரோடே கூடப்பட்ட, அவ்வறு கிளவியும் கண்ணிய—நிலைத்து—அவ்வாறு சொல்லையும் கருதின நிலைமையையுடைத்து, எ-று.

உ-ம் : உவாகப் பதினான்கு

புலி விற் கெண்டை

தூணிப்பதக்கு

முப்பத்து மூவர்

தொடியரை

பதினைந்து

இவற்றை உம்மை விரித்துக் கொள்க.

பல பெயர் எனவே, இரு பெயரும் அடங்குமேனும், இரண்டாகிய பல பெயரினும் இரண்டு இறந்த பல பெயரினும் தொகும் என்றற்கு ‘இரு பெயர், பல பெயர்’ என்றார். அளவுப் பெயர் முதலியன இரு பெயர்க்கண் அடங்கும் எனினும், [1]முன்னர் யாண்டும் பொருள் வேற்றுமையே பற்றி வேறாக ஓதுதலின், ஈண்டும் எடுத்து ஓதினார்.

வெள்

இஃது உம்மைத் தொகையாமாறு கூறுகின்றது.

இ-ள் : இருபெயர், பலபெயர், அளவுப் பெயர், எண்ணியற் பெயர், நிறைப்பெயர், எண்ணுப்பெயர் என அறுவகைப்பட்ட

---

1. எழுத்ததிகாரத்தில் அளவுப்பெயர் நிறைப்பெயர் எண்ணுப்பெயர் ஆகியவற்றுக்குத் தனித்தனியே புணர்ச்சி யிலக்கணம் கூறியிருத்தலைக் கருதி இவ்வாறு எழுதினார்.

சொல்லையும் கருதி எண்ணும் நிலையினது (எண்ணிடைச் சொல்லாகிய உம்மை தொக்கு நின்ற) உம்மைத் தொகையாம், எ-று.

.................................................

வேற்றுமைத் தொகை முதலாயின பல சொல்லாற் றொகுதல் சிறுபான்மை; அதனால் உம்மைத்தொகை இருசொல்லானும் பல சொல்லானும் தொகும் என்பதற்கு 'இருபெயர் பலபெயர்' என்றார்.

உ-ம். இருபெயர் : உவாப்பதினான்கு-உவாவும் பதினான்கும் என விரியும்.

பலபெயர் : புலிவிற் கெண்டை-புலியும் வில்லும் தொண்டையும் என விரியும்.

அளவின்பெயர் : தூணிப்பதக்கு-தூணியும் பதக்கும் என விரியும்

எண்ணியற் பெயர் : முப்பத்து மூவர்-முப்பதின்மரும் மூவரும் என விரியும்.

நிறைபெயர் : தொடியரை-தொடியும் அரையும் என விரியும். தொடி என்பது பலம்என்னும் நிறையினைக் குறித்த பெயர்.

எண்ணின் பெயர் : பதினொன்று-பத்தும் ஒன்றும் என விரியும்.

ஆதி

உ-ம் : கபில பரணர்
சேர சோழ பாண்டியர்
நாழி ஆழாக்கு, ஒரு கோட்டை ஒரு மரக்கால்
அறுபத்து நான்கு கலைகள், ஈரேழு உலகத்தும்.
அரையரைக்கால், ஒரு கிலோ பத்துகிராம்.
பதினொன்று இருபத்தேழு.

உம்மை + ஐ : ஐ சாரியை. ஆகவே உம்மை — உம்.

'உம்தொக்க தொடர்மொழி உம்மைத் தொகையே' என்பது இலகுவான விளக்கம்.

## கு. சுந்தர மூர்த்தி

இருபெயர் என்பதற்குப் பொருட்பெயர் தொழிற்பெயர் எனக் கொண்டு அவற்றிற்கு முறையே கபிலபரணர், ஆடல் பாடல் என்பனவற்றை எடுத்துக் காட்டுவர். பல்பெயர் என்பதற்குப் பன்மை குறித்த பெயர் எனக்கொண்டு பார்ப்பார் சான்றோர் என்பதை எடுத்துக்காட்டுவர். 'இருபெயர் பல்பெயர் என்பதற்குச் சேனாவரையரும் பிறரும் கூறுமாறு போல உரைவகுத்துக் கொண்டு 'கற்சுனைக் குவளை யிதழ்' என்பதை இருபெயராகவும், 'புலிவிற் கெண்டை' என்பதை மூன்று பெயராகவும், 'வறை யறைப்படுத்தி இடர்படுவதைக் காட்டிலும் தெய்வச்சிலையார் கூறும் உரை சிறப்புடையதாகத் தெரிகிறது.

## சிவ

தெய்வச்சிலையார் இருபெயர் என்பதற்குப் பொருட்பெயரும் தொழிற்பெயரும் என்றார். கபிலன் பரணன், ஆடல் பாடல் என உதாரணமும் காட்டினார்.

திங்கள் செவ்வாய் விடுமுறை எனக் காலப்பெருயம்
காய் கனி வாங்கி வா எனச் சினைப் பெயரும்
மதுரை பழநி பார்த்து வந்தேன் என இடப்பெயரும்

நல்லது கெட்டது தெரிந்தவன் எனக் குணப்பெயரும் இருபெயராய் வருவன உள ஆதலின் அவற்றை அவர் விட்டது ஏன்? எல்லாப் பெயருமே அவ்வறு வகையில் அடங்குதலின் தெய்வச்சிலையார் கூறியது பொருந்தாது. பல்பெயர் என்பதற் குப் பன்மைப்பெயர் என்றலும் வேண்டுவதன்று. ஒருமைப் பெயராயினும் பன்மைப் பெயராயினும் இருபெயராகவோ பல பெயராகவோ உம்மை தொக வரும் என்றலே நன்று.

# அன்மொழித்தொகை

412. பண்பு தொக வருவுங் கிளவி யானு
மும்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானு
மீற்றுநின் றியலு மன்மொழித் தொகையே. (22)

(பண்பு தொக வருஉம் கிளவி யானும்
உம்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
ஈற்று நின்று இயலும் அன்மொழித் தொகையே).

ஆ. மொ. இல.

The 'Anmolith thokai' exists as the final word of ιhe Compound where the quality—denothing particle, conjunctive particle 'um' and case signs have disappeared.

பி. இ. நூ.

வீர. 47.

இருமொழி பன்மொழி பின்மொழி எண்ணொடு இருமொழி
யெண்
மருவும் விதியார் இலக்கணம் மற்றைச் சகமுன் மொழி
பரவுந் திகந்தராளத் தொகை என்னப்பல நெற்றொகை
விரியுமோர் ஏழவை வேற்றுமொழிப் பொருள் மெல்லியலே

நேமி. சொ. 62.

ஏனைத் தொகைச்சொற்கள் ஐந்தின் இறுதிக்கண்
ஆன பெயர்தோன்றின் அன்மொழியாம்—மானனையாய்
செய்யுமெனும் பேரெச்சத்து ஈன்றின்மிசைச் சிலஉகரம்
மெய்யொடும்போம் ஒற்றொடும்போம் வேறு.

நன் 369.

ஐந்தொகை மொழிமேல் பிறதொகல் அன்மொழி.

**பிரயோ. 24.**

இருமொழி பன்மொழி பின்மொழி எண்ணோடிரு மொழி யெண்
தருமொழி யொற்றொழி திக்கந்தராளம் சகமுனிற்கும்
ஒருமொழி ஏனை விதிகாரலக்கணத்தோடு வரும்
பெருமொழி யாகி வெகுவிரி அன்மொழிப் பேரடைந்தே.

**இ. வி. 341.**

வேற்றுமை முதலிய ஐந்தொகை மொழியினும்
ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே

**முத்து ஒ. 100.**

ஐந்தொகை மொழிமேல் பிறதொகல் அன்மொழி.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேல் நிறுத்த முறையானே ஒழிந்துநின்ற அன்மொழித்தொகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : அக்கூறப்பட்ட மூன்று தொகைச் சொல்லிற்றுக் கண்ணே நின்று நடக்கும் அன்மொழித்தொகை, எ-று.

பண்புத்தொகைப் புறத்துப்பிறந்தது : வெள்ளாடை என்பது. [1]அதனைப் படுத்தலோசையாற் சொல்ல வெண்மைமேலும் ஆடை மேலும் கிடவாது அவ்வாடையுடுத்தாள் மேல் கிடக்கும் என்பது;

---

1. வெள்ளாடை என்பது எடுத்தல் ஓசையாற் கூறப்படின் பண்புத்தொகை இதில் ஆடைவெளியது என்னும் பொருளளவில் நிற்கும். படுத்தல் ஓசையாற் கூறுதலாவது 'வெள்ளாடை வந்தாள்' என்பது. இதில் வெள்ளாடை எனும் சொல் ஆடையின் வெளியதைக் கருதாமல் வெளியது ஆடையை யுடுத்தவளைக் கருதுதலின் அவள் தொழிலே சிறப்பிக்கப்படும். அத்தொழில் வந்தாள் என்பது. அதனால் வெள்ளாடை என்பதைப் படுத்தல் ஓசையிலும் வந்தாள் என்பதை எடுத்தல் ஓசையிலும் கூறுதல் வேண்டும்.

அந்நிறைமொழி யோசையன்றிப் [2]பிறிதோர் மொழியோசைப்பட்டுப் பொருள் கொள்ளுமாகலான், அம்மொழி அன்மொழியாயிற்று என்பது. அன்மொழித் தொகையாயக்காலும் வெளிய தாடை என்றே விரியும்; பிறிதில்லை.

உம்மைத்தொகைப்பற்றிப் பிறந்தது: தகர ஞாழல் என்பது அது விரியுங்கால், தகரமும் ஞாழலும் என விரியும். அன்ன தன் தொகைக்கண் ஓசை வேறுபடச் சொல்லத் தகரத்தின் மேலும் ஞாழலின் மேலும் கிடவாது, அவையுடையாள் மேல் கிடக்கும்.

இனி வேற்றுமைத் தொகைபற்றிப் பிறந்தது: பொற்றாலி என்பது. அது விரியுங்கால் பொன்னானாயதாலி பொற்றாலி என்பதாம். பிறிதானும் விரியும்; பின்னர் அத்தொகை பொன் மேலும் தாலி மேலும் கிடவாது, பொற்றாலி யுடையாள்மேல் நிற்கும், ஓசை வேறுபாட்டான் என்பது.

இம்மூன்று தொகையும் பற்றிப் பிறத்தலின் ஓர் மிகுதிக் குறையில்லை, ஒக்கும் என்றவாறு.

மற்று, தொகையதிகாரத்தின் முன்வைக்கப்பட்டதூஉம் சிறப்புடையதூஉம் வேற்றுமைத் தொகையாதலின், ஈண்டு இதனை முற்கூறாது பண்புத்தொகை முற்கூறியது என்னை யெனின் அதனாற் பிறவும் உள கொள்ளப்படுவன: அவை யாவையோ வெனின், ஒழிந்து நின்ற உவமத்தொகையும் வினைத் தொகையும் பற்றிப் பிறக்கும் அன்மொழித் தொகை என்பது.

உவமைத் தொகை பற்றிப் பிறந்தது. 'அறற்கூந்தல் என்பது' அது விரியுங்கால் அறல்போலும் கூந்தல் என விரியும்.

வினைத்தொகை பற்றிப் பிறந்தது: திரிதாடி என்பது. அது விரியுங்கால் திரிந்ததாடி என விரியும். அது தொக்குழித் திரிவின் மேலும் தாடியின் மேலும் கிடவாது திரிந்த தாடி யுடையான் மேல் நிற்கும்.

---

2. பிறிதோர் மொழியோசை-அதேமொழியே வேற்று மொழி யோசை போலப் படுத்தலோசைப்படுதல்.

இவை யிரண்டும் வழக்குப் பயிற்சி. [1]அவைபோல அக்காலத்து இன்மையின் இலேசு பற்றி எடுத்துக் கொண்டார் என்பது.

சேனா

இ-ள் : பண்புச் சொல் தொகும் சொல்லினும் உம்மை தொக்க பெயர்க்கண்ணும் வேற்றுமை தொக்க பெயர்க்கண்ணும் இறுதிச் சொற்கண் நின்று நடக்கும் அன்மொழித்தொகை, எ-று.

[2]பண்புத் தொகைபடவும் உம்மைத் தொகைபடவும் வேற்றுமைத் தொகைபடவும் அச்சொற் றொக்கபின் அத்தொகை அன்மொழித்தொகை யாகாமையின், தொகுவதன் முன் அவற்றிற்கு நிலைக்களமாகிய சொல்பற்றி வரும் என்பது விளக்கிய தொகை வயினானும் என்னாது 'பண்பு தொக வரூஉம் கிளவியானும் உம்மை தொக்க பெயர் வயினானும் வேற்றுமை தொக்க பெயர் வயினானும் என்றார்.

இறுதிச் சொல் படுத்தலோசையாற் பொருள் விளக்குமாறு வழக்கினுள்ளுஞ் செய்யுளுள்ளுங் கண்டு கொள்க.

உ-ம் : வெள்ளாடை, அகரவீறு என்பன. பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. தகர ஞாழல் என்பது உம்மைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை. பொற்றொடி என்பது வேற்றுமைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

---

1. முன் கூறிய மூன்றுபோல, அக்காலத்து வழக்குப் பயிற்சி இன்மை பற்றி

2. ஒரு தொகையிலிருந்து இன்னொரு தொகை பிறவாது. அதனால் ஒரு தொகையிலுள்ள சொற்களை நிலைக்களனாகக்கொண்டு அன்மொழித் தொகை பிறக்கும் என்பதற்காகக் கிளவியானும், பெயர் வயினானும் என்றார். இதனால் அன்மொழித்தொகை பற்றிக் கூறும் போது பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை என்பது போல் கூறாமல், பண்புத் தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை எனக்கூறல் வேண்டும். இப்படியே பிறவும்.

இனி அவை வெள்ளாடையுடுத்தாள், அகரமாகிய ஈற்றை யுடைய சொல்எனவும், தகரமுஞாழலு மாகிய சாந்து பூசினாள் எனவும், பொற்றொடி தொட்டாள் எனவும் விரியும்.

பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறத்தல் பெரும்பான்மை யாகலின் முறையிற் கூறாது அதனை முற்கூறினார்; வேற்றுமைத் தொகை நிலைக்களத்துப் [3]பிறத்தலின் உம்மைத் தொகை நிலைக் களத்துப் பிறத்தல் சிறுபான்மையாயினும் ஒருபயன் நோக்கி அதனை அதன் முன்வைத்தார். யாதோ பயன் எனின், சிறு பான்மை உவமைத்தொகை நிலைக்களத்தும் வினைத் தொகை நிலைக்களத்தும் அன்மொழித்தொகை பிறக்கும் என்பது உணர்த்துதல் என்க. அவை பவளவாய், திரிதாடி எனவரும். அவைதாம் பவளம்போலும் வாயையுடையாள், திரிந்ததாடியை யுடையான் என விரியும். பிறவுமன்ன.

தெய்

அன்மொழித் தொகையாமா றுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : பண்புதொக வரும் பெயர்க்கண்ணும், உம்மை தொக்க பெயர்க்கண்ணும், வேற்றுமை தொக்க பெயர்க்கண்ணும் இறுதிக்கண் நின்றியலும் அன்மொழித்தொகை, எ-று.

அல்லாத மொழி தொகுதலின் அன்மொழித் தொகையாயிற்று, இம்மூவகைத் தொகையினும் ஈற்று நின்றியலும் என்றதனான், முன்னும் பின்னும் நின்ற இரண்டு சொல்லானும் உணரப்படும் பொருண்மை யுடைத்து அன்மொழித்தொகை யென்று கொள்க.

உ-ம் : "கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோ லதுவல்லது
இல்லை நிலைக்குப் பொறை" (குறள் 570)

என்றவழிக் கடுங்கோல் என்பது அஃதுடைய அரசர்க்குப் பெயராகி வருதலின் அன்மொழித் தொகையாயிற்று. கோலிற்கு அடையாகி நின்ற கடுமையும் அரசன்மேல் ஏறியவாறு கண்டு கொள்க. இது பண்பு பற்றி வந்தது.

---

3. பிறத்தலின்-பிறத்தலைக் காட்டிலும்.

தகரஞாழல் என்பது உம்மைத் தொகை. இவையிற்றை யுறுப்பாக அமைக்கப்பட்ட சாந்தினையும் தகரஞாழல் என்ப வாகலின் அன்மொழித் தொகையாயிற்று.

தூணிப்பதக்கு என்றவழி அளவிற்குப் பெயராத லன்றி அளக்கப்படும் பொருளுக்கும் பெயராயவழி அன்மொழித் தொகையாம். இவையிரண்டு சொல்லும் அன்மொழித் தொகை மேல் ஏறியவாறு கண்டுகொள்க. இஃது உம்மை பற்றி வந்தது.

பொற்றொடி என்பது வேற்றுமைத் தொகை. அதனை யுடையாட்குப் பெயராகியவழி அன்மொழித் தொகையாம். ஈண்டுத் தொடிக்கு அடையாகி நின்ற பொன் தொடியையுடை யாளது செல்வத்தைக் காட்டுதலின் இவ்விரண்டு சொல்லும் அதனையுடையாளைக் குறித்தவாறும் அறிந்து கொள்க.

[1]துடியிடை யெனவும், தாழ்குழல் எனவும் உவமைத் தொகைப்புறத்தும் வினைத்தொகைப் புறத்தும் அன்மொழித் தொகை வருமால் எனின், துடி என்பதூஉம் தாழ் என்பதூஉம் இடை, குழல் என்பவற்றிற்கு அடையாகி வரினல்லது அவற்றை யுடையாட்குப் பெயராகுங்கால் இறுதி நின்ற பெயர்ப் பொருண்மை வந்து ஏனைய வாராமையின் ஆகுபெய ரெனினல்லது அன் மொழித் தொகையாகாதெனக் கொள்க. அதனானேயன்றே இருபெய ரொட்டும் என ஆகுபெயர்க்கண் எடுத்தோதுவா ராயிற்று என உணர்க.

---

1. கடுங்கோல் என்பதில் கடுமை அரசன் மேல் நிற்கிறது. தகரஞாழல் என்பதில் தகரம் சாந்தைக் குறிக்கிறது. தூணிப்பதக்கு என்பதில் தூணி அதனளவுப் பொருளைக் குறிக்கிறது. துடியிடை என்பதில் துடியும், தாழ்குழல் என்பதில் தாழ் என்பதும் பெண்ணைக் குறிக்காமல் இடைக்கும் குழலுக்கும் அடையாய்வந்தன. அதனால் அன்மொழித்தொகை, உவமத்தொகை, வினைத்தொகை நிலைக்களனாகப் பிறத்தல் இல்லை. அவை அன் மொழியாகு பெயர் எனப்படும். இவ்விரண்டையும் இருபெயர் ஒட்டாகு பெயர் என ஆசிரியர் கூறினார், என்று உணர்க.

நச்

இஃது அன்மொழித்தொகை கூறுகின்றது.

இ-ள் : அன்மொழித்தொகை—ஒருவன் கூறும் சொற்கண் அன்றிப் பின்னர் வேறோர் சொல் தொக்கு நிற்கும் தொகை, பண்பு தொக வருஉம் கிளவியானும்—பண்புச்சொல் தொக வரும் தொகைப் பெயர்க்கண்ணும், உம்மை தொக்க பெயர்வயினானும்—உம் என்னும் இடைச்சொல் தொக்க தொகைப் பெயர்க்கண்ணும், வேற்றுமை தொக்க பெயர்வயினானும்—வேற்றுமையுருபுகள் தொக்க தொகைப் பெயர்க்கண்ணும், ஈற்று நின்று இயலும்—இறுதிச் 'சொற்கண்ணே நின்று நடக்கும் எ-று.

முன்னர் அன்மொழியான் உணரும் பொருள்களை மனத் தான் உணர்ந்து தான் பின்னர்ப் பண்புத்தொகை முதலிய வற்றால் கூறக் கருதியவழி அத்தொகைகளின் இறுதிச்சொற் கண் எழுந்து, படுத்தல் ஓசையான் அத்தொகைச் சொல் தோன்றிப் பொருள் விளக்குதலின், 'ஈற்று நின்று இயலும்' என்றார்.

உ-ம். வெள்ளாடை, தகரஞாழல், பொற்றொடி எனவரும். இவை [1]வெள்ளாடையுடுத்தாள் தகரஞாழல் அணிந்தாள், பொற்றொடி தொட்டாள் என இறுதிச் சொற்கண் எழுந்து, எழுந்து, படுத்தல் ஓசையால் தொகை தோன்றியவாறு காண்க.

பெரும்பான்மை வரும் பண்புத் தொகைப் பின்னர் அங்ஙனம் வரும் வேற்றுமைத் தொகையை வையாது, [2]முந்து மொழிந்ததன் தலை தடு மாற்றான், உவமத்தொகைக் கண்ணும் வினைத் தொகைக் கண்ணும் அன்மொழித் தொகை வருதல் கொள்க.

வினையின் தொகையினும் உவமத் தொகையினும்
அன்மொழி தோன்றும் என்மனார் புலவர்

என்பது அபிநயம். அறற்கூந்தல், திரிதாடி என்பனவற்றை 'அறல் போலும் கூந்தலையுடையாள்' திரிந்த தாடியை யுடையான் என விரிக்க.

---

1. யுடுத்தான்—பாடம்
2. முந்துமொழிந்ததன் தலை தடு மாற்றமாகக் கூறியதால்.

வெள்

இஃது அன்மொழித் தொகையாமாறு கூறுகின்றது.

இ-ள் : பண்புச்சொல் தொகவரும் தொகையின் கண்ணும் உம்மை தொக்க பெயர்க்கண்ணும் வேற்றுமை தொக்க பெயர்க்கண்ணும் இறுதிச் சொற்கண் நின்று நடப்பது அன்மொழித் தொகையாம், எ-று.

........................

நின்ற சொல்முன் வருஞ் சொல்லாகி வெளிப்பட நிற்பது அல்லாத மொழியொன்று, வேற்றுமைத்தொகை முதலிய தொகை நிலைத் தொடர்மொழிகளின் ஆற்றலால் அத்தொகை மொழிகளின் புறத்தே மறைந்து நிற்றலின் இத்தொகைக்கு அன்மொழித்தொகை என்பது பெயராயிற்று.

..............................

இச்சூத்திரத்தின்கண் சிறப்புடைய வேற்றுமைத் தொகையை முற்கூறாத முறையன்றிக் கூற்றினான் சொல்லா தொழிந்த உவமத்தொகையும் வினைத் தொகையும் பற்றி அன்மொழித் தொகை தோன்றும் எனக் கொள்வர் இளம்பூரணர்.

வினையின் தொகையினும் உவமத் தொகையினும்
அன்மொழி தோன்றும் என்மனார் புலவர்

என்றார் அவிநயனாரும்.

உ-ம் : பண்புத் தொகைபட அமைந்த 'வெள்ளாடை' என்னுஞ் சொல்லைப் படுத்தலோசையாற் கூறியவழி 'வெண்மையான ஆடையினையுடுத்தாள் எனப் புறத்தே ஒருசொல் தொக்கு நிற்றலின், இது பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகும்.

உம்மைத் தொகைபட அமைந்த 'தகரஞாழல்' என்பது தகரமும் ஞாழலும் விரவியமைந்த சாந்து எனப் புறத்தே பிற சொல் தொக்கு நிற்றலின் உம்மைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகும்.

வேற்றுமைத் தொகைபட அமைந்த 'பொற்றாலி' என்பது பொன்னாலாகிய தாலியினை அணிந்தாள் என ஒருசொல் தொக்கு நிற்றலின் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாகும்.

உவமத்தொகைபட அமைந்த 'அறற்கூந்தல்' என்பது அறல்போலும் கூந்தலையுடையாள் எனப்புறத்தே ஒருசொல் தொக்கு நிற்றலின் உவமத்தொகைப் புறத்துப் பிறந்த அன் மொழித் தொகையாகும்.

வினைத்தொகைபட அமைந்த 'திரிதாடி' என்பது திரிந்த தாடியினையுடையான் என ஒருசொல் புறத்தே மறைந்து நிற் றலின் வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை யாகும்

ஆதி

பண்புத்தொகை, உம்மைத்தொகை, வேற்றுமைத்தொகைத் தொடர்மொழிகளின் ஈற்றில் மறைந்து ஏற்படுவதாகும் அன் மொழித்தொகை.

வெண்குடை—பண்புத்தொகை
கண்ணாடி கைப்பிரம்பு—உம்மைத் தொகை
பிரம்பு நாற்காலி— வேற்றுமைத்தொகை

இவற்றை,

அந்த வெண்குடை யார்? எனின் குடையையுடைய மனிதர் எனப் பொருளாகிட, மனிதர் எனும் அங்கு இல்லாத மொழியைத் தருவதால் அன்மொழித்தொகை.

அந்த கண்ணாடி கைப்பிரம்பு யார்? பிரம்பு நாற்காலி யார்? இவையும் பிரம்பு கொண்டவர் என்றும், நாற்காலியில் இருப்பவர் என்றும் மக்களை அறிவித்து நிற்பதால் அன்மொழித் தொகை.

எளிதாக விளக்கின் அன்மொழித்தொகை என்பது தொடர் மொழியில் வந்த ஆகுபெயர். ஆகுபெயர் தனிமொழி; அன் மொழித்தொகை தொடர்மொழி.

[1]ஆய்வு : ஆசிரியர் ஏனோ வினைத் தொகை உவமத் தொகை இரண்டையும் அன்மொழித் தொகையிற் கூறினாரல்லர். அவையும் அன்மொழிதரும் தொடர்களே.

பவளவாய் அழகாக இருக்கிறாள்—உவமத்தொகை. பெண் அன்மொழியைத் தருகிறது.

கெடுமதி ஏன் இப்போது வந்தான் வினைத் தொகை. மனிதன் அன்மொழியைத் தருகிறது.

தொகைகள் ஐந்தும் அன்மொழி தருவதுபொல தொடர்களும் தந்து நிற்கின்றன. அதுபற்றி விளக்குவாம்.

பெரியமாடு—பெயரெச்சத்தொடர். [2]அப்பெரியமாடு சும்மா நிற்கிறானே !—அன்மொழி பெரிய மேளம் வரவில்லையே—அன்மொழி.

[3]தொட்டால் சுருங்கும்—வினையெச்சத் தொடர் தொட்டால் சுருங்கி (ஒரு செடி) அன்மொழி.

சிவ சிவா—அடுக்குத்தொடர்.
உறுவலி—உரிச்சொல் தொடர்.

[4]சிவ சிவா இன்று வந்தாரில்லையே—அன்மொழி சிவசிவா என்று கூறுகிறவர்.

---

1. தெய்வச்சிலையார் விளக்கம் கூறிவிட்டார்.
2. பெரிய மாடு—உவம ஆகுபெயர். பெரிய என்பதில்லாமல் மாடு சும்மா நிற்கிறான் என்றும் கூறப்படும்.
3. தொட்டால் சுருங்கி—காரணப்பெயர். சுருங்குதலுடையது சுருங்கியாயிற்று. சுருங்கு + இ. இகரம்காரணப் பொருளில் வந்தது. அல்லது சுருங்குவது சுருங்கி என வினைமுதற்பொருளில் வந்தது என்னலாம், அலரி என்பது போல.
4. சிவசிவா—இது காரணம் கருதியிட்ட பெயர். அல்லது ஆகுபெயராம். உறுவலி—இதுவும் ஆகுபெயரே.

உறுவலி வந்தான்—அன்மொழி

[5]திருப்புகழ் திருக்குறள் திருப்பாவை—இவை எல்லாம் தனிப் பொருள் தருகின்றன. உரிச்சொற்றொடரிற் பிறந்த அன் மொழித் தொகை என்பதே சிறப்பாகும்.

**சிவ**

தொல்காப்பியர் உவமைத்தொகை, வினைத்தொகையடி யாக வரும் அன்மொழித்தொகைகளைக் கூறாதது ஏன்? உரை யாளருள் தெய்வச் சிலையாரையொழிந்தோர் 'தொகைபற்றிய சூத்திரக்குக்கூறியவாறு முறையாகக்கூறாமல்' பண்பு தொக வரூஉம் கிளவியை முற்கூறி முறை பிறழ வைத்தமையால் அவ்விரண்டு அன்மொழித் தொகைகளையும் கொள்ளல் வேண்டும் என்றனர்.

தெய்வச்சிலையார் கூறும் காரணம் சிறப்பானதாம். ஒரு தொகையில் வரும் இரு மொழிகளுமே அன்மொழிப் பொருளை யுணர்த்த வேண்டும். 'கடுங்கோல்' என்பது கடுங்கோல் மன்னனை யுணர்த்தும் போது, கோல் என்பது கோலுடைய மன்னனை உணர்த்துவதும், கடுங் என்பது அம்மன்னனது குணத்தைக்குறித்தலின் அவனையே உணர்த்துவதும் காண லாம். இவ்வாறு அமையாத தொகை அன்மொழிக்கு வாராது. 'கருங்குழல் வந்தாள்' என்பதில் குழல் என்பது குழலையுடை யாளையுணர்த்தக் 'கரும்' என்பது குழலை மட்டுமேயுணர்த்தும். குழலுடையாளையுணர்த்தாது. ஆதலின் கருங்குழல் என்பது அன்மொழித்தொகையாகாது. இரு பெயரொட்டாகு பெயராக லாம். உவமைத்தொகையும், வினைத்தொகையும் அன்மொழிக்கு வாரா ஏன்எனின் அவற்றின் முன்மொழிகள் அன்மொழிப் பொருளைக்குறியானதுடியிடை எனின் இடைஎன்பது இடையு டையாளைக் குறிக்கத் துடி என்பது இடைக்கு அடையாகி வந்த அவ்வளவில் நிற்கிறது; இடையாளைக்குறிக்க வில்லை. தாழ்குழல் என்னும் வினைத்தொகையும் தாழ்குழல் வந்தாள் என்னும் போது குழல் என்பது குழலையுடையாளைக்குறிக்கத் தாழ் என்பது நிழலுக்கு அடையாம் அளவிநின்று விடுகிறது.

---

5. இவையும் ஆகுபெயரே.

அதனால் எந்த வகையிலும் உவமைத்தொகையும் வினைத் தொகையும் அன்மொழிக்கு உரியவாகா. பொற்றாலி என்பது வேற்றுமைத் தொகை. பொற்றாலி வந்தாள் என்னும் போது அது அன்மொழித்தொகை. இதில் ஓர் ஐயம் எழும். பொன் என்பது தாலியைத் தானே குறிக்கும் தாலியுடையாளைக் குறிக்காதே என்பது அது. அதற்குத் தெய்வச்சிலையார் பொன் என்பது தாலியுடையாளது பெருஞ் செல்வத்தைக் குறித்தலின் அன்மொழித் தொகையாதற்குப் பொருந்தும் என்றார்.

எனவே தெய்வச்சிலையார் கூற்றை நாம் ஏற்றுக்கொண்டால் ஒரு சிக்கல் தீரும்.

ஆகுபெயரும் அன்மொழித் தொகையும் ஒன்றே என்பாரும் வேறு வேறு என்பாருமாக இருதிறத்தர் உளர். தனி மொழியில் வரும் ஆகுபெயரே யன்றித் தொகைநிலைத் தொடர்மொழியில் வரும் ஆகுபெயரும் உண்டு. அது முன்மொழி வருமொழியைத் தொடர வருமொழி மட்டும் தன்னோடு தொடர்புடைய வேறு பொருளைத் தருவது. உதாரணம் கருங்குழல் போல்வன நிலைமொழியும் வருமொழியும் இரண்டுமே வேறுபொருளாகிய அன்மொழியைக் குறிப்பின் அத்தொகை ஆகுபெயராகாது அன்மொழித் தொகையாம். இப்படிக் கொண்டால் ஐந்து தொகையாலும் ஆகுபெயர் வரும். உவமைத்தொகை வினைத் தொகை தவிர மற்றையன வற்றால் அன்மொழித் தொகை வரும் எனக் கொள்ளலாம். இத்தொகையாகுபெயர்களை அடையடுத்த ஆகுபெயர் என்னலாம்.

இங்கும் ஓர் சிக்கல் உண்டு. வகரக்கிளவி என்னும் இருபெயரொட்டாகுபெயரில் இருமொழிகளுமே வகரஎழுத்தினை யுணர்த்தலின் அதனை அன்மொழித்தொகை என்னலாமோ என்பது அது. என்னலாகாது. சாரைப்பாம்பு என்பது இரு பெயரொட்டு. இதில் பாம்பு என்பது பாம்பையே குறிக்கும். வகரக்கிளவி என்பதும் இருபெயரொட்டு. ஆனால் இதில் கிளவி (=சொல்) என்பது சொல்லைக் குறிக்காது; எழுத்துக்கு ஆகி எழுத்தையே குறிக்கும். மற்றைத் தொகைகள் தொகை நிலையிலும் அன்மொழித் தொகை நிலையிலும் வரும். வகரக் கிளவி என்பது தனித்துத் தொகை நிலையில் வராது. ஆகு பெயராகவே தான் வரும். வேறுபாடு அறிக.

# தொகைநிலைத் தொடரில் பொருள் சிறக்குமிடம்

413. அவைதா

முன்மொழி நிலையலும் பின் மொழி நிலையலு
மிருமொழி மேலு மொருங்குட னிலையலு
மம்மொழி நிலையா தயன்மொழி நிலையலு
மந்நான் கென்ப பொருணிலை மரபே.

(அவைதாம்,

முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்குஉடன் நிலையலும்
அம்மொழி நிலையாது அயல்மொழி நிலையலும்
அந்நான்கு என்ப பொருள்நிலை மரபே).

ஆ. மொ. இல.

It is said that in compounds, the accent denoting the sense, may fall on any one of four words—upon the first words upon the last word, upon both the words or finally, upon some word not bound in the Compound.

பி. இ. நா.

வீர. 51.

அன்மொழி நற்றொகையிற் றொகும்போதும் அல்லா விடத்தும்
நன்மொழிப் பின்பு நடுவுங்கெடு நன்கொரோ விடத்து
முன்மொழி யீறுகெடும் பன்மையாகும் ; முரட் பொருள் கோள்
பின்மொழி முற்சொற் பிறிதோர் மொழியொடிரு மொழியே.

**நேமி. சொ. 63.**

முன்மொழியும் பின்மொழியும் மூண்ட இருமொழியும்
அன்மொழியும் என்றிவற்றி லாம்பொருள்கள்—முன்மொழிதான்
காலம் இடத்தாற் கருத்தோரும் சேர்த்தறிதல்
மேலையோர் கண்ட விதி.

**நன். 370.**

முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி
எனுநான் கிடத்தும் சிறக்கும் தொகைப் பொருள்.

**இ. வி. 342.** ஷை ஷை ஷை.

**முத்து. ஒ. 101.**

முன்மொழி பின்மொழி இருமொழி பிறமொழி
நிலைபெறல் அத்தொகை மரபுநான் காகும்.

**இளம்**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் அத்தொகைக் கண்ணே கிடந்ததோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : தொகுவன இருவகைமொழிகளான் ; அவ்விருவகை மொழியும் இரு பொருளின்கண் தொக்கவிடத்து அவற்றைச் சொல்லுவான் அத்தொகைக்கண் முன்னதன் பொருள் உணர்தலுற்றுச் சொல்லுதல், பின்னதன் பொருள் உணர்தலுற்றுச் சொல்லுதல், இரண்டுடன் பொருளுணர்தலுற்றுச் சொல்லுதல், இரண்டின் மேலும் நில்லாது பிறிதோர் பொருள் உணர்தலுற்றுச் சொல்லுதல் என நால்வகை இலக்கணத்தாற் பொருளுணர நிற்கும், எ-று.

[1]அவற்றுள், முன்மொழிப் பொருள் உரை நின்றது வேங்கைப்பூ என்பது.

---

1. வேங்கையின் தளிர் கிளை முதலியவற்றை நீக்கிப் பூவைக் குறிப்பது நோக்கமாதலின் முன்மொழியில் பொருள் உரைநின்றது. பூ என்பது பல பூக்களுக்கும் பொதுவாதலின் வேங்கை என்பது சிறப்பாக அமையின் பின்மொழியில் பொருளுணர நின்றதாகும்.

முன்மொழி பின்மொழியாதல் இடமும் காலமும் என இருவகையாக உணரப்படும். அவற்றுள் இடத்தான் முன் மொழிப் பொருளாயிற்று. காலவகை நோக்கிப் பின்மொழிப் பொருளாம்.

வேங்கை என்பதும் பொருள் இல்லாததன்றுமன்; அப் பொருளுடன் அறியலுற்ற [2]பூவினை அதனைச் சிறப்பிப்பான் வந்தது வேங்கை என்னுஞ் சொல் என்பது.

இருமொழிப் பொருள் உரை நின்றது 'உவாப்பதினான்கு' என்பது. பிறவும் உம்மைத் தொகையான் வருவனவெல்லாம் இருமொழிப் பொருள்பட நிற்கும் என உணர்க.

அம்மொழி நிலையாது அன்மொழிப் பொருள்பட நின்றன, [4]முன் அன்மொழித்தொகை படக் காட்டினவெல்லாம் என்பது. அவை வெள்ளாடை என்னுந் தொடக்கத்தன.

மற்று இன்னுழிப் பொருள் நிற்கும் எனின், ஒழிந்துழி யெல்லாம் பொருளில்லையா மாகாதே, ஆகவே, "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே (பெயரி. 1) என்பதனோடு [5]மலைக்கும் பிற எனின், மலையாது; என்னை? மற்றையுழிப் பொருள இல்லை என்பது அன்று; அவன் உணர்தலுறவு நோக்கி இது சொல்லினார் என்பது.

சேனா

இ-ள்: முன்மொழிமேல் நிற்றலும் பின்மொழிமேல் நிற்றலும் இருமொழிமேல் நிற்றலும் அவற்றின்மேல் நில்லாது பிற மொழிமேல் நிற்றலும் என அத்தொகையும் அவற்றது பொருள் நிலை மரபும் நான்கு என்று சொல்லுவர் ஆசிரியர், எ-று,

---

2. பூவினைச் சிறப்பிப்பதாவது பொதுத் தன்மையை நீக்குதல்.

3. அதனை என்பது தவறாக எழுதப்பட்டதாகலாம்.

4. முன் 22ம் ஆம் சூத்திரத்தில்

5. மலைக்கும்—மாறுபடும்

தொகையும் அவற்றது பொருள்நிலை மரபும் ஒருவகையான் வேறாயினும் ஒற்றுமைபற்றி அவைதாம் என்றார்.

பொருள் நிற்றலாவது வினையோ டியையு மாற்றான் மேற் பட்டுத்தோன்றுதல்.

உ-ம் : வேங்கைப்பூ என்புழிப் பூவென்னும் முன்மொழிக் கண் பொருள் நின்றது. அது நறிது என்னும் வினையோ டியையுமாற்றான் மேற்பட்டுத் தோன்றியவாறு கண்டுகொள்க. மேல் வருவனவற்றிற்கும் ஈதொக்கும். இடவகையான் முன் மொழியாயிற்று.

[1]'அடைகடல்' என்புழி அடையென்னும் பின்மொழிக்கண் பொருள் நின்றது. இடவகையாற் பின்மொழியாயிற்று. முன் பின் என்பன காலவகையால் தடுமாறி நிற்கும். கடலும் கடல் அடைந்த இடமும் கடல் எனப்படுதலின், 'அடைகடல்' என் பது 'அடையாகியகடல்' என இருபெயர்ப் பண்புத்தொகை. இனி வரையறையின்மையாற் சிறுபான்மை முன்மொழி பின் மொழியாகத் தொக்கதோர் ஆறாம் வேற்றுமைத்தொகையென வும் அமையும்.

'உவாப்பதினான்கு' என்புழி இருமொழிமேலும் பொருள் நின்றது. தன்னின முடித்தல் என்பதனாற் பலபெயர்மேல் நிற்றலும் கண்டு கொள்க.

---

1. அடைகடல், அடை என்பது அடைந்த இடம் எனப் படும். கடல் அடைந்த இடம் கரை. எனவே கரை யாகிய கடல் எனப்படும். இதுவே கடலாகிய கரை (கடலாகிய அடை) எனவும் கொள்ளப்படும். அடை கடல் என்பதை மேற்குறித்தவாறேதான் பொருள் கொள்ளல் வேண்டும் என்னும் வரையறையின்மையால் 'கடல் அடை' (கடலினதுகரை) என்பது, நகர்ப்புறம் புறநகர் எனமாறி நின்றாற்போல 'அடைகடல்' என நின்றது எனக்கொண்டு 'கடலினது அடை' என ஆறாம் வேற்றுமைத்தொகையெனக் கொண்டு அது 'அடைகடல்' என முன் பின்னாகமாறி நின்றது எனக் கொள்வதும் அமையும்.

வெள்ளாடை என்புழித் தொக்க இருமொழிமேலும் நில்லாது உடுத்தாள் என்னும் அன்மொழிமேல் நின்றது.

வேற்றுமைத்தொகை முதல் நான்கு தொகையும் முன் மொழிப்பொருள. வேற்றுமைத்தொகையும் பண்புத்தொகையும் சிறுபான்மை பின்மொழிப்பொருளவுமாம். உம்மைத்தொகை இருமொழிப் பொருட்டு.

ஆறு எனப்பட்ட தொகை [1]பொருள் வகையான் நான்காம் எனப் பிறிதோர் வகை குறித்தவாறு.

தெய்

மேற் சொல்லப்பட்ட தொகைக்கட் பொருள் நிற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மேற்சொல்லப்பட்ட தொகைச் சொற்கள்தாம் முன்மொழிக்கண் பொருள் நிற்றலும், பின்மொழிக்கண் பொருள் நிற்றலும், இருமொழி மேலும் பொருள் நிற்றலும், அத்தொகை மேற் பொருள் நில்லாது பிறமொழிக்கண் பொருள் நிற்றலும் என நால்வகைப்படும் என்ப பொருள் நிற்கும் மரபு, எ-று.

அவைதாம் என எல்லாத்தொகையும் சுட்டுதலான், அவற் றுள் இவ்விலக்கணம் அவ்வத்தொகைக் கேற்றவழிக் கொள்ளப் படும்.

உ-ம் : 'மாம்பழந்தின்றான்' என்றவழித் தின்னப்பட்டது பழம் ஆதலின் அத்தொகைச்சொல் முன்மொழிக்கண் பொருள் நின்றது.

'இடைமுலைக்கிடந்து நடுங்க லானீர்' என்றவழிக் கிடக்கப் பட்டது முலையிடை யாதலின் பின்மொழிக்கண் பொருள் நின்றது.

'குதிரைத்தேரோடிற்று' என்றவழி குதிரையோடத் தேரும் ஓடுதலின் இருமொழி மேலும் பொருள் நின்றது.

---

1. பொருள்வகை—பொருள்சிறக்கும் இடவகை.

'பொற்றொடி வந்தாள்' என்றவழிப் பொற்றொடியை அணிந்தாள்மேல் பொருள் நின்றலின் அம்மொழியல்லாத மொழி மேற்பொருள் நின்றது.

இவை நான்கும் வேற்றுமைத்தொகை ஏனைத்தொகைக் கண்ணும் பொருள் நிற்குமாறு ஏற்பனவற்றுட் கண்டு கொள்க.

நச்

இது தொகைச் சொற்பொருள் நிலை கூறுகின்றது.

இ-ள் : அவைதாம் பொருள் நிலைமரபு—அத்தொகைச் சொற்கள்தாம் பொருள் பெற்று நிற்கும் நிலைமையினது முறைமையினை, முன்மொழி நிலையலும்— முன்மொழிக்கண்ணே பொருள் சிறந்து நிற்றலும், பின்மொழி நிலையலும் — பின் மொழிக்கண்ணே பொருள் சிறந்து நிற்றலும், இருமொழி போலும் ஒருங்கு உடன் நிலையிலும் — இருமொழிக்கண்ணும் பொருள் ஒருங்கு சிறந்து நிற்றலும், அம்மொழி நிலையாது அன்மொழி நிலையலும்—அவ்விருமொழிக்கண்ணும் பொருள் சிறந்து நில்லாது மற்றோர் மொழிக்கண்ணே பொருள் சிறந்து நிற்றலும், அந்நான்கு என்ப—என்று சொல்லப்பட்ட அந்நான்கு கூறு என்று சொல்லுவர் ஆசிரியர், எ-று.

உ-ம் : வேங்கைப்பூ—முன்மொழி நிலையல் ; அது 'நறிது' என்பதனோடு கூட்ட வேங்கைக்கண் பொருள் சிறவாது பூவின் கண் பொருள் சிறத்தலின்.

ஆரமாலை—பின்மொழி நிலையல்.
இவை வேற்றுமைத்தொகை.
வேற்கண்—முன்மொழி நிலையல்

பெண்ணணங்கு என்பது அணங்கு போலும் பெண் என்பதாகலின் பின்மொழி நிலையலாம். இவை உவமத்தொகை.

கொல்யானை—முன்மொழி நிலையல். இவ்வினைத் தொகைக்குப் பின்மொழி நிலையல் இன்று.
தீந்தேன்—முன்மொழி நிலையல்
அடைகடல்—பின்மொழி நிலையல். இது கடலாகிய

கரை எனக்கரை கூறுதலே கருத்தாகலின். இவை பண்புத் தொகை.

இவை இடம் பற்றி வந்த முன்னும் பின்னுமாம். காலம் பற்றி வருவனவும் வந்துழிக் காண்க.

பண்புத்தொகையே யன்றி ஏனைத் தொகைக்கும் விசேடித் தல் சிறுபான்மை வருதலின் 'ஒன்றன் கண்ணது பொருட் சிறப்பு' என்றார். உவாப்பதினான்கு இருமொழி மேலும் நின்றது.

'உடன்' என்றதனால் 'புலிவிற் கெண்டை' எனப் பன் மொழி மேல் நிற்றலும் கொள்க.

'வெள்ளாடை' என்பது இருமொழி மேலும் நில்லாது உடுத் தாள் மேல் பொருள் நின்றது.

வெள்

இது தொகைச் சொற்களிற் பொருள் நிற்கும் இடங்கள் இத்துணையவெனக் கூறுகின்றது.

இ-ள்: முன்மொழியில் நிற்றலும், பின்மொழியில் நிற்றலும், இருமொழியிலும் நிற்றலும், அவற்றின்மேல் நில்லாது புற மொழிமேல் நிற்றலும் எனத் தொகைச் சொற்களின் பொருள் நிற்கும் மரபு அந்நான்காம் என்று கூறுவர் ஆசிரியர், எ-று.

ஈண்டுப் பொருள் நிலை என்றது வினைகொண்டு முடியு மாற்றால் அச்சொல்லின் பொருள் மேற்பட்டுத் தோன்று தலாகும்.

உ-ம்: வேங்கைப்பூ என்புழி முன்மொழிக்கண் பொருள் சிறந்து நின்றது. அதுநறிது என்னும் வினையோடு இயையு மாற்றால் மேற்பட்டுத் தோன்றியவாறு காண்க. இஃது இட வகையான் முன் மொழியாயிற்று.

'அடைகடல்' என்புழி அடையென்னும் பின் மொழிக்கண் பொருள் நின்றது. கடலும் கடலடைந்த இடமும் கடல் எனப்படுதலின் அடைகடல் என்பது அடையாகிய கடல் என இருபெயர்ப் பண்புத்தொகை.

'உவாப்பதினான்கு' என்புழி இருமொழிக் கண்ணும் பொருள் சிறந்து நின்றது.

'வெள்ளாடை' என்புழித் தொக்க இருமொழிமேலும் நில்லாது 'உடுத்தாள்' என்னும் அன்மொழிமேல் நின்றது.

ஆதி

தொடர்மொழியின் பொருள் சிறந்து விளக்கமுறுவது முன் மொழியிலும் பின்மொழியிலும் இருமொழிகளிலும் அவற்றில் இல்லாமல் அல்லாத மொழியிலும் ஆகும்.

உ-ம் : மஞ்சள்தாலி- } முன்மொழியில் சிறப்பு நிலைக்கிறது.
பொன்மகுடம் }

திண்டுக்கல் பூட்டு } பின் மொழியில் சிறப்பு நிலைக்கிறது.
உறையூர் வேட்டி }

காஞ்சிபுரம்பட்டு } இருமொழிகளிலும் சிறப்பு நிலைக்கிறது.
கம்பர் காவியம் }

முப்பால் } இருமொழிகளிலும் இன்றி நூலில் சிறப்பு நிலைக்கிறது.
நாலடியார் }

விளாம்பழம்
உப்புக்கடலை
சந்தனக்கலவை
மயில்வாகனக் காட்சி } இவற்றில் சிறப்பு நிலைக்கும் இடம் யாண்டு?

# தொகைச் சொற்கள் ஒரு சொல் தன்மையன

**414 எல்லாத் தொகையு மொருசொ னடைய (24)**
**(எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய).**

ஆ. மொ. இல.

All compounds function as one word.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் [1]ஒட்டுச் சொற்கண்ணே கிடந்ததோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : அறுவகைத் தொகைச் சொல்லும் [2] எழுவாய் வேற்றுமை யியல்பாம் என்று ஈண்டு எய்துவித்தார், எ-று.

மற்று ஒட்டுச் சொற்களை 'ஒருசொல் நடைய' எனப் போந்த இலேசு என்னையெனின், அவைபல சொன்மைப்படப் பொருளிசையா; ஒரு சொல் விழுக்காடுபடத் திரண்டிசைக்கும் என்பது கருத்து.

[3]அஃதினை, யானைக்கோடு, வேங்கைப்பூ என்பனவற் றான் அறிக. [4]கற்சுனைக் குவளையிதழ் என்பதும் அது.

சேனா

இ-ள் : அறுவகைத் தொகைச் சொல்லும் ஒரு சொல்லாய் நடத்தலையுடைய, எ-று.

'ஒரு சொல் நடைய' எனப் பொதுப்படக் கூறியவதனான் யானைக்கோடு, கொல்யானை என முன்மொழி பெயராயவழி ஒரு பெயர்ச்சொல் நடையவாதலும்; நிலங்கடந்தான், குன்றத்

---

1. ஒட்டுச்சொல்-தொகைச்சொல்

2. எழுவாய் வேற்றுமையியல்பாம் — எழுவாயாகி வினை யொடு (பயனிலை யொடு) முடியும் இயல்பாம். 'வேங்கைப்பூ நறிது' என்பதில் வேங்கைப்பூ என்னும் ஒட்டுச்சொல் எழுவாய். இப்படியே பிறவும்.

3. அஃதினை-அதனை.

4. 'கற்சுனைக்கு வளையிதழ் நன்று' எனின் 'கற்சுனைக் குவளையிதழ்' என்பது எழுவாய். அது நன்று எனும் வினைகொண்டது என்க.

திருந்தான் என முன்மொழி வினையாயவழி ஒரு வினைச்சொல் நடையவாதலும் கொள்க. அவை உருபேற்றலும் பயனிலை கோடலும் முதலாகிய பெயர்த்தன்மையும் பயனிலையாதலும் பெயர்கோடலும் முதலாகிய வினைத் தன்மையும் உடையவாதல் அவ்வச் சொல்லோடு கூட்டிக் கண்டுகொள்க.

நிலங்கடந்தான், குன்றத் திருந்தான் எனப் பெயரும் வினையும் தொக்கன ஒருசொல் நீர்மையிலவாகலின் தொகை யெனப்படா [1]என்பாரும் உளர். எழுத்தோத்தினுள், "பெயருந் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப—வேற்றுமையுருபு நிலைபெறு வழியும்—தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்" (எழு 182) என்றதனான் வேற்றுமையுருபு தொகப் பெயருந் தொழிலும் ஒருங்கிசைத்தல் ஆசிரியர் நேர்ந்தாராகலின், அவை தொகை யெனவே படும்என்பது. கடந்தான் நிலம், இருந்தான் குன்றத்து என்பன ஒருங்கிசையாது [2]பக்கிசைத்தலின் அவை தொகை யன்மை அறிக.

எல்லாத் தொகையும் ஒரு சொன்னடைய என்ற தனான் தொகையல்லாத தொடர்மொழியுள் ஒருசொல்நடைய வாவன சிலவுள வென்பதாம். யானை கோடு கூரிது, இரும்பு பொன்

---

1. யாரெனத் தெரிந்திலது. பிற்காலச் சிவஞான முனிவர் இக்கருத்தினர். பெயரும் தொழிலும் பிரிந்திசைப்ப வேற்றுமையுருபு நிலைபெறு வழியும் நிலத்தைக் கடந்தான்.
பெயரும் தொழிலும் ஒருங்கிசைப்ப வேற்றுமையுருபு தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்—நிலங் கடந்தான்.
'பெயரும் தொழிலும் ஒருங்கிசைப்ப..........தொகுதி' என ஆசிரியர் கூறியதால் நிலங்கடந்தான் என்பதை ஒருசொல் என நேர்ந்தார் என்னலாம் என்பது கருத்து. நச்சினார்க்கினியர் உரை மாறுபாடு காண்க.

2. பக்கு இசைத்தல்—பரிவுபட்டு இசைத்தல்.

னாயிற்று, மக்களை யுயர்திணை யென்ப என்பனவற்றுள், கோடு கூரிது, பொன்னாயிற்று, உயர்திணை யென்ப என்னுந் தொகையல் தொடர்மொழி ஒருசொல் நடையவாய் [3]எழுவாய்க்கும் இரண்டாவதற்கும் முடிவாயினவாறு கண்டுகொள்க பிறவுமன்ன.

## தெய்

தொகைச் சொற்கெல்லாம் உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : அறுவகைத் தொகைச் சொல்லும் ஒரு சொல் நடைய, எ-று.

என்பது என் சொல்லியவாறோ வெனின், இரண்டு சொல் லாகி ஒட்டுப்பட்டபெயர் பிரிந்து நில்லாது ஒரு பெயர் மாத்திர மாகி நிற்கும் என்றவாறு.

உ-ம் : யானைக்கோடு கிடந்தது, துடியிடை நன்று, கொல்யானை யோடிற்று, கருங்குதிரை வந்தது, கழஞ்சரை குறைந்தது, பொற்றொடி வந்தாள் என எழுவாயும் பயனிலை யுமாகியும் யானைக்கோட்டை, துடியிடையை, கொல்யானையை, கருங்குதிரையை, *உவாப்பதினான்கை, கழஞ்சரையை, பொற் றொடியை என உருபேற்றும் ஒரு சொன்னடையவாகி வந்த வாறு கண்டு கொள்க.

## நச்

இது தொகைச் சொற்கள் எல்லாம் ஒரு சொல்லாய் நிற் கும் என்கின்றது.

---

3. யானை, இரும்பு என்பன எழுவாய். மக்களை என்பது இரண்டாவது.

* உவாப்பதினான்கு என்பது எழுவாய்க்குக் காட்டப்படா மையின் ஈண்டு இது தேவையில்லை. கரந்தைத் தமிழ்ச்சங்கப்பதிப்பில் (1924) உவாப்பதினான்கை என்பதற்குப்பதில் ......... எனப்புள்ளியிடப்பட்டுள்ளது. பாடபேதத்தில் அதுகுறிக்கப்பட்டுள்ளது.

இ-ள் : எல்லாத் தொகையும்—இருமொழித் தொடரின் கண்ணும் பன்மொழித் தொடரின் கண்ணும் தொக்கு நிற்கும் எல்லாத் தொகைச் சொற்களும், ஒருசொல் நடைய— ஒருசொல் நின்று தன்னை முடிக்கும் சொற்களோடு முடியுமாறு போலத் தாமும் தம்மை முடிக்கும் சொற்களோடு முடிதலையுடைய, எ-று.

அங்ஙனம் முடியுங்கால் 'பெயரினாகிய தொகையுமாருளவே' (வேற்.6) என்னுஞ் சூத்திரத்தால் தொகைச்சொல் இருவகைய என்றும் அவற்றுள் பெயரும் பெயரும் தொக்கன ஒரு சொல் நீர்மையவாய்ப் பயனிலை கொள்ளும் என்றும் கூறிய விதி ஒழிந்த இலக்கணங்கள் எல்லாம் ஈண்டுக்கொள்க. அவை, 'யானைக்கோடு' என்னும் பெயரினாகிய தொகை, 'யானைக் கோட்டைக் குறைத்தான், 'என உருபு ஏற்றலும், 'நிலங்கடந்தான்', 'குன்றத்திருந்தான்' என்னும் வினையினாகிய தொகைகளும் ஒரு முற்றுச் சொல்லாய்ச் 'சாத்தன்' என்னும் பெயர்கோடலும், 'மா ஊர்ந்து போயினான்' குன்றத் திருந்து போயினான்' என வினையெச்சச் சொல்லாய் நிற்றலும், 'மாஊர்ந்தசாத்தன்', 'குன்றத்திருந்த சாத்தன்' எனப் பெயரெச்சச் சொல்லாய் நிற்றலும் ஆம். இவ்வினையின் ஆகிய தொகை, படுத்தல் ஓசையால் பெயராகியவழிப் பயனிலை கோடலும் கொள்க. எழுத்தினுள் 'பெருந்தொழிலும்' (புணரியல். 30) என்னுஞ் சூத்திரத்துள் [1]'பெயருந்தொழிலும் பிரிந்து இசைத்தவழியும் பெயரும் பெயரும் ஒருங்கு இசைத்த வழியும் வேற்றுமை தொக்கு நிற்கும் என்றலின், நிலங்கடந் தான், குன்றத்திருந்தான் எனப்பெயருந் தொழிலும் பிரிந்து இசைத்த வழியும் தொகையாதல் ஆசிரியர்க்குக் கருத்தாயிற்று. இப்பெயரும் வினையும் தொகுதல் உவமத்தொகைக்கும் விணைத்தொகைக்கும் கொள்க. இவை இருமொழித் தொடர்,

'உயர்சொற் கிளவி' (கிளவி. 27)
'இடைச்சொற் கிளவி' (பெயரி. 5)
'உரிச்சொற் கிளவி' (உரி. 1)

என்புழி உயர் சொல், இடைச்சொல், உரிச்சொல் என்னும்

---

1. பெயரும் பெயரும் ஒருங்கிசைத்தல் - மதிமுகம்.
பெயரும் வினையும் பிரிந்திசைத்தல் - நிலங்கடந்தான்.
சேனாவரையர் நிலங்கடந்தான் என்பது ஒருங்கிசைப் பதாகவும் நிலத்தைக் கடந்தான் என்பது பிரிந்திசைப் தாகவும் கொண்டு கூறினார்; காண்க.

தொகைச் சொற்கள் ஒரு சொல் நடையவாய், அவை ‘கிளவி’ என்பதனோடு தொக்கு ஒரு சொல் நடையவாய் மேல் வந்து முடிப்பனவற்றோடு முடிந்தன. ‘கற்சுனைக்குவளையிதழ்’ என்றாற் போல்வனவும் அது.

இனி,

‘கரியமலர் நெடுங்கண் காரிகைமுன்’ ‘(சிலப்.7.5)
[1]‘முட்புற முதிர்கனி’
‘பௌடமயில் உருவிற் பெருந்தகுபாடினி’ (பொருந.47)
‘கன்னிப் பெண்ணா ரமுதின்’

எனச் செய்யுட்கண் பல தொகையும் விராய்வந்து, ஒரு சொல் நடையவாய்த் தம்மை முடிப்பனவற்றோடு முடிந்தன.

[2]‘துடியிடை நெடுங்கண் துணைமுலைப் பொற்றொடி’ இஃது அறுவகைத் தொகையும் ஒருங்கு தொக்கது. இனி, கலனே தூணிப்பதக்கு, தொடியே கஃசரை, பதினொன்றரை என அளவும் நிறையும் எண்ணும் ஒரு சொல் நடையவாய் நின்றன. இப்பன் மொழித் தொகைக்கு முற்கூறிய முடிபு களும் கொள்க.

இனி, உம்மை எச்சவும்மையாதலின், தொகையல் தொடர் மொழிகளினும் ஒரு சொல் நடையவாய் முடிவனவுளவெனக் கொள்க. அவை, யானைக்கோடு கூரிது, இரும்பு பொன்னா யிற்று, மன்றுபாடவிந்தது, மக்களை யுயர்திணை யென்ப எனவரும்.

## வெள்

இது தொகைச்சொற் கெல்லாம் உரியதோர் இலக்கணம் உணர்த்துகின்றது.

---

1. முல்லைப்புறம்பே கொண்ட முதிர்தகனி-பலாப்பழம்.
2. துடியிடை - உவமத்தொகை, நெடுங்கண் - பண்புத் தொகை, இடைகண்முலை - உம்மைத்தொகை; பொற் றொடி- வேற்றுமைத் தொகை, துணைமுலை (துணைத்த - இரண்டாக அமைந்த) வினைத்தொகை. பொற்றொடி - (பொற்றொடி யுடையாள் என) அன் மொழித்தொகை.

இ-ள்: அறுவகைத் தொகைச் சொல்லும் ஒரு மொழி போல் நடப்பன, எ-று.

........................

உ-ம்: யானைக் கோடு கிடந்தது, துடியிடை நன்று, கொல்யானை ஓடிற்று, கருங்குதிரை வந்தது, கழஞ்சரை நிறைந்தது, பொற்றொடி வந்தாள் என எழுவாயும் பயனிலையு மாகியும், யானைக் கோட்டை, துடியிடையை, கொல்யானையை கருங்குதிரையை, கழஞ்சரையை, பொற்றொடியை என உருபேற்றும் வேற்றுமை முதலிய அறுவகைத் தொகையும் ஒரு சொல் (யானையை, கருங்குதிரையை, கழஞ்சரையை, பொற்றொடியை என உருபேற்றும் வேற்றுமை முதலிய அறுவகைத் தொகையும்) ஒருசொல் நடையவாகி வந்தவாறு காண்க.

ஆதி

எல்லாத் தொகை மொழிச் சொற்களும் ஒருசொல் போன்றே பயில்வன.

மாம்பழம், கோழிக்குஞ்சு, செங்கல், தண்ணீர், காற்றாடி தீப்பெட்டி, கோவில், நாற்காலி, மான்தோல், எண்ணெய், பற் பொடி, கலைமான், பிடரிமயிர், மயிர்மாட்டி, வயிற்றுவலி, இத்தகைய சொற்களை நாம் பிரித்துப் பொருள் உணர் வதில்லை. இடுகுறிப்பெயர்போல் பயின்று வருகின்றோம். அக்கருத்தை யுணர்த்தவே ஆசிரியர் ஒருசொல்நடைய என்றார். இவற்றைப்பிரித்துத் தொகை, தொடர் இலக்கணம் கூறுவது பிள்ளைமையாகும்.

சுப்

சேனா வரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் இம் மூவரது பொருளும் ஒன்றே. உரையாசிரியர் கூறிய பொருளைச் சேனாவரையர் 'பெயரினாகிய தொகையுமாருளவே' (சொல். 67) என்ற சூத்திரத்தின் உரையில் மறுத்துள்ளார்.

நிலங்கடந்தான் என்பதைச் சேனாவரையர் தொகையாகக் கொண்டதற்குக் காரணம் 'பெயருந் தொழிலும் பிரிந்தொருங்கு இசைப்ப ........ தோற்றம் வேண்டாத் தொகுதிக்கண்ணும்

(புணரியல் 8) என்ற சூத்திரத்தில் தொகுதி' என்பதற்குச் 'சமாசன்' என்று பொருள் கொண்டதேயாம். தொகுதி என்ற சொல்லைச் சமாசன் என்ற பொருளைத்தவிர வேறு பொருள் களிலும் ஆசிரியர் வழங்கியிருத்தலானும் (சொல். 33 பார்க்க) பெயரும் வினையும் தொகும் என்பதை ஆசிரியர் சூத்திரத்திற் கூறாமையானும் 'பெயரினாகிய தொகையுமாருளவே' (சொல்67.) என்ற சூத்திரத்தில் உம்மைக்குப் பொருளாக அதனைச் சந்தருப்பத்திற்கு விரோதமாகச் சேனாவரையர் கொள்ள வேண்டி யிருத்தலானும், உரையாசிரியரும் தெய்வச் சிலை யாரும் கொண்டவாறே கொள்ளுதல் நலம்.

இச்சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் சேனாவரையர் மதத்தைக் கைப்பற்றி, நிலங்கடந்தான் குன்றத்திருந்தான் என்பவற்றைத் தொகையாகக் கொண்டனர். 'பெயருந்தொழி லும்' (எழுத். 133) என்ற சூத்திரத்தின் பொருளைக் கூறுமிடத் துப் பெயருந் தொழிலும் பிரிந்தி சைத்த வழியும் தொகையாதல் ஆசிரியர்க்குக் கருத்தாயிற்று என்றார். அந்நு வயத்தில் உரை யாசிரியர் மதத்தையும், தொகுதி என்ற சொல்லின் பொருளில் சேனாவரையர் மதத்தையும் கைப்பற்றிப் 'பிரிந்திசைத்தவழியும் தொகையாகும் என்று கூறுவது எவ்வாறு பொருந்தும் ?

## உயர் திணையும்மைத் தொகை முடிபு

415. உயர்திணை மருங்கி னும்மைத் தொகையே
*பலர் சொன்னடைத்தென மொழிமனார் புலவர் (25)

(உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே
பலர்சொல் நடைத்துஎன மொழிமனார் புலவர்)

ஆ. மொ. இல.

The scholars say that a compound with
'Um' will function as epieene plural.

---

* பல சொல் நடைத்து—தெய்—பாடம்.

பி. இ. நூ.

நன். 372

உயர்திணை யும்மைத் தொகைபலர் ஈறே.

இ. வி. 343

உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே
பலர்சொல் நடைத்தென மொழிமனார் புலவர்.

முத்து. ஒ. 104.

உயர்திணை யும்மைத் தொகைபல் ஈறே.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், உம்மைத் தொகையுள் ஒரு சாரனவற்றுக்கண் படுவதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : உயர்திணை மருங்கின் உம்மைச் சொல்லுக்கு இறுதி பலரைச் சொல்லும் சொன்னடைத்தாக என்று சொல்லுவர் ஆசிரியர், எ-று.

வ-று : [1]கபில பரணர் எனவரும்.

இவ்வாறு அத்தொகைச்சொல் இறுதி பலர் சொன்னடைத்தன்றிக் கபிலன் பரணன் என னகரவீறாய் நிற்பின் அது, 'வந்தான்', 'போயினான்' என்னும் ஒருமை வினை ஏற்பின் அல்லது 'வந்தார், போயினார்' என்னும் பன்மை வினை ஏலா

[2]இனிப் 'பலர்சொல் நடைத்து' எனவே, அவ்விருவர் மேலும் வினையேற்கும்; அதனான் இது சொல்லினார் என்பது.

மற்றுத் தொகைச் சொற்கள் தொகுவது தொக்கு நின்றக்கால் தம்மீறு கருதின பொருட்கு ஏற்கும் முடிவினை நின்

---

1 கபிலனும் பரணனும் என்பது பொருள்.

2. இருவர் மேலும் வினையேற்பது : 'கபிலபரணர் வந்தார்' என்பது கபிலன் வந்தான் பரணன் வந்தான் எனத் தனித்தனிக் கூட்டியுணருமாறு நின்று வருதல் வினை இருவர் மேலும் நிற்பதாம்.

றாங்கே நின்று கொள்ளும்; [3]இதுவாயின் இறுதி நின்றாங்கே நிற்பப் பொருட்கேற்ப முடிபு ஏலாமையான் இறுதி போதல் வேண்டிற்று என்பது.

சேனா

இ-ள் : உயர்திணைக்கண் வரும் உம்மைத் தொகை பலர்க் குரிய ஈற்றான் நடக்கும், எ-று.

[4]பொதுவிற் கூறினாரேனும் மாமூலம் பெருந்தலைச் சாத்தர், கபிலபரண நக்கீரர் எனவரும்.

விரவுப் பெயர்த் தொகையும் அடங்குதற்கு 'உயர் திணைப் பெயரும்மைத் தொகை' என்னாது 'உயர்திணை மருங்கின்

---

3. மற்றைத் தொகைச் சொற்கள் இருந்தபடியே இருந்து வினைமுடிபு கொள்ளும் உம்மைத் தொகை அப்படிக் கொள்ளின் தவறுபடும். கபிலன் பரணன் வந்தான் எனின் இருவர்க்கு ஒருமை முடிபு தவறு. 'கபிலன் பரணன் வந்தார்' எனின் கபிலன் எனும் ஒருமைக்கு வந்தார் எனும் பன்மையும் பரணன் என்னும் ஒருமைக்கு வந்தார் என்னும் பன்மையும் பொருந்தா. ஆதனால் கபிலன் என்பதன் னகரவிறு கெடுதலும் பரணன் என்பதன் னகரவீறு கெட்டுரகா வீறுவருதலும் வேண்டும்.

4. பொதுவிற் கூறினாரேனும் என்பதற்கு உயர்திணை முப் பாற்கும் உரியவாறு கூறினாரேனும் எனக்கொண்டு ஆண்பாற்கே வரும் எனக் கொள்ள வேண்டும்- " எனக் கருத்துக் கூறுவர் கணேசய்யர் பெண்பாற்கு உதாரணம் இன்மையே காரணம்.

'இருபெயர் உம்மைத் தொகை பல பெயர் உம்மைத் தொகை எனும் இரண்டையும் சேர்த்துப் பொதுவிற் கூறினாரேனும் எனக்கொண்டு மாமூல பெருந்தலைச் சாத்தர் என இருபெயர் உம்மைத் தொகையும் நக்கீர கபிலபரணர் எனப் பலபெயர் உம்மைத் தொகையும் கொள்ளல் வேண்டும்'' என்பர் உரையாளர்.

உம்மைத்தொகை' என்றார். அவை ஒட்டி ஒரு சொல்லாய் நிற்றலின் பலரறி சொல் எனப்படும். பலரறி சொல் கபிலபரணன் என ஒருமை யீற்றான் நடத்தல் வழுவாகலின் வழுக்காத்தவாறு.

இதனானுந் தொகை ஒரு சொல்லாதல் பெற்றாம் [5]ஒருசொல் நீர்மை பெற்றின் றாயின் கபில பரணன் என ஒருமைச் சொல் ஒருமையீற்றான் நடத்தற்கட்படும் இழுக்கென்னை யென்பது.

தெய்

எய்தியது ஒரு மருங்கு மறுத்தலை உணர்த்துதல் நுதலிற்று

இ-ள் : உம்மைத் தொகையுள், உயர்திணைப் பொருள் மேல் வரும் உம்மைத்தொகை பல சொல் நடைத்தாகித் தொடரவும் பெறும், எ-று.

உ-ம் : கபிலபரணர் வந்தார்.

[1]அஃதேல், ஒட்டுப்பெயர் 'ஒருசொல் நடைத்து' என்றல் அமையாது ; பலசொல் நடைத்தாகியும் சிலசொல் வருதலின் எனின், ஆண்டும் ஒருசொல் நடைத்து என்பதே கருத்து. ஒருவர்

---

5. 'கபிலபரணன்' என்பதில் கபிலன் என்பதன் னகர வீறு கெட்டது என்னல் வேண்டும். கபிலனும் பரணனும் என்பது பொருளாகும். அப்போது கபிலன் என்பதும் பரணன் என்பதும் ஒருமைகள்.
'கபிலபரணர்' என்பதில் 'கபிலன்' என்பதன் னகரவீறும் பரணன் என்பதன்னகரவீறும் கெட்டு இறுதியில் பலர்க் குரிய ரகரவீறு வந்து அவ்விருவர்க்கும் உரியதாக நிற்கிறது. எனவே இரண்டு சொற்களும் ஒட்டி ஒருசொல் நீர்மைப்பட்டன என்க.

1. ''கபில பரணர்—ஒட்டுப்பெயர் இது ஒரு சொல் நடைத் தாகி 'வந்தனர்' என ஒரு வினை கொள்ளும். கபில பரணர் நக்கீரர்—இது பல பெயர். இதுவும் பலசொல் நடைத்தாகாமல் ஒரு சொல் நடைத்தாகியே 'வந்தனர்' என ஒரு வினை கொள்ளும்'' என்பது இப்பகுதியின் கருத்து.

என்பது பன்மை வினை கொண்டு முடிந்தாற்போல உயர்திணை ஒட்டுப்பெயர் பன்மை வினை கொண்டு முடியும் எனச்சொல் முடிவு நோக்கிக் கூறினார் என்க.

நச்

இஃது உம்மைத் தொகைக்கு வழு அமைக்கின்றது.

இ-ள் : உயர்திணை மருங்கின் உம்மைத் தொகை—உயர் திணைப் பெயரிடத்துத் தொக்க உம்மைத் தொகையின் ஈறு, பலர் சொல் நடைத்து என மொழிமனார் புலவர்— பலரைச் சொல்லும் சொல்லின் இறுதி போலப் பன்மை யுணர்த்தி நிற்கும் என்று கூறுவர் ஆசிரியர், எ-று.

உ-ம் : கபிலபரணர்.

'கபிலன் பரணன்' என்பதில் 'கபிலன் என்னும் னகர வீறு சந்தியால் கெட்டுக் 'கபில பரணர்' என நின்றவழி இருவராய் நின்றமையின், 'வந்தார்' என்னும் பன்மையோடு முடிதல் வேண்டுதலின், ஆண்டு நின்ற ஒருமையீறு பன்மையொடு முடிதல் வழு என்று கருதி, னகர வீறு ரகர வீறாய் நிற்கும் என வழுவ மைத்தார். 'கல்லாட மாமூல சீத்தலைச் சாத்தர்' என்றாற் போல்வனவும் அது. [1]இவை ஓசை பகுத்து இசைத் தலின் ஒரு சொல்லாய் ஒட்டாமை காண்க.

[2]உயர்திணைப் பெயர் என்னாது 'மருங்கின்' என்றார், உயர் திணை விரவுப் பெயரும் அடங்குதற்கு.

---

1. கல்லாடன் மாமூலன் சீத்தலைச் சாத்தன் எனின் ஓசை பகுத்து இசைக்கும்; அவை ஒரு சொல்லாய் ஒட்டா. கல்லாட மாமூல சீத்தலைச் சாத்தர் எனின் அவை ஒட்டி ஒருசொல் நீர்மையவாம்.

2. அஃறிணை விரவுப் பெயர், உயர்திணை விரவுப்பெயர் என விரவுப் பெயர் இருவகை என்பது நச். கருத்து.

வெள்

இஃது உயர்திணை உம்மைத் தொகைக்கு எய்தாதது எய்துவிக்கின்றது.

இ-ள் : உயர்திணைப் பெயரிடத்துத் தொக்க உம்மைத் தொகை பலர்பால் ஈற்றினதாய்ப் பன்மையுணர்த்தி நிற்கும் என்பர் ஆசிரியர், எ-று.

உ-ம் : மாமூல பெருந்தலைச் சாத்தர், கபில பரண நக்கீரர் என வரும்.

பலசொல் நடைத்து என்றது எண்ணப்பட்டார் பலர் மேலும் வினையேற்கும் வண்ணம் தமக்குரிய ஒருமைப்பால் ஈறு கெட்டுப் பலர்பாற்குரிய ஈற்றினதாகத் திரிதலை.

ஆதி

உயர்திணை உம்மைத் தொகைப் பெயர்கள் பலர்பால் பன்மை இயல்புடையன.

கபிலன் பரணன்—கபிலபரணர்.

அண்ணன் தம்பி—அண்ணன் தம்பியர்
சேரன் சோழன். பாண்டியன்—சேர சோழ பாண்டியர்.

## குறிப்பு மொழி

416. வாரா மரபின வரக்கூ றுதலு
மென்னா மரபின் வெனக்கூ றுதலு
மன்னவை யெல்லா மவற்றவற் றியலா
னின்ன வென்னுங் குறிப்புரை யாகும். (26)

(வாரா மரபின வரக்கூ றுதலும்
என்னா மரபின எனக்கூ றுதலும்
அன்னவை எல்லாம் அவற்று அவற்று இயலான்
இன்ன என்னும் குறிப்பு உரையாகும்)

அ. மொ. இல.

The expression by which subjects which do not have the capacity of coming are said to have come and those which cannot speak are said to have spoken and such modes of expression are the ways indicating what their nature is.

பி. இ. நூ.

நன். 409

கேட்குந போலவும் கிளக்குந போலவும்
இயங்குந போலவும் இயற்றுந போலவும்
அஃறிணை மருங்கினும் அறையப் படுமே.

இ. வி. 347

(தொல்காப்பியச்சூத்திரமே)

முத்து. ஒ. 105, 114

வாரா மரபின வரஇயம் புதலும்
என்னா மரபின எனஇயம் புதலும்
அன்னவை யெல்லாம் அவற்றவற் றியல்பான்
இன்ன வென்னும் குறிப்புரை யாகும்
கேட்குந போலவும் கிளக்குந போலவும்
இயற்றுந போலவும் இயங்குந போலவும்
அஃறிணை மருங்கினும் அறையப்படுமே.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேல் தொகையதிகாரங் கூறினான், அவையெல்லாம் விட்டு இனி, ஒரு சொல் மரபு வழூஉக் காத்தல் நுதலிற்று.

உரை : இயங்காதவற்றை இயங்குவது போலச் சொல்லுதலும், சொல் நிகழாதவற்றைச் சொல் நிகழ்த்துவன போலச் சொல்லுதலும், அவ்வப் பொருளியைபு பற்றி அவை அன்ன செய்கையுடையவற்றைப் போலச் சொல்லுற்றான் ; அது மனக் குறிப்பினான் ஆய்ந்து, அவற்றது உரையன்று என்பது கொள்க.

'அன்னவையெல்லாம்' என்பது அவ்வாரா மரபினவும் பல் வகைய ஒரோ வோன்றே யல்ல என்றற்கு என்பது.

வாராமரபின வரக்கூறுதல் வருமாறு : மலை வந்து கிடந்தது, நெறி வந்து கிடந்தது எனவரும். மலைக்கும் நெறிக்கும் அன்னசெய்கை இன்றாகலின் என்பது.

இனி என்னா மரபின எனக்கூறுதல் வருமாறு : நிலம்வல்லென்றது, நீர் தண்ணென்றது, இலை பச்சென்றது எனவும், [2]'செங்கால் நாராய்' எனவும் வரும்.

விலங்கும் மரனும் புள்ளும் உள்ள நோய் உற்றாற்கு மனக் குறைக்கு [3]மறுதலை மாற்றம் கூறுவன போலும் குறிப்பினவாகப் புலப்படுதலால் இது சொல்லப்பட்டது என்பது.

சேனா

இ-ள் : வாராவியல் பினவற்றை வருவனவாகச் சொல்லுதலும், என்னா இயல்பினவற்றை என்பனவாகச் சொல்லுதலும் அத்தன்மையான வெல்லாம் அவ்வப் பொருள் இயல்பான் இத்தன்மையவென்று சொல்லுங் குறிப்பு மொழியாம். எ-று.

உ-ம் : அந்நெறி யீண்டு வந்து கிடந்தது, அம்மலை வந்து இதனோடு பொருந்திற்று எனவும், *அவலவல் என்கின்றன நெல், மழை மழை யென்கின்றன பைங்கூழ் எனவும் வரும்.

---

1. அன்ன செய்கை—அப்படிப்பட்டசெயல்—அதாவது வருதல்.

2. 'செங்கால் நாராய்' எனத் தொடங்கும் புறப்பாடலில் ( ) நாரை பேசுவதைப் போலக்கூறியது காண்க.

3. மறுதலைமாற்றம்—மறுமொழி — அதாவது ஆறுதல் மொழி.

* பள்ளம் வேண்டும் பள்ளம் வேண்டும் என்கின்றன நெல். அவல்—பள்ளம், தாழ்ந்த பகுதியிடம். மழை மழை என்கின்றன பைங்கூழ்—பயிர்கள் மழை வேண்டும் மழை வேண்டும் என்று கூறுகின்றன போல் காணப்படுகின்றன.

அவை வரவும் சொல்லுதலும் உணர்த்தாது [1]இன்ன என்பத னைக் குறிப்பால் உணர்த்தியவாறு கண்டு கொள்க.

முலை வந்தன, தலை வந்தன என்பன காட்டுவாரும் உளர். ஆண்டு வருதல் வளர்தற் பொருட்டாகலான் அவை ஈண்டைக்காகா வென்க.

நிலம் வல்லென்றது, நீர்தண்ணென்றது என்பன காட்டி னாரால் உரையாசிரியர்களின், [2]சொலற்பொருள வன்மையின் அவை காட்டல் கருத்தன் றென்க.

[3]அன்னவை யெல்லாம் என்றதனான், இந்நெறியாண்டுச் சென்று கிடக்கும், இக்குன்று அக்குன்றோடு ஒன்றும் என்றும் தொடக்கத்தன கொள்க.

## தெய்

ஒருசார் சொற்களுக்குக் குறியிடுதல் உணர்த்துதல் நுதலிற்று

இ-ள்.: வாரா மரபினவற்றை வருமாகக் கூறுதலும், என்னாமரபினவற்றை என்றனவாகக் கூறுதலும் அத்தன்மைய பிறவும் எல்லாம் அவற்றவற்றியல்பினான் இத்தன்மைய என்னும் குறிப்புரையாகும், எ-று.

வாராமரபின என்றதனாற் செலவு வரவு என்பன கொள்ளப் படும். என்னாமரபின என்றதனான் நினைத்தலும் சொல்லு தலும் செய்தலும் கொள்ளப்படும்.

---

1. அவலவல் என்கின்றன நெல்—அவல் செய்யும் நிலை யில் விளைந்து விட்டேன் என்கின்றன நெற்கதிர்கள்.

2. சொலற்பொருள அன்மையின் — சொல்லும் குறிப்புப் பொருளை அல்லாமையின் — அதாவது அவற்றின் இயல்பேயாகலின்.

3. செல்லா மரபின சென்றதுபோலக் கூறுதலும் ஒன்றா மரபின ஒன்றுவதுபோலக் கூறுதலும் கொள்க என்பது இவ்வுதாரணங்களின் மூலம் குறித்தபடி.

அன்னவை யெல்லாம் என்றதனான் காணாமரபின கேளா மரபின என்பன கொள்ளப்படும். இவ்வாறு சொல்லுதல் குற்ற மாயினும் சொல்லுவான் குறிப்பு மொழியாயிற்று. இதனானே சில சொற்களுக்குக் குறிப்பு மொழி எனவும் குறியிட்டாராம்.

உ-ம் : அம்மலை வந்து இதனோடு பொருந்திற்று. மலை வருதல் இன்மையின் அதுவும் இதுவும் ஒன்றிக் கிடந் தது என்னும் பொருண்மை குறித்து இவ்வாறு சொல்லப்பட்டது.

> [1] சென்றது கொல் போந்தது கொல் செல்வி பெறுந் துணையும்
> நின்றது கொல் நேர்மருங்கிற் கையூன்றி-முன்றில்
> முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்கு
> உழந்துபின் சென்றவென் நெஞ்சு

இதனுள் வந்தன வெல்லாம் குறிப்புமொழி யென்று கொள்க.

'அன்னச் சேவல் அன்னச் சேவல் (புறம். 67) என்னும், புறப்பாட்டினுள் 'இரும்பிசிராந்தை யடியுறையெனின்' என்பது அன்னச்சேவலைக் குறித்துக் கூறுதலின் சொல்லா மரபின சொல்லுமாக வந்த குறிப்பு மொழி. 'நீலம் உண்டதுகில்'— நீலம்பற்றின துகில் என்னும் பொருண்மை குறித்து உண்டதாகக் கூறப்பட்டது. பிறவுமன்ன.

நச்

இது, தொகை அதிகாரம் விட்டு மரபுவழுக் காக்கின்றது.

இ-ள் : வாராமரபின வரக்கூறுதலும்— இயங்காதனவற்றை இயங்குவனவாகக் கூறுதலும், என்னாமரபின எனக் கூறுதலும் சொல்லாதனவற்றைச் சொல்லுவனவாகச் சொல்லுதலுமாகிய

---

1. பொருள் : "அரண்மனை முற்றத்தில் முழங்கும் மதநீரையுடைய யானையையும் செறிந்த மலர்களால் ஆனமாலையையும் உடைய பாண்டியனுக்கா வருந்தி அவன் பின்னேபோன என் நெஞ்சமானது அவனிருக்கு மிடம் சென்றதோ ? அவன் செவ்வி பெறுமளவும் நேரே தன் இடுப்பில் கையை யூன்றிக் கொண்டு நின்றதோ? யாது செய்ததோ அறியேன்"-இது தலைவி கூற்று.

அன்னவையெல்லாம்—அத்தன்மையன எல்லாம், அவற்றவற்று இயல்பான் - அவ்வப் பொருள்களின் இயல்பு காரணத்தான், இன்னஎன்னும் குறிப்புரையாகும் - இத்தன்மைய என்று சொல் லும் குறிப்பு மொழியாம், எ-று.

உ-ம்: அந்நெறி யீண்டுவந்து கிடந்தது
அம்மலை வந்து இதனொடு பொருந்திற்று.

எனவும்,

அவலவல் என்கின்றன நெல்
மழை மழை யென்கின்றது பைங்கூழ்

எனவும் வரும். இவை வரவும் [1] சொல்லும் உணர்த்தாது 'இன்ன' என்பதனைக் குறிப்பான் உணர்த்தியவாறு காண்க.

இனி, ஒன்றென முடித்தல் என்பதனால் [2] கவவு அகத் திடும்' (உரி.59) என்றாற்போல அச்சொலின் பொருட் டொழிலை அச்சொல்மேல் ஏற்றிக் கூறுவனவும், ஆயிரம் காணம் வந்தது என்றாற்போல ஒருவனால் இயக்கப் பட்டதனைத் தான் இயங்கிற்றாகப் பொருள் கூறுவனவும், 'நீலுண் துகிலிகை' என்றவழி நீலம்பற்றியதனை நீலம் உண்டதாக்கிப் பொருள் கூறுதலும் 'இப்பொருளை இச்சொல்' என்றாற்போல வருவனவும் கொள்க.

வெள்

இஃது உலகியலில் வழங்கும் ஒருசார் தொடர் மொழிகள் பற்றிய வழுவமைக்கின்றது.

இ-ள்: வாராத இயல்புடையவற்றை வருவனவாகச் சொல் லுதலும், என்று கூறாத இயல்புடையனவற்றைக் கூறுவனவாகச்

---

1. செலவும்—பாடம்—இது பொருந்தாது.

2. கவவு என்றும் உரிச்சொல் அகத்திடுதல் என்னும் தொழிற் பொருள்படும் என்பது இதன்பொருள். ஆனால் தொடர்ப்போக்கு, கதவு என்னும் சொல்லே ஒன்றை அகத்திடும் என்னும் பொருள் தருமாறு அமைந்திருக் கிறது. அகத்திடாத ஒன்றை அகத்திடும் என்றதை ஒன்றென முடித்தல் என்பதனாற் கொள்ள வேண்டும்.

சொல்லுதலும் அத்தன்மையன வெல்லாம் அவ்வப் பொருளின் இயல்பால் இத்தன்மையன என்று சொல்லுங்குறிப்பு மொழி களாம், எ-று.

உ-ம் : அவ்வழி இங்குவந்து சேர்ந்தது, அம்மலை வந்து இதனோடு பொருந்திற்று எனவும்; அவல் அவல் என்கின்றன நெல், மழை மழை யென்கின்றன பயிர் எனவும் வரும். இவை, வருதலையும் சொல்லுதலையும் உணர்த்தாது இத்தன்மையன என்பதனைக் குறிப்பால் உணர்த்தியவாறு காண்க.

ஆதி

வாராதவற்றை வருவதாகச் சொல்லுதலும், பேசாதவற்றைப் பேசுவதாகச் சொல்லுதலும்-இவையெல்லாம் அப்பொருள்கள் இயல்பால் இத்தன்மை யென்னும் குறிப்பு மொழிகளே.

இவ்வழி மதுரைக்குப் போகிறது, ஒருகல் சென்றால் ஒரு மடம் வரும். இந்த தெரு அந்த தெருவில் வந்து சேரும்-இங்கு வருவது போவது சேர்வது யாதும் இல்லை.

கும்பி கூழுக்கு அழுகிறது, கொண்டை பூக்கேட்கிறது — இங்கு அழுவதும் கேட்பதும் இல்லை.

இவை குறிப்பால் பொருள் அறிவிப்பன.

## இசை நிலை யடுக்கு

**417. இசைப்படு பொருளே நான்குவரம் பாகும். (27)**

ஆ. மொ. இல.

The limit repetition of a word for the purpose of euphony is four times.

பி. இ. நா. (அடுத்த சூத்திரத்திற் காண்க)

(இளம்பூரணரும் சேனாவரையரும் வெள்ளைவாரணனாரும் இச்சூத்திரத்தையும் அடுத்து வருஞ் சூத்திரத்தையும் இயைபு நோக்கிச் சேர்த்து உரை எழுதினர். உரை அடுத்த சூத்திரத் துக் காண்க.)

தெய்

இசைநிறையடுக்கி நிற்கும் வரையறை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : இசைப்பொருட்கண் அடுக்கிவரும் சொல்லிற்கு எல்லை நான்கு, எ-று.

உ-ம் : [1]ஒக்குமே ஒக்குமே ஒக்குமே ஒக்கும்
விளக்கினிற் றீயெரி யொக்குமே யொக்கும்
குளக் கொட்டிப் பூவின் நிறம்

இதனுள் ஒக்கும் என்னும் சொல் இசைநிறைக்கண் நான்கு வரம்பாகி வந்த வாறு கண்டு கொள்க.

நச்

இது முற்கூறிய இசைநிறை அடுக்கிற்கு வரையறை கூறுகின்றது.

இ-ள் : இசைப்படு பொருளே நான்கு வரம்பு ஆகும்—முற்கூறிய ஒருசொல் அடுக்கினுள் இசை நிறைத்தலாற்படும். பொருண்மைக்கு வரும் அடுக்கு நான்காகிய எல்லை உடைத்தாம், எ-று.

உ-ம் : பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ எனவரும்.

ஆதி

செய்யுளில் இசைநிறையாக ஒருசொல் நான்கு முறையே வரலாம் அஃதே உச்சவரம்பு.

வம்மினே வம்மினே வம்மினே வம்மினே வந்தென் உரையைக் கேண்மினே கேண்மினே— நான்குமுறையும் இரண்டு முறையும் வந்துள்ளன.

---

1. பொருள் :- குளக் கொட்டிப்பூவினது நிறம் விளக்கில் எரியும் தீயின் நிறத்தையொக்கும்.

# விரை சொல்லடுக்கு

**418. விரை சொல்லடுக்கே மூன்றுவரம் பாகும். (28)**

ஆ.மொ.இல.

The limit of repetition of a word for the purpose of denoting has times is three times.

பி. இ. நா.

**நேமி சொ. 49.**

இசைநிறை நான்குவரம் பாகும் விரைசொல்
வசையிலா மூன்றுவரம்பாம்—அசைநிலை
ஆய்ந்த ஒருசொல் அடுக்கிரண்டாம் தாம்பிரியா
ஏந்திரட்டைச் சொற்க ளிரட்டு.

**நன். 395.**

அசைநிலை பொருள்நிலை இசைநிறைக் கொருசொல்
இரண்டு மூன்று நான்கு எல்லைமுறை யடுக்கும்.

**இ. வி. 346.** ஷை ஷை ஷை

**முத்து. ஒ. 93, 106.**

அசைநிலை இசைநிறை அடுக்கு இரு திறந்தன.
விரைவு மூன்று இசைநிறை நான் கடுத்தே.

இளம்

இசைப்படு....................வரம்பாகும்
விரைசொல்.................. வரம்பாகும்

இவை இரண்டு சூத்திரமும் உரையியையபு நோக்கி உடன் எழுதப்பட்டது.

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின் [1]மேல் (சூ. 405) இசைநிறை, அசைநிலை, பொருளொடு புணர்தல் என்றவை மூன்றென்ப ஒரு சொல்லடுக்கு என்புழி [2]மூன்று வகையான் அடுக்கி வரப்பெறும் என்றவை எல்லையின்மையான் அவை இத்துணை யென்னும் வரையறை கூறினார் ஈண்டு என்பது.

உரை : அம்மூன்றனுள் இசை நிறைத்தற்கு அடுக்கப்படும் பொருள் நான்கு வரம்பாகும், எ-று.

இரண்டும் அடுக்கும் மூன்றும் அடுக்கும் நான்கும் அடுக்கும்; நான்கிறந்து அடுக்கா என்பது கருத்து.

அது, பாடுகோ பாடுகோ பாடுகோ, பாடுகோ எனவரும். இது நான்கு அடுக்கி வந்தது. இசைநிறையெனவே அது செய்யுட் கென்பது முடிந்தது.

இனி [3]அம்மூன்றுடன் பொருளொடு புணர்தலை விரை சொல்லடுக்கு என்பது; அதுதான் மூன்று வரம்பு இறவாது என்பது. பாம்பு பாம்பு பாம்பு, தீத் தீத் தீ எனவரும். இரண்டு மூன்று இறவாது.

மற்று, அசைநிலை [4]இனைந்தால் அடுக்கும் என்பது எற்றாற் பெறுதும் எனின், மூன்றடுக்கும் பொருளொடு புணர் தலை முற்கூறற்பாலார் ; என்னை? மூன்று நான்கு என்னும்

---

1. எச்சவியல் சூ. 15-ல்

2. மூன்று வகையான் அடுக்கி வரப்பெறும் என்றவை இசைநிறையடுக்கு, அசைநிலையடுக்கு, பொருளொடு புணர் அடுக்கு.

3. அம்மூன்றுடன்—அம்மூன்றில்.

4. இனைத்தால் இத்தனைதடவை.

எண்ணு முறைமை நோக்கி. அவ்வாறு சொல்லாது [5]மயக்கங் கூறிய வதனான் மூன்றின் கீழ்க்கு முதல் இரண்டல்லது இல்லை யன்றே? அவ்விரண் டெண்ணினால் அடுக்கப்படும் அசைநிலை என்பது கொள்க என்றவாறு.

வ-று: மற்றோ, மற்றோ; அஃதே அஃதே எனவரும். இரண்டிறவாது என்பதனை இலேசினாற் கொண்டார், இடைச் சொல்லடுக்காதலின் என்பது. ஒழிந்த நால்வகைச் சொல்லும் அடுக்கும்.

சேனா

(இசைப்படு.................வரம்பாகும்.
விரைசொல்.................வரம்பாகும்).

இ-ள்: மேற்கூறப்பட்ட ஒரு சொல்லடுக்கினுள் இசை நிறையடுக்கு நான்காகிய வரம்பை யுடைத்து; பொருளொடு புணர்தற்கண் விரைவுப்பொருள்பட அடுக்குவது மூன்றாகிய வரம்புடைத்து, எ-று.

வரம்பாகும் என்றது, அவை நான்கினும் மூன்றினும் இறந்துவாரா, குறைந்து வரப்பெறும் என்றவாறு.

உ-ம்: 'பாடுகோ பாடுகோ பாடுகோ' எனவும், 'தீத்தீத்தீ' எனவும் வரும்.

அவை மும்முறையானும் இருமுறையானும் அடுக்கி வருதல் [1]இவற்றைக் குறைத்துச் சொல்லிக்கொள்க.

இசைப் பொருளாவது செய்யுளின்பம்.

---

5. மயங்கக்கூறியது. பின்னர்க் கூறவேண்டிய நான் கடுக்கை முன்னரும் முன்னர்க் கூறவேண்டிய மூன்ற டுக்கைப் பின்னர்க் கூறியதும் ஆம்.

1. 'பாடுகோ' எனத் தொடங்கும் உதாரணத்தை மூன் றாகக் குறைத்தும் 'தீ' எனத்தொடங்கும் உதாரணத்தை இரண்டாகவும் குறைத்துச் சொல்லிக் கொள்க.

[2] விரைவிக்கும் சொல்லை விரைசொல் என்றார்.

அசைநிலை இருமுறையல்லது அடுக்காமையின் அதற்கெல்லை கூறாராயினார். அஃது இருமுறையடுக்கும் என்பது யாண்டுப் பெற்றாம் எனின், அடுக்கு என்பதனாற் பெற்றாம், ஒருமுறை வருவது அடுக்கெனப்படாமையின் என்பது.

[3]முன்னர்க் கூறப்படும் அசைநிலை அடுக்கி வரும் என்பது அதிகாரத்தாற் கோடற்பொருட்டு 'இசைநிறையசை நிலை' என்னுஞ் சூத்திரத்தின்பின் வையாது இச்சூத்திரம் இரண்டையும் ஈண்டு வைத்தார்.

## தெய்

(விரைசொல்.............வரம்பாகும்).

குறிப்புப் பொருள் உணர்த்தும் ஒருசொல்லடுக்கிற்கு வரையறை யுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: விரைவுப் பொருண்மை குறித்த ஒரு சொல்லடுக்கிற்கு எல்லை மூன்றாகும், எ-று.

உ.ம்: பாம்பு பாம்பு பாம்பு, தீ தீ தீ - இவற்றுள் [1]முந்துற்றன பொருள் உணர்த்தின. [2]ஏனைய பொருளிலவாயினும் விரைதல் என்பது குறித்தலின் பொருளொடுபுணர்ந்த அடுக்காயின.

---

2. விரைசொல் என்பது விரையும் சொல் எனத்தன் வினை நிலையில் இருந்தாலும் விரைவிக்கும் சொல் எனப்பிற வினையில் பொருள் கொள்க.

3. சூ. 29-ல் கூறப்படும்.

1. முந்துற்றன - முதலில் உள்ள சொற்கள் பாம்பு, தீ என்பன.

2. ஏனைய - பின்னர் உள்ள பாம்பு பாம்பு, தீ தீ என்பன.

இசைநிறைக்கும் பொருளொடு புணர்தற்கும் எல்லை கூறி அசைநிலை அடுக்கிற்கு எல்லை கூறாமையின் அஃது இரண் டல்லது வரப்பெறா தென்று கொள்க.

நச்

(விரைசொல்...........வரம்பாகும்)

இது முற்கூறிய பொருளொடு புணர்தல் அடுக்கிற்கு வரை யறை கூறுகின்றது.

இ-ள்: விரைசொல் அடுக்கே மூன்று வரம்பு ஆகும்-முற்கூறிய ஒரு சொல் அடுக்கினுள் பொருளொடு புணர்தற்கண் விரைவு பொருட்பட அடுக்குவது மூன்றாகிய வரம்பை யுடைத்து, எ-று.

உ-ம்: தீத் தீத் தீ எனவரும்.

அசைநிலை இருமுறையல்லது அடுக்காமையின் அதற்குப் பேரெல்லை கூறாராயினார். ஒரு முறை வருவது அடுக்கன் மையின் 'ஒரு சொல்லடுக்கு' எனவே இருமுறை அடுக்கினமை பெறுதும். அவை பெறவே தீத்தீ, படைபடை என விரைவு பொருளின் சிற்றெல்லை இருகால் அடுக்குதல் கொள்க. இஃது இசைப்படு பொருளுக்கும் ஒக்கும். விரைவிக்கும் சொல் விரை சொல்.

வெள்

(இசைபடு...........வரம்பாகும்
விரைசொல்...........வரம்பாகும்.)

இவற்றால் முற்குறித்த அடுக்குச் சொற்களுக்கு வரை யறை கூறுகின்றார்.

இ-ள்: முற்கூறிய ஒருசொல்லடுக்கினுள் இசை நிறைத் தற்கு வரும் அடுக்கு நான்காகிய வரம்பையுடையது; பொரு ளொடு புணர்தற்கண் விரைவு பொருள்பட வரும் அடுக்கு மூன்றாகிய வரம்பையுடையதாம்.

உ-ம் : பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ - என இசைநிறை நான்கடுக்கி வந்தது. தீத் தீத் தீ—என விரை சொல் மூன்றடுக்கி வந்தது.

அடுக்கு என்னும் பெயரே ஒருசொல் இருமுறையடுக்கி வருதலைக் குறிக்குமாதலின், இருமுறைக்கு மேலாக மூன்று நான்கு முறை அடுக்கி வருவனவற்றிற்கு மட்டும் ஆசிரியர் இச்சூத்திரங்களால் வரையறை கூறினார். இசைப்படு பொருளும் விரை சொல்லடுக்கும் நான்கும் மூன்றுமாய் அடுக்கும் எனவே அசை நிலையடுக்கு இரண்டாய் வரும் என்பது தானே பெறப்படும்.

ஆதி

(விரைசொல் ......... வரம்பாகும்.)

விரைவுப் பொருள் குறித்து அடுக்கி உரைத்தலுக்கு மூன்று முறையே வரம்பு.

போ போ போ எனப் புகன்று நின்றான்-சரி.

போ போ போ போ எனப் எனப்புகன்று நின்றான்-நான்கு முறை தவறு.

## அசை நிலையடுக்கு

**419.** **கண்டீ ரென்றா *கொண்டீ ரென்றா**
**சென்ற தென்றா போயிற் றென்றா**
**வன்றி யனைத்தும் வினாவொடு சிவணி**
**நின்றவழி **யிசைக்குங் கிளவி யென்ப. (29)**

(கண்டீர் என்றா கொண்டீர் என்றா
சென்றது என்றா போயிற்று என்றா
அன்றி அனைத்தும் வினாவொடு சிவணி
நின்றவழி இசைக்கும் கிளவி என்ப.)

---

* கேட்டீரென்றா—பாடம்—தெய்.

** யசைக்கும் — சேனா, நச். பாடம். இளம்பூரணர் பாடம் இசைக்கும் எனஇருப்பினும் பொருள் அசைக்கும் என்பதற்கேற்ப அமைந்துள்ளது.

ஆமொ. இல.

'Kandir', 'Kondir', 'Senrathu' and 'poyirru' —all these—when joining with the interro--gative are said to be expletives.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இவை வினையியல் ஒழித்து நின்றஒழிபு [1]கட்டுரை யெடுத்தது.

வினைச்சொற்கள் இங்ஙனம் வினாவொடுபட்டு நின்றவழி யாயக்கால் அசைச் சொல்லாய் நிற்கும் என்பது கருத்து.

வ-று : கண்டீரோ கண்டீரோ; கொண்டீரோ, கொண்டீரோ; சென்றதே, சென்றதே; போயிற்றே, போயிற்றே என வினா வொடு பட்டவழி அடுக்கி அசைநிலையாய் நிற்கும். அவ் வினாவொடு சிவணாக்கால் வினைச் சொல்லேயாம் என்பது.

[2]அன்றியனைத்தும் என்பது அவையிற்றைத் [3]தொகை கொடுத்துக் கூறினவாறு.

'வினாவொடு சிவணி' என்பது ஆ, ஓ என்னும் வினாக் களைக் [4]கடையாத்து நின்றவழி என்றவாறு.

சேனா

இ-ள் : கண்டீர் எனவும் கொண்டீர் எனவும் சென்றது எனவும் போயிற்று எனவும் வரும் வினைச்சொல் நான்கும் வினாவொடு பொருந்தி நின்றவழி அசைநிலை யடுக்காம், எ-று.

---

1. கட்டுரை எடுத்தது—கூறத்தொடங்கியது.
2. அன்றியனைத்தும்—அவையனைத்தும்.
3. தொகை கொடுத்துக் கூறியதாவது எண்ணுத் தொகை யல்லாமல் அவை அனைத்தும் எனத்தொகுத்துக் கூறியதாம். (அன்றி—அவை) அனைத்தும் என்பது நான்கையும் உணர்த்தும்.
4. கடையாத்து—சொல்லின் கடைசியில் சேர்த்து.

கட்டுரையகத்து ஒருவன் ஒன்று சொல்லிய வழி அதற்குடம் படாதவன் [1]கண்டீரே கண்டீரே என்னும்; ஈண்டு வினைச் சொற் பொருண்மையும் வினாப் பொருண்மையும் இன்மையின் அசைநிலையாயினவாறு கண்டுகொள்க. வரையாது கூறினமை யால் 'கண்டீரே' எனச்சிறுபான்மை அடுக்காது வருதலும் கொள்க. ஏனையவும் ஏற்றவழி அடுக்கியும் அடுக்காதும் அசைநிலை யாம். அவை இக்காலத்தரிய; வந்தவழிக் கண்டு கொள்க.

தெய்

இதுவும் ஒருசார் அசைநிலையாமாறு உணர்த்துதல் நுதலிற்று

இ-ள் கண்டீர் என்பது முதலாக ஓதப்பட்ட சொற்கள் வினாப்பொருள் உணர்த்தும் சொல்லொடு கூடிநின்றவழி அப்பொருள்நிலை யிசைக்குஞ் சொல்லாம், எ-று எனவே, சொற்களோடு கூடாதவழி அசைநிலையாம் என்றவாறாம்.

உ-ம் : வினாவொடு கூடுதலாவது கண்டீரோ கண்டீரோ என..............கண்டீ ரென்ப..................

இனி, அவை அசைநிலையாகி வருமாறு [2]"படைவிடுவான் மற்கண்டீர் காமன் மடையடும் பாலொடு கோட்டம்புகின்" (முல்லைக்கலி. 9) என்பதனுள் கண்டீர் என்பது அசைநிலை யாயிற்று. ஏனையவற்றிற்கு உதாரணம் வந்துழிக் கண்டுகொள்க.

நச்

இது வினைச்சொற்களுள் ஒருசாரன அசையாம் என்கின்றது.

இ-ள் : கண்டீர் எனறா கேட்டீர் என்றா சென்றது என்றா போயிற்று என்றா அன்றி அனைத்தும்—கண்டீர் எனவும்

---

1. இக்காலத்தில் பார்த்தாயா பார்த்தாயா என வழங்குவர்.

2. பொருள் : இவள் (தலைவி) தெய்வத்துக்குப் பலியாகத் தரப் பாலொடு காமன் கோயிலிற்புக்கால், அக்காமனும் இவளழகைக் கண்டு தன்கையி லுள்ள படையைக் கீழே போட்டுவிடுவான்.

கேட்டீர் எனவும் சென்றது எனவும் போயிற்று எனவும் வரும் அவ்வினைச் சொல் நான்கும், வினாவொடு சிவணி நின்றவழி அசைக்குங் கிளவி என்ப—வினாவொடு பொருந்தி நின்றவழி அசைநிலை யடுக்காம் என்று கூறுவர் புலவர், எ-று.

எனவே, வினாவொடு சிவணாதவழி வினைச்சொல்லேயாம்.

ஒருவன் கூறிய கூற்றிற்கு உடம்படாதான், 'கண்டீரே கண்டீரே' கேட்டீரே, கேட்டீரே' என்றால், வினைச்சொற் பொருண்மையும் வினாப் பொருண்மையும் இன்றி நிற்கும்.

இது வரையாது கூறினமையின் அடுக்காதும் வரும். ஏனையவும் ஏற்புழி அடுக்கியும் அடுக்காதும் வருமாயினும் அவை இக்காலத்து அரிய.

தெய்வ.

இது வினைச் சொற்களுள் சில அசைநிலையாம் என்கின்றது.

இ-ள் : கண்டீர் எனவும் கொண்டீர் எனவும் சென்றது எனவும் போயிற்று எனவும் வரும் அவ்வினைச் சொற்கள் நான்கும் வினாவொடு பொருந்தி நின்றவழி அசைநிலை யடுக்காம், எ-று.

ஒருவன் ஒன்று கூறியவழி அதற்கு உடம்படாதான் கண்டீரே கண்டீரே என்னும் அவ்வழி அச்சொற்கு வினைப் பொருண்மையும் வினாப் பொருண்மையும் இன்மையின் அசை நிலையாயினவாறு கண்டு கொள்க. ஏனையவும் இவ்வாறே அடுக்கியும் அடுக்காதும் அசை நிலையாம்.

அன்றியனைத்தும் - அவையனைத்தும்.

ஆதி

* கண்டீர், கொண்டீர், சென்றது, போயிற்று இவை போன்றவை வினாவுடன் பொருந்தி வரும் இடங்களில் அசை நிலையாம்.

---

* இவர்காட்டிய உதாரணங்கள் இவர் உரைக்குப் பொருத்தம் இல்லை.

சூத்திரம் 280 இஃதுடன் ஒத்து உணரத்தக்கது.

தாயுமானவர் : அரும் பொன்னே மணியே...........
துரும்பனேன் என்னினும் கைவிடுதல் நீதியோ?
தொண்டரொடு கூட்டு கண்டாய் சுத்த நிர்க்
குணமான பரதெய்வமே பரஞ்சோதியே சுக
வாரியே.

ஔவையார் : மூதுரை : சாந்தனையும் தீயனவே ..............
குறைக்குந்தனையும் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாம் கண்டீர் மரம்.

நல்வழி : ஈட்டும் பொருள் முயற்சி ........... தேட்டம்
மரியாதை காணும் மாநிலத்தீர் கேண்மின்
தரியாது காண்நும் தனம்.

நன்னெறி : பொன்னணியும் வேந்தர் ........... காணுங்கண்
மதியொக்குமோ காண்.

சுப்

உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம் மூவர் கூறும் பொருள் ஒன்றே. தெய்வச்சிலையார் கூறுவது வேறு. சூத்திரத்தில் அசைக்கும் என்பதற்குப் பிரதியாக இசைக்கும் என்பது அவரது பாடமாதலின் அவ்வாறு கூறினரெனினும், 'கேட்டை யென்றா' (30) என்ற மேற்சூத்திரத்தில் 'முன்னுறக்கிளந்த இயல்பாகும்மே' என்பதற்கு அசைநிலையாகும் என்று அவரே பொருள் கூறுதலின் உரையாசிரியர் முதலியோரின் கொள்கையே தக்கது. அவ்வாறாயின் தெய்வச்சிலையார்காட்டிய "படையிடுவான் மற்கண்டீர் காமன்மடையடும் பாலொடு கோட்டம்புகின்" என்ற உதாரணத்தில் கண்டீர் என்பது அசைநிலை என்பது என்றாற் பெறப்படும் எனின், 'செய்யுள் மருங்கினும் வழங்கியல் மருங்கினும் (சொல். 463) என்ற புறநடைச் சூத்திரத்தான் என்க.

**420. கேட்டை யென்றா நின்றை யென்றா
காத்தை யென்றா கண்டை யென்றா
வன்றி யனைத்து முன்னிலை யல்வழி
முன்னுறக் கிளந்த வியல்பா கும்மே. (30)**

(கேட்டை என்றா நின்றை என்றா
காத்தை என்றா கண்டை என்றா
அன்றி அனைத்தும் முன்னிலை அல்வழி
முன்னுறக் கிளந்த இயல்பு ஆகும்மே.)

ஆ. மொ. இல.

'Kettai', 'ninrai' and 'Kandai'-all these-
are to be expletives except in the second
person.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இவை முன்னைய நான்கும்போல வினாவொடு படாது வாளாதே நின்றுழி இவையும் அசைச் சொல்லாய் நிற்கும் என்பது கருத்து.

[1]முன்னின்றவற்று நிலைமையல்வழி யென்பார் 'முன்னிலையல் வழி' என்றார் என்பது.

வ-று : கேட்டை கேட்டை, நின்றை நின்றை, காத்தை காத்தை, கண்டை கண்டை எனவரும். இவையும் [2]கட்டுரைக் கண் வருமிடம் அறிந்து கொள்க.

இனி, இவை வினாவொடு பட்டுழியாயக்கால் அசை நிலையாகா என்பது.

சேனா

இ-ள் : கேட்டை எனவும், நின்றை எனவும் காத்தை எனவும் கண்டை எனவும் வரும் நான்கும் [1]முன்னிலை யல்லாக் கால் மேற்சொல்லப்பட்ட அசைநிலையாம், எ-று.

---

1. முன்சூத்திரத்தில் (29ல்) நின்ற கண்டீர் முதலியவற்றின் நிலைமை யல்லாதவழி என்றது வினாவொடு கூடாதவழி என்பது.
2. கட்டுரை—உரையாடல்
1. கேட்டை முதலாயின முன்னிலை யாயின் வினைச் சொற்களாம்; அசைநிலையாயின் இடைச் சொற்களாம் என்பது சேனா. கருத்து.

இவையும் கட்டுரைக்கண் அடுக்கியும் சிறுபான்மை அடுக்காதும் ஏற்றவழி அசைநிலையாய் வருமாறு கண்டு கொள்க.

நின்றை காத்தை என்பன இக்காலத்துப் பயின்று வாரா. [2]வினாவிற்கடையாக அடுக்கி வந்தவழி முன்னிலை யசைநிலையேயாம். இவை அடுக்கியும் அடுக்காதும் முன்னிலைச் சொல்லாதலும் உடைமையான், அந்நிலைமை நீக்குதற்கு 'முன்னிலையல்வழி' என்றார்.

முன்னுறக் கிளந்த இயல்பாகும் என்றதனான், முன்னையைபோலச் சிறுபான்மை வினாவொடு வருதலுங் கொள்க.

முன்னிலை யல்வழி யென்பதற்கு முன்னைபோல வினாவொடு சிவணி நில்லாதவழி யென்றுரைத்தாரால் உரையாசிரியர் எனின், அற்றன்று; வினாவொடுசிவணல் இவற்றிற் [3]கொன்றான் எய்தாமையின் விலக்கவேண்டா; அதனான் அவர்க்கது கருத்தன் றென்க.

இரண்டு சூத்திரத்தாலும் கூறப்பட்டன வினைச் சொல்லாதலும் இடைச்சொல்லாதலும் உடைமையான் வினையியலுள்ளும் இடையியலுள்ளும் கூறாது ஈண்டுக் கூறினார்.

அஃதேல் ஆக, ஆகல், என்பது (சொல்.280) என்பனவற்றோடு இவற்றிடை வேற்றுமை யென்னை அவையும் வினைச்சொல்லாதலுடைமையான் எனின், இசை நிறைத்தற்கும் பொருள் வேறுபாட்டிற்கும் அடுக்கி வரின் அல்லாது அடுக்காது வருதலே வினைச் சொற்கியல்பாம். ஆக, ஆதல், என்பது என்பன அடுக்கியல்லது நில்லாமையின், வினைச்சொல் இடைச் சொல்லாயின எனப்படா; கண்டீர் கொண்டீர் என்பன முதலாயின வினைச் சொற்குரிய ஈற்றவாய் அடுக்கியும் அடுக்காதும் வருதலால் வினைச்சொல் அசைநிலையாயின எனப்படும்; இது தம்முள் வேற்றுமை யென்க. அல்லதூஉம் வினாவொடு சிவணி நிற்றலானும் வின்னைச்சொல் எனவேபடும் என்பது.

---

2. கேட்டையோ என்பதில் இறுதி ஓ வினா; கேட்டை என்பது அதற்கு அடை யென்பது கருத்து.

3. ஒன்றான்—ஒன்றானும் அதாவது ஓரிடத்தும். வினாவொடு இவை சிவணும் என்பது எங்கும் முன்னர்ச் சொல்லப்படாமையின் விலக்குதல் வேண்டுவதில்லை.

தைய்

இதுவும் அது.

இ-ள்: இந்நான்கு சொல்லும் முன்னிலை வினைச் சொல் லல் வழி அசைநிலையாகும், எ-று.

உ-ம்: [1]"மோரொடு வந்தா டகை கண்டை யாரொடுஞ் சொல்லி யானன்றே வனப்பு" என்றவழிக் கண்டை என்பது அசைநிலையாயிற்று. ஏனையவும் வந்தவழிக் கண்டு கொள்க.

நச்

இதுவும் அது

இ-ள்: கேட்டை என்றா நின்றை என்றா காத்தை என்றா கண்டை என்றா அன்றி அனைத்தும் — கேட்டை எனவும் நின்றை எனவும் காத்தை எனவும் கண்டை எனவும் வரும் அம்முன்னிலை வினைச்சொல் நான்கும், முன்னிலை அல்வழி—முன்னிலைப் பொருளை உணர்த்தி நில்லாக்கால், முன்னுறக் கிளந்த இயல்பு ஆகும்மே—மேற் சொல்லப்பட்ட அசைநிலையாம், எ-று.

இவையும் கட்டுரைக்கண் அடுக்கியும் சிறுபான்மை அடுக் காதும் வந்து, ஏற்புழி அசைநிலையாய் நிற்கும். இவையும் இக்காலத்து அரிய. இவை சிறுபான்மை வினாவொடு வருதலும் கொள்க.

வெள்

இதுவும் அது.

இ-ள்: கேட்டை எனவும் நின்றை எனவும் காத்தை எனவும் கண்டை எனவும் வரும் அந்நான்கும் முன்னிலைப் பொருளை உணர்த்தி நில்லாதவழி மேற்சொல்லப்பட்ட அசை நிலையாம், எ-று.

இவையும் கட்டுரைக்கண் அடுக்கியும் சிறுபான்மை அடுக்காதும் ஏற்றவழி அசைநிலையாய் வருமாறு வழக்கிற்

1. பொருள்:

கண்டு கொள்க. நின்றை காத்தை என்பன இக்காலத்துப் பயின்று வாரா என்பர் சேனாவரையர். முன்னர்க் கூறப்பட்ட 'கண்டீரே' முதலியன வினாவிற்கு அடையாக அடுக்கி வந்த வழி முன்னிலை யசைநிலையே யாமன்றி வினைச்சொல்லாதல் இல்லை. இச்சூத்திரத்திற் கூறப்பட்ட கண்டை முதலியன அடுக்கியும் அடுக்காதும் முன்னிலைச் சொல்லாகியும் அசை நிலையாகியும் வருவன ஆதலின் அந்நிலைமை நீக்குதற்கு 'முன்னிலையல்வழி' என்றார் ஆசிரியர்.

## ஆதி

*கேட்டை நின்றை காத்தை கண்டை இவை போன்றவை முன்னிலையுடன் அன்றிப் பிற இடங்களில் வருமாயின் முன் உரைத்தபடி அசைநிலையாகவே கொள்க.

கேட்டனை, நின்றனை, காத்தனை, கண்டனை—இவற்றின் இலக்கிய வடிவம் முந்திய நான்கும். இவை 'நீ கேட்டனை' என்ற முறையில் செய்தி அறிவிப்பின் முன்னிலை வினைமுற்றாம். இன்றேல் அசைநிலையாம்.

கேட்டாய் கேட்டாய் நன்றாய்க் கேட்டு வந்து விட்டாயே —அசைநிலை.
நின்றாய் நின்றாய் நின்று என்ன பயன்—அசைநிலை.
காத்தை காத்தை களவு போம்படிக் காத்தாய்—அசைநிலை.
கண்டை கண்டை கண்ணை மூடிக்கொண்டு கண்டை —அசைநிலை.
படித்தான் புத்தகத்தைத் திறக்காமல் படித்தான்.

இவ்வாறு நேர் பொருளின்றிக் குறிப்பு முறையில் நிற்பவை அசைநிலை. வந்து விட்டான்; எல்லோரும் போனபிறகு ஏன் வரவேண்டும்?—அசைநிலை.

---

இவர் கூறும் உரை ஆய்வுக்குரியது. காட்டிய உதாரணங்கள் பொருந்துமாறில்லை.

# வினை முற்றுகளின் வகை

421. இறப்பி னிகழ்வி னெதிர்வி னென்றச்
சிறப்புடை மரபி னம்முக் காலமுந்
தன்மை முன்னிலை படர்க்கை யென்னு
மம்மூ விடத்தான் வினையினுங் குறிப்பினு
மெய்ம்மை யானு *மிவ்விரண் டாகு
மவ்வா றென்ப முற்றியன் மொழியே (31)

(இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்று அச்
சிறப்புடை மரபின் அம்முக் காலமும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம் மூவிடத்தான் வினையினும் குறிப்பினும்
மெய்ம்மை யானும் இவ்விரண்டு ஆகும்
அவ் ஆறு என்ப முற்றுஇயல் மொழியே)

ஆ. மொ. இல-

Past, present and future-these three tenses of distinctive nature in three Persons, first, second and third of tense denoting verb and appellative verb each in two, the finite verbs are said to be six.

பி. இ. நா.
வீர. 71, 72

ஒருவன் ஒருத்தி சிறப்புப் பலரொன்றொடு பலவை
மருவு படர்க்கையொடு காலம் மூன்றையும் வைத்துறழத்
துருவமலி பதினெட்டாம் தொழில்பதம் தொல்கருத்தா
உருவ மலியும் பொருள்மேல் நிகழும் ஒளியிழையே.

---

* ஈரிரண்டாகும் நச்-தெய்-பாடம்.

முன்னிலை தன்மை யிடத்தினில் காலங்கள் மூன்றையும் வைத்
துன்னும் ஒருமை சிறப்பொடு பன்மையும் உய்த்துறழ்ந்தால்
பன்னுந் தொழிற்சொல் பதினெட்டுள கருத்தாப் பொருள் மேல்
மன்னி நிகழ்தொகை முப்பதொ டாறும் வகுத்தறியே.

நன் 224

ஒருவன்முத லைந்தையும் படர்க்கை யிடத்தும்
ஒருமை பன்மையைத் தன்மை முன்னிலையினும்
முக்காலத்தினும் முரண முறையே
மூவைந் திருமூன் றாறாய் முற்று
வினைப்பதம் ஒன்றே மூவொன் பானாம்.

இல. வி. 232 ஷெ ஷெ ஷெ

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், வினையியலுள் ஓதப்பட்டன சில சொற்கள் முற்றுச்சொல் என்னும் குறியெய் துதல் நுதலிற்று.

* அதனாற் பயந்தது என்னையெனின், அச்சொற்கு முன்பு முடிபு கூறி ஈண்டுக் [1] குறியிட்டான் என்பது பயன் என்பது.

இதன் பொழிப்பு: இறந்தகாலம் எதிர்காலம் நிகழ்காலம் என்னும் மூன்று காலமும் உடையவாய்த் தன்மை முன்னிலை படர்க்கை யென்னும் மூன்றிடத்தும் வினையும் வினைக் குறிப்பும் பற்றி அம்மூன்றிடங்கள் தோறும் வினையும் வினைக் குறிப்பும் என இரண்டாம் அவ்வாறு கூற்றுச் சொற்களை முற்றுச் சொல் என்று கூறுப ஆசிரியர், எ-று.

---

* இக்கருத்தைச் சேனாவரையர் மறுப்பர். நச்சினார்க் கினியர் ஏற்பர்.

1. குறியிட்டான் - பெயரிட்டான்.

'அவ்வாறு' என்றது தன்மை[2] யிரண்டு பகுப்பவாயும், முன்னிலை இரண்டு பகுப்பவாயும், படர்க்கை இரண்டு பகுப்பவாயும் வருதல் நோக்கி என்பது.

வ-று : உண்டேன், கரியென் எனவும்; உண்டாய், கரியை எனவும், உண்டான், கரியன் எனவும் வரும். பிறவும் அன்ன.

முற்றுச் சொல் என்றது செய்கையும் பாலும் செயப்படு பொருளும் தோன்றி நிற்றலின் முற்றுச் சொல்[3] என்பாரும், மற்றோர் சொல் நோக்காது முடிந்து நிற்றலின் முற்றுச்சொல்[4] என்பாரும், எக்கால் அவை தம் எச்சம் பெற்று நின்றன அக்கால் பின்யாதும் நோக்காவாய்ச் செப்பு மூயிற்றுப்போல அமைந்து மாறுதலின் முற்றுச் சொல்[5] என்பாரும் என[6] இரு பகுதியர் ஆசிரியர் என்பது.

சேனா

இ-ள் : முற்றுச் சொல்லாவது இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்று காலமும், தன்மை முன்னிலை படர்க்கை யென்னும் மூன்றிடத்தும்; உயர்திணையும் அஃறிணையும் இருதிணைப் பொதுவுமாகிய பொருள்தோறும் வினையானும் குறிப்பானும் இவ்விரண்டாய்வரும் அவ்வறுவகைச் சொல்லாம் என்று சொல்லுவர் ஆசிரியர், எ-று.

உ-ம் : சென்றனென், கரியென் எனவும் ; சென்றது, கரிது எனவும் ; சென்றனை, கரியை எனவும் வரும்.

---

2. இரண்டுபகுப்பு-தெரிநிலை வினை குறிப்புவினை.
3. தெய்வச்சிலையார் (பிற்காலத்தவர்).
4. சேனாவரையர்.
5. நச்சினார்க்கினியர். இளம் பூரணர் மூவர்கருத்தையும் ஏற்பர்.
6. இருபகுதியர் என்பது மூன்று பகுதியினர் என்றிருத்தல் வேண்டும்.

[1]இடம் உணர்த்தலும் திணையும் பாலும் விளக்கலும் போல ஒருசாரனவற்றிற்கே யாகாது எல்லா முற்றுச் சொற்கும் காலம் முற்சிறத்தலின், 'சிறப்புடை மரபின் அம்முக்காலமும்' என்றார்.

[2]வினையினும் குறிப்பினும் என்புழி ஓரீற்றவாகிய வினையும் வினைக்குறிப்புமே கொள்ளப்படும், இவ்விரண்டாதற்கு ஏற்பன அவையாகலான்.

மெய்ம்மையாவது பொருண்மை.

உயர்திணையும் அஃறிணையும் அல்லது இருதிணைப் பொது என்பதோர் பொருள் இல்லையாயினும், சென்றனை, கரியை என்பன செலவிற்கு வினைமுதலாதலும் பண்பியுமாகிய ஒரு நிமித்தம் பற்றி இருதிணைக்கண்ணும் சேறலின், அந்நிமித்தம் இருதிணைப் பொது எனப்பட்டது.

வினையினுங் குறிப்பினும் இவ்விரண்டாய் வருதலாவது தெரிநிலைவினையாற் றெற்றெனத் தோன்றலும் குறிப்பு வினையாற் றெற்றெனத் தோன்றாமையுமாம்.

முற்றி நிற்றல் முற்றுச்சொற்கு இலக்கணமாதல் 'முற்றியல் மொழியே' என்பதனாற் பெற்றாம். [1]முற்றி நிற்றலாவது இது

---

1. இடம் மட்டும் உணர்த்துவன தன்மை முன்னிலை வினைமுற்றுகள். திணைபால் விளங்குவது படர்க்கை வினைமுற்று.

2. உண்டான், கரியன் என னகரவீறே தெரிநிலைக்கும் குறிப்புக்கும் வந்தவாறு காண்க. பிற பால்களுக்கும் இடங்களுக்கும் கொள்க.

1. பிறிதோர் சொல்லோ டியையாது தாமே தொடராதற் கேற்கும் வினைச்சொல் முற்றாம்; பிறிதோர் சொற் பற்றியல்லது நிற்றலாற்றா வினைச்சொல் எச்சமாம். (வினையியல் 35) இதன் தடைவிடை அச்சூத்திர வுரையிற் காண்க.

என்பது வினையியலுட் கூறினாம் (38). திணையும் பாலும் இடமும் விளக்கல் எல்லா முற்றிற்கும் இன்மையான் இலக்கண மின்மையறிக.

[2]உயர்திணை அஃறிணை விரவு என்னும் பொருள் மேல் வினையும் வினைக்குறிப்புமாய் வருதல் பற்றி 'அவ்வாறென்ப' என்றார்: காலமும் இடமும் முதலாயினவற்றோடு கூட்டிப் பகுப்பப் பலவாம்.

[3]ஊரானோர் தேவகுலம் என்றாற்போல மெய்ம்மையானும் என்புழி 'ஆன்' என்பது 'தொறும்' என்பதன் பொருட்டாய் நின்றது.

முன்னர்ப் 'பிரிநிலை' வினையே பெயரே (சொல் 480) என்புழிப் பெயரெச்சமும் வினையெச்சமும் கூறுபவாகலின், அவற்றோடியைய முற்றுச் சொல்லையும் ஈண்டுக் கூறினார். கூறவே, முற்றுச் சொல்லும் பெயரெச்சமும் வினையெச்சமும் வினைச்சொல் மூவகைத்தாதல் இனிது உணரப்படும் என்பது.

[4]உரையாசிரியர் வினையியலுள் ஓதப்பட்டன சில வினைச் சொற்கு முற்றுச்சொல் என்று குறியிடுதல் நுதலிற்று. இச்

---

2. இளம்பூரணர் மூவிடத்தும் தெரிநிலை குறிப்பு வருதலின் ஆறு எனக்கொண்டார். அதுவே சிறக்கும்.

3. ஊரான் ஓர் தேவகுலம் – ஊர்தோறும் ஓர் கோயில். மூவிடத்தான் என்பது மூவிடந்தோறும் என்னும் பொருளது.

4. 'அவ்வாறு என்ப முற்றியல்மொழி' என்னுந் தொடர் முற்றியல்மொழி ஆறு வகைப்படும் என்பர். என்ற கருத்துடையது. அதனால் வகைப்பாடு கூறுதல் இச்சூத்திரத்தின் நோக்கமாம். முற்று எனப்பெயரிடுதல் நோக்கமாயின் 'அவ்வாறும் முற்றியல் மொழி' என்றுகூறியிருப்பார் ஆசிரியர். என்ப என்னும் சொல் அவ்வாறு என்பதுடன் சேர்த்துக்கூறப்படலின் வகை

சூத்திரம் என்றாரால் எனின், குறியீடு கருத்தாயின், 'அவ்வா றென்ப முற்றியன் மொழி' என்னாது 'அவ்வாறு முற்றியன் மொழி' எனல் வேண்டும் ஆகலான், அது போலியுரை யென்க. 'முற்றியன் மொழியேயவ்வாறென்ப என மொழிமாற்றவே குறியீடாம் எனின், குறியீடு ஆட்சிப் பொருட்டாகலின் அக்குறியான் அதனை யாளாமையான், மொழிமாற்றி 'யிடர்ப்படுவ தென் னையோ வென்பது. அல்லதூஉம் முற்றியன் மொழியெனக் குறியிட்டாராயின், அவை பெயரெஞ்சு கிளவி எனவும், இவை வினையெஞ்சு கிளவி எனவும் குறியிடல் வேண்டும். அவ் வாறு குறியிடாமையானும் அது கருத்தன்றாம். அதனான் வினைச்சொல்லுள் இருவகையெச்சம் ஒழித்து ஒழிந்த சொல் முற்றி நிற்கும் என்றும், அவை இனைத்துப் பாகுபடும் என்றும் உணர்த்தல் இச்சூத்திரத்திற்குக் கருத்தாகக் கொள்க.

## தெய்

(இச்சூத்திரத்தையும் அடுத்துவரும் இரண்டு சூத்திரங் களையும் வினையியல் இறுதியில் வைத்து உரையெழுதினார்

---

4. கூறுதலே நோக்கமாம். சூத்திரம் செய்யுளாதலின் என்ப என்பதை 'அவ்வாறு முற்றியல் மொழி என்ப' எனக்கூட்டினால் அவ்வாறும் முற்றுச்சொல் என்பர் எனப்பொருள்பட்டுக் குறியிடுதல் நோக்கமாம் எனக் கொள்ளலாமே. என்பது வினா.

விடை : குறியிடுதல் ஆளுவதற்காக. ஆசிரியர் வேறெங்கும் முற்று என ஆளவில்லை. அதனால் என்ப என்பதை மொழி மாற்றாகக் கொள்ள வேண்டு வதில்லை. முற்றியல் மொழி எனப்பெயரிட்டதாகக் கொள்ளின் அது போல வினையெச்சத்துக்கு வினை யெஞ்சுகிளவி எனவும் பெயரெச்சத்திற்குப் பெயரெஞ்சு கிளவி எனவும் பெயரிட வேண்டும். அவ்வாறு பெயரிட வில்லை அதனால் இங்கும் முற்றியல் மொழி எனப் பெயரிட்டதாகக் கொள்ள வேண்டுவதில்லை. அதனால் இச்சூத்திரம் வினைச்சொற்களுள் வினையெச்சமும் பெயரெச்சமும் நீங்க மற்றையன முற்றி நிற்கும் என்றும் அவை அறு வகைப்படும் என்றும் உணர்த்துவதே.

தெய்வச்சிலையார். உரை, வினையியல் உரைவள இறுதியில் காண்க)

நச்

இது வினைச் சொற்களுள் ஒரு சாரனவற்றிற்கு ஆட்சி வேண்டியதன் குணம் காரணமாகக்கொண்டு ஓர் குறியிடுதல் கூறுகின்றது.

இ-ள் : தன்மை முன்னிலை படர்க்கை என்னும் அம்மூவிடத்தான்-தன்மை முன்னிலை படர்க்கை என்று சொல்லப்பட்ட அம்மூன்றிடத்தின் கண்ணும் வரும், மெய்ம்மையானும்-உயர்திணை அஃறிணை விரவுத்திணை யென்னும் மூவகைப் பொருள் தோறும், வினையினும் குறிப்பினும் ஈரிரண்டாகும் என்ற அவ்வாறு மொழி- தெரிநிலை வினையானும் குறிப்பு வினை யானும் இவ்விரண்டாய் வரும் என்று யான் முற்கூறிய அவ் வாறு வகைச் சொல்லை, இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்ற சிறப்பு உடை மரபின் அம் முக்காலமும் இயல் முற்று என்ப-இறப்பு ஒன்றானும் நிகழும் சிறப்புடை மரபானும் நிகழ்வு ஒன்றானும் நிகழும் சிறப்புடை மரபானும் எதிர்வு ஒன்றானும் நிகழும் சிறப்புடை மரபானும் அம்முக்காலத்தும் நிகழும் சிறப்புடை மரபானும் இயலும் முற்றுச்சொல் என்று பெயர் கூறுவர் ஆசிரியர், எ-று.

'அம்' 'ஆம்' என்னும் சூத்திரம் (வினை. 5) முதலாகப் 'பல்லோர் படர்க்கை' (வினை-80) என்னும் சூத்திரம் இறுதி யாக [1]மூவகை யிடமும் [2]மூவகைப் பொருளும் [3]இருவகை வினை யும் எடுத்து ஓதியவற்றை ஈண்டும் ஓதியது [4]அனுவாதம்

---

1. மூவகையிடம் - தன்மை, முன்னிலை, படர்க்கை

2. மூவகைப் பொருள் - உயர்திணை அஃறிணை பொதுத் திணைப் பொருள்கள்.

3. இருவகை வினை- தெரிநிலை, குறிப்பு வினைகள்

4. மீண்டும் கூறுதல்.

ஆயிற்று. ஆண்டு ஓதாது எஞ்சி நின்ற காலமும் [5]குறியீடும் ஈண்டு ஓதியது இலக்கணமாயிற்று. முன்னர்க் 'குறிப்பினும்-வினையினும் (வினை. 4) என்னும் சூத்திரத்தில் 'காலமொடு வரூஉம் வினைச் சொல் எல்லாம்' என்றது [6]மூவகை வினைக்கும் பொதுவாய் நின்று [7]ஒரோவோர் முற்று வினையும் முக்காலமும் பெற்றே வரும் என்னும் ஐயம் நிகழ்த்திற்றதனை ஒரோவோர் காலம் பெற்று வருவனவும் முக்காலமும் பெற்று வருவனவுமாய் நிற்கும் முற்று என ஐயம் அகற்றினார் இச்சூத்திரத்தான். எச்சங்கட்கு மேனிற் சூத்திரத்தான் ஐயம் அகற்றுப. மேல் 'பிரிநிலை வினை' (எச். 84) என்னும் சூத்திரத்தான் எச்சங்கட்குக் குறியீடு கூறுகின்றார். ஆதலின் அதற்கு ஏற்ப முற்றிற்கும் குறியீடு கூறினார்.

இனி, அவை காலத்தொடு வருங்கால், றகர உகரம் இறந்த காலத்தாற் சிறந்தது. [8]உம் மொடு வரூஉம் கடதறவும், [9]கடதற என்னும் அந்நான்கு ஊர்ந்த குன்றியலுகரமும், அல்லும், பகரமும், ஆரும், ஆவும் வவ்வும் ஆகிய பதின் மூன்றும் எதிர் காலத்தாற் சிறந்தன. அம், ஆம், எம், ஏம், என், ஏனும்; அன் ஆனும்; அள், ஆளும்; அர், ஆரும்; அகரமும், [10]தகர உகரமுமாகிய பதினான்கும் முக்காலத்தாற் சிறந்தன. முற்று இருபத்தொன் பதின்கண் [11]டகரஉகரம் வினைக்குறிப்பு ஆதலின், அதுவும் முக்காலத்தாற் சிறந்ததாம். ஆகத் தெரிநிலை முற்று இருபத்தெட்டும் காண்க.

---

5. குறியீடு-முற்று எனப் பெயரிடுதல்

6. மூவகை வினை-பெயரெச்ச வினை, வினையெச்சவினை முற்று வினை.

7. ஒரோவோர் முற்றுவினை - ஒவ்வொரு முற்று வினையும்.

8. உம்மொடு.........கடதற = கும், டும், தும், றும்.

9. கடதற.........குன்றியலுகரம் = கு, டு, து, று.

10. தகரவுகரம் — து

11. டகரவுகரம் — டு

யார், எவன் என்பனவோனின், அவையும் முப்பாற்கும் இருபாற்கும் பொதுவாகி இடம் உணர்த்தாவேனும் வினைக் குறிப்பு ஆகலின் முக்காலமும் உடைய என்று உணர்க.

இரு திணைக்கும் ஓதிய குறிப்பு வினை பதினெட்டும் முக் காலமும் உடைய.

இனி, பொருள் உணர்த்தாது இடம் உணர்த்தும் முன்னி லையும் வியங்கோளுமாகிய விரவு வினைமுற்றுக்களும் இடமும் பொருளும் உணர்த்தா. விரவு வினை முற்றுக்களும் [12]பிரிவு வேறு படூஉம் செய்தியவாய் நிற்றலின், இடமும் பொருளும் உணர்த்திக் காலம் கொண்டே நிற்கும் என்று உணர்க.

இனி ஐயும் ஆயும் இருவும் ஈரும் முக்காலத்தாற் சிறந்தன. இகரமும், இன்னும், வியங்கோளும், செய்ம்மனவும் எதிர்காலத் தாற் சிறந்தன. செய்யும் என்பது நிகழ்காலத்தாற் சிறந்தது. இன்மை செப்பலும், வேறு என் கிளவியும் வினைக் குறிப்பு ஆதலின் முக்காலத்தாற் சிறந்தன.

இனி விரவு வினையுள் வினையெச்சமும் பெயரெச்சமும் மேல் கூறுதும். இவை ஈரிரண்டு ஆங்கால் ஓர் ஈற்றின் கண்ணே கொள்க.

உ-ம் : சென்றனன் கரியன் எனவும்; சென்றது, கரிது எனவும்; சென்றனை, கரியை எனவும் வரும்.

ஈண்டுக் காலமும் குறியீடும் கூறினாரேனும் 'வந்தது கொண்டு வாராதது உணர்த்தல்' என்னும் உத்திபற்றி வினை யியலுள் காலமும் குறியீடும் விரித்து ஆசிரியர் எல்லாரும்,

---

12. பிரிவு வேறுபடூஉம் செய்தி — ஒருதிணையினின்றும் பிரிந்து வேறு திணைக்குரியவாதல். சாத்தா செல் என்றால் சாத்தன் என்னும் விரவுப் பெயர் ஆடவனைக் குறிப்பின் அஃறிணையினின்றும் பிரிந்து வேறுபடுதலும், மாட்டைக் குறிப்பின் உயர்திணையினின்றும் பிரிந்து வேறுபடுதலும் காண்க.

[13]உரையும் காண்டிகையும் கூறினார் என்று உணர்க. இவை முற்றிநிற்குமாறு 'அவற்றொடு வருவழி' (வினை. 38) என்னும் சூத்திரத்துள் கூறினார்'.

'மெய்ம்மையானும்' என்றது 'ஊரானோர் தேவகுலம்' என்றாற்போலத் 'தொறு' என்பதன் பொருட்டாய் நின்றது.

இச்சூத்திரத்திற் கூறியன எல்லாம் முற்றப் பெறுவனவும் குறையப் பெறுவனவும் வினையியலுள் விரித்து ஓதிய வாற்றான் உணர்க.

வெள்

இது முற்றுச் சொற்களின் இலக்கணமும் அவற்றின் பாகுபாடும் உணர்த்துகின்றது.

இ-ள் : இறந்த காலம் எதிர் காலம் நிகழ்காலம் என்னும் சிறப்புடைய இயல்பினவாகிய அம் மூன்று காலமும் உடையவாய்த் தன்மை முன்னிலை படர்க்கை என்னும் அம்மூவிடத்தும் உயர்திணையும் அஃறிணையும் இருதிணைப் பொதுவுமாகிய பொருள் தோறும் வினையும் வினைக் குறிப்பும் என இவ்விரண்டாய் வரும் அவ்வறு கூற்றுச் சொற்களையும் முற்றுச்சொல் என்று கூறுப ஆசிரியர், எ-று.

மூவிடத்தும் வினையும் குறிப்பும் பற்றி இவ்விரண்டாய் வருதலின் அறுவகைச் சொல்லாயின.

உ-ம் : உண்டேன், கரியேன் எனவும்; உண்டாய், கரியை எனவும், உண்டான், கரியன் எனவும் வினைச் சொற்கள் மூவிடத்தும் வினையும் வினைக்குறிப்பும் என இவ்விரண்டாய் ஆறாய் வந்தன.

இடமும் திணையும் பாலும் விளக்குதல் ஒருசார் வினைச் சொற்கே உரியவாதல் போலாது காலம் உணர்த்துதல் எல்லா முற்றுச் சொற்கும் முன்னர்ச் சிறத்தலின் 'சிறப்புடை மரபின் அம்முக்காலமும் என்றார். வினையினும் குறிப்பினும் இவ்

13. உரை—விருத்தியுரை

விரண்டாய் வருதலாவது, தெரிநிலை வினையால் தெளிவாகக் காலந் தோன்றுதலும் குறிப்பு வினையால் அவ்வாறு காலந் தெளியத் தோன்றாமையும் ஆகிய இருதிறத்தவாய் வருதல். மெய்ம்மையானும்—பொருள்தோறும்; உயர்திணை அஃறிணை விரவுத்திணை என்னும் மூவகைப் பொருள்தோறும். ஆன் உருபு தொறுப் பொருளில் வந்தது. முற்றி நிற்றல் முற்றுச் சொற்கு இலக்கணமாதல் 'முற்றியன் மொழியே' என்பதனாற் புலனாம்.

ஆதி

இறந்த காலம் நிகழ்காலம் எதிர்காலம் என மரபாக வருங் காலம் மூன்று. தன்மை முன்னிலை படர்க்கை என இடம் மூன்று. இவற்றுக்குத் தெரிநிலை வினை குறிப்பு வினை முற்றின் இயல்பு முப்பத்தாறாகும்.

| மூவிடம் | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் | மொத்தம் | |
|---|---|---|---|---|---|
| தன்மையொருமை | ,, | ,, | ,, | 3 | 6 |
| தன்மைப்பன்மை | ,, | ,, | ,, | 3 | |
| முன்னிலையொருமை | ,, | ,, | ,, | 3 | 6 |
| முன்னிலைப்பன்மை | ,, | ,, | ,, | 3 | |
| படர்க்கையொருமை | ,, | ,, | ,, | 3 | 6 |
| படர்க்கைப்பன்மை | ,, | ,, | ,, | 3 | |

ஆகத் தெரிநிலை வினை 18
இவ்வாறே குறிப்புவினை 18

ஆக மொத்த வினைமுற்று வகை 36

உரையாசிரியர்கள் இங்கு முறைதவறி ஏதேதோ எழுதுகிறார்கள். அவர்கள் அவ்வாறு எழுதக் காரணம் ஈற்றடியின் 'அவ்வாறென்ப' என்பதற்கு 'அவ் ஆறுவகை என்ப' எனப் பொருள் கூறுகின்றனர். அது தவறு அவ்வாறு—ஆறு ஆறு. ஆ + ஆறு = அவ் வாறு. எவ் வாறு என விளக்குதும்.

குற்றியலுகரப் புணரியல் (64),
ஆறன் மருங்கின் குற்றிய லுகரம்

ஈறுமெய் ஒழியக் கெடுதல் வேண்டும். ஆறு—று உகரமும் ற் மெய்யும் கெட்டு ஆ+ஆறு ஆகிறது. குற்றியலுகரப் புணரியல் (35) 'மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகும்' என்ற விதிப்படி 'ஆ' குறுகி அ+ஆறு=அவ் வாறு ஆயிற்று. அதன் பொருள் $6 \times 6 = 36$.

நன்னூலார் இதனைத் தெளிவாக அறிவிக்கின்றார். (சூ.199) 'ஒன்பது ஒழித்த எண் ஒன்பதும் இரண்டின், முன்னதின் முன்னலவோட, உயிர்வரின் வவ்வும் மெய்வரின் வந்ததும் மிகல்நெறி' என்று விதித்தார். நிலைமொழி முதல் குறுகும் என்பதை ''எண்ணிறை...மூன்று ஆறு ஏழ் குறுகும்'' (188) என விதித்தார்.

இதனைக் கருத்துட் கொள்ளாமல் உரையாசிரியர்கள் எச்சவியல் 16, 21 காட்டும் அவ் வாறு போல இதனையும் எண்ணித் தம் பிறழ் உணர்ச்சிக்கு ஏற்பப் பொருளையும் திரித்து விட்டார்கள்.

ஆசிரியர் இங்கு வினைமுற்று வகைக்கு வரம்பு காட்டுகிறார். ஆதலின், உரையாசிரியர்கள் கருத்து பொருத்தமற்றது.

சுப்

பொருள் : இறந்தகாலம் எதிர்காலம் நிகழ்காலம் என்னும் மூன்றுகாலமும் உடையவாய்த் தன்மை முன்னிலை படர்க்கை யென்னும் மூன்றிடத்தும் வினையும் வினைக்குறிப்பும் பற்றி, அம்மூன்றிடங்கள்தோறும் வினையும் வினைக்குறிப்பும் என இரண்டாம்; அவ்வறு கூற்றுச் சொற்களை முற்றுச்சொல் என்று கூறுப ஆசிரியர், எ-று.

.........................................

சூத்திரத்தில் 'மெய்மை' என்பதும் வினையையும் வினைக் குறிப்பையும் குறிக்கின்றது என்ம் உரையாசிரியரும்; உயர் திணை அஃறிணை விரவுத்திணை இம்மூன்றனையும் குறிக் கின்றது என்று சேனாவரையரும் நச்சினார்க்கினியரும்; ஒருமை பன்மை இவற்றைக் குறிக்கின்றது என்று தெய்வச்சிலையாரும் கூறினர்.

ஈரிரண்டாகும் அவ்வாறு' என்பதற்கு இருபத்துநான்கு என்று தெய்வச்சிலையார் கொள்ளும் பொருள் பொருத்த முடைத்து. மேலும் 'பிரிநிலை வினையே........ஆயீரைந்து' (சொல். 480) என்ற சூத்திரம் எஞ்சு பொருட்கிளவி பத்து வகைப்படும் எனத் தொகுத்துக் கூறியவாறு, இச்சூத்திரம் முற்றுவினை இருபத்துநான்கு வகைப்படும் எனத் தொகுத்துக் கூறிற்று என்னலாம்.

................................

சேனாவரையர் இங்கு, "வினைச் சொல்லுள் இருவகை எச்சம் ஒழித்து ஒழிந்த சொல் முற்றி நிற்கும் என்றும், அவை இனைத்துப் பாகுபடும் என்றும் உணர்த்தல் இச்சூத்திரத்திற்குக் கருத்தாகக் கொள்க" என்றாரேனும், முன்பு "முற்றி நிற்றல் முற்றுச் சொற்கு இலக்கணமாதல் 'முற்றியன் மொழியே' என்றதனால் பெற்றாம்" என்று கூறினமையான், 'அவை இனைத்துப் பாகுபடும் என்று உணர்த்தல் இச்சூத்திரத்தில் விதேயமாகும் என்பதே' அவர் கருத்தாகும்.

நச்சினார்க்கினியர், "காலமும் குறியீடும் ஈண்டு ஓதியது இலக்கணமாயிற்று' என்று கூறி, ஒரோவோர்காலம் பெற்று வருவனவும் முக்காலமும் பெற்று வருவனவுமாய் நிற்கும் முற்று என ஐயம் அகற்றினார் இச்சூத்திரத்தான்" என்று கூறுவது முன்னுக்குப் பின் முரணுகின்றது. ஐயம் எதனால் அகற்றப் பட்டது? இது இனைத்துப் பாகுபடும் என்றதனால் அன்றோ? ஆதலின் இனைத்துப் பாகுபடும் என்று கூறுவதே இச்சூத்திரத் திற்குப் பயன் என்று அவர் கூறல் வேண்டும்.

**422. எவ்வயின் வினையும் *அவ்விய னிலையும் (32)**

(எவ்வயின் வினையும் அவ் இயல் நிலையும்).

**ஆ. மொ. இல.**

All kinds of verbs (other than those mentioned above) stand in the same position.

---

* அவ்வயின் - நச் - பாடம்.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இது முற்றுச்சொல் ஒழித்து ஒழிந்த பெயரெச்ச வினையெச்சங்கட்கு ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : மேற் கூறப்பட்ட முற்றுச்சொல்லேயன்றிப் பெயரெச்சமும் வினையெச்சமும் மூன்று காலமும் மூன்றிடமும் உடையவாய் வினையும் வினைக் குறிப்பும் பற்றி வரும் என்பான், 'எவ்வயின் வினையும் அவ்வியல் நிலையும் என்றான் என்பது. மற்று,

வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும் (வினை. 1)

என்புழி எல்லா வினைச் சொல்லும் மூன்று காலத்திற்கும் உரிய எனப்பட்டது. இனி

''எஞ்சிய கிளவி யிடத்தொடு இவணி
ஐம்பாற்கும் உரிய'' (வினை. 26)

என்புழி எவ்விடத்திற்கும் உரிமையும் கூறப்பட்டது பிறவெனின், மேல் அங்ஙனம் கூறினாரேனும் அது விலக்குப்பட்டது; ஈண்டுப் போதந்து முற்றுச் சொல்லையே விதந்து மூன்றிடத்திற்கும் உரிய என்றமையான். அது நோக்கி ஈண்டு இது கூறினார் என்பது.

சேனா

இ-ள் : மூவிடத்தாற் பொருடோறும் இவ்விரண்டாமென மேற்சொல்லப்பட்ட கட்டளையுட் பட் டடங்காது பிறாண்டு வரும் வினையும் முற்றியல்பாய் நிலையும், எ-று.

யார், எவன், இல்லை, வேறு என்பன இடமுணர்த்தாமையின், மேற்கூறிய கட்டளையின் அடங்காது பிறாண்டு

வந்தனவாம். *சிறப்பீற்றான் வரும் தெரிநிலை வினையும் குறிப்பு வினையும் பொருள்தோறும் வினையும் வினைக்குறிப்புமாய் வருதற்கு எய்தாமையின் 'மெய்ம்மையானும் இவ்விரண்டாகும்' (வினை. 31) கட்டளையுட்படாது பிறாண்டு வந்தனவாம். [1]குறிப்பு குறிப்பு வினைக் கீறாகாது தெரிநிலை வினைக் கீறாவனவும் [2]தெரிநிலை வினைக் கீறாகாது குறிப்பு வினைக் கீறாவனவும் சிறப்பீற்றவாம். அவை வினையியலுட் கூறிப் போந்தாம். யார் எவன் என்பன பாலும், இல்லை வேறு என்பன தினணயும் பாலும் உணர்த்தாவாயினும் மேலைச் சூத்திரத்தான் முற்றுச் சொற்குப் பாலும் திணையும் உணர்த்தல்

---

* வினைமுற்றுகள் திணையும் பாலும் உணர்த்தல் முடிபாயின் அவற்றை யுணர்த்தாத முன்னிலையை அவற்றை யுணர்த்தும் படர்க்கை தன்மைகளுடன் சேர்த்துக் கூறார் ஆசிரியர். அதனால் ஆசிரியர்க்கு முற்று திணையும் பாலும் உணர்த்தியே யாகவேண்டும் என்னும் கருத்திலை என்பது புலப்படும்.

1. கும், டும், தும், றும், கு, டு, து, று எனும் தன்மைப் பன்மை ஒருமை விகுதிகளும், உயர்திணைப் பன்மைக்குவரும் பகரவிகுதியுமாம்.

2. டு என்னும் அஃறிணை யொருமை விகுதியும், எவன் என்னும் அஃறினை வினாவினைக் குறிப்பின் னகர இறுதியுமாம். எண் 1-ல் உள்ள ஈறுகள் குறிப்புக்கு வாராமையானும், எண் 2ல் உள்ள ஈறுகள் தெரிநிலைக்கு வாராமையானும் எல்லா வினைகளும உயர்திணை அஃறிணைப் பொருள்கள் தோறும் தெரிநிலையும் குறிப்புமாய் வரும் என்னும் கட்டளையுட்படா என்க

[3]ஒருதலையாக எய்தாமையின், [4]இடம் உணர்த்தாமையே பற்றி ஈண்டுக் காட்டப்பட்டன. [5]திணையும் பாலும் உணர்த்தல் ஒருதலையாயின் 'தன்மை முன்னிலை படர்க்கை யென்னும் அம்மூவிடத்தான்' (எச்ச.31) என ஆசிரியர் முன்னிலையிடம் ஆண்டு வையார் என்பது.

முற்றுச்சொல்லே யன்றிப் பெயரெச்சமும் வினையெச்சமும் காலமும் இடமும் உணர்த்தும் என்பது இச்சூத்திரத்திற்குப் பொருளாக உரைத்தாரால் உரையாசிரியர் எனின், அவை இடவேறுபாடு உணர்த்தாது மூவிடத்திற்கும் பொதுவாய் நிற்றலின் அதுபோலியுரையென்க.

இனி ஓருரை : மேலைச் சூத்திரத்தாற் கூறப்பட்ட எப் பொருள் மேலும் வரும் எல்லா வினையும் முற்றுச் சொல்லாய் நிற்கும் என்றவாறு. ஈண்டு வினையென்றது வினைச் சொல்லை யாக்கும் [6]முதல் நிலையை. எல்லா வினையும் முற்றுச் சொல் லாம் எனவே எச்சமாதல் ஒருதலையன் றென்பதாம். ஆகவே

---

3. ஒருதலையாக-உறுதியாக, முடிவாக

4. யார், எவன், இல்லை, வேறு என்பன ஈண்டு உதாரணமாகக் காட்டப்பட்டன.

5. படர்க்கை முற்றுத்திணையும் பாலும் உணர்த்தும் தன்மைமுற்று (தன்மை உயர்திணைக்கே யுரியது என்பது ஆசிரியர் கருத்தாதலின்) திணையும் ஒருமை அல்லது பன்மைப்பாலும் உணர்த்தும். முன்னிலை திணையும் பாலுமாகிய இரண்டையுமே யுணர்த்தாது.

6. முதல்நிலை-பகுதி. எல்லாப்பகுதியும் முற்றுச் சொல்லாம் எல்லாப் பகுதியும் எச்சமாகா. கச்சு என்னும் பகுதி கச்சினன் எனக்குறிப்பு முற்றாகும். ஆனால் அது எச்சமாதல் இல்லை. உண்என்னும் பகுதி உண்டான் என முற்றாகவும் உண்டு, உண்ட என எச்சமாகவும் வரும்.

வினைச் சொல்லாதற்குச் சிறந்தன முற்றுச் சொல்லே என்ப தாம். எல்லாவினையும் முற்றுச் சொல் ஆகலும், கச்சினன், கழலினன், நிலத்தன், புறத்தன் என்னுந் தொடக்கத்து வினைக் குறிப்பின் முதல்நிலை எச்சமாய் நில்லாமையும் வழக்கு நோக்கிக் கண்டு கொள்க. பிறவுமன்ன.

இவையிரண்டும் இச்சூத்திரத்திற்குப் பொருளாகக் கொள்க.

தெய்

(இச்சூத்திரவுரை வினையியல் இறுதியில் எழுதப்பட்டுள்ளது).

நச்

இதுமேலதற்குப் புறனடை.

இ-ள் : எவ்வயின் வினையும்-மூன்றிடத்து வரும் வினையெச்சமும் பெயரெச்சமும், அவ்வயின் நிலையும் — அம்முற்று இயல்பிலே நிற்கும், எ-று.

என்றது இறப்புப்பற்றி வருவனவும், இறப்பும் நிகழ்வும் பற்றி வருவனவும், எதிர்வு பற்றி வருவனவும் முக்காலமும் பற்றி வருவனவும் ஆம் என்றவாறு.

வினையெச்சங்களுள் உகாரமும் ஊகரமும் எனவும் முன்னும் கடையும் இறப்பும், புகரமும் பின்னும் இறப்பும் நிகழ்வும், இயரும் இயவும் இன்னும் குகரமும் எதிர்வும், அகரமும் காலும் வழியும் இடமும் முக்காலமும் பற்றி வந்தவாறும்; பெயரெச்சங்களுள் உம்மீறு நிகழ்வும் எதிரவும், அகரவீறு இறப்பும் பற்றி வந்தவாறும் காண்க.

இருவகை எச்சத்திற்கும், 'காலமொடு வரூஉம் வினைச் சொல்எல்லாம்' (வினை-4) என்ற பொது விதியான், 'முக்காலமும் ஒன்றற்கு வருமோ' என்னும் ஐயம் நிகழ்ந்ததனை இச் சூத்திரத்வான் அகற்றினார். ஆசிரியர் அவற்றிற்கு ஓதிய

[1]வாசகங்களான் அவற்றிற்கு உரிய காலங்களும் உணர்த்தினா ரால் எனின், அவ்வாசகங்களால் காலம் உணராதவையும் உள ஆகலின் அவையும் விளங்குதற்கு ஈண்டுக் கூறினார் என்று உணர்க.

சேனாவரையர், 'வினை என்றது முதல் நிலை' என்று பொருள் உரைத்து, 'அவையும் முற்றுச் சொற்போல முற்றி நிற்கும்' என்றாரால் எனின், அம்முதல் நிலை படுத்தல் ஓசை யால் பெயர்த்தன்மைப்பட நிற்குமாறும், எடுத்தல் ஓசையால் முன்னிலையேவல் ஒருமை வினை முற்றாய் நிற்குமாறும் 'இர்ஈர்மின்' (வினை. 27) என்னும் சூத்திரத்துள் கூறினாம்.

[2]முற்று இலக்கணம் கூறுதற்கு இடையே இச்சூத்திரத்தான் எச்ச இலக்கணத்தைக் கூறினார், பருந்து விழுக்காடாக மாட்டேறிற்று என்று கருதி.

வெள்

இது மேலதற்கோர் புறனடை.

---

1. செய்து என்னும் வாசகத்தால் இறந்த காலம் உணரப் பட்டது. செய என்னும் வாசகம் நிகழ்வும் எதிர்வுமாகிய காலத்துக்குரியது. ஆதலின் ஆசிரியர் கூறிய வாச கங்களை (வாய்பாடுகளைக்) கொண்டு காலம் உறுதியாக அறிய இயலாது. எனவே காலம் உணரப்படாத வினைகளும் காலத்தொடு முடிக்கப்படும் என்பது இச்சூத்திரத்தில் கூறப்பட்டதாம் என்க.

2. 'இறப்பின் நிகழ்வின்' என்னும் முன் சூத்திரமும் அடுத்து வரும் 'அவைதாம் தத்தம்' என்னும் சூத்திரமும் முற்று வினை பற்றியன. இவற்றிடையே எச்சம் பற்றிய இச்சூத்திரம் கூறினார் ஆசிரியர். ஆகாயத்துப் பருந்து நிலத்துப் பொருளைக் கொள்வது போல ஒரு சூத் திரம் தொலைவில் உள்ள சூத்திரத்தைத் தொடுவது பருந்து விழுக்காடாம், இச்சூத்திரம் வினையியலில் உள்ள எச்சம் பற்றிய சூத்திரங்களை நோக்கிநின்றது.

இ-ள் : தொழிலும் காலமும் இடமும் பாலும் உணர வரும் வினைச்சொல் அன்றி மூன்றிடத்திற்கும் பொதுவாகி வரும் வினைச் சொல்லும் முற்றி நிற்றலாகிய அவ்வியல்பினைப் பெற்று நிற்கும், எ-று.

மேற்குறித்த இடம் காலம் ஆகிய வரையறை யுட்படாது, யார், எவன், இல்லை, வேறு என மூன்றிடத்தும் பொதுவாகி வரும் வினைச் சொல்லும், குறிப்பு வினைக்கு ஈறாகாது தெரி நிலை வினைக்கு ஈறாவனவும், தெரிநிலை வினைக்கு ஈறாகாது குறிப்பு வினைக்கு ஈறாவனவு மாய்ச் சிறப்பீற்றனவாய் முன் வினையியலில் எடுத்தோதப்பட்டனவும் அடங்க 'எவ்வயின் வினையும்' என்றார். அவ்வியல் நிலையலாவது முற்கூறிய முற்றுத் தன்மையில் நிற்றல்.

...... ..............................

முற்றுச் சொல்லேயன்றிப் பெயரெச்சமும் வினையெச்சமும் காலமும் இடமும் உணர்த்தும் என்பது இச்சூத்திரத்திற்குப் பொருளாகவுரைப்பர் இளம்பூரணர். ஈண்டு' அவ்வியல் நிலையும்' என்னும் சுட்டு முற்றின் இயல்பினைச் சுட்டி நிற்றலானும் முன்னும் பின்னும் முற்றுச் சொற்களின் இலக்கணங்கூறும் சூத்திரங்களினிடையே அமைந்த இச்சூத்திரத்தில் வரும் வினை யென்றது முற்று வினையோ மன்றிப் பெயரெச்ச வினையெச்சங் களாகிய குறைச்சொல்லாதல் ஏலாமையானும், மூவிடத்திற்கும் பொதுவாகிய அவை இடவேறுபாடு உணர்த்தாமையானும் அவ்வுரை ஆசிரியர் கருத்தோடு பொருந்துவதாகத் தோன்ற வில்லை.

ஆதி

பால் காட்டுவது, வியங்கோள் இன்னும் பிற எல்லாவகை வினைகளும் இந்த முறைக்குள் அமைவதாகும்.

சுப்

சேனாவரையர் தெய்வச்சிலையார் இவ்விருவரது உரையும் ஒன்றே. அஃதே, பொருத்தம் உடைத்து.

'வினையெனப்படுவது' (வினை-1), 'எஞ்சிய கிளவி' (வினை. 26) என்ற சூத்திரங்களால் கூறப்பட்ட எல்லா வினைகளுக்கும் உரிமை 'இறப்பின் நிகழ்வின்' (வினை. 31) என்ற சூத்திரத்தால் விலக்கப்பட்டது என்று உரையாசிரியர் கூறுகின்றார். அச்சூத்திரம் (31) முற்றுச்சொல் என்ற குறிடுயிவதற்கு வந்தது என்று அவரே கூறுதலின், அது பொருந்தாது.

சேனாவரையத்தில், "இனி ஒருரை - மேலைச் சூத்திரத்தால் *........................முற்றுச் சொல்லே என்பதாம்" என்றுளது. இதனை, நச்சினார்க்கினியர், "அம்முதல் நிலை *................ சூத்திரத்துட் கூறினாம்" என்று மறுத்தார். ஈண்டு, 'எச்சமாதல் ஒருதலையன்று' என்பது பெறப்படும் என்று கூறுவதால் பெரும் பயன் இன்மையானும், வியங்கோள் முதலியன முற்றுச் சொல்லா அல்லவா என்ற ஐயத்தை நீக்க வேண்டுவது அவசியமாதலானும் இவ்வுரை சேனாவரையரால் எழுதப்பட்டதன்று; ஆயினும், இவ்வுரையை நச்சினார்க்கினியர் மறுத்தலான் அவர் காலத்துக்கு முன்பெ ஏட்டிற் படிப்போரால் சேர்க்கப்பட்டிருந்தல் வேண்டும் என்பது என் கருத்து.

"இருவகை எச்சத்திற்கும் 'காலமொடு வரூஉம் வினைச் சொல் எல்லாம்' என்ற பொது விதியான் முக்காலமும் ஒன்றற்கு வருமோ என்னும் ஐயம் நிகழ்ந்ததனை இச்சூத்திரத்தான் அகற்றினார்" என்ற நச்சினார்க்கினியர் கொள்கையும் பொருத்தமாகத் தோன்றவில்லை.

## வினைமுற்று பெயர் கொண்டு முடிதல்

423. அவைதாந்
தத்தங் கிளவி யடுக்குந வரினு
மெத்திறத் தானும் பெயர்முடி பினவே. (35)

(அவைதாம்
தம் தம் கிளவி அடுக்குந வரினும்
எத் திறத்தானும் பெயர்முடி பினவே.)

---

* புள்ளியிட்ட இடங்களை சேனாவரையர் நச்சினார்க்கினியர் உரையிற் கண்டு கொள்க.

ஆ. மொ. இல.

Those (finite verbs) even when they succeed one another end in nouns in any way.

பி. இ. நூ.

**நன். 323**

பொதுவியல் பாறையுந் • தோற்றிப் பொருட்பெயர்
முதலறு பெயரலது ஏற்பில முற்றே.

**இல. வி. 230.**

மற்றுச்சொல் நோக்கா மரபின அனைத்தும்
முற்றி நிற்பன முற்றியல் மொழியே
எத்திறத் தானும் பெயர்முடி பினவே.

**தொல். வி. 104.**

பெயரே ஏற்றுமற் றொன்றனை வேண்டாது
ஏற்பது வினை வினைக் குறிப்பு முற்றே.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இது முற்றுச்சொல் என்று மேற் கூறப்பட்டனவற்றிற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

உரை : மேற் சொல்லப்பட்ட முற்றுச் சொற்கள் தாம் எத்துணைச் சொல்லையும் அடுக்கிப் பலவாய் வரினும் பெயர் கொண்டு முடிதல் இலக்கணத்தன, எ-று.

வ-று : 'உண்டான், தின்றான், ஓடினான், பாடினான் சாத்தன்' எனவரும். இது [1]வினை.

'நல்லறிவுடையன் செவ்வியன் சான்றோர் மகன்' எனவும் வரும். இது வினைக்குறிப்பு.

---

1. வினை—தெரிநிலை வினை.

[2]மற்று 'எத்திறத்தானும்' என்றது என்னை யெனின், உண்டான் சாத்தன்' என்பது பெயுரை முன்னடுத்து, 'சாத்தன் உண்டான்' என்பது பெயரை பின்னடுத்து வரும் என்பது அறிவித்தற்கு 'எத்திறத்தானும்' என்பது. [3]பிறவும் சொல்லுப, [4]முன்னும் உரிய முற்றுச் சொல்லென என்பது.

சேனா

இ-ள் : மேற்சொல்லப்பட்ட முற்றுச் சொற்றாம், தத்தம் கிளவி பல அடுக்கி வரினும், தம்முட்டொடராது எவ்வாற்றானும் பெயரொடு முடியும், எ-று.

உ-ம் : உண்டான் தின்றான் ஓடினான் பாடினான் சாத்தன், 'நல்லன் அறிவுடையன் செவ்வியன் சான்றோர் மகன்' என வரும்.

அடுக்கி வரினும் என்ற உம்மையான் வந்தான் வழுதி, கரியன்மால் என அடுக்காது பெயரொடு முடிதலே பெரும்பான்மை யென்பதாம்.

தம் பாற் சொல் அல்லது பிற பாற் சொல்லொடு [5]விராயடுக்கின்மையின், 'தத்தங்கிளவி' என்றார்.

---

2. இங்கு முன் பின் என்பன இடமுன்னும் இடப் பின்னுமாம். சாத்தன் உண்டான் என எழுவாய்த் தொடராகக் கூறினாலும், உண்டான் சாத்தன் என வினைமுற்றுத் தொடராகக் கூறினாலும் வினை முற்று பெயரையே கொண்டதாகும் என்பது இப்பகுதிக் கருத்து.

3. சேனாவரையரும் நச்சினார்க்கினியரும், பார்க்க.

4. இத்தொடர் பொருந்தவில்லை.

5. விராயடுக்கின்மையின்-விரவியடுக்கி வருதல் இல்லாமையால்

[6]என்மனார் புலவர், முப்பஃதென்ப என வெளிப்பட்டும் வெளிப்படாதும் பெயர் முடிபாம் என்றற்கு 'எத்திறத்தானும்' என்றார். "எவ்வயிற் பெயரும் வெளிப்படத்தோன்றி" (சொல்.88) என்றதனான் வெளிப்படாது நிற்றலும் பெறப்பட்டமையான் ஈண்டுக் கூறல் வேண்டாவெனின், ஆண்டு முடிக்கப்படும் பெயர் வெளிப்படாது நிற்றலும் உடைத்தென்றார்; இது முடிக்கும் பெயராகலின் ஆண்டு அடங்காது என்பது. முடிக்கப்படுவதனோடு முடிப்பதனிடை வேற்றுமை, வேற்றுமையோத்தினுட் (சொல் 66) கூறினாம். இன்னும் எத்திறத்தானும் என்றதனான், உண்டான் சாத்தன், சாத்தன் உண்டான் என முன்னும் பின்னும் பெயர் கிடத்தலும் கொள்க.

அஃதேல், முற்றிநிற்றலாவது மற்றுச் சொல் நோக்காமையாகலின், முற்றிற்றேல் அது பெயர் அவாய்நில்லாது; பெயர் அவாவிற்றேல் முற்றுச்சொல் எனப்படாது; அதனான் முற்றுச்சொல் பெயர் கொள்ளும் என்றல் மாறுகொளக் கூறலாம் எனின், அற்றன்று; 'உண்டான் சாத்தன்' என்பது எத்தையெனும் அவாய் நிலைக்கட் 'சோற்றை' என்பதனோடு இயைந்தாற்போல' 'உண்டான்' என்பது யார் என்னும் அவாய் நிலைக்கண் 'சாத்தன்' என்பதனோடு இயைவதல்லது, அவாய் நிலையில்வழி 'உண்டான்' எனத்தானே தொடராய் நிற்றல் [1]வினையியலுள்ளும் கூறினாம் என்பது.

அஃதேல், சாத்தன் என்னும் பெயர் 'சோற்றை' என்பது போல அவாய் நிற்றலை யுள்வழி வருவதாயின், 'எத்திறத்தானும் பெயர் முடிபினவே' என் விதந்தோதல் வேண்டாவாம் பிறவெனின், நன்று சொன்னாய்! அவாய் நிற்றலையுள் வழி வருவது அவ்விரண்டிற்கும் ஒக்குமேனும், 'உண்டான்' என்ற

6. முப்பஃதென்ப என்பதற்குப் புலவர் என்னும் முடிபு வெளிப்படாது நின்றது சாத்தன் உண்டான் என்பதில் சாத்தனை முடிப்பது உண்டான் என்பது. சாத்தன் முடிக்கப்படுவது. 'எவ்வயிற்பெயரும்' என்னும் சூத்திரத்தில் முடிக்கப்படும் பெயர்ச்சொல் வெளிப்படாதிருத்தல் பற்றிக் கூறப்பட்டது. இச்சூத்திரத்தில் முடிக்கும் பெயர்ச்சொல் வெளிப்படாமை கூறவேண்டுதலின் ஆண்டு அடங்காது. அதனால் இங்கு எடுத்துக் கூற வேண்டுவதாயிற்று.

1. வினையியல் சூ. 37.

வழி உண்டற் றொழிலாற் செயப்படுபொருள் உய்த்துணர்ந்து பின் அதன்வேறுபாடறியலுறிற் 'சோற்றை' என்பது வந்து இயைவதல்லது, சொற்கேட்டதுணையான் 'எத்தை?' எனக் கேட்பான் செயப்படு பொருள் வேறுபாடு அறிதற்கு அவா வாமையின், சோற்றை என்பது வருதல் ஒருதலையன்று. இனி 'உண்டான்' என்னும் சொல்லாற் பொதுவகையயான் வினைமுதல் உணர்ந்து கேட்பான் அதன்வேறுபாடறிய லுறுதலின் 'சாத்தன்' என்பது வருதல் ஒருதலையாம். அதனான் இச்சிறப்பு நோக்கி விதந்தோதினார் என்பது.

தெய்

(வினையியல் இறுதிக்கண் உரை எழுதப்பட்டுள்ளது.)

நச்

இது முற்றுச் சொற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : அவைதாம்- முற்கூறிய முற்றுச் சொற்கள்தாம், தத்தம் கிளவி அடுக்குந வரினும் — தத்தமக்கு உரிய வாய்பாடுகள் பலவாய் அடுக்கி வரினும் (உம்மையான் அடுக்காது ஒன்றே வரினும்), எத்திறத்தானும் பெயர் முடிபின — எவ்வாற்றானும் பெயர்ச் சொல்லை முடிபாக வுடைய, எ-று.

உ-ம் : உண்டான் தின்றான் ஓடினான் பாடினான் சாத்தன்
நல்லன் அறிவுடையன் செவ்வியன் சான்றோர் மகன்

எனவும்,

வந்தான் வழுதி, கரியன்மால்

எனவும் வரும். 'எத்திறத்தானும்' என்றதனால்,

உண்டான் சாத்தன்
சாத்தன் உண்டான்

என முன்னும் பின்னும் பெயர் நிற்றலும்,

[1]'நின்றான் இருந்தான் கிடந்தான் தன்கேள் அலறச்
சென்றான்' (நாலடி.29)

---

1. இதில் சென்றான் என்பதை முடிக்கும் சொல் வெளிப் படவில்லை.

என அடுக்கிப் பெயர் வெளிப்படாது நிற்றலும், 'முப்பஃதென்ப' (நூன் மரபு.1) என அடுக்காது பெயர் வெளிப்படாது நிற்றலும் கொள்க.

[2]ஈண்டு இலேசால் கொண்டது முடிக்கும் பெயர் வெளிப் படாது நின்றதற்கு என்றும், 'எவ்வயிற் பெயரும்' (வேற்.7) என்னும் சூத்திரத்தால் கொண்டது முடிக்கப்படும் பெயர் வெளிப் படாது நின்றதற்கு என்றும் உணர்க.

[3]'வேற்றுமைச் சொல்' என வேறு ஓர் சொல் இன்றி முற்றும் எச்சமும் வேற்றுமையை விரிக்குமாறு போல, எழுவ யும் பயனி லையும் என வேறு ஓர் சொல் இன்றி முற்றும் எச்சமும் எழுவா யும் பயனி லையுமாய் நிற்கும் என்றும் உணர்க.

முற்றுப் பெயர் கொண் டல்லது தாமாக முற்றி நில்லாமைக் குக்காரணம் 'அவற்றொடு வருவழி' (வினை. 38) என்னும் சூத்தி ரத்துட் கூறினாம்.

---

2. இவன் யார் எனவினாய வழிப் 'படைத்தலைவன்' என் றால் இவன் என்னும் பெயர் வெளிப்படாது நின்றது. அப்பெயர் படைத் தலைவன் என்பதால் முடிக்கப்படு வது. இது 'எவ்வயிற் பெயரும்' எனும் சூத்திரத்தில் கூறப்பட்டது. உண்டான் என்புழி யார் என்றுவினாய வழிச்சாத்தன் என்பது வரும். அப்பெயர் வெளிப்பட வில்லை. அது உண்டான் என்பதை முடிப்பது. இச் சூத்திர இலேசாற் கொள்ளப்பட்டது. இது வேறுபாடு.

3. உண்டான் எனும் முற்று உண்டலைச் செய்தான் எனவும் உண்டு எனும் எச்சம் உண்டலைச் செய்து எனவும் வேற்றுமையை விரிக்கும். அதுபோலவே உண்டான் எனும் முற்று அவன் எனும் தோன்றா எழுவாய்க்குப் பயனிலையாகவும் அவன் என்னும் தோன்றாப் பயனி லைக்கு எழுவாயாகவும், உண்டு எனும் எச்சம் அவன் எனும் தோன்றா எழுவாய்க்குப் பயனிலையாகவும் வரும்.

வெள்

இது முற்றுச் சொற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள்: மேற்குறித்த முற்றுச் சொற்கள்தாம் தத்தம் பாற் சொல்லாகிய முற்றுச் சொற்களாய்ப் பல அடுக்கி வரினும் (தம்முள் முடியாது) எவ்வாற்றானும் பெயரொடு முடியும், எ-று.

உ-ம்: 'உண்டான் தின்றான் ஓடினான் பாடினான் சாத்தன்' எனவும், 'நல்லன் அறிவுடையன் செவ்வியன் சான்றோர் மகன்' எனவும் வினையும் வினைக் குறிப்புமாகிய முற்றுச் சொற்கள் பல அடுக்கி வந்து பெயரொடு முடிந்தன.

'என்மனார் புலவர்' என வெளிப்பட்டும், 'முப்பஃதென்ப' என வெளிப்படாதும் பெயரொடு பெயர் முடிபாம் என்பர் 'எத்திறத்தானும் பெயர் முடிபினவே' என்றார். இன்னும் 'எத்திறத்தானும்' என்றதனான் உண்டான் சாத்தன், சாத்தன் உண்டான் என முன்னும் பின்னும் பெயர் கிடத்தலும் கொள்ளப் படும்.

ஆதி

அவ்வினை முற்றுகள் பல பல அடுக்கி வரினும் எவ்வகையிலும் ஒரு பெயரில் முடிவனவாம்.

வந்தான் இருந்தான் படித்தான் படுத்தான் உறங்கினான் கண்ணன்; அறிவன் அழகன் நல்லோன் முருகன்.

[1]எழுவாய் முதலில் வரினும் வினைத் தொடர்கள் அதனொடு முடிவன ஆகும்.

---

1. கண்ணன் வந்தான் இருந்தான் ... உறங்கினான் என எழுவாய் முதலில் வரினும், வந்தான் இருந்தான்...... உறங்கினான் என்னும் தொடர் கண்ணன் என்பதனோடு முடிவதாக ஆகும்.

# எச்சங்கள்

424 பிரிநிலை வினையே பெயரே யொழியிசை
யெதிர்மறை யும்மை யெனவே சொல்லே
குறிப்பே யிசையே யாயீ ரைந்து
நெறிப்படத் தோன்று மெஞ்சு பொருட் கிளவி (34)

(பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை
எதிர்மறை உம்மை எனவே சொல்லே
குறிப்பே இசையே ஆ ஈர் ஐந்தும்
நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருட் கிளவி)

ஆ மொ. இல-

'Pirinilai (exclussion), 'Vinai' (Verb), 'Peyar' (noun), 'Oliyisai' (leftout), 'Ethirmarai' (negative), 'Ummai' (Conjunctive), 'Ena' (such), 'Sol' (word), 'Kurippu' (suggestive) and and 'Isai' (relative idea) -these ten are words which are incomplete in sense.

பி. இ. நூ.

நன். 360

பெயர்வினை யும்மை சொற் பிரிப்பென ஒழியிசை
எதிர்மறை யிசையெனும் சொல்ஒழிபு ஒன்பதும்
குறிப்பும் தத்தம் எச்சம் கொள்ளும்

இ. வி. 348, 349

பெயர்வினை எதிர்மறை பிரிப்பு ஒழிபு உம்மை
எனவெனும் சொல்லொழிபு ஏழொடும் சொல்லிசை
குறிப்பெனும் குறிப்பொழிபு உளப்படத் தொகை இ
எஞ்சுபொருட் கிளவி ஈரைந் தாகும்.

அவற்றுள்

'முன்னவை யிரண்டும் சொன்னவை யாகும்.

முத்து. ஒ. 107, 108.

பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை
எதிர்மறை உம்மை எனவே சொல்லே
குறிப்பே இசையே ஆயீ ரைந்தும்
நெறிப்படத் தோன்றும் எச்சச் சொல்லே.
தத்தம் எச்சத்தொடு சார்ந்துநின் றியலும்.

## இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேல் வினையிய லுள்ளும் இடைச் சொல்லுள்ளும் முடிபு கூறப்படாது நின்ற எச்சங்கட்கு முடிவு உணர்த்தலான் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை : [1]எல்லாவற்றையும் எச்சம் என்பதனைக் குறைத்துப் பின்னை 'எஞ்சு பொருட் கிளவி' என்றார், இறுதி விளக்காகப் பிரிநிலையெச்சம் முதலாகக் கூறப்பட்ட பத்துவகை யெச்சங் களும் முன்பு முடிபு கூறப்படாது நின்றன வேனும் இனி நெறிப்படத் தோன்றும் அவை, எ-று.

## சேனா

முற்றுச்சொல் உணர்த்தி எச்சம் ஆமாறு உணர்த்துகின்றார். எஞ்சு பொருட்கிளவி கொண்டல்லது அமையாமையின் எச்சமா யினவும், ஒரு தொடர்க்கொழிபாய் எச்சமாயினவும் என அவை இருவகைப்படும்.

இ-ள் : பிரிநிலை முதலாகச் சொல்லப்பட்ட பத்தும் எஞ்சு பொருட் கிளவியாம், எ-று.

---

1. பிரிநிலையெச்சம் வினையெச்சம் என எல்லாவற்றையும் எச்சம் என்று கூறுவதைக் குறைத்து இறுதியில் யாவற்றையுந் தனித்தனிக் கூட்டும்படி எஞ்சுபொருட் கிளவி என்றார். எஞ்சு பொருட் கிளவி என்பதைக் கடைநிலைத் தீவகமாகக் கொண்டு பிரிநிலை எஞ்சம் முதலியவாகக் கூறிக்கொள்க. இறுதி விளக்கு - கடை நிலைத் தீவகம்.

அவற்றுட் [2]கடைநிலை மூன்றும் ஒரு தொடர்க்கு ஒழிபாய் எச்சமாயின. அல்லன எஞ்சு பொருட் கிளவியான் முடிவன. எஞ்சு பொருட் கிளவி எனினும் எச்சம் எனினும் ஒக்கும்.

[3]பெயரெச்சம் வினையெச்சம் பெயர்வினையான் முடிதலின் ஆகுபெயராற் பெயர் வினை யென்றார்.

'ஆயீரைந்தும் எஞ்சு பொருட்கிளவி' என்றாரேனும் எஞ்சு பொருட்கிளவி பத்து வகைப்படும் என்பது கருத்தாகக் கொள்க.

[4]எச்சமாவன ஒருசார் பெயரும் வினையும் இடைச்சொல்லும் ஆதலின் பெயரியல் முதலாயினவற்றுட் பத்தும் ஒருங்குணர்த்து தற்கு ஏலாமையறிக.

முடிவும் பொருளும் ஒத்தலான் 'என்று' என்பதனை 'என' வின்கண் ஏற்றினார்.

*தெய்

எச்சக் கிளவியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

2. கடைநிலை மூன்றாவன சொல், குறிப்பு, இசை என்பன.

3. பெயரெச்சமும் வினையெச்சமும் வினைக்குறைச் சொற்களாயினும் பெயராலும் வினையாலும் முடிதலின் அவற்றை பெயர் வினை என்று கூறுவது ஆகுபெயராம். பெயர் என்பதும் வினை என்பதும் அவற்றால் முடிக்கப்படும் எச்சங்கட்கு ஆயின.

4. குறிப்புப் பெயரெச்சம் பெயரியலிலும் வினையெச்சம் வினையியலிலும் பிரிநிலை என முதலிய எச்சங்கள் இடையியலிலும் கூறவேண்டுவன. அவை இங்கு கூறப்பட்டதற்குக் காரணம் பத்தையும் சேரக் கூறவேண்டும் என்பதே. ஒருசார் பெயரெச்சம் என்றது குறிப்புப் பெயரெச்சத்தை ; தெரிநிலை வினைப்பெயரெச்சம் வினையடியாக வருவது. குறிப்புப் பெயரெச்சம் பெயரடியாக வருவது ஆதலின்.

இவர் உரை மற்றையோர்க்கு மாறுபட்டது. காரணம் சிறப்புச் சூத்திரங்களில் சிவ. விளக்கத்திற் காண்க.

இ-ள்: நெறிப்படத் தோன்றும் எஞ்சு பொருள் உணர்த்துங் கிளவி பிரிநிலை முதலாக இசையீறாக ஓதப்பட்ட பத்தும், எ-று.

எஞ்சுபொருட் கிளவியாவது சொல்லாது ஒழிந்த பொருளை இனிது விளக்குஞ்சொல். நெறிப்படத் தோன்றுதலாவது வாக்கியமாகிய தொடர்மொழிக்கண் முன்னும் பின்னும் நின்ற சொல்லை நெறிப்படுத்தற்கு ஆண்டுத் தோன்றுதல். அது புலப் பட நில்லாமையின் எச்சம் ஆயிற்று.

பிரிநிலையெச்சமாவது பலபொருளில் ஒன்று பிரிந்தவழிப் பிரிக்கப்பட்ட பொருண்மையும் தோன்ற நிற்பது.

வினையெச்சமாவது ஒரு வினைச்சொல் எஞ்சி நிற்பது. பெயரெச்சமாவது ஒரு பெயர்ச் சொல் எஞ்சி நிற்பது.

அஃதேல், வினையெச்சம் பெயரெச்சம் என்பன வினை யியலுள் ஓதப்பட்டனவல்லவோ வெனின், ஆண்டு ஓதப் பட்டன பெயரையும் வினையையும் ஒட்டி நின்று இயலும்; ஈண்டையன அன்னவல்லவாமாறு உதாரணத்தான் விளங்கும்.

ஒழியிசை யெச்சமாவது சொல்லப்பட்ட பொருளையொழியச் சொல்லாது ஒழிந்து நின்ற பொருளுந்தோன்ற நிற்பது.

எதிர்மறை யெச்சமாவது ஒரு பொருளைக் கூறியவழி, அதனின் மாறுபட்ட பொருண்மையும் அதனானே உணர நிற்பது.

உம்மை யெச்சமாவது உம்மை கொடுக்க வேண்டும் வழி அஃது எஞ்சி நிற்றல்.

என என் எச்சமாவது என என்று சொல்ல வேண்டும் வழி, அச்சொல் எஞ்சி நிற்பது.

சொல்லெச்சமாவது ஒரு சொல்லினான் ஒரு பொருளை விதந்தோதியவழி அவ்விதப்பினானே பிறிதும் ஒருபொருளைக் கொள்ளுமாறு நிற்பது.

குறிப்பெச்சமாவது சொற்படு பொருளன்றிச் சொல்லுவான் குறித்த பொருள் எஞ்சி நிற்பது.

இசையெச்சமாவது ஒருசொற்றனக்குரிய பொருளன்றிப் பிறிதும் ஒரு பொருளை இசைக்குமாறு வருவது.

இவையெல்லாம் வழக்கிலும் செய்யுளிலும் வந்து பொருளை விளக்குதலின் எடுத்தோதினார்.

உதாரணம் தத்தம் சிறப்புச் சூத்திரத்துட் காட்டுதும்.

நச்

இது, முற்கூறிய எச்சச்சொற்கட்கு முடிபு கூறுவான் அவற்றது பெயரும் முறையும் தொகையும் கூறுகின்றது.

இ-ள் : நெறிப்படத் தோன்றும்-முன்னர் எடுத்து ஓதிய இடங்களிலே முறைமைப்படத் தோன்றும், பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை எதிர்மறை உம்மை எனவே சொல்லே குறிப்பே இசையே ஆ ஈரைந்தும் - பிரிநிலை முதல் இசையீறாகிய அப்பத்தும், எஞ்சு பொருட் கிளவி-எச்சச்சொல் என்று பெயராம், எ-று.

எஞ்சிநிற்பதோர் பொருளையுடைய சொல் எனவே, 'எச்சச் சொல்' என்று பெயராயிற்று. இப்பத்தோடும் 'எச்சம்' என்பதனைக் கூட்டுக. இவற்றுள் பிரிநிலையெச்சம் முதலிய ஏழும் எச்சச்சொல் வந்து முடிதலையுடைய; ஏனைய மூன்றும் அச்சொல் வந்து முடியா என்று உணர்க.

வினையெச்சமும் பெயரெச்சமும் வினைச்சொல் ஒழிபு; ஏனைய இடைச்சொல் ஒழிபாம்.

வெள்

இஃது எச்சங்களாவன இவையெனத் தொகுத்துக் கூறுகின்றது.

இ-ள் : பிரிநிலையெச்சம் வினையெச்சம் பெயரெச்சம் ஒழியிசையெச்சம் எதிர்மறையெச்சம் உம்மையெச்சம் எனவென்

எச்சம் சொல்லெச்சம் குறிப்பெச்சம் இசையெச்சம் என்னும் இப்பத்தும் முறைமைப்படத் தோன்றும் எச்சங்களாம், எ-று.

எஞ்சு பொருட்கிளவி — எஞ்சி நிற்பதோர் பொருளை யுடைய எச்சச்சொல். பெயர் வினை என்பன ஈண்டு அவற் றால் முடியும் பெயரெச்சத்தினையும் வினையெச்சத்தினையும் சுட்டி நின்றன; ஆகுபெயர். ஆயீரைந்தும் எஞ்சுபொருட்கிளவி என்றாரேனும் எஞ்சு பொருட்கிளவி ஈரைந்து என்பது கருத் தாகக் கொள்க.

பிரிக்கப்பட்ட பொருளையுணர்த்துஞ்சொல் எஞ்ச நிற்பது பிரிநிலையெச்சம். வினைச்சொல் எஞ்ச நிற்பது வினையெச்சம். பெயர்ச்சொல் எஞ்ச நிற்பது பெயரெச்சம். சொல்லொழிந்த சொற்பொருண்மை எஞ்ச நிற்பது ஒழியிசையெச்சம். தன்னின் மாறுப்பட்ட பொருண்மை எஞ்ச நிற்பது எதிர்மறையெச்சம். உம்மையுடைத்தாயும் உம்மையின்றியும் வரும் சொற்றொடர்ப் பொருளை எச்சமாகக் கொண்டு முடிய நிற்பது உம்மையெச்ச மாகும். என என்னும் ஈற்றை யுடையதாய் வினையெஞ்ச நிற்பது எனவென் எச்சமாகும். இவை ஏழும் தமக்கு மேல் வந்து முடிக்கும் எச்சச் சொற்களையுடைய எச்சங்களாகும். சொல்லெச்சம் குறிப்பெச்சம் இசையெச்சம் என்னும் மூன்றும் ஒரு தொடர்க்கு ஒழிபாய் எஞ்சி நிற்பன. எனவே இவை பிற சொற்களை விரும்பி நில்லாது சொல்லுவார் குறிப்பால், சொல்லப் படாது எஞ்சி நின்ற பொருளை யுணர்த்துவனவாகும். ஒரு சொல்லளவு எஞ்சி நிற்பன சொல்லெச்சம் என்றும், தொடராய் எஞ்சுவன இசையெச்சம் என்றும், இங்ஙனம் சொல்வகையா னன்றிச் சொல்லுவான் குறிப்பினான் வேறு பொருள் எஞ்ச நிற்பன குறிப்பெச்சம் என்றும் கூறுவர்.

எச்சமாவன ஒருசார் பெயரும் வினையும் இடைச் சொல்லு மாதலின் பெயரியல் முதலிய இயல்களுள் இப்பத்தெச்சங்களை யும் ஒருங்குணர்த்துதற்கு இடம் இன்மையால் எஞ்சி நின்ற இலக்கணங் கூறும் இவ்வெச்சவியலின் கண்ணே இவற்றைத் தொகுத்துக் கூறினார் ஆசிரியர்.

# பிரிநிலை யெச்சம்

435. அவற்றுட்
**பிரிநிலை யெச்சம் பிரிநிலை முடிபின. (35)**

(அவற்றுள்
பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின)

ஆ. மொ. இல.
Of them
the incomplete sense of exclussion is
Completed by the sense of completing
Words which are understood.

பி. இ. நு.

இ. வி. 350

பிரிநிலை எச்சம் பிரிநிலை கோடலும்
..........................................
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறை யானே பிரிநிலை யெச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : பிரிநிலையென்ப இருவகைய. ஏகாரப் பிரிநிலையும் ஓகாரப் பிரிநிலையும் என ; அவை பிரிக்கப்பட்ட பொருள் தன்னையே கொண்டு முடிக, எ-று.

வ-று : அவனே கொண்டான், அவனோ கொண்டான் என வரும். அவனேயெனப் பிரிநிலையெச்சம் ஏகாரத் தானின்று, [1]அவனேயெனப் பிரிக்கப்பட்டானையே கொண்டு

---

1. இருந்தார் பலருள் அவன் பிரிக்கப்பட்டான். ஏகாரம் அவன் என்பதைச் சார்ந்து அவனே என வந்தது. இந்த ஏகாரம் எதை எச்சமாகக் கொண்டது எனின் அவன் என்பதையே நோக்கலின் அவன் என்பதையே கொண்டது என்னல் வேண்டும்.

முடிதல் ; [2]இவை அவற்றுக்கு முடிபாவன என்றவாறு;

சேனா

இ-ள் : மேற்சொல்லப்பட்ட எச்சங்களுள், பிரி நிலை யெச்சம் ஏகாரப் பிரிநிலையும் ஓகாரப் பிரிநிலையும் என இரு வகைப்படும். அவ்விருவகைப் பிரிநிலையெச்சமும் பிரிக்கப்பட்ட பொருளையுணர்த்துஞ் சொல்லோடு முடியும், எ-று

உ-ம் : தானே கொண்டான், தானோ கொண்டான் என்னும் பிரிநிலையெச்சம் [1]பிறர் கொண்டிலர் எனப் பிரிக்கப் பட்ட பொருளை யுணர்த்துஞ் சொல்லான் முடிந்தவாறு கண்டு கொள்க.

அஃதேல், தான் எனப்பட்டானன்றே ஆண்டுப் பிரிக்கப் பட்டான் ; பிறர் கொண்டிலர் என்பது அவனை யுணர்த்துஞ் சொல்லன்மையான் அவை பிரிநிலை கொண்டு முடிந்திலவால் எனின், அற்றன்று ; தான் எனப்பட்டான் பிறரிற் பிரிக்கப் பட்ட வழிப் பிறரும் அவனிற் பிரிக்கப்பட்டமையான், அவை பிரிநிலை கொண்டனவேயாம் என்க.

பிரிநிலையோடு முடிதலாவது அவனே கொண்டான் என்றவழி, [2]அவனே என்பது கொண்டான் எனப் பிரிக்கப் பட்ட பொருளை வினையெனக் கொண்டு முடிதல் என்றாரால் உரையாசிரியர் எனின், அற்றன்று ; அவனே கொண்டான் என்புழி அவன் என்னும் எழுவாய் வேற்றுமை 'கொண் டான்' என்னும் பயனிலை கொண்டது; ஏகாரம் பிரிவுணர்த்திற்று;

---

2. இவை—ஏகார ஓகாரங்கள் உள்ள அவன் என்பன. அவற்றுக்கு—ஏகார ஓகாரங்களுக்கு.

1. இக்கருத்தை நச்சினார்க்கினியர் மறுப்பர் ; பார்க்க.

2. அவனே என்பதிலுள்ள ஏகாரம் கொண்டான் எனப் பிரிக்கப்பட்ட பொருளாகிய அவன் என்பதையே வினையெனக் கொண்டு முடிதல்.

[3]ஆண்டு எச்சமும் எச்சத்தை முடிக்குஞ் சொல்லும் இன்மையான் [4]அவர்க்கது கருத்தன்று என்க.

தெய்

பிரிநிலையெச்சம் முற்றுப் பெறுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மேற் சொல்லப்பட்டவற்றுள், பிரிநிலையாகிய எச்சம் அதன் கண் நின்றும் பிரிக்கப்பட்ட பொருளோடு தொடர்ந்து முடிவு பெறும், எ-று.

*உ-ம் : இவன் கல்வியுடையன் என்றவழிச் சொல்லுவான் இவ்வவையத்தாருள் எனக்கருதினானாயின் இவ்வவையத்தாருள் என்பது எஞ்சி நின்று பிரிநிலையெச்சமாயிற்று. இவட்குக் கண்ணழகிது என்றவழி மற்றுள்ள உறுப்புக்களின் என்பது எஞ்சி நின்றது. இவை பிரிக்கப்பட்ட பொருளோடு தொடர்பு பட்டு முற்றுப்பெற்றவெனக் கொள்க.

நச்

இது முறையே பிரிநிலையெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : அவற்றுள்—முற்கூறியபத்தனுள், பிரிநிலை எச்சம்—ஏகாரமும் ஓகாரமுமாகிய பிரிநிலையெச்சங்கள், பிரிநிலை முடிபின—பிரிக்கப்பட்ட பொருள்மேல் வரும் சொல்லையே தமக்கு முடிபாக வுடையவாம், எ-று.

உ-ம் : அவனே கொண்டான், அவனோ கொண்டான். எனப்பிரிக்கப்பட்ட சுட்டுப் பெயரின் வினைகொண்டு முடிந்தன. இடைச்சொற்குத் தமக்கு இயைபின்மையின்

---

3. ஆண்டு—அவனே என்பதில் ஏ என்பது அவன் என் பதைக் கொண்டது என்னுமிடத்து. ஏ அவன் என்பன எச்சமாகவும் முடிக்கும் சொல்லாகவும் இல்லை

4. அவர்க்கு—ஆசிரியர் தொல்காப்பியர்க்கு.

* தெய்வச்சிலையார்க்கு ஏகார ஓகாரங்கள் இல்லாமலே பிரிநிலை எச்சம் வரும் என்பது கொள்கை.

'சோற்றைப் பசித்து உண்டான்' என்றாற் போல அவன் என்னும் சுட்டுப்பெயரும் இடைநின்ற ஏகார ஓகாரமும் கொண் டான் என்பதனோடு முடிந்தன. அன்றி அவன் என்பது கொண்டான் என்பதனோடு முடிய, ஏகார ஓகாரங்கள் 'பிறர் கொண்டிலர்' என்பதனோடு முடிந்தன என்றல் பொருந்த முடைத்து எனின், வினையெச்சமும் பெயரெச்சமும் ஒழித்து இடைச்சொல்லான் வரும் எச்சங்கள் பொருள் தருமாறு இடைச் சொல்லோத்தினுள்கூறி, ஈண்டு அவற்றிற்கு முடிபுச்சொல் கூறு கின்றார் ஆதலின், கொண்டான் என்னும் சொல் வந்து அவ் வெச்சங்களை முடித்தால் அல்லது 'பிறர் கொண்டிலர்' என்னும் பொருண்மை முடிபு தோன்றாது ஆதலின் 'கொண்டான்' என்பதே முடிக்குஞ் சொல்லாய் நிற்பப் பிறர் கொண்டிலர் என்னும் பொருண்மை முடிபு தோன்றிற்று என்றலே பொருத்தம் உடைத்து என்று கோடும் அன்றியும் [1]மும்மையெச்சத்திற்கு உள் நின்ற பொருண்மை முடிபு முன்னர்க்கூறி, அதனை நீக்கிச் சொன்மை முடிபு ஈண்டுக் கூறுகின்றதனானும் இஃதே ஆசிரியர் கருத்து என்று உணர்க.

செள்

இது பிரிநிலையெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள்: ஏகாரப் பிரிநிலை ஓகாரப் பிரிநிலையாகிய இவ் விருவகைப் பிரிநிலையெச்சமும் பிரிக்கப்பட்ட பொருளை யுணர்த்தும் சொல்லொடு முடியும், எ-று.

உ-ம்: தானே கொண்டான், தானோ கொண்டான் என்னும் பிரிநிலையெச்சம் 'பிறர் கொண்டிலர்' எனப்பிரிக்கப் பட்ட பொருளை யுணர்த்தும் சொல்லால் முடிந்தது.

தான் எனப்பட்டான் பிறரிற் பிரிக்கப்பட்டவழிப் பிறரும், அவனிற் பிரிக்கப்பட்டமையாற் 'பிறர் கொண்டிலர்' என்பது பிரிநிலைப் பொருளாயிற்று.

---

1. மும்மையெச்சம்—பெயரெச்சம், வினையெச்சம், இடைச் சொல் எச்சம். உம். ஏ, ஓ, முதலியன இடைச்சொல்லா தலின் அவ்வெச்சங்கள் இடைச்சொல் எச்சங்களாம். உள் நின்ற பொருண்மை முடிபு வினையியலிலும் இடை யியலிலும் கூறப்பட்டன.

ஆதி

* கள்ளன் யாவன் ?—இவனே கள்ளன்— ஒருவனைப் பிரித்துக் குறித்துக்காட்டுவதால் பிரிநிலையெச்சம்.

இவனோ பரிசில் பெற்றான்—பிரிநிலை இவன்தானே கொண்டான், இவன்தானோ கொண்டான்—பிரிநிலையென்பர். இங்கு 'தான்' ஆற்றல் உணர்த்தும் இடைச்சொல்லாகக் கருதலே சிறப்பு.

சிவ

பிரிநிலையெச்சம் என்பதற்குப் 'பிரிக்கப்பட்ட நிலைமை யினையுடைய பொருள் (சொல்) எஞ்சி நிற்குமாறு அமைவது' என்பது யாவரும் கொண்ட பொருள். ஆனால் காட்டும் உதாரணத்தை விளக்கும்போது மாறுபடுகின்றனர்.

'அவனே கொண்டான் என்பது, 'பலருள் அவன் ஒருவனே கொண்டான்' என்னும் பொருள் தருவது. பலருள் பிரிக்கப்பட்ட வர் யார் என்பதில் இளம் பூரணருக்கும் சேனாவரையருக்கும் கருத்து வேறுபாடுண்டு. பலருள் பிரிக்கப்பட்டவன் அவன் என்பது இளம் பூரணர் கருத்து; பிரிக்கப்பட்டவன் அவனாயி னும் அவனேநோக்கப் பிறரும் பிரிக்கப்பட்டவரே யாதலின் பிரிக் கப் பட்டவர் பிறரே என்பது சேனாவரையர் கருத்து. அதனால், இளம்பூரணர் அவனே என்பதில் உள்ள ஏகாரம் பிரிக்கப் பட்ட அவன் என்பதைக் கொண்டு முடிந்தது—அதாவது ஏகாரம் அவன் என்பதை எஞ்சி நின்றது என்பது இளம்பூரணர் விளக்கம்; பிரிக்கப்பட்டார் பிறர் ஆகலின் அவனே என்பதி லுள்ள ஏகாரம் பிறர் கொண்டிலர் எனும் தொடரை எஞ்சி நின்று அதனையே கொண்டு முடிந்தது என்பது சேனா வரையர் விள்க்கம்.

நச்சினார்க்கினியர், இளம்பூரணர் கருத்தைக் கொண்டவ ராயினும் அவனே என்பதிலுள்ள ஏகாரம் அவன் என்பதற்கு முடிபான கொண்டான் என்பதைக் கொண்டுமுடிந்தது என்பர். சேனாவரையரால் மறுக்கப்படும் உரையாசிரியரும் நச்சினார்க்

* உதாரணம் எச்சம் என்பதை விளக்கவில்லை.

கினியர் கூறியது போலவே கூறினார் என்பது சேனாவரையர் உரையால் தெரிய வருவதாம்.

இளம்பூரணர், "அவனே எனப் பிரிநிலையெச்சம் ஏகாரத் தானின்று, அவனேயெனப் பிரிக்கப்பட்டானையே கொண்டு முடிதல்" என எழுதியதில் 'பிரிக்கப்பட்டானையே கொண்டு முடிதல் என்பதற்குப் பிரிக்கப்பட்டான் வினையையே கொண்டு முடிதல் எனப்பொருள் காணின் உரையாசிரியர், இளம்பூரணர், நச்கினார்க்கினியர் மூவரும் ஒரே கருத்தினர் என்னலாம்.

அவனே என்பதில் உள்ள ஏகாரம் அவன் என்பதையே கொண்டு முடிந்தது என இளம்பூரணர் கூறியது ஏற்பதற் கில்லை. ஏன் எனின் எஞ்சு பொருள் (சொல்) எச்சத்துக்குப் பின்னர் வருமேயன்றி முன்னர்வராது. வினையெச்சம் 'வந்தான் உண்டு' எனப்பின்னர் வருதல்போலக் கொள்ளலாமேயெனின் உண்டு வந்தான் என்பதுபோல 'ஏ அவன்' எனவாராமையின் கொள்ளலாகாது. அதனால் இளம் பூரணர் கூறிய 'பிரிக்கப் பட்டானையே கொண்டுமுடிதல்' என்பதற்குப் பிரிக்கப்பட் டான் வினையையே கொண்டுமுடிதல்' என்று கொள்வதே சிறக்கும்.

சேனாவரையர் பிரிக்கப்பட்டார் பிறர் எனக்கொண்டது அத்துணைச் சிறப்பின்று. கவரும் "தானெப்பட்டான் பிறரிற் பிரிக்கப்பட்ட வழிப்பிறரும் அவனிற் பிரிக்கப்பட்டமையான் அவை (ஏகார ஓகாரங்கள் பிரிநிலை கொண்டனவேயாமென்க" என எழுதியதில் முதலில் பிரிக்கப்பட்டான் தான் என்பதை ஏற்றுப் பின்னரே பிறர் என்றமையால் அவர்க்கும் அவனே என்பதில் பிரிக்கப்பட்டான் அவன் என்பதே முதற்கருத்து என்னலாம். அதனால் மற்றையோர் கொள்ளும் பொருளே சிறந்தது என்னலாம்.

இனித் தெய்வச் சிலையார், 'பிரிநிலைப் பொருள் தரும் இடைச்சொற்களாகிய ஏகார ஓகாரங்களைப்பற்றியது இச்சூத் திரம்' எனக் கொண்ட மற்றையோர் கருத்துக்கு மாறாக, இடைச் சொற்களைக் கொள்ளாமலேயே பலருள் ஒருவனைப் பிரித்துக் கூறின் அவனையன்றி மற்றையோரை எஞ்சி நிற்பது பிரிநிலை யெச்சம் என்றார். 'இவன் கல்வியுடையன் என்ற

வழிச் சொல்லுவான் இவ்வவையத்தாருள் எனக்கருதினானா யின் இவ்வவையத்தாருள் என்பது எஞ்சி நின்று பிரிநிலை யெச்சமாயிற்று என்றார். அவர் பிரிநிலை என்பதற்குப் 'பிரிக்கப்பட்ட பொருள்தவிர எஞ்சி நிற்கும்பொருள்' எனக் கொண்டார். 'இவன் கல்வியுடையன் என்பதில் பிரிக்கப் பட்டவன் இவன் என்றும் நிலை (நின்றது) இவ்வவையத்தார் என்றும் கொள்ளல்வேண்டும். அதனால் பிரிநிலையெச்சம் என்பதற்குப் பிரிநிலையாகிய எச்சம் எனப்பொருள் கொள்ளல் வேண்டும். தெய்வச்சிலையார் ஏகார ஓகாரங் களைக் கொள்ளாமைக்கு, அவை இடையியலில் பிரிநிலைப் பொருளில் வரும் எனக் கூறிவிட்டமையால் இங்கும் கூற வேண்டியதில்லை எனக் கருதியதாகலாம்.

## வினையெச்ச முடிபு

426 வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பு
நினையத் தோன்றிய முடிபா கும்மே
யாவயிற் குறிப்பே யாக்கமொடு வருமே. (36)

(வினை எஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்
நினையத்தோன்றிய முடிபு ஆகும்மே
ஆவயின் குறிப்பே ஆக்கமொடு வருமே.)

ஆ.மொ.இல.

The tens-denoting verb and the appellative verb appear as the complements of the adverbial participle when thought is bestowed upon it.

பி.இ.நூ

இ.வி.429. (தொல். சூத்திரமே)

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், நிறுத்த முறை யானே வினையெச்சத்திற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

உரை : வினையெச்சம் முடியுங்கால்வினையும் வினைக் குறிப்பும் கொண்டு முடியும், அவ்விடத்துக் குறிப்பு வினைச் சொல் ஆக்கச் சொல்லோடு வரும், எ-று.

வ-று: 'உழுது வந்தான்' என்பது வினையெச்சம் தெரி நிலை வினைகொண்டு முடிந்தது. 'மருந்துண்டு நல்லன் ஆயினான்' என்பது வினையெச்சம் [1]வினைக்குறிப்புக் கொண்டு முடிந்தது; அவ்விடத்து வினைக்கு ஆக்கமொடு வந்தவாறு கண்டு கொள்க.

இனி, 'நினயைத் தோன்றிய' என்றதனான், 'உழுது வருதல்' 'உழுதுவந்தான்' எனத்[2]தொழிற்பெயரானும் முடியும் என்றவாறு.

மற்று, இச்சூத்திரத்தால் வினையெச்சத்திற்கு முடிபு கூற வேண்டியது என்னை? வினையியலுள்,

'முதல் நிலை மூன்றும் வினைமுதல் முடிபின' (வினை. 31) என்றும், ஒழிந்தனவற்றுக்கு,

''ஏனை யெச்சம் வினைமுத லானும்
ஆன்வந் தியையும் வினைநிலை யானும்'' (வினை 33)

---

1. நல்லன் என்பது வினைக்குறிப்பு. ஆயினான் என்பது ஆக்கச்சொல்.

2. வருதல் என்பது தொழிற்பெயர். வந்தான் என்பது வினையாலணையும் பெயர். வினையாலணையும் பெயரைத் தொழிற் பெயர் என்றும் கூறுவர்.

முடியும் என்றும் கூறியதே அமையும் பிறவெனின், அதற்கு விடை : [3]ஆண்டு வினைமுதலானும் முடியும் என்புழிப் பெயர் வினைமுதலானும் முடியும் என்பது பட்டது; என்னை? வினை வினைமுதல் என்றும் பெயர் வினைமுதல் என்றும் பகராது பொது வகையாற் கூறினாராகலின் இச்சூத்திரம் வேண்டும். இது கூறாக்கால், 'உழுது சாத்தன்' எனப் பெயர் வினை முதலானும் முடிவான் சொல்லும் என்பது. [4]அன்றியும் வினை யெச்சத்திற்கு வினைக்குறிப்பு முடிபாங்கால் ஆக்கமொடு வருதல் எடுத்தோத வேண்டும் என்பது.

சேனா

இ-ள் : வினையெச்சத்திற்குத் தெரிநிலை வினையும் குறிப்பு வினையும் முடிபாம்; ஆண்டைக் குறிப்பு வினை ஆக்க வினை யோடு வரும், எ-று.

உ-ம் : உழுது வந்தான், மருந்துண்டு நல்லனாயினான் எனவரும்.

---

3. வினைமுதல் என்பது பெயர் வினைமுதல் வினை வினைமுதல் என இருவகைப்படும். உழுது வந்தான் என்பதில் வந்தான் என்பது வந்தவனாகிய ஒருவனைக் குறிக்கும் போது பெயர் வினைமுதல்; வந்தான் என்னும் வினையைக்குறிக்கும் போது வினை வினைமுதல். 'முதல் நிலை' 'ஏனையெச்சம்' என்னும் சூத்திரங்களில் வந்த வினை முதல் என்பது பெயர் வினைமுதலையும் குறித்துவிடும். வினை வினை முதலையே கொண்டு முடிவது வினையெச்சம் என்பது அச்சூத்திரங்களாற் பெறப்படாது; அதனால் இச்சூத்திரம் வேண்டும். இச்சூத்திரத்தில் பெயர் வினைமுதலைக்கொண்டு முடிவதைத்தழுவிக் கொள்ளுதல் வேண்டும். அதனால் தான் "இனி... தொழிற் பெயரானும் முடியும் என்ற வாறு" என எழுதினார் இளம்பூரணர்.

4. இக்காரணம் நன்று.

உழுது வருதல், உழுதுவந்தவன் என வினையெச்சம் [1]வினைப் பெயரோடு முடிதல் 'நினையத் தோன்றிய' என்றத னாற் கொள்க.

வினையெச்சத்திற்கு முடிபு வினையியலுட் கூறப்பட்டமை யான் இச்சூத்திரம் வேண்டாவெனின், இதற்கு விடை [2]ஆண்டே கூறினாம்.

[3]"வேங்கையும் காந்தளும் நாறி ஆம்பல் மலரினும் தான் தண்ணியளே" (குறுந். 84), "வில்லக விரலிற் பொருந்தியவர் நல்லகஞ் சேரினொரு மருங்கினமே" (குறுந். 370) எனவும்; கற்று வல்லன், பெற்றுடையன் எனவும் வினைக் குறிப்பு ஆக்கம் இன்றி வந்தனவால் எனின், 'ஆக்கமொடு வரும் என்றது பெரும்பான்மை குறித்ததாகலிற் சிறுபான்மை ஆக்கமின்றியும் வரும் என்பது.

தெய்

வினையெச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வினையெச்சமாகவுடைய சொல்லிற்கு வினையும் வினைக்குறிப்பும் நினையத் தோன்றிய முடிபாகும்; ஆண்டு வினைக்குறிப்பு ஆக்கச் சொல்லோடு அடுத்து வரும், எ-று.

---

1. வினைப்பெயர் = தொழிற் பெயரும் வினையாலணையும் பெயரும்.

2. ஆண்டுக் கூறியதாவது :- "குறிப்பும் என்னும் உம்மை யாற்றழுவப்படுவது சேய்த்தாகலிற் றெற்றென விளக் காமையானும் வினை முதல் என்பது பெயர்க்கும் வினைக்கும் பொதுவாகலானும் வினையும் எனல் வேண் டும் என்பது" (வினையியல் 35 உரை) - இதன் விளக்கம் வினையியல் உரை வளத்தில் பார்க்க.

3. பொருள் : வேங்கைமலர் மணமும் காந்தள் மலர் மண மும் வீசி ஆம்பல் மலரைக் காட்டிலும் தான் (தலைவி) தண்மை யுடையாள்.

[1]'நினையத் தோன்றும்' என்றதனான், ஆராயத் தோன்றும் என்று கொள்க. வினையியலுட் கூறிய வினையெச்சம் ஆராய்தல் வேண்டாமையின் அஃதன்று என்று கொள்ளப்படும்.

உ-ம் : அழுக்கா றுடையார்க் கதுசாலும் ஒன்னார்
வழுக்கியுங் கேடீன் பது (குறள். 165)

என்பதனுள், "கேடுபயத்தற்கு அழுக்காறு தானேயமையும் பகைவர் கேடு தருதல் தப்பியும் வரும்" எனப் பொருளுரைக்க வேண்டுதலின். 'வரும்' என்பது எஞ்சி நின்றது.

அற்றா ரழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி (குறள். 226)

என்பதற்குப் "பொருளற்றாரது குணங்களை அழிக்கும் பசியைப் போக்குவது செய்ய ஒருவன் தான் தேடின பொருள் வைத்தற்கு இடம் பெற்றானாம்" என உரைக்க வேண்டுதலின், 'ஆம்' என்னும் வினைக் குறிப்பு எஞ்சி நின்றது.

நச்

இது வினையெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : வினையெஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும் நினையத் தோன்றிய முடிபு ஆகும்—வினையெச்சத்திற்குத் தெரிநிலை வினையும் குறிப்பு வினையும் ஆராயத் தோன்றிய முடிபு சொல்லாம், ஆவயின் குறிப்பே ஆக்கமொடு வருமே— ஆண்டுக் குறிப்பு முற்று ஆக்க வினையோடு வரும், எ-று.

---

1. வினையியலுட் கூறும் வினையெச்சம் 'உழுது வந்தான்' எனவருமிடத்து ஆராய்ச்சியே யில்லாமல் உழுது என்பது வந்தான் என்பதை எஞ்சி நின்றது புலப்படும். அதனால் இச்சூத்திரத்தாற் கூறப்படும் வினையெச்சம் ஆராய்ந்தே கொள்ளப்படும். தெய்வச்சிலையார் காட்டிய உதாரணங் களைக் கொண்டு ஒரு தொடரில் வெளிப்படாமல் மறைந்து கிடக்கும் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பும் வினைமுற்றுமே வினையெச்சம் என இச்சூத்திரம் கூறுவதாக அவர் கொண்டார் என உணரலாம். அவர் உணர மற்றையோரினும் வேறுபட்டது.

உ-ம் உழுது வந்தான்
மருந்துண்டு நல்லன் ஆயினான்

எனவரும். 'நினைய' என்றதனான்,

உழுது வருதல்
உழுது வந்தவன்

எனத்தொழிற் பெயரோடும் வினைப் பெயரோடும் முடிதலும் கொள்க.

[1]ஈண்டு இவ்வினையெச்ச முடிபு கூறுகின்றவர், வினையிற்கண் "முதனிலை மூன்றும்" (வினை. 33) என்னும் சூத்திரம் முதலிய மூன்று சூத்திரத்தான் வினையெச்சத்திற்கு முடிபு கூறியது என்னை? எனின், ஈண்டுக் கூறியபொது விதிக்கு ஆண்டு மூன்று சூத்திரத்தானும் மூவகையாகச் சிறப்பு விதி கூறினார், 'எதிரது போற்றல்' என்னும் தந்திரவுத்தியால் என்க.

இனி,

"வேங்கையும் காந்தளும் நாறி
ஆம்பல் மலரினும் தான் தண் ணியளே" (குறுந்.84)
"வில்லக விரலிற் பொருந்தியவன்
நல்லகம் சேரின் ஒரு மருங் கினமே" (குறுந். 370)

என்றாற் போல்வன பிறவும் ஆக்கம் விரிந்து அல்லது பொருள் உணர்த்தாமை யுணர்க.

வெள்

இது வினையெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : வினையெச்சத்திற்குத் தெரிநிலை வினையும் குறிப்பு வினையும் முடிபாகும்; அவ்விடத்துக் குறிப்பு வினை ஆக்க வினையோடு வரும், எ-று.

உ-ம் : உழுது வந்தான், மருந்துண்டு நல்லன் ஆயினான் எனவரும்.

---

1. மற்றையோர் கூறும் காரணத்தினும் நச்சினார்க்கினியர் கூறும் இக்காரணம் சிறக்கும்.

உழுது வருதல், உழுது வந்தவன் என வினையெச்சம் வினைப்பெயரொடு முடிதல் 'நினையத் தோன்றிய' என்பதனாற் கொள்ளப்படும். குறிப்புவினை ஆக்கமொடு வரும் என்றது பெரும்பான்மை குறித்ததாகலிற் 'கற்று வல்லன்' 'பெற்று உடையன்' எனச் சிறுபான்மை ஆக்கம் இன்றியும் வரும் என்பர் சேனாவரையர்.

ஆதி

வினையெச்சத்துக்குத் தெரிநிலைவினை குறிப்பு வினை இரண்டும் முடிவாக நிற்கும். குறிப்பு வினை முடிபாயின் ஆக்கப் பொருள் தந்து நிற்கும்.

படித்து—வினையெச்சம், தேறினான் தெரிநிலை வினையுடன் முடிந்தது.

படித்து வல்லவன் ஆயினான்—வல்லவன் குறிப்பு வினை ஆக்கமா முடிந்தது.

## பெயரெச்ச முடிபு

**427. பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே (37)**
(பெயர் எஞ்சு கிளவி பெயரொடு முடிமே).

ஆ. மொ. இல.

The adjectival participle is completed by the noun.

பி. இ. நூ.

**நன் 340**

செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டில்
செய்வ தாதி அறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே.

**இல. வி. 243.**

அவற்றுட்
செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டில்
செய்வ தாதி அறுபொருட் பெயரும்
முடியும் முறையது பெயரெச் சம்மே.

முத்து. வி. 35

காலம் பொருள் நிலம் கருவி வினைமுதல்
வினையோர் அறுவகைப் பொருட்கும் உரிய

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே பெயரெச்சத்திற்கு முடிபு கூறுதல் நுதலிற்று,

உரை : பெயரெச்சம் பெயர் கொண்டு முடியும், எ-று.

வ-று : உண்ணுஞ் சாத்தன், உண்ட சாத்தன் எனவரும். உண்ணும், உண்ட என்பன பெயரெச்சம்; மற்று இது கூற வேண்டியது என்னை?

நிலனும் பொருளும் காலமும் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையும் (வினை. 35)

பெயர் கொண்டு முடிதல் கூறப்பட்டது பிறவெனின், அதற்கு விடை; [1]ஆண்டு வினை முதற் கிளவியும் வினையும் எனவே வினைச் சொல்லும் முடியும் என்பது பட்டது. வினைமுதற், கிளவி என்றக்கால் வினைமுதலும் வினை முதலாகலானும், இனி வினை என்றக்கால் வினைப் பெயரேயன்றி வினைச் சொல்லும் ஆகலானும் இச்சூத்திரம் வேண்டும் என்பது.

சேனா

இ-ள் : பெயரெச்சம் பெயரொடு முடியும், எ-று.

உ-ம் : உண்ணுஞ் சாத்தன், உண்ட சாத்தன் எனவரும்.

---

1. (ஆண்டு— நிலனும் பொருளும் என்னும் சூத்திரத்தில்) வினை முதற்கிளவி என்பது பெயர் வினை முதலையும் வினை வினை முதலையும் குறிக்கும். அப்படியானால் ஆண்டு வினை வினை முதலைக் கொண்டு முடிவதும் பெயரெச்சம் எனப்பட்டுக் குற்றமாம்; வினை என்பது வினைப் பெயரையும் வினைச் சொல்லையும் குறிக்கும். அப்படியானால் வினையைக் கொண்டு முடிவதும் பெயரெச்சம் எனப்பட்டுக் குற்றமாம். அதனால் பெயரொடு முடிவதே பெயரெச்சம் என்னும் இச்சூத்திரம் வேண்டுவதாயிற்று.

'அவ்வறு பொருட்கும் ஓரன்ன வுரிமைய' (சொல். 234) என்றதனாற் பெயரெச்சம் பொருள்படு முறைமை கூறினார். முடிபு எச்ச வியலுட் பெறப்படும் என வினையியலுட் கூறிய வாறு கடைப்பிடிக்க.

தெய்

*பெயரெச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : பெயரெச்சமாகவுடைய சொல் பெயரொடு முடிவு பெறும், எ-று.

உ-ம் : [1]"துறக்குவன் அல்லன் துறக்குவன் அல்லன்
தொடர்வரை வெற்பன் துறக்குவன் அல்லன்
தொடர்புள் இனையவை தோன்றின்" (கலி. 41)

என்றவழி, 'அவன் தொடர்பு' என வேண்டுதலின் 'அவன்' என்னும் பெயர் எஞ்சி நின்றது.

'உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே' (கிளவி. 1) 'என் மனார் ஆசிரியர்' என வேண்டுதலின் 'ஆசிரியர்' என்னும் பெயர் எஞ்சி நின்றது.

---

* பெயரெச்சமுடிபு வினையியலிற் கூறப்பட்டது ஆதலின் இங்குக் கூறப்படும் பெயரெச்சம் என்பது வெளிப் படாது மறைந்து கிடக்கும் பெயரையாம் என்பது தெய்வச் சிலையார் கொள்கை.

1. பொருள் : தொடரும் அடுக்கு மலைகளையுடைய மலை நாடன் நம்மைத் துறக்க மாட்டான்; நம் மிடம் கொண்ட அன்பினுள் இன்ன கொடு மைகள் அவன்பால் தோன்றின்.

[2]"மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே
அரும்பிய சுணங்கின் அம்பகட் டிளமுலைப்
பெருந்தோள் நுணுகிய நுசுப்பிற்
கல்கெழு கானவர் நல்குறு மகளே" (குறுந். 71)

இதனுள் 'எனக்கு' என வேண்டுதலின் வேற்றுமை யேற்ற பெயர் எஞ்சி நின்றது.

**நச்**

இது பெயரெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : பெயரெஞ்சுகிளவி பெயரொடு முடிமே—பெயரெச்சம் பெயர்ச் சொல்லோடு முடியும், எ-று.

உ-ம் : உண்ணும் சாத்தன்
உண்ட சாத்தன்

எனவரும்.

ஈண்டுப் பெயரொடு முடியும் என்ற பொது விதி நோக்கி 'நிலனும் பொருளும்' (வினை. 37) என்னும் சூத்திரத்தான் இப்பெயர்தாம் பொருள் வகையான் ஆறு வகையவாம் என்று 'எதிரது போற்றல்' என்னும் உத்தியால் கூறினார்.

**வெள்**

இது பெயரெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது

இ-ள் : பெயரெச்சம் பெயரொடு முடியும், எ-று.

உ-ம் : உண்ணும் சாத்தன், உண்ட சாத்தன் என வரும்.

---

2. பொருள் : தோன்றும் சுணங்கையும் அழகிய பகட்டான இளமுலையினையும் பெருந்தோளையும் நுண்ணிய இடையையும் உடைய மலைவாழ் கானவர் பெற்ற மகளாகிய இவள் (தலைவி) எனக்கு காம நோய்க்கு மருந்தெனின் மருந்தாவாள் இன்பத்துக்குச் சேமநிதி எனின் சேம நிதியாவாள்.

ஆதி

பெயரெச்சம் பெயரில் முடிவு பெறும்.
படித்த பையன்—படித்த பெயரெச்சம்.
நல்லபாட்டு—நல்ல—குறிப்புப் பெயரெச்சம்.

## ஒழியிசையெச்ச முடிபு

**428** **ஒழியிசை யெச்ச மொழியிசை முடிபின (38).**
(ஒழியிசை எச்சம் ஒழியிசை—முடிபின)

ஆ. மொ. இல.

The incomplete sense of 'Oliyisai' is completed by what—has been left—out.

பி. இ. நு.

**இ. வி. 350**

ஒழியிசை எச்சம் ஒழியிசை கோடலும்
......................
இயல்பென மொழி.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே ஒழியிசை யெச்சம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : ஒழியிசை யெச்சமாவன மூன்று; அவை மன்னை ஒழியிசையும் தில்லை ஒழியிசையும் ஓகார ஒழியிசையும் என; அவை மூன்றும் ஒழியிசைப் பொருள் கொண்டு முடியும், எ-று.

[1]வ-று : கூரியதோர் வாள் மன். வாள் கோடிற்று இற்றது எனப் பின்னும் வாள் மேல் முடிபு சென்றது.

---

1. இவ்வுதாரணங்களின் விளக்கங்களால், 'ஒழியிசை' என்னும் சொற்பொருளும், அது உதாரணங்களில் பொருந்துமாறும் தெளிவாக இல்லை. மற்றையோர் உரையும் உதாரணமுமே பொருந்தும்.

இனி, 'வருகதில் கொண்கன்' என, 'வருக' எனப்பட்டானும் அவனே 'கொண்கன் எனப்பட்டானும் அவனே; அதனால் அதுவும் அப்பொருள் கொண்டு முடிந்தது.

இனிக் 'கொளலோ கொண்டான்' என்புழிக் கொளலோ எனப்பட்டானையே கொண்டான் என்பது. அதனால் அதுவும் அவ்வொழியிசைப் பொருள் கொண்டு முடிந்தது.

சேனா

இ-ள்: மன்னை யொழியிசையும் தில்லை யொழியிசையும் ஓகார ஒழியிசையும் ஆகிய ஒழியிசையெச்சம் மூன்றும் ஒழியிசையான் முடியும், எ-று

உ-ம்: கூரியதோர் வாள்மன், வருகதில் லம்ம வெஞ்சேரி சேர" (அகம். 276), கொளலோ கொண்டான் என்னும் ஒழியிசையெச்சம் முறையானே திட்பம் இன்று, வந்தால் இன்னது செய்வல், கொண்டுய்யப் போமாறறிந்திலன் என்னும் ஒழியிசையான் முடிந்தவாறு. பிறவும் முடிதற்கேற்கும் ஒழியிசையறிந்து கொள்க.

தெய்

ஒழியிசை யெச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒழிந்த சொல்லை எச்சமாக வுடையது அவ்வொழிந்த சொல்லினாற் பொருள் முடிபு பெறும், எ-று.

உ-ம்: இவர் கல்வியாற் குறைவிலர் என்றவழி, ஒழுக்கத்தாற்குறையுடையர் என்றாதல், பொருளாற்குறையுடையர் என்றதால் ஒரு பொருளாற் குறித்தவழி பொருள் பட்டவாறும், அதனானே, அச்சொல் முற்றுப் பெற்றவாறும் கண்டு கொள்க.

நச்

இஃது ஒழியிசையெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள்: ஒழியிசை எச்சம் ஒழியிசை முடிபின—மன்னும் தில்லும் ஓகாரமுமாகிய ஒழியிசை யெச்சம் மூன்றும் அவ்வொழியிசைப் பொருள்மேல் வரும் சொல்லையே தமக்கு முடிபாகவுடைய, எ-று.

உ-ம் : 'கூரியதோர் வாள்மன் என்பது 'திட்பம் இன்று' என்பதனோடும், 'வருகதில் அம்ம' என்பது 'வந்தால் இன்னது செய்வேன்' என்பதனோடும் முடியும். [1]ஆண்டுப் பொருண்மை முடிபு கூறினார்; ஈண்டுப் பொருண்மையை யுணர்த்தும் சொன்மை முடிபு கூறினார்.

[2]'கொளலோ கொண்டான்' என்பது 'கொண்டான்' என்பதனோடு முடியும்; அது 'கொண்டுய்யப் போமாறு அறிந்திலன்' என்பதனோடு முடிந்தது எனின், 'கொண்டான் என்பது வந்து முடியாக்கால் அப்பொருண்மை முடிபு தோன்றாமையுணர்க.

வெள்

இஃது ஒழியிசை யெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : ஒழியிசையெச்சம் ஒழிந்து நின்ற பொருளாகிய எச்சத்தினைக் கொண்டு முடியும், எ-று.

மன்னை ஒழியிசையும் தில்லை யொழியிசையும் ஓகார வொழியிசையும் என ஒழியிசை மூன்றாம்.

---

1. ஆண்டு -இடையியல் 4, 5 சூத்திரங்களில். மன், தில் என்பன ஒழியிசைப் பொருளில் வரும் என்பது கூறப் பட்டது. இங்கு ஒழியிசைப் பொருளில் வரும் சொல் எப்படி முடியும் என்பது கூறப்பட்டது.

2. 'கூரியதோர்வாள்மன்' என்பதில் 'மன்' என்பதற்கு முடிபு இல்லை. அதனால் அது திட்பமின்று என்பதை நோக்கியது. 'வருகதில்' என்பதில் 'தில்' என்பதற்கு முடிபு இல்லை. அதானல் அது 'வந்தால் இன்னது செய்வல்' என்பதை நோக்கியது. கொளலோ கொண் டான் என்பதில் ஓ என்பதற்கு முடிபு உண்டு. அது 'கொண்டான்' என்பது. இச்சொல்லின் மூலந்தான் 'கொண்டுய்யப் போமாறு அறிந்திலன்' என்னும் ஒழிந்த பொருளையறியமுடியும். 'கொள்லோ' என நிறுத்தினால் அப்பொருளறிய முடியாது. அதனால் ஓகாரம் ஒழியிசைப் பொருள்தரினும் கொண்டான் என்பதையே தனக்கு முடிபாகவுடையதாயிற்று. - சிவ.

உ-ம் : கூரியதோர் வாள்மன், வருகதில் லம்ம வெஞ்சேரி சேர, கொளலோ கொண்டான் என்னும் ஒழியிசை யெச்சம் முறையே திட்பமின்று, வந்தால் இன்னது செய்வல், கொண்டுய்யப் போமாறறிந்திலன் எனத் தத்தம் ஒழியிசைப் பொருள் கொண்டுமுடிந்தன.

ஆதி

ஒழியிசை யெச்சம் ஒழிந்த பொருள்தந்து நிற்கும். நல்ல சாப்பாடுமன்-இங்கு நல்லதன்று, நல்லாயிருக்கிறது எனக் குறிக்கிறது.

பிச்சைக்கோ வந்தான் - ஓ திருடவந்தான் எனக் குறிக்கின்றது.

## எதிர்மறையெச்ச முடிபு

**429 எதிர்மறை யெச்ச மெதிர்மறை முடிபின. (39)**
**எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின)**

ஆ. மொ. இல.

The incomplete sense of negative
particles is completed by negatives

பி. இ. நூ

இ. வி. 350.

எதிர்மறை எச்சம் எதிர்மறை கோடலும்

.........................

இயல்பென மொழிப.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், நிறுத்த முறையானே எதிர்மறை யெச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : [1]எதிர்மறை யெச்சம் என்பன இரண்டு. ஓகார எதிர்மறையும் உம்மை எதிர்மறையும் என. அவை, அவை தம் எதிர்மறைப் பொருள் கொண்டு முடியும், எ-று.

வ-று : யானோ கொண்டேன் என்பது. [2]யானோவன்றே கொண்டேன் என்றாலும் அதனால் அப்பொருள் கொண்டு முடிந்தது எனப்படும் [3]'நீயே கொண்டாய்' என்றற்கு எதிர் மறுத்தவாறு 'யான் கொண்டிலன்' என் என்பது.

இனி [4]உம்மை எதிர்மறை : 'வரலும் உரியன்' என்பது. ஆண்டு 'வரலும்' எனப்பட்ட உம்மை எதிர்மறை. உரியன் எனப் பின்னும் அவனையே கொண்டு முடிந்தது. [5]வாராமையும் உரியன் என்பதற்கு எதிர்மறை. அவை ஒன்றொன்றனை நோக்க எதிர்மறை யென்றவாறாயிற்று.

---

1. ''எதிர்மறையெச்சம் என்பன மூன்று. ஓகார் எதிர் மறையும் ஏகார எதிர்மறையும் உம்மையெதிர்மறையும் என'' என்று இருத்தல் வேண்டும். உதாரணம் ஏகாரத் துக்கும் காட்டப்பட்டுள்ளது.

2. ''யானோவன்றே ........... எனப்படும்'' - இத்தொடர் பொருந்தாது. யானோ அன்றே என்பது யானே என்னும் பொருளது. 'அன்றே யானோ கொண்டேன்' என்பதாகக் கொண்டால், அன்றே யான் கொண் டிலேன்' என எதிர்மறைப் பொருளதாகலாம்.

3. இவ்வுதாரணமும் பொருந்தாது. ஏகாரம் தேற்ற மாகவோ பிரிநிலையாகவோ வருகிறது. 'நீயே கொண் டாய்' என்பது 'நீகொண்டிலை' என்னும் பொருள் தருவதாயின் ஏகாரம் எதிர்மறையாம்.

4. ஏகார எதிர் மறைக்கும் உதாரணம் காட்டுவதால் எதிர்மறை எச்சம் என்பன மூன்று; ஓகார எதிர்மறை யும் ஏகார எதிர் மறையும் உம்மை யெதிர் மறையும் என'' என்றிருப்பின் நன்று. (கழகப்பதிப்பு அடிக்குறிப்பு)

5. வர்ராமையும் உரியன் என்பதற்கு எதிர்மறை வரலும் உரியன் என்பது. வாராமையை நோக்க வரலும் என்பதும், வரலும் என்பதை நோக்க வாராமை யென் பதும் எதிர்மறைகள்.

சேனா

இ-ள் : [1]மாறுகோள் எச்சம் எனப்பட்ட ஏகார எதிர் மறையும் ஓகார எதிர் மறையும் உம்மை யெதிர் மறையும் ஆகிய எதிர்மறை யெச்சம் மூன்றும் எதிர்மறையான் முடியும், எ-று.

உ-ம் : யானே கொள்வேன், யானோ கள்வேன், வரலும் உரியன் என்னும் எதிர்மறை யெச்சம் முறையானே, கொள்ளேன், கள்ளேன், வாராமையும் உரியன் என்னும் எதிர் மறையான் முடிந்தவாறு கண்டு கொள்க.

தெய்

எதிர் மறை யெச்சம் முடியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : எதிர்மறைப் பொருண்மையை எச்சமாக வுடையது அவ்வெதிர் மறையாற் பொருள் முடிவு பெறும், எ-று.

[1]உ-ம் : இம்மைப் பிறப்பிற் பிரியலம் என்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள் (குறள். 1313),

என்பதனுள், ''மறுபிறப்புப் பிரிவேம் என நினைத்துக் கண் ணிறை நீர் கொண்டனள்'' எனப் பொருளுரைக்க வேண்டுத லின், எதிர்மறை, எஞ்சிநின்றதன் எதிர்மறைப் பொருளோடு முடிந்தவாறு கண்டு கொள்க.

நச்

இஃது எதிர்மறை எச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

---

1 உயிர்மயங்கியல் 73,88

1. இவ்வுதாரண விளக்கத்தைக் கொண்டு, எதிர்மறைஎச்சம் என்பது, ''எதிர்மறைச்சொல் தனக்கு எதிர்மறைப் பொருளை எச்சமாக வுடையது ஆகும். அதாவது எதிர் மறை உடன்பாட்டை எச்சமாக உடையதாகும்'' என்பது தெய்வச்சிலையார் கொள்கை என அறியலாம். 'எஞ்சி நின்றதன் எதிர்மறை' என்றது 'மறுபிறப்பில் பிரிவேம்' என்றதை. பிரியலம் என்பது எதிர்மறை; அதற்கு எதிர்மறை பிரிவேம் என்பது. சிவ.

இ-ள் : எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின—மாறுகொள் எச்சம் என்ற ஏகாரமும் ஓகாரமும் உம்மையுமாகிய எதிர்மறை எச்சம் மூன்றும் எதிர்மறைப் பொருளை உணர்த்தும் சொல்லை முடிபாக வுடைய, எ-று.

உ-ம் : யானே கொள்வேன், யானோ கொள்வேன், சாத்தன் வரலும் உரியன் என அவ்விடைச் சொற்களின் பின்னர் நின்ற சொற்கள் அவற்றை முடித்தலான் கொள்ளேன், கொள்ளேன், வாராமையும் உரியன் என்னும் பொருண்மை முடிபு தோன்றியவாறு காண்க.

வெள்

இஃது எதிர்மறை எச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் மாறுகொள் எச்சம் எனப்பட்ட ஏகார எதிர்மறையும் ஓகார எதிர்மறையும் உம்மை எதிர் மறையும் ஆகிய எதிர்மறை எச்சம் மூன்றும் எதிர்மறைப் பொருளையுணர்த்தும் சொற் கொண்டு முடியும், எ-று.

உ-ம் : யானே கொள்வேன், யானோ கள்வேன், வரலும் உரியன் என்னும் எதிர்மறை எச்சங்கள் முறையே கொள்ளேன், கள்ளேன், வாராமையும் உரியன் என எதிர்மறைச் சொற் கொண்டு முடிந்தன.

ஆதி

ஏ, ஓ, உம் எதிர்மறைப் பொருள் கொண்டு முடியும் அவனே செய்தானா—அல்ல - பிறர் செய்தார்.
அவனோ செய்தான் ,,
அவன் வந்தாலும் வருவான்—வாராமலும் இருப்பான்.

## உம்மையெச்ச முடிபு

430 உம்மை யெச்ச மிருவீற் றானுந்
தன்வினை யொன்றிய முடிபா கும்மே (40)

(உம்மை எச்சம் இருவீற் றானும்
தன்வினை ஒன்றிய முடிபு ஆகும்மே)

ஆ.மொ.இல.

The incomplete sense of ·Um' in the too endings ends in the same verbs

பி.இ.நா.

இ வி. 380.

"உம்மை யெச்சம் இருவீற் றானும்
தன்வினை ஒன்றிய முடிபா குதலும்
......................
இயல்பென மொழிப"

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இது முறையானே உம்மை யெச்சத்திற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

உரை : உம்மை யெச்சம் என்பது எச்சவும்மையாயிற்று; இருவீற்றானும் என்றது தானும் தன்னால் தழுவப்பட்டதுமான இரண்டனையும் ஆயிற்று; அவை இரண்டும் ஒன்றிய வினையே கொண்டு முடியும், எ-று.

வ-று : சாத்தனும் வந்தான் என்றக்கால், பின்னைக் கொற்றனும் வந்தான் என்றானும், கொற்றனும் வரும் என்பதானும் [1]ஒன்றிய வினையே கொண்டு முடிக என்பது. 'சாத்தனும் வந்தான்' என்றக்கால் கொற்றனும் போயினான்' என்றுவிடின் அமையாது என்பதாம்.

சேனா

இ-ள் : எஞ்சு பொருட் கிளவியும் அவ்வெஞ்சு பொருட் கிளவியான் முடிவதுமாகிய உம்மையெச்ச வேறுபா டிரண்டன் கண்ணும், தன்வினை யும்மையொடு தொடர்ந்த சொற்குப் பொருந்திய முடிபாம், எ-று.

---

1. ஒன்றிய வினை ஒரே தன்மையான வினை; வேறு வினையோ எதிர்மறையோ அல்ல.

என்றது, 'எஞ்சு பொருட்கிளவி செஞ்சொல்லாயின்' (சொல். 284) என்றதனால் உம்மையுடைத்தாயும் உம்மை யின்றியும் வரும் எஞ்சுபொருட் கிளவி உம்மை யெச்சத்திற்கு முடிபாதல் எய்திற்று; என்னை? எல்லா வெச்சத்திற்கும் எஞ்சு பொருட் கிளவியே முடிபாகலின். இனி உம்மையொடு தொடர்ந்த சொல்லிரண்டற்கும் வினை யொன்றேயாகல் வேண்டும் என எய்தாதது எய்துவித்தவாறு.

ஒன்றற்காயதே ஏனையதற்கும் ஆகலிற் றன்வினை யென்றார்.

உ-ம்: சாத்தனும் வந்தான் கொற்றனும் வந்தான் என இரண்டும் ஒருவினை கொண்டவாறு கண்டுகொள்க. சாத்தனும் வந்தான் கொற்றனும் உண்டான் என வேறுபட்டவழி உம்மை யெச்சமும் எஞ்சு பொருட்கிளவியும் இயையாமை கண்டு கொள்க. அஃதேல்,

> பைம்புதல் வேங்கையும் ஒள்ளிணர் விரிந்தன
> நடுவெண் திங்களும் ஊர்கொண் டன்றே (அகம்.2)

என [1]வினை வேறுபட்டுழியும் தம்முள் இயைந்தனவால் எனின், இணர் விரிதலும், ஊர்கோடலும் இரண்டும் மணஞ்செய் காலம் இதுவென் றுணர்த்துத லாகிய ஒரு பொருள் குறித்து நின்ற மையான் அவை ஒரு வினைபாற்படும் என்பது. பிறவும் இவ்வாறு வருவன வறிந்து ஒருவினைப்பாற் படுக்க.

[1]எஞ்சுபொருட் கிளவி செஞ்சொலாயவழித் தன்வினை கோடல் ஈண்டடங்காமையின், அது, தன்னின முடித்தல் என்பதனாற் பெறப்படும்.

---

1. வேங்கை விரிதலையும் திங்கள் ஊர் கொள்ளலையும் கொண்டு வினை வேறுபட்டன.

1. 'சாத்தன் வந்தான் கொற்றனும் வந்தான்' என்பதில் சாத்தன் என்பதுஉம் இல்லாமையின் செஞ்சொல் எனப்படும். கொற்றனும் என்பதன் உம்மையால் சாத்தன் எனும் செஞ்சொல் தழுவப்படும். அது 'கொற்றன்' வினையாகிய 'வந்தான்' என்பதையே தானும் கொண்டது.

[2]உம்மை யெச்சம் இருவீற்றானும் என்றதனான், உம்மை யெச்சத்திற்கு முடிபாகிய எஞ்சு பொருட் கிளவி உம்மையொடு வரின் எச்சமாம் என்பதாம். அஃது எச்சமாங்கால், முன் னின்றது எஞ்சு பொருட் கிளவியாம் என்பது.

எதிர்மறையும்மை எதிர்மறை யெச்சமாய் அடங்குதலின் ஈண்டு உம்மை யெச்சம் என்றது எச்சவும்மையேயாம்.

தெய்

உம்மையெச்சம் முடியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : உம்மையாகிய எச்சம் இரண்டு வேறுபாட்டின் கண்ணும் தன்வினையொடு பொருந்திய முடிபாகும், எ-று.

இருவீறாவன : முன்னின்ற சொல்லும் பின்னின்ற சொல்லும் தன்வினையாவன : இரண்டு சொல்லின் கண்ணும் உடன் பாடாகியும் மறையாகியும் வரும் தொழிலும் காலமும் ஒத்த வினைச்சொல். அது உம்மைக்கேற்ற வினையாதலின் தன் வினையென்றார். ஒன்றிய முடிபாவது அவ்வினையொடு பொருந்திய முடிபாகும் என்றவாறு. ஏனை யெச்சம் போலத் தான் வந்து முடிதலே யன்றித் தான் வந்தாலும் சார்ந்த வினையோடு கூடியல்லது பொருட்கு முடிபாகாது என்றவாறு.

உ-ம் : சாத்தனும் வந்தான், கொற்றனும் வந்தான் எனற் பாலன—சாத்தன் வந்தான், கொற்றன் வந்தான் எனவரின், [3]ஆண்டு உம்மை யெஞ்சி நின்றதென்க.

இருவீற்றானும் என்ற உம்மையான் தனிவரினும் என்று கொள்க. “வதுவை வந்த வன்பறழ்க்குமரி யிருதோள் தோழர் பற்ற” என்றவழி இருந்தோளும் என்னும் உம்மை எஞ்சி நின்றது.

---

2. ‘சாத்தனும் வந்தான் கொற்றனும் வந்தான்’ என்பதில், ‘சாத்தனும்’ என்பதற்குக் ‘கொற்றனும் வந்தான்’ என்பதும், ‘கொற்றனும்’ என்பதற்குச் ‘சாத்தனும் வந்தான்’ என்பதும் எஞ்சு பொருட்கிளவிகளாம்.

3. உம்மை எச்சமாவது உம்மையே மறைந்து நிற்பது என்பது தெய்வச்சிலையார் கொள்கை.

இடைச் சொல்லோத்தினுள் 'உம்மை யெண்ணின் உருபு தொகல் வரையார்' (இடை.42) எனவும், இவ்வோத்தினுள் 'உம்மைத் தொகை' (எச்ச.21) எனவும், ஈண்டு உம்மை யெச்சம் எனவும் கூறினாராதலின், அவற்றின் வேறுபாடு புலப்பட்டின்றால் எனின், பல பொருளை யெண்ணி ஒரு வினையான் முடிக்கும்வழிச் சொற்றோறும் உம்மை கொடுத்து, இடைநின்ற ஒன்றானும் இரண்டானும் சொல்லின்கண் உம்மை கொடாதவழி, உம்மை யெண்ணாகுமோ ஆகாதோவென நின்ற ஐயம் கொளற்குரித்து; ஆண்டு, 'உம்மை யெண்ணின் உருபு தொகல் வரையார்' என்று ஓதுதலின் உம்மை ஆண்டுத் தொக்கது என்க. இரண்டானும் பலவானும் பெயரை யடுக்கி, ஒருசொற் போல ஒருவினையான் முடிக்கும் வழி உம்மைத் தொகை என்க. தனித்தனி வினை கொண்டு உம்மை பிரிந்து நின்றே பொருள்படும் சொற்கள் செய்யுளகத்து எஞ்சி நின்றதனை எஞ்சிற்று என்க.

அஃதற்றாக, காலமும் வினையும் ஒத்தல் வேண்டும் என்றது என்னை? சாத்தன் வந்தான், கொற்றன் வரும் எனவும்; சாத்தன் வந்தான், கொற்றன் போம் எனவும் காலமும் வினை ஒவ்வாமையும் வருமால் எனின், அவை உம்மை யெஞ்சிய சொல்லன்மை வருகின்ற சூத்திரத்தான் விளங்கும்.

நச்

இஃது உம்மை யெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : இருவீற்றானும் — ஒன்றற் கொன்று முடிவனவும் முடிப்பனவுமாகிய இரண்டு கூற்றின் கண்ணும் வரும், உம்மை எச்சம் தன்வினை-உம்மை யெச்சங்களை முடிக்கும்-தன்னுடைய வினைச் சொற்கள், ஒன்றிய முடிபாகும்-ஓர் உம்மைக்குப் பொருந்திய வினையே மற்றை உம்மைக்கும் முடிபாய்வரும், எ-று.

[1]உ-ம் : 'சாத்தனும் வந்தான் கொற்றனும் வந்தான்' என எதிரது தழீஇய உம்மைக்கு முடிபாய வினையே இறந்தது தழீஇயதற்கும் முடிபு ஆயிற்று.

1. சாத்தனும் என்பதன் உம்மை பின்வரும் கொற்றனைத் தழுவுதலின் எதிரது தழுவியது. கொற்றனும் என்பதன் உம்மை முன் வந்த சாத்தனைத் தழுவுதலின் இறந்தது தழுவியது.

'சாத்தனும் வந்தான் கொற்றனும் வரும்' என்பதூஉம் ஒன்றிய முடிபாம், கொற்றனும் உண்டான்' என்றால் ஒன்றிய முடிபாகா.

எனவே, எச்சப் பொருட்கும் உம்மையை முடிபாகக் கூறாது அதனோடு தொடர்ந்த வினை முடிபாமாறு கூறவே, உள்நின்ற பொருள் முடிபு கூறாது சொல்முடிபு கூறுதலே ஆசிரியர் கருத்தாயிற்று. எனவே, முற்கூறிய வற்றிற்கும் சொல் முடிபே கூறினாராயிற்று.

"வேங்கையும் நள்இணர் விரிந்தன
நெடுவெண் திங்களும் ஊர்கொண் டன்றே" (அகம். 2)

என்பது, இணர் விரிதலும் ஊர்கோடலும் மணம் செய்யும் காலம் குறித்தலின் அவை ஒருவினையே யாம்.

இனி எஞ்சு பொருட்கிளவி செஞ்சொல் ஆயவழியும் தன் வினைகோடல் தன்னின முடித்தலால் கொள்க. அது 'சாத்தன் வந்தான் கொற்றனும் வந்தான், வரும் என்பதாகும்.

வெள்

இது உம்மை யெச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : உம்மை யெச்சம் இரண்டு வேறுபாட்டின்கண்ணும் தன்வினையொடு பொருந்திய முடிபாகும், எ-று.

இருவீறாவன எஞ்சு பொருட்கிளவியாய் வந்து முடிப்பதும் அதனால் முடிவதும் ஆகிம் உம்மையெச்ச வேறுபாடு இரண்டும். தன்வினையென்றது முடிவதும் முடிப்பதுமாகிய அவ்விரண்டு சொல்லின்கண்ணும் உடன்பாடாகியும் எதிர்மறையாகியும் வரும் ஒத்த வினைச் சொல்லினை. அச்சொல் உம்மைக் கேற்ற வினைச் சொல்லாதலின் தன் வினையாயிற்று. எனவே. உம்மை யொடு தொடர்ந்த சொல் இரண்டற்கும் வினை யொன்றேயாதல் வேண்டும் என எய்தாதது எய்துவித்தவாறு.

உ-ம் : சாத்தனும் வந்தான் கொற்றனும் வந்தான் என இரண்டும் ஒருவினை கொண்டவாறு கண்டு கொள்க.

'சாத்தனும் வந்தான் கொற்றனும் உண்டான்' என வினை வேறுபட்டவழி உம்மை யெச்சமும் எஞ்சு பொருட்கிளவியும் இயையாமை காண்க...........எதிர் மறையும்மை எதிர்மறை எச்ச மாய் அடங்குதலின், ஈண்டு உம்மையெச்சம் என்றது எச்சவும் மையே யாம்.

ஆதி

[1]எச்சப் பொருள் பற்றிய உம், உடன்பாடு எதிர்மறை எனும் இருமுடிவினும் தன் வினையாகவே முடியும்.

தண்டித்தாலும் தண்டிப்பான் — தண்டியாமலும் விடுவான் — எதிர்மறை

தண்டியாதுவிட்டுவிடுவான் — தண்டித்தாலும் தண்டிப்பான் — உடன்பாடு.

உடன்பாடு எதிர்மறை இருவகையிலும் தன் வினையே நிலவுகிறது.

குறிப்பு : உரையாசிரியர்கள் இதனை எச்சவும் மையோடு வைத்து வேறு வேறு கூறுவார்கள்.

## எச்ச உம்மை - காலமயக்கம்

431. தன்மேற் செஞ்சொல் வருஉங் காலை
நிகழுங் காலமொடு வாராக் காலமு
மிறந்த காலமொடு வாராக் காலமு
மயங்குதல் வரையார் முறைநிலை யான (41)

(தன்மேல் செம்சொல் வருஉங் காலை
நிகழும் காலமொடு வாராக் காலமும்
இறந்த காலமொடு வாராக் காலமும்
மயங்குதல் வரையார் முறை நிலை யான)

---

1. இக் கருத்துப் புதுமையானதே.

ஆ. மொ. இல-

If a word without 'Um' is followed by a word with 'um' the appearance of the future tense with present tense or with past tense is not prevented.

பி. இ. நா.

இ. வி. 352. (தொல். சூத்திரமே)

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இஃது அவ்வெச்ச வும்மையது மயக்கங் கூறுதல் நுதலிற்று.

உரை: தன் என்பது எச்சவும்மை; செஞ்சொல் என்பது உம்மையில் சொல்; எச்சவும்மைச் சொல்லின்மேல் உம்மையில் சொல் வந்தக்கால் நிகழ்காலமும் எதிர்காலமும் மயங்கும்; இறந்த காலமும் எதிர் காலமும் மயங்கப்படும் முறையிலக்கண மாகலான், எ-று.

வ-று: 'கூழ் உண்ணா நின்றான் சோறும் உண்பன்' என வரும்.

'கூழ் உண்ணா நின்றான்' என்பது செஞ்சொல். 'சோறும் உண்பன்' என்னும் உம்மைச் சொல்லின்மேல் வந்தது.

'உண்ணா நின்றான்' என்னும் நிகழ்காலம் தன் நிகழ் காலமே கொள்ளாது 'சோறும் உண்பன்' எனும் எதிர்காலம் கொண்டமையின் வழுவாயிற்றாயினும் அமைக என்பது.

இறந்தவும் எதிர்வும் மயங்குமாறு. 'கூழ் உண்டான் சோறும் உண்பான்' என வரும்.

இனி 'முறை நிலையான்' என்றதனான், இறந்ததனோடு நிகழாநின்றதூஉம் மயங்கும், எதிர்வதனோடு இறந்ததுவும் மயங்கும் என்றவாறு.

வ-று : 'கூழுண்டான் சோறும் உண்ணா நின்றான்' என வரும். 'சோறுண்பான் கூழுண்டான்' எனவரும்; பரிமாறிக் கொள்க.

சேனா

இ-ள் : உம்மையெச்சத்தின் முன் எஞ்சு பொருட் கிளவி உம்மையில் சொல்லாய் வருங்கால், நிகழ் காலத்தோடு எதிர் காலமும் இறந்த காலத்தோடு எதிர்காலமும் மயங்குதல் வரையார், எ-று.

'முறை நிலையான' என்றதனான், கூறிய முறையானல்லது எதிர்காலம் முன்னிற்ப ஏனைக்காலம் பின் வந்து மயங்குதல் இல்லை யென்பதாம்.

உ-ம் : 'கூழுண்ணா நின்றதனான் சோறும் உண்பன், எனவும், கூழுண்டான் சோறு உண்பன் எனவும் அவை கூறிய முறையான் மயங்கியவாறு கண்டு கொள்க.

இவற்றோடு இது மயங்குதல் வரையார் எனவே, இறந்த காலத்தோடு நகழ்காலமும், நிகழ்காலத்தோடு இறந்த காலமும் வந்து மயங்குதல் வரையப்படும் என்ற வாறாயிற்று.

'தன்மேற் செஞ்சொல் வருஉங் காலை' என்றதனான், உம்மையடுத்த சொல் வருங்கால் வேறுபாடின்றி இரண்டு சொல்லும் ஒரு காலத்தான் வரும் என்பதாம்.

தன்வினை, காலம் வேறுபடுதலும் படாமையும் உடைமை யான், இன்னுழி இன்னவாற்றானல்லது காலம் வேறு படாதென வரையறுத்தவாறு.

தெய்

மேற்சொல்லப்பட்ட உம்மைப்பொருட்கண் வரும் வேறு பாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : உம்மைப் பொருட்கண் உம்ம்மகொடாது செஞ் சொல்லாகிவரின் அவற்றுள் நிகழ் காலத்தொடு எதிர்காலமும் இறந்தகாலத்தொடு எதிர் காலமும் மயங்குதல் நீக்கார்; முறை பிறழாமல் நிற்கும்வழி, எ-று.

உ-ம் : சாத்தன் வாராநின்றான், கொற்றன் வருவன் போம். சாத்தன் வந்தான், கொற்றன் வருவன் போம், என இவை உம்மை கொடாமற் பொருள் பட்டவாறும், காலமுந் தொழிலும் மயங்கியவாறும் கண்டு கொள்க.

அஃதேல் 'சாத்தனும் வாரா நின்றான் கொற்றனும் வருவன்' என உம்மை கொடுத்தும் வழக்கு நிகழுமால் எனின், உம்மை கொடுக்கின்றது பொருள் வேற்றுமை உணர்தற்கன்றே ? அது கொடாக்காலும் பொருள் இனிது விளங்குமாயின் கொடுத்தத னாற் பயனின்றென்க. இவ்வாறு செய்யுளகத்துவரின் இசை நிறைத்தற்பொருட்டு வந்ததென்க.

## நச்

இதுவும் அவ்வெச்சவும்மையது காலமயக்கம் கூறுகின்றது.

இ-ள் : தன்மேற் செஞ்சொல் வருஉங் காலை—அவ் வும்மை யெச்சத்தின் முன்னர் முடிக்கும் சொல் உம்மைஇல் சொல்லாய் வருங்காலத்து, நிகழும் காலமொடு வாராக் காலமும்—நிகழ்காலத்தொடு எதிர்காலமும், இறந்த காலமொடு வாராக் காலமும்,-இறந்த காலத்தோடு எதிர்காலமும், மயங்குதல் வரையார் முறைநிலை யான—மயங்குதலை நீக்கார் அவ்வாறு மயங்கும் முறைமைக்கண், எ-று.

உ-ம் : கூழ் உண்ணா நின்றான் சோறும் உண்பன்.
கூழ் உண்டான் சோறும் உண்பன்.

எனவரும். 'முறைநிலை' என்றதனால் சிறுபான்மை நிகழ்வோடு இறப்பும் மயங்குதல் கொள்க.

உ-ம் : கூழ் உண்ணா நின்றான் சோறும் உண்டான் எனவரும்.

## வெள்

இதுவும் அவ்வெச்சவும்மையது காலமயக்கம் கூறுகின்றது.

இ-ள் : அவ்வும்மை யெச்சத்தின் முன்னர் முடிக்கும் சொல் உம்மையில்லாத சொல்லாய் வருங்காலத்து நிகழ்காலத் தொடு எதிர்காலமும் இறந்த காலத்தொடு எதிர்காலமும் முறையானே வந்து மயங்குதலை நீக்கார் ஆசிரியர், எ-று.

முறைநிலையான என்றதனால் இங்குக் கூறிய முறையா னன்றி நிகழ்காலம் முன்நிற்ப ஏனைக்காலம் பின்வந்து மயங்குதல் இல்லை என்பதாம்.

உ-ம் : 'கூழுண்ணா நின்றான் சோறும் உண்பன்' எனவும் 'கூழுண்டான் சோறும் உண்பன்' எனவும் நிகழ்காலத்தொடு எதிர்காலமும் இறந்த காலத்தொடு எதிர்காலமும் கூறிய முறை யான் மயங்கி வந்தன. இவற்றொடு மயங்குதல் வரையார் எனவே, இறந்த காலத்தொடு நிகழ்காலமும் நிகழ்காலத்தொடு இறந்தகாலமும் வந்து மயங்குதல் நீக்கப்படும் என்றவாறாம்.

இங்குத் 'தன்' என்றது 'சோறும் உண்பன்' என வரும் உம்மை யெச்சத்தை. செஞ்சொல் என்றது 'கூழ் உண்ணா நின்றான்' என உம்மையில்லாது வரும் சொல்லினை.

உம்மை யெச்சத்தோடு தொடர்ந்த சொல்லிரண்டிற்கும் வினை ஒன்றேயாதல் வேண்டும் என மேலைச் சூத்திரத்தில் கூறினார். அங்ஙனம் கூறப்பட்ட வினைகாலம் வேறுபடுதலும் படாமையும் உடைமையான் இன்னவிடத்து இன்ன வகையா னல்லது காலம் வேறுபடாது என இச்சூத்திரத்தான் வரையறை கூறினார்.

## ஆதி

செஞ்சொல் என்பது உம் ஒட்டாத பெயர்
சோறும் உண்கிறான்—நிகழ்காலம்.

[1]சோறும் உண்கிறான்—பிறகு காப்பி குடிப்பான்—நிகழ் காலத்தோடு எதிர்காலம். காப்பி—செஞ்சொல்.

சோறு உண்டான்—இனிக்காப்பி குடிப்பான்—இறந்த காலத்தோடு எதிர்காலம். காப்பி செஞ்சொல்.

'உம்' முன்னர்ச் செஞ்சொல் வருமாயின் நிகழ்காலத்துடன் எதிர்காலமும் இறந்த காலத்துடன் எதிர்காலமும் கலந்து வருதல் கடியத் தக்கதன்று ; இஃது நிலைத்த முறைமையே.

---

1. இவ்வாறு உலக வழக்கு இல்லை. சோறு உண்கிறான்- காப்பியும் குடிப்பான் என்பதே வழக்கு.

இவை நிகழ்காலத்தோடு நிகழ்காலமும் இறந்த காலத்தோடு இறந்த காலமும் எதிர்காலத்துடன் எதிர்காலமும் வருவதே சிறப்புடைத்து என அறிகிறோம்.

சோறும் உண்டான் பாலும் குடித்தான்
சோறும் உண்கிறான் பாலும் குடிக்கிறான்
சோறும் உண்பான் பாலும் குடிப்பான்

என்றமுறை மாறி வருமொழி 'பால்' எனச் செஞ்சொல் ஆகிற போது காலம் மாறவும் இடமாகிறது.

## என எச்ச முடிபு

*எனவெ னெச்சம் வினையொடு முடிமே. (42)
(எனஎன் எச்சம் வுனையொடு முடிமே)

ஆ. மொ. இல.

The incomplete word 'ena' ends in verb.

பி. இ. நா.
இ வி. 350

எனவென் எச்சம் வினையொடு முடிதலும்
.......................... ...
இயல்பென மொழிப.

இளம்

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே எனவென் எச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : எனவென நின்ற எச்சம் பெயர் கொண்டு முடியாது வினை கொண்டு முடியும், எ-று.

வ-று : 'கொள்ளெனக் கொண்டான்' என வரும். பிறவும் அன்ன.

---

* இடையியலில் (10) என என் எச்சம் ஆறு பொருளில் வரும் என்றார். இங்கு அவற்றில் எண்ணுப் பொருள் பெயர்ப் பொருள் இரண்டையும் விட்டு ஏனைய நான்குமே கொள்க. அதனால் வினையொடு முடியும் என்றது. பெரும்பான்மைபற்றி யென்க. 'நிலனென நீரெனத்தீயென வளியென நான்கு' என்பதில் 'நான்கு'

தன் வினையையோ பிற வினையையோ எனின், இன்ன வினை யென்பதில்லை; ஏற்ற வினையான் முடியும் என்பது.

சேனா

இ-ள் : என வென்னும் எச்சம் வினை கொண்டு முடியும், எ-று.

உ-ம் : கொள்ளெனக் கொடுத்தான், துண்ணெனத் துடித்தது, ஒல்லென வொலித்தது, காரெனக் கறுத்தது எனவும்; [1]நன்றென்று கொண்டான், தீதென்றிகழ்ந்தான் எனவும் வரும்.

தெய்

[1]எனவென் எச்சமுடிபு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : என வென்று சொல்லப்பட்ட எச்சம் வினையொடு முடியும், எ-று. உம்மையாற் பெயரொடும் முடியும் என்று கொள்க. முடிதலாவது அவற்றைச் சார்ந்து நின்று பொருளை யுணர்த்துதல். முடிதல் எனினும் தொடர்தல் எனினும் ஒக்கும்.

உ-ம் : *வீடுணர்ந் தோர்க்கும் வியப்பாமால் இந்நின்ற
வாடல் முதியாள் வயிற்றிடம் — கூடார்
பெரும்படை வெள்ளம் நெரிதரவும் பேரா
இரும்புலி சேர்ந்த இடம் (பு. வெ. மாலை. வஞ்சிப். 19)

---

* எனும் பெயரைக் கொண்டு முடிந்தது காண்க.

1 எனவின் பொருளே என்று என்பதற்கும் ஆதலின் இவ்வுதாரணங்களைக் காட்டினார்.

1. என என்னும் சொல் எஞ்சி (மறைந்து) நிற்பது என எச்சம் என்பது தெய்வச்சிலையார் கொள்கை.

* பொருள் : இங்கே நின்ற வாடிய மூதாட்டியின் வயிற்றிடமே, பகைவரது வெள்ளம் போலும் பெரியபடை வந்து நெருக்கவும் சிறிதும் பின்னிடாத பெரிய புலிபோலும் வீரன் தங்கியிருந்த இடம் என வீடுணர்ந்த முனிவர்க்கும் வியப்பாகும்.

என்பதனுள் 'இரும்புலி சேர்ந்த இடம் என வியப்பாமால்' எனப் பொருளுரைக்க வேண்டுதலின் 'என' என்பது எஞ்சி நின்று 'வியப்பு' என்பதனோடு தொடர்ந்தது. இது வினை.

பிரிநிலை வினையே (எச்ச. 31) என்னுஞ் சூத்திரத்துள் 'குறிப்பேயிசையே ஆயீரைந்தும்' என்றவழிக் 'குறிப்பே இசையே என அவ்வீரைந்தும் எனப் பொருளுரைக்க வேண்டுதலின் 'என' என்பது எஞ்சி நின்றது, ஈரைந்து என்னும் பெயரொடு முடிந்தது.

## நச்

இது எனவென் எச்சம் ஆமாறு கூறுகின்றது.

இ-ள் : என என்எச்சம் — முன்னர் வினையும் குறிப்பும் இசையும் பண்பும் எனக் கூறிய நால்வகையவாகிய எனவென் எச்சம், வினையொடு முடிமே—தெரிநிலை வினையோடும் குறிப்பு வினையோடு முடியும், எ-று.

'செய்தென' என்னும் [1]வினையெச்ச என, வினைகோடல் முற்கூறினார் (வினை. 31) [2]எண் எனவும் பெயர் எனவும் வினை கொள்ளா எனவே, என என்னும் இடைச்சொல் ஏழு வகையது ஆயிற்று.

---

1. வினை யெச்ச என — வினை யெச்சம் சார்ந்து வரும் என 'மழை பெய்து மரம் வளர்ந்தது' என்பது, 'மழை பெய் தென மரம் வளர்ந்தது' என்று வரும் போது என என்பது தனிப் பொருளுடையதன்றிச் செய்து என்வாய் பாட்டு எச்சத்தைச் சார்ந்து வந்தது. அதனால் என என்பது வினை, குறிப்பு, இசை பண்பு, எண், பெயர் என்னும் ஆறுபொருளுடன் (இடையியல்.10) செய்தேன் எச்சப்பொருள் ஒன்றும் சேர்ந்து ஏழுபொருளில் வருவ தாயிற்று.

2. எண்ணுப் பொருளில் வரும் எனவும், பெயர்ப் பொருளில் வரும் எனவுப் வினைமுடிபு கொள்ளா. நிலனென நீரெனத் தீயென வளியெனப் பூதம் நான்கு அழுக்காறு என பெயர் ஒருபாவி —கொண்டமை காண்க.

உ-ம் : கார் வருமனெக் கருதி நொந்தாள்

துண்ணெனத் துடித்தது.
ஒல்லென வொலித்தது
காரெனக் கறுத்தது.

என நான்கனுள் இருவகை வினையும் காண்க.

என்று என்பதற்கும் இவ்விதி ஒக்கும்.

கொள்ளென்று கொண்டான்
மலைவான் கொள்ளென்று உயர்பலி தூஉய் (புறம்.143)

என்பன கொள்ளென்று சொல்லிக் கொண்டான் எனவும், 'மலை வான் கொள்ள வேண்டும் என்று சொல்லி' எனவும் பொருள் தருதலின் சொல் லெச்சமாம்.

## வெள்

இது என வென் எச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : என என்னும் எச்சம் வினை கொண்டு முடியும், எ-று.

உ-ம் : கொள்ளெனக் கொடுத்தான் துண்ணெனத் துடித்தது, ஒல்லென வொலித்தது, காரெனக் கறுத்தது எனவரும். என்று என்னும் எச்சச் சொல்லின் முடிவும் பொருளும் என என்பதனோடு ஒத்தலான் அதனை எனவென் எச்சத்தில் அடக்கினார் ஆசிரியர் எனக் கருதுவர் சேனாவரையர்.

உ-ம் : நன்றென்று கொண்டான், தீ தென்றிகழ்ந்தான் என வரும்.

## ஆதி

எனஎன்னும் எச்சம் வினையைக் கொண்டு முடியும். படி எனச் சொன்னார்.

# ஏனை யெச்சங்களின் முடிபு

433. எஞ்சிய மூன்று மேல்வந்து முடிக்கு
மெஞ்சு பொருட் கிளவி இலவென மொழிப (43)

(எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும்
எஞ்சு பொருள் கிளவி இலஎன மொழிப)

ஆ. மொ. இல.

The remaining Three have no words to complete.

பி. இ. நா.

இ. வி. 350.

எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும்
எஞ்சுபொருட் கிளவி யிலவாய்................

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின் ஒழிந்து நின்ற எச்சங்கள் திறத்துப் படுவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : எஞ்சிய மூன்றும் என்பன [1]அவை மூன்றும்; முந்தையவற்றைப் போலத் தம்மை யின்னவாறு முடிப்பன என்று காட்டப்படும் எச்சச்சொல் இல்லை, எ-று.

'மூன்றும் மேல் வந்து முடிக்கும் எச்சச்சொல் இல' என ஒன்று உடைத்து என்பதாம். அஃதியாதோ வெனின் சொல் லெச்சம்; அதனை முன்னர்ச் சொல்லுதும்.

சேனா

இ-ள் : சொல்லப்பட்டன வொழிந்து நின்ற சொல்லும் குறிப்பும் இசையுமாகிய எச்சம் மூன்றும் மேல் வந்து தம்மை முடிக்கும் எஞ்சு பொருட் கிளவியையுடைய வல்ல வென்று சொல்லுவர் ஆசிரியர், எ-று.

என்றது, அவ்வத் தொடர்க்குத் தாம் எச்சமாய் வந்து அவற்றதவாய் நிலையை நீக்கலின், பிரிநிலையெச்சம் முதலாயின போலத் தன்மை முடிக்கும் பிற சொல்லைத் தாம் அவாய் நில்லா என்றவாறு. அவை பிற சொல் அவாவாது தாம் எச்சமாய் வருமாறு முன்னர்ச் சூத்திரத்தாற் பெறப்படும்.

---

1. அவை—சொல், குறிப்பு, இசை எச்சங்கள்.

தெய்

சொல்லெச்சத்திற்கும் குறிப்பெச்சத்திற்கும் இசையெச்சத்திற்கும் உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மேல் அதிகரிக்கப்பட்ட பத்தினுள்ளும் முடிவு சொல்லாது ஒழிந்த மூன்று சொல்லும் வந்து முடிக்கும் சொற்களை எஞ்சி நிற்றலில், எ-று.

எனவே, முந்துற்ற ஏழு சொல்லும் வந்து முடிக்கும் சொற்களையுடைய என்பதூஉம், இவை நின்றவற்றாற் பொருள் வேறுபடூஉம் என்பதூஉம் கூறியவாறாம் என்றவாறு. இதன் பொருள் வருகின்ற சூத்திரத்தான் விளங்கும்.

நச்

இஃது ஏனை எச்சங்கட்கு முடிபு வேற்றுமை கூறுகின்றது.

இ-ள் : எஞ்சிய மூன்றும்—ஒழிந்த சொல்லெச்சமும் குறிப்பு எச்சமும் இசையெச்சமுமாகிய மூன்றும், மேல்வந்து முடிக்கும் எஞ்சு பொருட் கிளவி இல என மொழிப—ஒழிந்த எச்சங்கள் போலத் தமக்குமேல் வேறாய் வந்து தம்மை முடிக்கும் எஞ்சிய பொருட் கிளவியை உடைய அல்ல என்று கூறுவர் ஆசிரியர், எ-று.

எனவே, பிறசொல்லை அவாவி நின்றாலும், அவை வந்து முடியாமல், தாமே அவற்றைக் கூறி நிற்குமாயின. அவை மேல் காட்டுதும்.

சொல்லை எச்சமாகவுடைய சொல் எனவும், குறிப்பின்கண் தோன்றிய எச்சம் எனவும், இசையின்கண் தோன்றிய எச்சம் எனவும் விரிக்க.

வெள்

இஃது ஏனை யெச்சங்கட்கு முடிபு வேற்றுமை கூறுகின்றது.

இ-ள் : முற்குறித்த பத்து எச்சங்களுள் கூறப்படாது எஞ்சியுள்ள சொல்லெச்சம் குறிப்பெச்சம் இசையெச்சம் ஆகிய

மூன்றும் மேல் வந்து தம்மை முடிக்கும் எஞ்சு பொருட்கிளவியை உடையனவல்ல என்று சொல்லுவர் ஆசிரியர் எ-று.

என்றது அவ்வத் தொடர்க்குத் தாம் எச்சமாய் வந்து அவற்றது அவாய் நிலையை நீக்குதலின் முற்கூறிய பிரிநிலை யெச்சம் முதலாயின போலத் தன்மை முடித்தற்குப் பிற சொல்லை அவாவி நில்லா என்பதாம்.

ஆதி

பத்துவகை யெச்சங்களில் இங்குக் கூறப்படாது எஞ்சி நின்ற சொல் குறிப்பு இசை எச்சங்கள் மூன்றும் தம்மோடு பிற ஒன்றைக் கொண்டு முடிவன வல்ல ;

**434. *அவைதாந்**
**தத்தங் குறிப்பி னெச்சஞ் செப்பும். (44)**

(அவைதாம்
தம் தம் குறிப்பின் எச்சம் செப்பும்).

ஆ. மொ. இல.

Those (three) complete the sense by the context

பி. இ. நூ.
இ. வி. 350.

அவைதாம்
தத்தம் குறிப்பின் எச்சம் செப்பலும்
இயல் பென மொழிப இயல்புணர்ந் தோரே.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இது, 'குறிப்பே இசையே' (எச்ச.34) என்று கூறப்பட்ட இரண்டெச்சமும் தங் குறிப்பிற் பற்றிய எச்சத்தானே முடிபு கூறப்படும்; பிறிதில்லை என்பது.

வ-று : விண்ணென விசைத்தது—குறிப்பெச்சம்; அது தன் குறிப்பினையே கொண்டு முடிந்தது. விண் என்றதே விசைத்தது

---

* அவைதாம் என்பது நச். பாடத்தில் இல்லை.

எனப்பட்டது. அதனான்தத்தங் குறிப்பின் எச்சத்தானே முடிந்தது என்பது.

இனி இசையெச்சம் ஒல்லென வொலித்தது.

இடைச்சொல்லோத்துள் அறு பகுதிய என்றோதப்பட்ட 'என' விகற்பித்து இரண்டு முடிபு கூறப்பட்டது என்பது; மற்று ஆண்டுச் சொல்லெச்சம் என்பதில்லையால் எனின், விடை: 'எனவென் எச்சம் வினையொடு முடிமே' (எச்ச. 42) என்று முடித்தார், வினையென வினைதன் கண்ணதே சொல்லெச்சம்; அது கொண்டு முடிதல் இவ்வாய்பாடு. அவ்வேற்றுமை நோக்கி வேறு சொல்லெச்சம் என வேண்டினார் என்பது.

முனனர் மூன்றுமேல்வந்து முடிக்கும் எஞ்சு பொருட்கிளவி யிலவென, ஒன்றுடைத்து என்பது பட்டு நின்றது, அஃது யாதோ ? சொல்லெச்சம் என்பது.

இனி அதற்கு முடிபு கூறுகின்றார்.

சேனா

இ-ள்: அவ்வெச்சம் மூன்றும் சொல்லுவார் குறிப்பான் எஞ்சி நின்ற பொருளை யுணர்த்தும், எ-று.

உ-ம்: [1]பசப்பித்துச் சென்றா ருடையையோ அன்ன
நிறத்தையோ பீர மலர்.
இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கை கொல்லும் காழ்த்த விடத்து (குறள். 879),

என்புழி முறையானே 'பசப்பித்துச் சென்றாரையாம் உடையேம்' எனவும், 'தீயாரைக் காலத்தாற் களைக' எனவும் வந்த தொடர் மொழி, எச்சமாய் நின்ற குறிப்புப்பொருளை வெளிப்படுத்தலாற் குறிப்பெச்சமாயின.

---

1. பொருள்: எதிர்ப்பட்ட ஞான்றே தலையளி செய்து நின் னிற் பிரியேன் அஞ்சல் என்றவர் தாமே பின் பிரிவராயின், அவர்க்கன்றி அவர் தெளி வித்த சொல்லை மெய்யெனத் தெளிந் தார்க்குக் குற்ற முண்டோ ?—பரிமேலழகர்.

[2]அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு (குறள். 1)
அளித்தஞ்சல் என்றவர் நீப்பின் தெளிந்த சொல்
தேறியார்க் குண்டோ தவறு (குறள். 1154)

என்றவழி முறையானே 'அதுபோல' எனவும் 'நீத்தார்க்கே தவறு' எனவும் வருவன எஞ்சிய இசைப்பொருள் உணர்த்தலான் இசையெச்சம் ஆயின.

சொல்லெச்சத்திற்கு உதாரணம் முன்னர்க் காட்டுதும். 'சொல்லளவல்லது எஞ்சுதல் இன்றே' (சொல். 111) என்பதனான் அஃதொரு சொல்லாதல் பெறப்படுதலின் இது தொடர்ச் சொல்லாம் என்பது. 'சொல்' என்னும் சொல் எஞ்சுவது சொல்லெச்சம் [1]என்பர் இவ்விருவகையும் இசையெச்சம் என அடக்குப.

*'பசப்பித்துச் சென்றாரையாமுடையேம்' என்னுந்தொடக்கத்தன குறிப்பிற் றோன்றலாய் அடங்குதலின், விண்ணென விசைத்தது என்பது குறுப்பெச்சம் என்றும், அதுபோல என்னுந் தொடக்கத்தன விகார வகையாற்றொக்கு நின்றமையான், ஒல்லென ஒலித்தது என்பது இசையெச்சமென்றும், இவை தத்தம் சொல்லான் முடிதலல்லது பிற சொல்லால் முடியாமையின் இவற்றை மேல் வந்து முடிக்கும் எஞ்சு பொருட்கிளவியில

---

2. பொருள் : "எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலையுடையன; அதுபோல உலகம் ஆதிபகவனாகிய முதலையுடைத்து" "எதிர்ப்பட்ட ஞான்றே தலையனி செய்து நின்னிற் பிரியேன் அஞ்சல் என்றவர் தாமே பின் பிரிவராயின் அவர்க்கன்றி அவர் தெளிவித்த சொல்லை மெய்யெனத் தெளிந்தார்க்குக் குற்றமுண்டோ" — பரிமேலழகர்.

1. என்பார் யார் எனத்தெரியவில்லை.

* இப்பகுதிக்கும் பின்வரும் பகுதிக்கும் சுந்தர மூர்த்தி விளக்கம் சிறப்புடையது. அதனைச்சூத்திரவுரை முடிவில் காண்க.

என்றார் என்றும் உரைத்தாரால் உரையாசிரியர் எனின், அற்றன்று; 'தெரிபு வேறு நிலையலும் குறிப்பிற் றோன்றலும்' (சொல். 157) எனச்சொற்பொருட் பாகுபாடுணர்த்தினார். குறிப்பிற்றோன்றும் பொருளை வெளிப்படுத்தும் எச்சமாதலுடைமையான் எச்சம் என்றார்; அதனான் ஆண்டடங்காது. இனி விசைத்தது ஒலித்தது என்பன தஞ்சொல் எனப்படா; படினும் விண்ணென வீங்கிற்று, துண்ணெனத் துலங்கினான் எனவும், ஒல்லென வீழ்ந்தது எனவும் பிறசொல்லானும் முடிதலின் எஞ்சு பொருட்கிளவியில என்றல் பொருந்தாதாம். என்னை ? தம் சொல் அல்லாதன எஞ்சு பொருட்கிளவியா மாகலின்.

இனி அதுபோல என்பது தொக்குக்கும் வழித் தொகுத்தல் என்பதனாற் றொக்கதாயின் அதனைச் சுட்டிக்கூறாவுவமம் என அணியியலுள் ஆசிரியர் ஓர் உவமை வேறுபாடாகக் கூறல் பொருந்தாது. தொகுக்கும் வழித் தொகுத்தல் ஒருமொழிக் கண்ணதாகலிற் பலசொல் தொகும் என்றலும் பொருத்தமின்று. அதனான் அவர்க்கது கருத்தன்று.

விண்ணென விசைத்தது நல்லென வோலித்து என்னுந் தொடக்கத்தனவற்றை எனவெனெச்சம் என அடக்கிக் குறிப் பெச்சத்திற்கும் இசையெச்சத்திற்கும் வேறுதாரணங் காட்டல் கருத்தென்க. அல்லதூஉம் எனவென் எச்சமென அடக்காது இசையும் குறிப்பும் பற்றி வருவனவற்றை வேறோதின், வெள்ளென வெளுத்தது எனப் பண்பு பற்றி வருவதனையும் வேறு ஓதல் வேண்டும்; அதனை வேறு ஓதாமையானும் எனவென் எச்சம்என அடக்குதலே கருத்தாகக் கொள்க.

குறிப்புப் பொருளைப் 'பசப்பித்துச் சென்றார் உடையையோ' 'இளைதாக முள்மரம் கொல்க' என்பன முதலாகிய தொடர்மொழியே உணர்த்தலான் எஞ்சு பொருள் எனப்படாவாயினும் அப்பொருள் பிறசொல்லானல்லது வெளிப்படாமையின் அச்சொல் எச்சமாயிற்று. குறிப்புப் பொருளேயன்றி எஞ்சு பொருளும் சொல்லுவான் குறிப்பொடுபடுத்து உணர்ந்து தமக்கேற்ற சொல்லால் உணர்த்தப்படுதலின் குறிப்பான் எச்சஞ் செப்பல் மூன்றற்கும் ஒத்தவாறறிக.

தெய்

இதுவும் அது.

இ-ள் : மேற் சொல்லப்பட்ட மூன்று சொல்லும் வந்த சொல்லையுடைய வல்லவாயினும், தத்தங் குறிப்பினான் எஞ்சிய பொருண்மையை யுணர்த்தும், எ-று.

உதாரணம் சிறப்புச் சூத்திரத்துட் காட்டுதும்.

நச்

இது குறிப்பெச்சமும் இசையெச்சமும் முடியுமாறு கூறுகின்றது.

இ-ள் : எச்சம் - சொல்லெச்சம் ஒழிந்த இருவகையெச்சங்கள், தத்தம் குறிப்பின செப்பும்-தம்மைக் கூறுவோர் தம்முடைய குறிப்புக்களாலே தம்முடைய எஞ்சு பொருளைத் தாமே கூறிநிற்கும், எ-று.

உ-ம் : 'கற்கறிக்க நன்கு கட்டான்' என்றால் தீங்கு அட்டான் என்னும் குறிப்பு, தோன்றிய எஞ்சு பொருளினைத் தானே கூறி நின்றது.

வயிறு மொடு மொடுத்தது என்றால் இசையிற் குறிப்பாகிய 'உண்ண வேண்டா' என்னும் எஞ்சு பொருளினைத் தானே கூறிநின்றது. இவ்விசையிற் குறிப்பு வயிற்றின் கண்ணும்கொள்க.

இனி, பிறசொல் வாராது தம்மைத் தாமே முடிக்கும் என்று, [1]விண்ணென விணைத்தது, ஒல்லென வொலித்தது என்பன காட்டினாரால் உரையாசிரியர் எனின், அவை தம்மைத் தாமே முடியாமல், 'அது விண்ணென வீங்கிற்று, ஒல்லென வோடிற்று என்ப்பிற சொல் வந்து முடித்தலும் அவற்றிற்கு ஏற்கும் ஆகலானும், அவை 'என' என்னும் இடைச்சொல் ஆகலானும், அவற்றைக் கொண்டால் 'காரெனக்கறுத்தது' என்னும் பண்பும் கோடல் வேண்டும் ஆகலானும் அது போலி உரையாம்.

---

1. விண்ணென விசைத்தது என்பது இளம்பூரணர் காட்டியது.

இனிச் சேனாவரையர் குறிப்பெச்சத்திற்கு 'இளைதாக முன் மரம் கொல்க' என்னும் குறள்வெண்பாவும், இசையெச்சத்திற்கு 'அகரமுதல' என்னும் குறள்வெண்பாவும் காட்டினாரால் எனின், அவர் காட்டின குறிப்பெச்சம் செய்யுள் இலக்கணம் கூறுகின்ற செய்யுளியற் 'சொல்லொடும் குறிப்பொடும்' (செய்.206) என்னும் சூத்திரத்தால் பல சொல் தொடர்ந்ததோர் செய்யுள் முடிந்தக்கால் வரும் என்று கொண்ட குறிப்பெச்சமாகலின், அதனைச் சொல்லிலக்கணத்தில் கூறுகின்ற குறிப்பெச்சத்திற்குக் காட்டினால் ஆண்டைக் குறிப்பெச்சத்திற்கு வேறுபொருள் இன்றாம் ஆகலானும், அவர் இசையெச்சம் என்ற 'அகரமுதல' என்பதன்கண் 'அதுபோல' என விரிந்த உவமச்சொல் துணியுமாறு விரியாது, இரண்டற்கும் பொதுவாய் வேறுபட வந்த உவமத்தின்பாற் படுத்தல் அல்லது இசையால் பிறவாமையானும் அவை பொருந்தாமையுணர்க.

வெள்

இ-ள்: அவ்வெச்சம் மூன்றும் சொல்லுவார் குறிப்பினால் எஞ்சி நின்ற பொருளை யுணர்த்தும், எ-று.

உ-ம்: பசப்பித்துச் சென்றார் உடையையோ அன்ன நிறத்தையோ பீரமலர்.

என்புழி 'பசப்பித்துச் சென்றாரையா முடையேம்' எனவந்த தொடர்மொழி எச்சமாய் நின்று குறிப்புப் பொருளை வெளிப்படுத்தலாற் குறிப்பெச்சமாயிற்று.

அளித்தஞ்சல் என்றவர் நீப்பின் தெளிந்தசொல்
தேறியார்க் குண்டோதவறு.

என்றவழி 'நீத்தார்க்கேதவறு' என எஞ்சிய பொருள் உணர்த்தலான் இசையெச்சமாயிற்று.

சொல்லெச்சத்திற்கு காரணம் அடுத்த சூத்திரத்திற் காட்டப்படும். ஒரு சொல்லளவில் எஞ்சி நிற்பது சொல்லெச்சம் என அடுத்த சூத்திரத்திற் கூறப்படுதலின் இசையெச்சம் என்பது தொடர்ச்சொல்லாய் எஞ்சுவது என்பது பெறப்படும். சொல் என்னும் சொல் எஞ்சுவதே சொல்லெச்சம் என்போர், ஒரு சொல் எஞ்சுதலும் ஆகிய தொடர்சொல் எஞ்சுதலும் இருவகையினையும் இசையெச்சம்என அடக்குவர்.

ஆதி

சொல், குறிப்பு, இசை எச்சங்கள் மூன்றும் சொல்லும் குறிப்பு முறையால் எஞ்சிநின்ற பொருளை யுணர்த்தும்.

'ஆமாம், நான்தான் முழுவதையும் சாப்பிட்டுவிட்டேன்' இது, 'யான் அல்லன எல்லாருந்தாம்' எனப் பொருள் தருவதால் சொல் எச்சம்.

'குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கிற்று – இது குறிப்பாகச் சுட்டுவதால் குறிப்பெச்சம்.

ஓகை ஓகை, சரிசரி, அதுசரி-இவை நன்று எனப் பாராட்டுவதால் இசையாம்.

கு. சுந்தரமூர்த்தி

(உரையாசிரியர்க்கு மறுப்புப் பகுதி)

(சொல்லெச்சம் யாதானும் ஒரு சொல் எஞ்சி நிற்பது
இசையெச்சம் ஒருதொடர் எஞ்சி நிற்பது
குறிப்பெச்சம் ஒரு தொடர்மொழி (வாக்கியம்) எஞ்சி நிற்பது)

"குறிப்பெச்சத்திற்கு 'விண்ணென விசைத்தது' என்ற தொடரையும், இசையெச்சத்திற்கு 'ஒல்லென வொலித்தது' என்ற தொடரையும் உதாரணம் காட்டினர் இளம்பூரணர். சேனாவரையர் இக்கருத்தை மறுக்குங்கால் ஒரு புதிய முறையைக் கையாளுகிறார். தாம் காட்டிய உதாரணத்தை இளம்பூரணர் காட்ட நினையாமைக்குரிய காரணத்தைத் தாமே கண்டு, அதற்கு முதற்கண் மறுப்புரை வழங்குவர். அடுத்து அவர் காட்டிய உதாரணங்கள் பொருந்தாமைக்கு மறுப்புரை வழங்குவர். இவ்விருதிறமாக அவர் மறுப்புரை சொல்லுகின்றது.

1) 'இளைதாக முள்மரம் கொள்க' என்ற குறட்பா குறிப்பிற் றோன்றலாய் அடங்குதலின் அது குறிப்பெச்சமாகாது.

'அகர முதல எழுத்தெல்லாம்' என்ற குறட்பாவில் அதுபோல என்ற சொல் எஞ்சி நிற்பது தொகுக்கும் வழித் தொகுத்தலாய் அடங்குதலின் அது இசையெச்சத்துக்கு உதாரணம் ஆகாது.

ஆதலின் மேற்காட்டிய இரு உதாரணங்களும் ஈண்டுக் காட்டற்குப் பொருத்தம் இல்லை என இளம்பூரணர் கருதியதாக நினைந்து அதனைச் சேனாவரையர் மறுக்குமாறு :—

சொல் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் பொருள் உணர்த்தும் முறையில் 'இளைதாக முள் மரம் கொல்க' என்னுந் திருக்குறள் குறிப்பில் தோன்றற்கு உதாரணம் ஆகுமேனும், அக்குறிப்புப் பொருளை உணர்த்தும் எச்சமாதற் பொருண்மையுடைமையின் அதுபற்றி இவ்விடத்தும் உதாரணம் காட்டுதல் இழுக்கில்லை.

இனி அகரமுதல என்னும் திருக்குறளில் 'அதுபோல' என்ற தொடர் மறைந்து வருவது தொகுக்கும் வழித் தொகுத்தலாயின், அதனையே சுட்டிக் கூறாவுவமம் எனப் பின்னர் உமவவியலிற் கூறுதற்குக் காரணம் இல்லை. (இக்குறளைச் சுட்டிக் கூறாவுவமத்துக்கு உதாரணம் காட்டுவர் இளம்பூரணர்). அன்றியும் தொகுக்கும் வழித் தொகுத்தல் என்பது ஒரு சொல்லே தொகுவதாகும். ஈண்டு 'அதுபோல' என்பதோ ஒரு தொடராகும். இதனானும் இது தொகுக்கும் வழித் தொகுத்தல் அன்றாம் என்பர்.

2) இனி இளம்பூரணர் இவற்றிற்குக் காட்டியிருக்கும் எடுத்துக் காட்டுகள் பொருந்தாமையைக் காண்போம். இளம்பூரணர் குறிப்பெச்சத்திற்கு 'விண்ணென விசைத்தது' என்பதையும், இசையெச்சத்திற்கு 'ஒல்லென ஒலித்தது' என்பதையும் காட்டி, இவைதத்தம் சொல்லான் முடிதலின் மேல்வந்து முடிக்கும் எஞ்சு பொருட்கிளவியில்லை என்றும் கூறினர்.

'காற்று விண்ணென விசைத்தது' என்புழி விண் என்ற குறிப்பையே 'விசைத்தது' என்பது உணர்த்துகின்றது. 'கடல் ஒல்லென ஒலித்தது' என்புழி ஒல்லென்ற இசையையே 'ஒலித்தது' என்பது உணர்த்துகின்றது. எனவே, விண்ணெனலும் விசைத்தலும், ஒல்லெனலும் ஒலித்தலும் ஒன்றாதலின் தத்தம் சொற்கொண்டே முடிந்தது என்றார் இளம்பூரணர். இவைதத்தம் சொல்லால் முடிந்தது என்பதற்கு இளம்பூரணர் கருதிய பொருள் இதுவாகச், சேனாவரையர் வேறு விதமாகப் பொருள் கொண்டு அதுவே இளம்பூரணர் கருத்தாக நினைத்து மறுப்பு வழங்குகின்றார் அம்மறுப்பு வருமாறு:—

(அ) விண்ணென விசைத்தது, ஒல்லென வொலித்தது என்வற்றில் விசைத்தது, ஒலித்தது என்பன முறையே விண் என்பதற்கும் ஒல் என்பதற்கும் உரிய சொற்கள் அல்ல. (ஆ) அங்ஙனம் உரிய சொற்களாயினும், 'விண்ணென வீங்கிற்று' ஒல்லென

வீழ்ந்தது' எனப்பிற சொல்லானும் அச்சொற்கள் முடியுமாகலின் அவை, மேல்வந்து முடிக்கும் எஞ்சுபொருட்கிளவியில என்றலும் பொருந்தாதாம். (இ) அன்றியும், விசைத்தது, ஒலித்தது என்ப வற்றை முறையே குறிப்பெச்சமாகவும் இசையெச்சமாகவும் கொள் ளின் 'வெள்ளென வெளுத்தது' எனப் பண்புபற்றி வருவதையும் பண்பெச்சம் எனவேறாறக் கூறவேண்டும் அங்ஙனம் கூறாமை யின் அது பொருந்தாது.

எனவே இளம்பூரணர் காட்டிய இரு உதாரணங்களையும் எனவென் எச்சத்தில் அடக்குதலே பொருந்தும்.

'பசப்பித்துச் சென்றாரை யுடையையோ' இளைதாக முள் மரம் கொல்க' என்னுந் தொடர்களே தத்தம் குறிப்பிற் பொருளை யுணர்த்துவனவா யிருத்தலின், இவற்றிற்கு எஞ்சு பொருள் உணர்த்தும் தொடர்மொழி வேண்டா எனின், அற்றன்று; இச் செய்யுள்கட்குரிய குறிப்புப் பொருள்களை அத்தொடர் மொழிகளே வந்து விளக்க வேண்டும் ஆதலானும், அத்தொடர் மொழிகளே எச்சமாக வரும் என ஈண்டுக் கூறலானும் இவை எஞ்சு பொருட் கிளவியுடையன என்று கூறலே அமையும் என்க.

இம்மூவகை யெச்சங்களுள் குறிப்பெச்சம் நீங்கலாக ஏனை யிரண்டும் இசையெச்சம் என்றும் சொல்லெச்சம் என்றும் பெயர் பெறினும், அவ்வவ்வெச்சச் சொற்களும் குறிப்பாகவே பெறப்படு தலின் குறிப்பான் எச்சம் செப்பல் இம்மூன்றற்கும் உரியதா யிற்று''.

## சொல்லெச்ச முடிபு

435 சொல்லெ னெச்ச முன்னும் பின்னுஞ்
சொல்லள வல்ல தெஞ்சுத லிலவே (45)

(சொல் என் எச்சம் முன்னும் பின்னும்
சொல் அளவு அல்லது எஞ்சுதல் இலவே.)

**ஆ.மொ.இல.**

The incomplete form known as 'Sol' is completed only by adding a word either before or after.

பி.இ.நூ.

இ. வி. 351. (தொல் சூத்திரமே)

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், சொல்லெச்சத்திற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

உரை : சொல்லென் எச்சம் [1]முன்னாயினும் பின்னாயினும் சொல் என்னும் சொற் கொண்டு முடிதவல்லது பிறிதில்லை, எ-று.

வ-று : [2]'பசித்தேன் பழஞ்சோறு தா என நின்றான்' என்பதாம்.

மற்றுத் தாஎன நின்றான் பிறனேயெனின், தாஎனச் சொல்லி நின்றான் என்பதாம். அவற்றுட் 'சொல்லி' என்றானும் 'சொல்ல' என்றானும் ஆக இரண்டனுள் ஒன்றனான் முடியும் அது என்பது.

---

1 முன்னும் பின்னும் = சொல்லி அல்லது சொல்ல என்னும் சொல்லைக் கூட்டியுரைப்பதன் முன்னும் பின்னும். 'தாஎன நின்றான்' இதில் சொல்லி என்பது கூட்டப்பட வில்லை. என்றாலும் என என்பது சொல்லி என்பதை நோக்கி நிற்றலின் சொல்லெச்சம். 'தா எனச் சொல்லி நின்றான்' இதில் சொல்லி என்பது கூட்டப்பட்டது. கூட்டிய பின்னும் என என்பது சொல்லெச்சமாம். என என்பது 'சொல்' என்பதை எஞ்சி நிற்றலின் அது (என) சொல்லெச்சமாம் என்பது இளம்பூரணர் கருத்து. இதை சேனாவரையர் மறுப்பர். பார்க்க.

2. 'பசித்தேன் ; பழஞ்சோறு தா என நின்றான்' என்பது, பசித்தவனே பழஞ்சோறு தாஎன நின்றான் என்ற பொருளில் வந்ததாயின் தா எனச் சொல்லி எனவும், பசித்தவன் பழஞ்சோறு தா எனத் தன்னிடம் கேட்கப் பிறன் நின்றான் என்ற பொருளில் வந்ததாயின் 'தா எனச் சொல்ல' எனவும் பொருளுக்கேற்ப வருவித்துக் கொள்ளல் வேண்டும்.

முன்னும் என்றது, தா எனச் சொல்லி நின்றான் என்று கொணர்ந்து முடிப்பின் அது பின் முடிவுபட நின்றதாம் என்பது.

## சேனா

இ-ள்: சொல்லெச்சம், ஒருசொற்கு முன்னும் பின்னும் சொல் மாத்திரம் எஞ்சுவதல்லது தொடராய் எஞ்சலின்று, எ-று.

உயர்திணை யென்மனார் (கிளவி-1) என்புழி ஆசிரியர் என்னுஞ்சொல் [1] முன்னும், 'மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே' (குறுந்.71) என்புழி எமக்கென்னும் சொல்[2] பின்னும் எஞ்சி நின்றவாறு கண்டு கொள்க.

[3]ஒரு சாரார் இவற்றை இசையெச்சம் என்று, 'சொல்லள வல்லது எஞ்சுதலின்றே' என்பதற்குச் சொல் என்னும் சொல் லளவல்லது பிறிதுசொல் எஞ்சுதல் இன்று என்று பொருளு ரைத்து, பசித்தேன் 'பழஞ்சோறு தா என்று நின்றான்' என் புழித் தா எனச் சொல்லி எனச் சொல் என்னும் சொல் எஞ்சி நின்றது என்று இதனை உதாரணமாகக் காட்டுப. அவர் முன்னும் பின்னும் என்பதற்குச் சொல் என்னும் சொற் கொணர்ந்து கூட்டுதன் முன்னும் பின்னும் என இடர்ப்பட்டுப் பொருளுரைப்ப.

## தெய்

சொல்லெச்சம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சொல் என்னும் எச்சம் அச் சொல்லாவதற்கு முன்னும் பின்னும் மற்றொருசொல் எஞ்சி நிற்றல் இலது, எ-று.

[4]எனவே, அச்சொல்லினானே உய்த்துணர்ந்து கொள்ளப் பிறிதொரு பொருள் வரும் என்றவாறாம்.

---

1. 2-இடமுன், இடப்பின் எனக் கொள்க.

3. இசையென்றார் யார் எனத் தெரிந்திலது. ஆனால் மறுப்பு இளம்பூரணருக்குரியது.

4. இது பிறிது மொழிதல் அணியாகும். உதாரணக் குறள் களில் பரிமேலழகர் பிறிது மொழிதல் அணியெனக் குறித்தல் காண்க.

உ-ம்: [5]நெடும்புனலுள் வெல்லும் முதலை யடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற. (குறள் 495).

[6]காலாழ் களரின் நரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு. (குறள். 500)

என்றவழித் தமது நிலத்தில் எளியவரும் வலியராவர்; பிறர் நிலத்தில் வலியவரும் எளியராவர் என்னும் பொருண்மை இச் சொல்தானே யுணர்த்தலின் சொல் எச்சமாயிற்று.

*நச்

இது சொல் எச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள்; என் எச்சம் — என் என்கின்ற எச்சமானது, சொல் அளவு அல்லது — சொல் என்னும் முதல் நிலை மாத்திரை தன்னுள்ளேயே எஞ்சி நிற்றல் அல்லது, சொல் முன்னும் பின்னும் எஞ்சுதல் இன்று - செய்யுளியலிற் கூறும் சொல் எச்சம் போல ஒரு சொல் செய்யுட்கு முன்னும் பின்னும் எஞ்சி நிற்றல் இல்லை, எ-று.

'என்' என்னும் இடைச் சொற்கண்ணே 'சொல்' என்பது தோன்றுதலின், 'என் எச்சம்' என்றார். 'என்' என்பது சொல்லை ஒழிபாக நிற்றலின் முன்னர்ச் சொல்லெச்சம் என்றார். 'வினையெனப்படுவது' (வினை. 1) என்றது, 'வினை

---

5. பொருள்: முதலை ஆழமுடைய நீரின்கண் ஆயின் பிறவற்றையெல்லாம் தான் கொல்லா நிற்கும்; அப் புனலி னீங்குமாயின் அதனைப்பிற வெல்லாம் வெல்லா நிற்கும் — பரிமேலழகர்.

6. பொருள்: பாகர்க் கடங்காவுமாய் வேலாட்களைக் கோத்த கோட்டவுமாய களிறுகளை, அவை காலாழும் இயல்பிற்றாய சேற்றுநிலத்துப் பட்டுழி நரிகொல்லும் — பரிமேலழகர்.

* இவர் உரை விளக்கம்பற்றிப் பின்னர் வரும் சிவ. விளக்கத்திற் காண்க.

யென்று சொல்லப்படுவது' என்று பொருள் தந்த இடத்து 'என்' என்னும் எச்சம் தான் அவாவுதலின், இடையே நின்ற 'சொல்' என்னும் முதல் நிலைக்குத் தன் ஈற்றில் நின்ற 'செய' என் எச்சத்தை உணர்த்தும் அகரத்தை ஏற்பித்து நின்றவாறு காண்க. 'நளியென்கிளவி' (உரி25) என்றது 'நளியென்றுசொல்லும் சொல்' என்று பொருள் தந்த இடத்தும் 'என்' என்னும் எச்சம் தான் அவாவுதலின், இடைநின்ற 'சொல்' என்னும் முதல் நிலைக்குத் தன் ஈற்றில் நிற்கும் 'செய்யும்' என்னும் எச்சத்தை உணர்த்தும் 'உம்' என்பதனை ஏற்பித்து, நின்றவாறு காண்க. 'தாவெனநின்றான்' என்பது 'தாவென்று சொல்லி நின்றான்' என 'என' என் எச்சம்'சொல்லி' என்னும் வினைகொண்டு நின்றது. இது சொல் எச்சம் அன்று. இங்ஙனம் எச்ச ஈறுகளை ஏற்றலின் சொல் என்பது முதல் நிலையாயிற்று. 'என்' என்பதற்கும் 'சொல்' என்பதற்கும் இடை நின்ற றகரவுகரம், அவ்விரண்டினையும் கூட்டுதற்கு வந்து நின்றது. எழுத்தெனப்படுப, (நூன்.1) 'பெயரெனப்படுப' (பெய. 6) 'இடையெனப்படுப' (இடை. 1) எனவும், 'இலமென் கிளவி' (புள்ளி-மய. 25) 'முழுதென் கிளவி' (உரி. 28), 'கடியென் கிளவி' (உரி. 85), 'மீன் என் கிளவி' (புள்ளி. ம. 44) 'தேனென் கிளவி' (புள்ளி. மய. 45) எனவும் வருவன எல்லாம் இக்கூறியவாறே வந்த சொல்லெச்சம்.

இனி, செய்யுட்கண் வரும் சொல்லெச்சமாயின் எமக்கு என,

கல்கெழு கானவர் நல்குறூஉம் மகள்

மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே (குறு. 71) என்புழி முன்னும்,

'குன்றம், குருதிப் பூவின் குலைக்காந் தட்டே' (குறுந். 1) என்புழி ''யாம் காந்தட் பூவாம் குறைவிலம்'' எனப் பின்னும் கூற்று, சொல்லெச்சமாய் நிற்குமாறு உணர்க.
இதற்கு விதி,

சொல்லொடும் குறிப்பொடும் முடிவுகொள் இயற்கை

புல்லிய கிளவி எச்சமாகும் (செய். 206) என்னும் சூத்திரம் என்று உணர்க.

இனி, 'உயர்திணை என்மனார்' (கிளவி. 1) என்பதற்கு 'ஆசிரியர்' எனவரும் பெயர் சொல் எச்சம் என்று உதாரணம் காட்டினால் அது பொருந்தாது. சூத்திரம் செய்யுளாதலானும், அதுதான் முற்றுச் சொற்குப் பெயர் தோன்றாமலும் நிற்கும் என்று முற்கூறியது ஆகலானும் இது சொல் எச்சம் ஆகாமை யுணர்க.

வெள்

இது சொல்லெச்சம் ஆமாறு இதுவென விளக்குகின்றது.

இ-ள்: சொல்லெச்சம் ஒரு சொற்கு முன்னும் பின்னும் சொல் மாத்திரம் எஞ்சுவதல்லது தொடராய் எஞ்சுதல் இன்று' எ-று.

'உயர்திணை யென்மனார்' என்புழி 'ஆசிரியர்' என்னும் சொல் முன்னரும், 'மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே' என்புழி 'எமக்கு' எனப் பின்னரும் ஒரு சொல் எஞ்சி நின்றவாறு கண்டு கொள்க.

ஒரு சாரார் இவற்றை இசையெச்சம் எனக் கொண்டு, 'சொல்லள வல்லது எஞ்சுதலின்றே' என்பதற்குச் சொல்' என்னும் சொல்லளவல்லது பிறிது சொல் எஞ்சுதல் இன்று' எனப் பொருள் உரைத்துப் 'பசித்தேன் பழஞ்சோறு தாவென்று நின்றான்' என்புழித் 'தாவெனச் சொல்லி' எனச் சொல் என்னும் சொல் எஞ்சி நின்றது என்பர்.

ஆதி

சொல் எச்சம் முன்னாராகவோ பின்னராகவோ தனிச் சொல்லளவில் எஞ்சுதல் ஆகும். (வாக்கியமாக எஞ்சுவது இல்லை)

மழை பெய்தால் நாடு செழிக்கும் என்பார்கள்—இங்கு முன்னோர்' சொல்லெச்சம் 'படிக்கவில்லை யாயின் என்ன கிடைக்கும்? தெரியுமில்லையா ?'—[1]அடி என்பது சொல்லெச்சம்.

சிவ

சொல் எச்சம் பற்றி நச்சினார்க்கினியர்.

சொல் எச்சம் இருவகைப்படும். ஒன்று செய்யுளியலிற் கூறப்படுவது. மற்றொன்று எச்சவியலிற் கூறப்படுவது.

1) செய்யுளியலிற் கூறப்படுவது :—

ஏதேனும் ஒரு சொல் அல்லது ஒரு தொடர், ஒரு கருத்துக் கூறத் தொடங்கும் போதோ (முன்னோ), கூறி முடிக்கும் போதோ (முன்னோ), கூறிமுடிக்கும் போதோ (பின்னோ) மறைந்து நிற்பது—அதாவது எஞ்சி நிற்பது சொல்லெச்சம். உதாரணம் :— "கல்கெழு கானவர் நல்குறு மகள் மருந்து எனின் மருந்து வைப்பு எனின் வைப்பு "(குறுந். 71) என்ற விடத்து முதலில் 'எமக்கு' என்னும் சொல்லை வருவித்துக் கொள்ளல் வேண்டும். 'எமக்கு' என்பது முதலில் எஞ்சி நின்றது எனப்படும். "குன்றம் குருதிப்பூவின் குலைக்காந்தட்டு" (குறுந். 1) என்றவிடத்து முடிவில், 'யாம் காந்தட் பூவால் குறைவிலம்' என்பது வருவித்து உரைக்கப்படல் வேண்டும். அது எஞ்சி நின்றது. எனவே, செய்யுளியலிற் கூறப்பட்ட சொல்லெச்சம் என்பது, கூறும் கூற்றுக்கு முன்னோ பின்னோ ஒன்றோ பலவோ சொல் எஞ்சி நிற்பது என்பதாம்.

2) இவ்வெச்சவியலிற் கூறப்படும் சொல்லெச்சம் என்பது 'என் எச்சம்' என்றும் சொல்லப்படும். ஏன் எனின், 'என்' என்னும் சொல்லினிடமாகவே 'சொல்' என்பது எஞ்சி (மறைந்து) நிற்பதாகலின். 'என' என்பதன் பொருள் 'என்று

---

1. அடி என்பது சொல்லெச்சம் ஆகாது; என்ன கிடைக்கும் எனும் வினாவுக்கு விடை. ஆதலின் இவ்வுதாரணம் பொருந்தாது.

சொல்ல' என்பதாகும். 'என' என்பது என் + அ என பிரிக்கப் படும். இதில் உள்ள 'அ' என்பது 'சொல்ல' என்பதில் உள்ள 'அ' கரமாகும். அப்படியானால் 'என' என்பதன் முழு வடிவம் 'என் + சொல் + அ' என்பதாகும். அதுவே சுருங்கி 'என' ஆயிற்று. அப்படியானால் 'என' என்பதில் 'சொல்' என்பது எஞ்சி (மறைந்து) நின்றதாகும். அகரவிகுதி 'என்' என்பதில் சேர்ந்து வெளிப்படையில் இருப்பதாகும். இதனால் என் எச்சம் சொல் எச்சம் எனப்படும். சொன்னான், சொல்லி, சொல்ல, சொல்லும், சொன்ன எனவரும் முற்று எச்சங்களின் விகுதிகள் என் என்பதுடன் சேரச் சொல் என்னும் முதல்நிலை (பகுதி) மட்டும் எஞ்சி நிற்பது சொல்லெச்சம் ஆம். என்றான், என்று, என, என்னும், என்ற எனும் சொற்களில் சொல் என்பது எஞ்சி நின்றதாகக் கொண்டு அச்சொற்களை சொல்லெச்சச் சொற்கள் என்னல் வேண்டும்.

வேறுபாடு :— 1) கருத்துத் தொடக்கத்தின் முன்னோ கருத்து முடிவின் பின்னோ ஏதேனும் ஒரு சொல்—ஒரு தொடர் எஞ்சி வருவது செய்யுளியற் சொல்லெச்சம். 2) என் என்னும் சொல்லில் சொல் என்பதனடியாக வரும் முற்று எச்சங்களின் விகுதிகள் வெளிப்படையிற் சேர்ந்து வரச்சொல் என்னும் பகுதிமட்டில் எஞ்சி நிற்ப வருவது எச்சவியற் சொல்லெச்சம். இதில் முன்பின் என்பதில்லை.

இவ்வாறு கொண்டு நச்சினார்க்கினியர் உரை விளக்கம் உணர்க.

## இடக்கரடக்கல்

**436. அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல் (46)**
(அவை அல் கிளவி மறைத்தனர் கிளத்தல்)

ஆ.மொ.இல.

A word unfit to be ullered in an assembly is to be spoken in a hidden form.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இது தகுதியும் வழக்கும் (கிளவி. 17) என்பதனுட் கூறப்படாது ஒழிந்து நின்றதோர் மரபு வழூடக்காத்தல் நுதலிற்று.

உரை : நன்மக்களுட் கூறப்படாத சொல்லைக் கிடந்த வாறே சொல்லற்க ; பிறிது வாய்பாட்டான் மறைத்துச் சொல்லுக, எ-று.

[1]வ-று : கால்மேல் நீர் பெய்தும், வாய் பூசி வருதும் என வரும்.

சேனா

இ-ள் : அவைக்கண் உரைக்கப்படாத சொல்லை அவ் வாய்பாடு மறைத்துப் பிறவாய்பாட்டாற் சொல்லுக, எ-று.

அவைக்கண் வழங்கப்படுஞ் சொல்லை அவையென்றார்.

உ-ம் : [2]'ஆன்முன் வரூஉம் ஈகார பகரம் (எழுத். 333) எனவும், [3]கண்கழீஇ வருதும், கால்மேல், நீர் பெய்து வருதும் எனவும், [4]'கருமுக மந்தி செம்பின் ஏற்றை', புலிநின்றிறந்த [5]நீரல் ஈறத்து (நற். 103) எனவும் இடக்கர் வாய்பாடு மறைத்துப் பிறவாய் பாட்டாற் கூறியவாறு.

ஈகார பகரம் என்பது போலக் கண் கழூவுதல் முதலாயின அவையல் கிளவியைக் கிடந்தவாறு கூறாது பிறிதோராற்றாற் கிளந்தன வல்ல வெனினும் அவையல் கிளவிப் பொருண்மையை யுணர்த்தலின், ஒற்றுமை நயத்தான் அவையல் கிளவியைப்பிறி

---

1, 3. மலங்கழீஇ வருதும் என்பது பொருள்.

2. ஆன்............. பகரம் = ஆப்பீ.

4. கருமுகம்—மந்தியின் குறியிடம் ; செம்பின...ஆண் குரங்கின் (ஏற்றை) பின்பகுதி.

5. நீர் அல் ஈரம்—நீரால் வந்ததல்லாத ஈரம் அது புலியின் சிறுநீர்.

தோராற்றாற் கூறிய வாய்பாடாகக் கொள்ளப்படும். இவை 'தகுதியும் வழக்கும்' (கிளவி. 17) என்புழித் தகுதியாய் அடங்கும் எனின், செத்தாரைத் துஞ்சினார் என்றல் முதலாயினவன்றே தகுதியாவன; ஆண்டுச் செத்தார் என்பது இலக்கணமாகலின் அதனானும் வழங்கப்படும். தகவு நோக்கிச் சொல்லுங்கால் 'துஞ்சினார்' என்றும் சொல்லப்படும். ஈண்டை அவையல் கிளவியாற் கிளத்தல் வழுவாதலின் மறைத்த வாய்ப்பாட்டானே இளக்கப்படும். அதனான் ஆண்டு அடங்கா என்பது.

[6]இது வழுவமை தியன்மையால் கிளவியாக்கத்துக் கூறாராயினார்.

தெய்

இனிக் குறிப்பெச்சம் உணர்த்தற்பாலது. அது தெரிபு வேறு நிலையலும் குறிப்பிற் றோன்றலும் இருபாற் றென்ப பொருண்மை நிலையே (பெய. 12) எனப் பெயரியலுள் ஓதுதலால் அதன்கண் சில சொற்களை மரபு வழுக்காக்க வேண்டுதலின் அவையமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : அவைக்களத்து வழக்கல்லாத சொல்லை மறைத்துப் பிறவாய் பாட்டான் மொழிக, எ-று.

உ-ம் : மறைத்துச் சொல்லுதல் இருவகைப்படும், மங்கல மரபினாற் கூறுதலும் இடக்கர் அடக்கிக் கூறுதலும் என.

---

6. இதனை வழுவமைதி என்பர் நச்சினார்க்கினியர்.

* தொல்காப்பியர் பத்து எச்சங்களும் பற்றித் தனித் தனியாகக் கூறிவந்தவர் இசையெச்சம் குறிப்பு எச்சம் பற்றித் தனித்தனிக் கூறவில்லை. 'அவைதாம் தத்தம் குறிப்பின்' (44) என்பதால் கூறினார் எனக் கொண்டனர் ஏனையுரையாளர். தெய்வச்சிலையார் அவையும் கூறப்பட்டனவாகக் கொண்டு இச்சூத்திரம் குறிப்பெச்சம் கூறுவது என்றும், பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்' (53) என்பது இசையெச்சம் கூறுவது எனவும் கொண்டார்.

மங்கல மரபினாற் கூறுவது:— செத்தாரைத் துஞ்சினார் என்றும் ஓலையைத் திருமுகம் என்றும் கூறுதல். இவை அவைக் களத்துப் [1]பட்டாங்குக் கூறிற் குற்றம் பயக்குமாகலின் அவ்வாறு கூறினார் என்க.

இடக்கர் அடக்கிக் கூறுதல் :- கண் கழீஇ வருதும், கால்மேல் நீர் பெய்தும் எனப் [2]பிற வாய்பாட்டான் வரும் பொருண்மையை மறைத்துச் சொல்லுதல்.

இவை வேறொன்றைக் குறித்துக் கூறுதலின் [3]குறிப்பெச்சம் ஆயின.

நச்

இது மரபு வழுக்காக்கின்றது.

இ-ள் : அவை அல்கிளவி — நன்மக்களிடைக் கூறப்படுவது அல்லாத சொல்லினை, மறைத்தனர் கிளத்தல்— அவ்வாய்பாடு மறைத்துப் பிறவாய் பாட்டால் கூறுக, எ-று.

உ-ம் : ஆன்முன் வரூஉம் ஈகார பகரம் (உயிர் 631) கண் கழீஇ வருதும், கருமுகமந்தி, செம்பின் ஏற்றை, *புலி நின்றிறந்த நீர் அல் ஈரத்து எனவரும் ஈகார பகரம் என்றது, ஓர் உயிர்மெய் எழுத்தாகக் கூறின் அவையல் கிளவியாம் என்று உயிரும் மெய்யுமாகப் பிரித்து அவ்வுயிர்மெய் எழுத்தையே கூறியது. ஒழிந்தன அவ்வாது அன்றி, அவையல் கிளவிப் பொருளைப் பிறசொல்லான் உணர்த்திற்றேனும் அப்பொருளையே யுணர்த்தி நிற்றலின் அதனைப் பிறிதோர் ஆற்றான் மறைத்தனவே யாம்.

---

1. பட்டாங்கு—உள்ளபடியே.
2. 'மலங்கழீஇ வருதும்' என்னும் வாய்பாட்டால் வரும் பொருண்மையை மறைத்துக் 'கண்கழீஇ வருதும்' முதலிய வாய்பாட்டான் சொல்லுதல்.
3. குறிப்பு எச்சம் —குறிக்கப்படும் பொருளை எஞ்சி நிற்பது.

* களிறு நின்றிறந்த — பாடம்.

தகுதியாவது, 'செத்தான்' எனப் பெரும்பான்மை வழங்கப் பட்டன, தகுதி நோக்கித் 'துஞ்சினான்' எனச்சிறுபான்மை வழங்கப்பட்டு நிற்கும்; அவையல் கிளவியாவது இழிந்தோர் கூறும் இழிசொற்களை நன்மக்களிடை மறைத்துக் கூறப்படும். இஃது இரண்டற்கும் வேற்றுமை. இங்ஙனம் மறைத்துக் கூறாக் கால் வழுவாதல் கருதி வழுவமைத்தார். [1]இது 'பொருளிடை யிடுதல்' (மரபியல் 110) என்னும் தந்திரவுத்தி.

வெள்

இது மரபு வழுக்காக்கின்றது.

இ-ள் : அவைக்கண் உரைக்கப்படாத சொல்லை அவ் வாய்பாடு மறைத்துப் பிறவாய்பாட்டாற் கூறுக, எ-று.

அவைக்கண் வழங்கப்படும் சொல்லை 'அவை' எனக் குறித்தார்.

உ-ம் : 'ஆன்முன் வரூஉம் ஈகாரபகரம் எனவும், 'புலி நின்றிறந்த நீரல் ஈரத்து' எனவும் இடக்கர் வாய்பாடு மறைத்துப் பிறவாய்பாட்டாற் கூறியவாறு.

இங்ஙனம் அவைக்கண் வழங்கப்படாத இடக்கர்ச் சொல்லை மறைத்துக் கூறுதலை 'இடக்கர் அடக்கல்' எனக் கூறுவர் பவணந்திமுனிவர் (நன். 206).

---

1. பொருள் இடையிடுதல் : இனமான பொருள்களை ஒரேயிடத்திற் சேரக் கூறாமல் வெவ்வேறிடத்தில் இடை யிட்டுக் கூறுதல். தகுதிவழக்கும் அவையல் கிளவியை மறைத்தலும் ஒன்றைப் பிறிதொன்றாற் கூறுதல் என்பதனால் ஓரினம். தகுதி வழக்குப் பற்றிக் கிளவி யாக்கத்தில் 'தகுதியும் வழக்கும்' (17) என்னும் சூத் திரத்திற் கூறிய ஆசிரியர் அதன் இனமான அவையல் கிளவியை மறைத்தல் பற்றி ஆண்டே சேரக்கூறாமல் இடையிட்டு எச்சவியலில் கூறினார். இது பொருள் இடையிடுதல் என்னும் உத்தி.

ஆதி

அவையில் சொல்லத் தகாத சொற்களை மறைத்துப் பேசுக. அல்கிளவி—தகுதியல்லாத சொல்.

கால்கழுவி வந்தான்—கழுவியது எதனை? (ப, பா, பிக்கு அடுத்ததை)

தலையில்லாக் கமலம்—கமலத்தின் முதலெழுத்தில்லாதது.

## மேலதன் புறனடை

**437 மறைக்குங் காலை மரீஇய தொராஅல் (47)**
(மறைக்கும் காலை மரீஇயது ஒராஅல்)

ஆ. மொ. இல.

When speaking in hidden form, the deformed
Word which coming down through
Generations is not to be prohibited.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின் இறந்தது காத்தது.

உரை : மேல் அவைக்குரிய வல்லனவற்றை மறைத்தே, சொல்லுக என்றார், இனி அவைதாம் மரீஇயடிப்பட்ட வழியாயக் கால்மறைக்க வேண்டுவதன்று; அவை யொழித்து ஒழிந்தன மறைத்தே சொல்லுக என்றது என்பது.

இனி, அவ்வாறு மரீஇ வந்தன : ஆட்டுப் பிழுக்கை ஆப்பீ எனவரும்.

சேனா

இ-ள் : அவையல் கிளவியை மறைத்துச் சொல்லுங்கால் மேற்றொட்டு வழங்கப்பட்டு வருவன மறைக்கப்படா, எ-று.

உ-ம் : ஆப்பீ, ஆனையிலண்டம் என மரீஇ வந்தன மறைக்கப்படாது வந்தவாறு.

[1]பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப்பரிதி (பெரும்பாண் 2) என்புழிக் 'கான்று' என்பது தன் பொருள்மேல் நில்லாது அணி குறித்துப் பிறிதோர் பொருள்மேல் நிற்றலின் மரீஇய சொல்லாய் மறைக்கப்படாமையும், அதன் பொருள்மேல் நின்றவழி மறைக்கப்படுதலும் அறிக.

தெய்

மேலதற்கு ஓர்புறனடையுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : அவைக்களத்து அல்லாத சொற்களை மறைத்துச் சொல்லுங்கால் அவ்வக்காலத்து மருவிப் போந்த சொற்களை மறைத்தொழிக, எ-று.

உ-ம் : மருவிப்போந்தன :- ஆப்பி, கோமூத்திரம் என்றாற் போல்வன.

நச்

இது மேலதற்கு ஓர் புறனடை.

இ-ள் : மறைக்குங் காலை-அவ்வவையல் கிளவியை மறைத்துக் கூறுங்கால், மரீஇயது ஒராஅல்—மேல் தொட்டு மரீஇ வழங்கியதனை மறைத்தலை நீக்குக, எறு.

உ-ம் : 'மெழுகும் ஆப்பி கண்கலுழ் நீரானே புறம்.249)
'ஆப்பி நீர் எங்குந் தெளித்துச் சிறுகாலை'
யானை இலண்டம்
யாட்டுப் பிழுக்கை

எனவரும். தன் பொருள்மேல் நில்லாது அணிகுறித்து நின்ற 'பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பரிதி' (பெரும்பாண். 2) என்றாற்போல்வன தம் பொருளை யுணர்த்துங்கால் மறைத்துக் கூறப்படுமாறு உணர்க.

---

1. 'கான்று' என்பது 'கக்கி' என்னும் பொருளது. இங்கு அப்பொருள் இல்லை, 'வெளிப்படுத்தி' என்னும் பொருள் உண்டு. அணி-'சமாதி' என்னும் குண அணி.

வெள்

இது மேலதற்கோர் புறனடை.

இ-ள் : அவையல் 'கிளவியை மறைத்துச் சொல்லுங்கால் தோன்றுதொட்டு மருவி வழங்கியதனை மறைத்தலை நீக்குக, எ-று.

உ-ம் : 'மெழுகும் ஆப்பி கண்கலுழ் நீரானே', ஆப்பி நீர் எங்குந் தெளித்துச் சிறுகாலை' யானையிலண்டம்', 'யாட்டுப் பிழுக்கை' என வரும்.

ஆதி

அவையல் கிளவியை மறைத்துச் சொல்லும் முறையில் வாலாயமாக வரும் முறையை நீக்க வேண்டாம்.

சிறுநீர்கழிக்க - கொல்லைக்கு - வெளிக்கு என்ற வழக்க முறையைக் கைவிடலாகாது.

## இரப்புச் சொற்கள்

438. ‡ஈதா கொடுவெனக் கிளக்கு மூன்று
மிரவின் கிளவி *யாகிட னுடைத்தே (48)

ஈ தாகொடு எனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகு இடன் உடைத்தே)

ஆ. மொ. இல.

'I' 'tha' and 'Kodu' - these three are used
as words of begging.

பி. இ. நா.

நன் 407. (சூ. 451-ல் காண்க)

---

‡ இதுமுதல் நான்கு சூத்திரங்களையும் ஒரே சூத்திரமாகக் கொள்வர் தெய்வச்சிலையார்.

* 'ஆகிடனுடைய' என்பது இளம்பூரணரை யொழிந்த பிறர் பாடம்.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் கிளவி யாக்கத்துக் கூறப்படாது ஒழிந்து நின்றதோர் மரபிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : இக்கூறப்பட்ட மூன்றும் இரப்போர் சொல்லுதற் குரிய, எ-று.

ஒருவரை யொருவர் இரக்குங்கால் இம்மூன்றனுள் ஒன்று சொல்லி யிரப்பது என்றவாறு.

சேனா

இ-ள் : ஈ, தா, கொடு எனச் சொல்லப்படும் மூன்றும் ஒருவன் ஒன்றை, யிரத்தற்கண் வருஞ் சொல்லாம், எ-று.

அவை [1]பிறபொருள்மேல் வருதலும் உடைமையான் 'இர வின் கிளவியாகிடனுடைய' என்றார்.

வழங்கல், உதவல், வீசல் முதலாயின பிறவும் உளவாக இவற்றையே விதந்து ஓதியது என்னை யெனின், [2]அவை, கொடைப் பொருளவாய் வருவதல்லது [3]இவை போல இரத்தற் குறிப்பு வெளிப்படுக்கும் இரவின் கிளவியாய்ப் பயின்று வாராமை யானும், இன்னார்க்கு இன்னசொல் உரித்தென்று வரையறுத்தலும் வழுவமைத்தலு மாகிய ஆராய்ச்சி [4]ஆண்டின்மையானும் இவற் றையே விதந்து ஓதினார் என்பது.

அஃதேல், 'ஈயென் கிளவி' (எச்ச.49) என்னும் சூத்திர முதலாய நான்கும் அமையும், இச்சூத்திரம் வேண்டாவெனின், இவை இரவின் கிளவியாதலும் மூன்று என்னும் வரையறையும் அவற்றாற் பெறப்படாமையின் வேண்டும் என்பது.

---

1. பிற பொருள்மேல் வருதல் : ஈ-பறக்கும் ஈ; தா-தாவுதல், குற்றம்; கொடு- வளைவு.
2. அவை—வழங்கல் முதலியன;
3. இவை—ஈ, தா, கொடு என்பன.
4. ஆண்டு— வழங்கல் முதலியனவற்றில்

முன்னிலைச் சொல்லாய் வருவழியல்லது பிறாண்டு இன்ன சொல் இன்னார்க் குரித் தென்னும் வரையறையில் என்பது உணர்த்துதக்கு ஈ, தா, கொடுவென [5]முன்னிலை வாய்பாடுபற்றி யோதினார்.

தெய்

(இது முதல் நான்கு சூத்திரங்களையும் ஒரே சூத்திரமாகக் கொண்டு உரை யெழுதினார்; ஆகலின் இவற்றின் உரைகளை 'கொடுவென்கிளவி' என்னும் சூத்திரத்திற் காண்க)

நச்

இஃது ஒரு பொருள்மேல் வரும் ஈ, தா, கொடு என்னும் பல சொற்கு மரபு வேறுபாடு கூறுகின்றது.

இ-ள் : ஈதா கொடு எனக் கிளக்கும் மூன்றும்—ஈதா கொடு என்றுமுன்னின்றானை நோக்கிக் கூறும் சொற்கள் மூன்றும், இரவின் கிளவி ஆகு இடன் உடைய—ஒருவன் ஒன்றை இரத்தற் கண் வரும் சொல்லாம் இடம் உடைய, எ-று.

ஈச்சிறகு எனவும், (நாலடி. 41) தாவில் நன்பொன் (அகம் 212) எனவும், கொடுங்கோல் (சிறப். 23 : 111) எனவும் இவை பிறபொருளையும் உணர்த்துதலின் 'ஆகிடன் உடைய' என்றார்.

இவை மூன்றும் [1]'இல்' என இரப்போர்க்கும், 'இடன்' இன்றி யிரப்போர்க்கும், தொலைவாகி யிரப்போர்க்கும் உரிய என்றுணர்க.

---

5. முன்னிலை வாய்பாடு—ஈவாய் என்னும் பொருளில் 'ஈ' எனநிற்றல் தருவாய், கொடுப்பாய் என்னும் பொருளில் தா, கொடு எனநிற்றல்.

1. இல் என இரப்போர்—வறுமையால் இரப்போர். இடன் இன்றியிரப் போர்—செல்வம் சுருங்கிய காலத்து இரப் போர். தொலைவாகி யிரப்போர்—இருந்த பொருள் தொலைந்ததாக இரப்போர்.

வெள்

இஃது இரவின் கிளவியாவன இவையெனக் கூறுகின்றது.

இ-ள்: ஈதா கொடு எனச் சொல்லப்படும் மூன்றும் ஒன்றை யிரத்தற்கண் வரும் சொல்லாகும் இடம் உடைய, எ-று.

இவை இரத்தற் பொருளில் மட்டுமன்றி ஈச்சிறகு, கொடுங் கோல், தாவில் நன்பொன் எனப் பிறபொருள் மேலும் வருதலு டைமையால் 'இரவின் கிளவியாகிடனுடைய' என்றார்.

ஆதி

ஈ தா கொடு என்னும் மூன்று சொற்களும் ஒன்றை வேண்டி நிற்கும் சொல்லாக இடம் பெறுகின்றன.

## ஈ என்பது வழங்கும் மரபு

439. அவற்று
 ளீயென் கிளவி யிழிந்தோன் கூற்றே (49)

(அவற்றுள்
ஈ என் கிளவி இழிந்தோன் கூற்றே.)

ஆ. மொ. இல.

Of them,
the word 'I' is used by an inferior.

பி. இ. நா.

நன். 407

ஈ ......இழிந்தோன்......இரப்புரை

முத்து ஒ. 110.

அவற்றுள்
ஈ என் கிளவி இழிந்தோன் இரப்புரை

## இளம்

இச்சூத்திரம் என்னுதலிற் றோவெனின், மேற்கூறப்பட்ட மூன்றனுள். ஈ என்னும் சொல் இரக்கப்படுவோரை இழிந்தோர் கூறி யிரக்குஞ்சொல் என்றவாறு.

வ-று: [1]உடுக்கை யீ, மருந்து ஈ எனவரும்.

## சேனா

(இது முதல் மூன்று சூத்திரங்களுக்கும் சேர்த்து உரை யெழுதினார் ஆதலின் 'கொடுவென் கிளவி' என்னும் சூத்திரத்தில் உரை காண்க.)

## தெய்

கொடு வென் கிளவி என்னும் சூத்திரத்திற்காண்க)

## நச்

இது முதலதன் மரபு கூறுகின்றது.

இ-ள்: அவற்றுள் ஈ என் கிளவி—முற்கூறிய மூன்றனுள் 'ஈ' என்னும் சொல், இழிந்தோன் கூற்று—இரக்கப் படுவானின் இழிந்த இரவலன் அவனை யிரக்குங்கால் கூறும் கூற்றாம், எ-று.

உ-ம்: பெருமா எனக்கொரு பிடிசோறு ஈ
எனவும்

'ஈயென யிரத்தலோ அரிதே நீயது' (புறம். 154) எனவும் இவ்விரண்டும் [1]தன்மையும் முன்னிலையும் பற்றி வந்தன.

[2]'சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே' (புறம். 235) என்றது உளப்பாட்டுத் தன்மையும் படர்க்கையும் பற்றி வந்தது.

---

1. உடுக்கை—உடை, ஆடை
1. எனக்கு ஈ என்றலின் தன்மை பற்றி வந்தது. நீ ஈஎன இரத்தல் என்றலின் முன்னிலை பற்றி வந்தது.
2. எமக்கு என்றது தன்னையும் பிறரையும் குறித்தது.

'இவற்கீத் துண்மதி கள்ளே' (புறம். 290) என்புழியும் 'இவன்' என்பது முன்னிலையும் படர்க்கையும் என்றுணர்க.

சேனா

('கொடுவென் கிளவி' என்னும் சூத்திரத்திற்காண்க)

ஆதி

ஈ என்னும் சொல் இழிந்தவன் உயர்ந்தவனை வேண்டிக் கூறும் சொல். இது வேண்டல்.

ஐயனே ! எனக்கு ஈத்தருள்!

## தா என்பது வழங்குமாறு

440. தாவென் கிளவி யொப்போன் கூற்றே (50)
(தாஎன் கிளவி ஒப்போன் கூற்றே)

ஆ. மொ. இல.

The Word 'tha' is the expression of an equal.

பி. இ. நூ.

நன். 467

தா ...... ஒப்போன் ...... இரப்புரை

முத்து. ஒ. 111

தாவென் கிளவி சமானன் மேற்றே

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இரக்கப்படுவானை ஒப்பான் இரக்குங்கால் தாஎன்னும் சொற் சொல்லி இரக்கும் என்பது உணர்த்தியவாறு.

வ-று : சோறுதா, ஆடைதா எனவரும்.

சேனா

(கொடுவென் கிளவி என்பதில் உரை காண்க)

தெய்

(கொடுவென் கிளவி என்பதில் உரை காண்க)

நச்

இஃது இரண்டாவதன் மரபு கூறுகிறது.

இ-ள் : தாஎன் கிளவி—தன்மை முன்னிலைக்கு உரிய 'தா' என்னும் சொல், ஒப்போன் கூற்று—இரக்கப்படுவானோடு ஒக்கும் இரவலன் அவனை இரக்குங்கால் கூறும் கூற்றாம், எ-று.

உ-ம் : 'எனக்குச் சோறுதா' எனவரும்
'மாணலந் தாவென வருந்தற் கண்ணும்' எனவும்,
'என்னலந் தாராய்' (கலி 128)

எனவும் [1]'கொடு' போலவருவன கொடுப்பான் பொருளாய்க் கொள்வான் கண் செல்லாதனவற்றை இரந்தனவாம்.

'ஒப்போன் கூற்று' என்றாரேனும் சிறுபான்மை வலியாற் கொள்ளுமிடத்தும் 'தா' என்பது வரும் எனக்கொள்க.

[2]"நின்னது தாவென நிலைதளரக்
குரங்கன்னபுன் குறுங் கூளியர்
பரந்தலைக்கும் பகையொன் றென்கோ" (புறம். 136)

எனவரும்.

வெள்

('கொடுவென் கிளவி' என்பதில் உரை காண்க)

---

1. 'கொடு' போல வருவன—கொடு என்னும் பொருள் போல வருவன. நலம் என்பது கொடுக்கப்படுவதும் கொள்ளப்படுவதும் இல்லை ; அதனால் கொடுப்போன் பொருளாய்க் கொள்வான் மேற்செல்லாதாயிற்று.

2. பொருள் : வழிச்செல்வோர் வைத்திருக்கும் பொருளைத் திடீரென வந்து பறிக்கும் குரங்கு போலும் சிறிய வழிப் பறி செய்யும் கள்வர் வந்து நின்னிடத்துள்ளதைத் தா என மனநிலை தளரப் பரந்து அலைக்கும் பகை ஒன்று என்பேனோ.

ஆதி

தா என்னும் சொல் ஒத்த நிலையில் உள்ளவர் சொல்லும் சொல்.

மாணவர் : உன்புத்தகத்தை நாளைக்கு எனக்குத் தருவாயா ?

## கொடு என்பது வழங்குமாறு

**441.** கொடுவென் கிளவி யுயர்ந்தோன் கூற்றே (51)
(கொடுஎன் கிளவி உயர்ந்தோன் கூற்றே)

ஆ. மொ. இல.

The word 'Kodu' is the expression of a superior.

பி. இ. நா.

**நன் 407**

கொடு ....... மிக்கோன் இரப்புரை

**முத்து. ஒ. 111**

கொடு வென் கிளவி உயர்ந்தோன் கூற்றே.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின் கொடு என்னுஞ் சொல் உயர்ந்தோனாற் கூறப்படுஞ்சொல் என்றவாறு.

வ-று : இவற்கு ஊண் கொடு, ஆடைகொடு எனவரும்.

சேனா

(49, 50, 51 சூத்திரங்களின் உரை)

இ-ள் : ஈயென் கிளவி இரக்கப்படுவோனின் இழிந்த இரவலன் கூற்றாம். தாவென்கிளவி அவனோடொப்பான் கூற்றாம் கொடுவென்கிளவி அவனின் உயர்ந்தவன் கூற்றாம். எ-று

உ-ம் : சோறுஈ, ஆடைதா, சாந்து கொடு என மூன்று சொல்லும் முறையானே மூவர்க்கும் உரியவாய் வந்தவாறு கண்டு கொள்க.

தெய் (48, 49, 50, 51 சூத்திரங்களின் உரை)

*இதுவும் ஒரு சார் குறிப்புச் சொல் உணர்த்துதல் நுதலிற்று

இ-ள் : ஈ தா கொடு என்னும் சொற்கள் ஒருபறவையின் பெயரும் தொழிற் பொருண்மையும் கொடுமையும் ஆதலன்றி இரப்போன் கூற்றாதலும் உரிய; அவற்றுள் ஈ என்பது இழிந்தோன் கூற்று என்பதூஉம், தா என்பது ஒப்போன் கூற்று என்பதூஉம், கொடு என்பது உயர்ந்தோன் கூற்று என்பதூஉம் உணர்த்தும், எ-று.

இச்சொற்கள் தம்மானே இழிந்தோன், ஒப்போன், மிக்கான் என்னும் பொருண்மை எஞ்சி நிற்றலிற் குறிப்பெச்சம் ஆயிற்று.

நச்

இது மூன்றாவதன் மரபு கூறுகின்றது.

இ-ள் : கொடு என்கிளவி—கொடு என்னும் படர்க்கையாகிய முதல்நிலைச்சொல், உயர்ந்தோன் கூற்று—இரக்கப் படுவோனின் உயர்ந்த இரவலன் அவனை இரக்குங்கால் கூறும் கூற்றாம், எ-று.

உ-ம் : 'இவற்கு ஊண்கொடு' எனவரும்.

வெள் (49, 50, 51 சூத்திரங்களின் உரை)

இ-ள் : முற்கூறிய மூன்றனுள் ஈ என்னும் சொல் இரக்கப் படுவோனின் இழிந்த இரவலன் கூற்றாகும்; தா என்னுஞ் சொல் அவனோடு ஒப்போன் கூற்றாகும்; கொடு என்னுஞ் சொல் அவனின் உயர்ந்தவன் கூற்றாம், எ-று.

---

* இவ்வுரை பிறர் உரையானும் வேறுபட்டது.

உ-ம் : சோறு ஈ, ஆடைதா, சாந்து கொடு என மூன்று சொல்லும் முறையே இழிந்தோர், ஒப்போர், உயர்ந்தோர் ஆகிய மூவர்க்கும் உரியவாய் வந்தவாறு காண்க.

ஆதி

கொடு என்னுஞ் சொல் உயர்ந்தோன் இழிந்தோனிடம் சொல்லும் சொல்—இது கட்டளை

பையா, அதனை என்னிடம் கொடு

## கொடு என்பதன் புறனடை

442. கொடுவென் கிளவி படர்க்கை யாயினுந்
தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பின்
றன்னிடத் தியலு மென்மனார் புலவர். (52)

கொடு என் கிளவி படர்க்கை ஆயினும்
தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பின்
தன்இடத்து இயலும் என்மனார் புலவர்)

ஆ. மொ. இல.

Though the word 'kodu' belongs to the third person, it belongs to the first person when the receiver speaks of himself in the third person.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், மேற் சூத்திரத்திற்குப் புறனடையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : கொடு என்றது தன்மைக்கு ஏற்ற தன்று; படர்க்கைக்கு உரியதோர் சொல்லாயிற்று; உயர்ந்தோன் இழிந்தோனை யிரக்குங்கால் [1]தமன் ஒருவனைக் காட்டி, இவற்குக்

---

1. தன்னைக்காட்டி இவற்குக் கொடு என்னாமல் தன்னைச் சார்ந்தவன் ஒருவனைக் காட்டி இவற்குக் கொடு என்னும். இங்குத் தமன் ஒருவனைக் காட்டியது தன்னைக் காட்டியதாகவே ஆகும். தனக்குக்கொடு— இவற்றைக்கொடு. இதற்குச் சேனாவரையர் மறுப்புக் காண்க.

கொடு என்பது; ஆண்டுப் படர்க்கையிடத்துக்கு உரித்தாகக் கூறினான் மன; ஆயினும் அது தன்மையிடத்தே யியல்பு காட்டப் படர்க்கையிடத்திற்கு உரித்தாகாது, அவன் இரக்கப்படு பொருளும் அக்கொடு என்ற சொல்லும் என்பது, எ-று.

தன்னைப் பிறன்போற் கூறும் குறிப்பில் 'தனக்குக் கொடு' என்றது வாய்பாடன்றேனும் அது தனக்கே சொல்லியவாறு.

உம்மையாற் பிறகிளவியும் படர்க்கையாயினும் தன்னைப் பிறன்போற் கூறும் குறிப்பிற் றன்னிடத்து இயலும் என்றவாறு, ஆண்டு இரவின்கிளவி யல்வழி யென்பது. [1]'அங்ஙனஞ் சொல்லு வானோ பெருஞ்சாத்தன் தந்தை, [2]சொல்லப்படுவாளோ பெருஞ் சாத்தன் தாய்' என்னும் தன்னைப் பிறன் போல்வானும்; அது தன்னிடத்து இயலும் என்றவாறு.

சேனா

இ-ள் : கொடு என்னும் சொல் முதனிலை வகையாற் படர்க்கை யாயினும் தன்னைப் பிறனொருவன் போலக் கூறும் கருத்துவகையால் தன்னிடத்துச் சொல்லும், எ-று.

உ-ம் : [3]மேற் காட்டப்பட்டது.

தன்மைக்கும் முன்னிலைக்கும் உரிய தா என்பதனா னாக பொதுவாகிய ஈ என்பதனானாகவன்றே சொல்லற்பாலது? உயர்ந்தான் அங்ஙனம் தான் ஏற்பானாகச் சொல்லாது கொடு எனப்படர்க்கை வாய்பாட்டாற் சொல்லும்; ஆண்டுத் தன்னையே பிறன்போலக் குறித்தானாகலிற் றன்னிடத்தேயாம் என இட வழுவமைத்தவாறு.

---

1. இது பெருஞ்சாத்தன் தந்தையின் கூற்று.
2. இது பெருஞ்சாத்தன் தாயின் கூற்று.
3. சாந்து கொடு என்பது மேற்காட்டப்பட்டது. (சூ. 442.) இங்கு, 'இவற்குச் சாந்து கொடு' என்றதாகக் கொள்க.

[2]உயர்ந்தான் தான்ஒருவனைக் காட்டி 'இவற்குக் கொடு என்னும்' என்றாரால் உரையாசிரியர் எனின், ஆண்டுப் படர்க்கைச்சொல் படர்க்கைச் சொல்லோடு இயைதலான் வழுவின் மையின் அமைக்கல் வேண்டாவாம்; அதனான் அது போலி யுரை யென்க.

## தெய்

மேலதற்கோர் வழுவமைதியுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மேற் சொல்லப்பட்டவற்றுள், கொடு என்னும் சொல் படர்க்கையாயினும், தன்னைப்பிறன் போற் கூறும் குறிப்பினாற்றன்னிடத்தியலும் என்று சொல்லுவர் புலவர், எ-று.

தன்னைப் பிறன்போற் கூறுதலின் குறிப்பு எச்சம் ஆயிற்று. இச்சூத்திரத்தானும் குறிப்பெச்சம் அதிகாரப்பட்டவாறு கண்டு கொள்க.

## நச்

இது கொடு என்பதற்கு இடவழு அமைக்கின்றது.

இ-ள் : தன்னைப் பிறன்போல் ஆயினும் கூறும் குறிப் பின் கொடு என் கிளவியும் - இரப்போர் பலரும் தம்மின் ஒரு வனைக் காட்டி 'இவற்குக் கொடு' எனத் தம்மைப் பிறரைப் போலாயினும் கூறி இரக்குங் கருத்தினால் கூறப்படும் 'கொடு' என்னுஞ்சொல்லும், தன்னைப் பிறன்போலாயினும் கூறும்

---

2. மறுப்புப் பொருத்தமே. ஆனால் 'இவற்குக்கொடு' என்றதில் இவன் என்றது பிறன் ஒருவனையன்று தன்னையே யாம். தமன் ஒருவனைக் காட்டியது தன்னைச் சுட்டுதற்கேயாம். அதனால் தமன ஒரு வனைக் காட்டி 'இவன்' என்ற விடத்து 'இவன்' என்னும் சொல் படர்க்கைச் சொல்லாயினும் பொரு ளால் தன்மைச் சொல்லாதலின் வழுவாகி அமைந்தது என்னல் வேண்டும். இளம்பூரணர் "தன்னைப் பிறன் போற் கூறும் குறிப்பில் 'தனக்குக் கொடு' என்றது வாய்பாடு அன்றேனும் அது தனக்கோ சொல்லிய தாயிற்று" என எழுதியதாலும் அறியலாம்—சிவ.

குறிப்பின் படர்க்கைக் கிளவியும்-கூறுகின்றார் பலரும் தம்மைப் பிறரைப் போலாயினும் கூறும் கருத்தினால் கூறப்படும் படர்க்கைச் சொற்களும், தன்னிடத்தியலும் என்மனார் புலவர்—இவ்விரண்டும் தன்மையிடத்திற்குரியவாய் நடக்கும் என்று கூறுவர் புலவர், எ-று.

[1] உம் : 'இவற்கு ஊண்கொடு' எனவரும்.

[2] அங்ஙனம் சொல்லுவானோ பெருஞ்சாத்தன் தந்தை, சொல்லப்படுவாளோ பெருஞ்சாத்தன் தாய்.

இந்நான்கு சூத்திரத்தானும் ஆண்பால் உரிமையால் கூறினாரேனும் அவை, முப்பாற்கும் உரித்தாமாறு மேலே உணர்க.

சேனாவரையர், 'கொடு என்பது தானே தன்னைப்பிறன் போற் கூறும் குறிப்பினையும் உணர்த்தும்' என்று, அதற்குச் 'சாந்து கொடு' என்பது உதாரணம் காட்டினாரால் எனின், 'கொடு' என்பது கொடுப்பதோர் பொருளை ஏற்றற்கு உரிய நான்கன் உருபு வந்தால் அதனை முடித்தற்கு வந்த சொல்லாதலின், அவற்கு இவற்கு உவற்கு என்னும் சொற்களை அவாய், அவற்றை முடித்தே நிற்றல் வேண்டும்; வேண்டவே, 'அவற்குக் கொடு' என்பது ஏனையிரண்டும் (கிளவி 30) என் புழிக் கூறியதாம். 'எனக்குக் கொடு' என்பது தன்னைப் பிறன்போற் கூறும் குறிப்பு இல்லாததாயிற்று. [1]ஆதலால் தன்னைப் பிறன்போற் கூறும் குறிப்பிற்றாய் வழுவமைதியும் ஏற்று நிற்பது 'இவற்குக் கொடு' என்னும் உதாரணமே யாயிற்று என்க.

---

1. எனக்கு ஊண்கொடு என்பது பொருள்.
2. அங்ஙனம் சொல்லுவேனோ பெருஞ்சாத்தன் தந்தையாகியயான், சொல்லுவேனோ பெருஞ்சாத்தன் தாயாகிய யான் என்பது பொருள்.

1. தன்னைப்பிறன்போற் கூறும் குறிப்பிற்குச் 'சாந்து கொடு' என்னும் உதாரணம் பொருந்தாது; 'இவற்குக் கொடு' என்னும் உதாரணமே பொருந்தும் என்பது கருத்து. சேனாவரையர் உரையில் உதாரணம்மேற் காட்டப்பட்டது என்றிருப்பது 'சாந்துகொடு' என்றிருப்பதைக்கும். ஆனால் அதையே இவற்குச் சாந்து கொடு என்று கொள்ளல் வேண்டும். அப்படியாயின் இம்மறுப்பு வேண்டுவதன்று.

வெள்

இது மேலதற்கோர் வழுவமைதி கூறுகின்றது.

இ-ள் : கொடு வென்னுஞ்சொல் முதனிலை வகையாற் படர்க்கையாயினும் இரப்பான் தன்னைப் பிறன் ஒருவன்போலக் கூறுங்கருத்து வகையால் தன்னிடத்தே செல்லும், எ-று.

ஆதி

கொடு என்னும் சொல் படர்க்கையிடத்தது. ஆயினும் தன்னைப்பிறன்போல் பாவித்துக் கூறும் குறிப்பால் அது தன்மையிடத்ததாயும் வரலாகும்.

என்னிடம்தா, உன்னிடம் தந்தேன், அவனிடம் கொடுத்தேன் என்ற [1]முறையில் கொடு படர்க்கைக்கு உரியது.

ஆயின் தன்மையிடத்தான் [2]அதனை இங்குக் கொடு' என்னும் போது தன்னைப் படர்க்கையாக்குகிறான் வழுவமைதி அத்தகைய இடத்தும் அஃது தன்மையிடமே.

## சில சொற்களின் வழுவமைதி

443. பெயர்நிலைக் கிளவியி னாஅ குநவுஞ்
*சினைநிலைக் கிளவி யினாஅ குநவுந்
தொன்னெறி மொழிவயி னாஅ குநவு
மெய்ந்நிலை மயக்கி னாஅ குநவு
மந்திரப் பொருள்வயி னாஅ குநவு
மன்றி யனைத்துங் கடப்பா டிலவே (53)

---

1. மூவிட வரிசைமுறையில்.
2. அதனையிங்குக் கொடு—அதனை என்னிடம் கொடு இங்கு என்பது இவ்விடம். என்னும் பொருளுடையது. 'இவன்' என்னும் பொருளுடையதன்று. அதனால் 'தன்னைப்பிறன் போற்கூறுதல்' என்பதற்கு உயர்திணை வாய்பாட்டில் வைத்து 'அதனை இவனிடம் கொடு' என உதாரணம் காட்டுவதே நன்று.

* இது இளம் பூரணர் பாடம் 'திசைநிலைக்' என்பது பிறர்பாடம்.

(மெய்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்
சினைநிலைக் கிளவியின் ஆஅ குநவும்
தொல்நெறி மொழிவயின் ஆஅ குநவும்
மெய்நிலை மயக்கின் ஆஅ குநவும்
மந்திரப் பொருள்வயின் ஆஅ குநவும்
அன்றி அனைத்தும் கடப்பாடு இலவே)

ஆ. மொ. இல.

A word naming something poletically, a dialectal word, a word long by established in usage, a word of hidden sense and a word used in a 'manthiram' (formula of prayar) are not bound by grammatical rules.

பி.இ.நூ.

இ. வி. 370. (தொல் சூத்திரமே)

முத்து. ஒ. 115.

ஒருதிணைப் பெயர்ஒரு தினணக்காய் வருநவும்
திசைச்சொல் வாய்பாடு திரிந்து வருநவும்
இயைபில் லனஇயைந் தனவாய் வருநவும்
திணைமுத லாயின திரிந்து வருநவும்
அன்றி அனைத்தும் கடப்பா டிலவே.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், ஒருசார் வழுக் காத்தல் நுதலிற்று.

உரை : இவை மேற்கூறப்பட்ட இலக்கணத்தினை யன்றி யாகாமையின், எ-று.

பெயர் நிலைக்கிளவி என்பது ஈண்டு உயர்திணைப் பெயரை யாயிற்று. அவ்வுயர்திணைப் பெயர் உயர்திணைப் பெயர் மேல் வழங்கப்படுதலின்றியும் அமையும் என்றவாறு நம்பி என்னும் உயர்திணைப் பெயர் ஒரு யானை மேலானும் ஒரு கோழி மேலானும் பிறவற்றின் மேலானும் நிற்கும். நங்கை என்ப ஒரு கிளியையும் என்பது.

[1]இனிச் சினைநிலைக் கிளவியின் ஆவன கடப்பாடின்றி வருமாறு : 'வெண் கொற்றப் படைத்தலைவன்', 'வெள்ளேறக் காவிதி' என்பன.

[2]இவற்றை முன்னர்க் கிளவியாக்கத்துச் சிறப்புப்பெயர் நின்றவழி இயற்பெயர் வைத்துக் கூறுப என்றார்; இனிச் சினைச் சொற்கண் ஆயின் அது வேண்டுவதன்று என்பது கருத்து.

தொன்னெறி மொழிவயின் ஆஅகுநவும் என்பது, [3]முற்றுச் சொல். அவற்றையும் இவ்வாறே சொல்லப்படுதலின் இப் பொருள என்றோர் கடப்பாடில என்றார்.

---

1, 2. வெள்ளேறக்காவிதி சிறப்புப் பெயர். படைஅரசற்கு அங்கமாதலின் படைத்தலைவன் சினைப்பெயர். 'வெண்கொற்றப் படைத்தலைவன் வெள்ளேறக்காவிதி என்பதில் சினைப்பெயர் முன்னரும் சிறப்புப் பெயர் பின்னரும் மயங்கி வந்தன. சிறப்புப் பெயர் முன்னரும் இயற்பெயர் பின்னரும் வருக என்பது கிளவியாக்கத்துட் கூறப்பட்டது. (சூ.) அதற்குமாறாகச் சினைப்பெயர் முன்னர் வந்தது. வெண்கொற்றப் படைத்தலைவன், வெள்ளேறக்காவிதி என்பன தனித்தனி உதாரணம் எனக் கொள்ளின் சினைப்பெயரும் சிறப்புப்பெயரும் காணாமை மயங்க நேரும். வெள்ளேறன் என்பது சினைப்பெயராயின் காவிதி என்னும் சிறப்புப் பெயர்க்கு முன்வந்தது எனக் கொள்ளலாம். வெண்கொற்றப் படைத்தலைவன் என்பதில் சினைப்பெயரும் சிறப்புப் பெயரும் தனித்தனிக் காண இயலவில்லை, சிவ.

3. முற்றுச்சொல்—முடிந்த முடிபுச் சொல். அதாவது முடிவான கருத்துடைச் சொல். கடன் எனவும், தாரான் எனவும் முடிபாகக் கூறப்பட்டமை காண்க. முற்றுச் சொல் என்பதற்குப் பதில் முதுசொல் என்றிருக்கலாம் என்பர் கு. சுந்தர மூர்த்தி. உதாரணம் இரண்டற்கும் நச்சினார்க்கினியர் விளக்கம் பார்க்க. எருமையீர்க்கும் கதை உரையிறுதியிற்காண்க.

வ-று : 'ஆற்றுட் செத்த எருமை ஊர்க்குயவற் கிழுத்தல் கடன்' எனவும், 'யாட்டுளான் இன்னுரை தாரான்' எனவும் வரும். பிறவும் அன்ன,

பெயர்நிலைமருங்கின் ஆஅகுநவும் என்பது, மேல் 'தகுதியும் வழக்கும் தழீஇயின வொழுகும்' (கிளவி. 17) என்புழி மங்கல மரபினானும் குழுவின் வந்த குறி நிலை வழக்கினானும் கூறப் படும் என்றாரன்றே, இனி, அவை அவ்வாறன்றித் தத்தம் இலக்கணத்தானும் சொல்லப்படும் என்றவாறு.

வ-று : சுடுகாட்டை நன்காடு என்னாது சுடுகாடு என்றும், செத்தாரைத் துஞ்சினார் என்னாது செத்தார் என்றும் கூறவும் அமையும் என்ற வாறு.

இனி, மந்திரப் பொருள்வயின் ஆஅகுநவும் என்பது.

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப (செய்யு. 171)

அவை கூறப்பட்ட எழுவகை வழுவிற்றீர்ந்து வருக என்ற கடப்பாடில என்றவாறு. அவை,

[4]திரி திரி சுவாகா கன்று கொண்டு
கறவையும் வந்திக்க சுவாகா

என்றாற் போல வரும்.

இச்சூத்திரத்திற்குப் பிறிதும் ஓர் பொருள் உரைப்பாரும் உளர். [5]இதுவும் மெய்யுரைபோலும் என்பது.

---

4. பொருள் : "கன்றைக்கொன்று மாட்டையும் பால் கறக்காமல் வற்றச் செய்க என மூன்று முறை சொல்லி சுவாகா எனப் பலியையும் நெருப்பில் இடுக"— கு. சுந்தர மூர்த்தி.

5. இதுவும் மெய்யுரையென்பது பொருள். போலும் என்பது ஒப்பில் போலி.

சேனா

இ-ள் : பெயர் நிலைக் கிளவியின் ஆஅகுநவும் என்றது, ஒரு திணைப்பெயர் ஒரு திணைக்காய் வருவனவும் என்றவாறு.

அவையாவன : ஓர் எருத்தை நம்பி என்று வழங்குதலும் ஒரு கிளியை நங்கையென்று வழங்குதலுமாம். பிறவும் அன்ன.

திசை நிலைக்கிளவியின் ஆஅகுநவும் என்றது, திசைச்சொல் லிடத்து வாய்பாடு திரிந்து வருவனவும் என்றவாறு. அவை புலியான் பூசையான் என்னுந் தொடக்கத்தன.

தொன்னெறி மொழிவயின் ஆஅகுநவும் என்றது, முது சொல்லாகிய செய்யுள் வேறுபாட்டின் கண் இயைபில்லன இயைந்தனவாய் வருவனவும் என்றவாறு. அவை [1]'யாற்றுட் செத்த எருமை யீர்த்தல் ஊர்க்குயவர்க்குக் கடன்,' என்பது முதலாயின.

மெய்ந்நிலை மயக்கின் ஆஅகுநவும் என்றது, பொருள் மயக்காகிய பிசிச் செய்யுட்கண் திணை முதலாயின திரிந்து வருவனவும் என்றவாறு, அவை,

*எழுதுவரிக் கோலத்தார் ஈ வார்க் குரியார்
தொழுதிமைக் கண்ணணைந்த தோட்டார்—முழுதகலா
நாணிற் செறிந்தார் நலங்கிள்ளி நாடோறும்
பேணற் கமைந்தார் பெரிது.

என்பது புத்தகம் என்னும் பொருள்மேல் திணைதிரிந்து வந்த வாறு கண்டு கொள்க. பிறவும் அன்ன.

---

1. விளக்கம் நச்சர். உரையிற்காண்க.

* பெண்ணுக்கும் புத்தகத்துக்கும் சிலேடை எழுதப்படும் தொய்யில் என்னும் வரிக்கோலமுடையவர், எழுதும் அழகிய வரிகளையுடையவர்; மணம் செய்து கொடுக்கப் படுபவர்க்குரியர், கொடுக்கப்படும் மாணவர்க்குரியர்; தொகுதியாக மைபூசப்பட்ட கண்ணின்கடை சென்று சேர்ந்த காதின் தோடுடையவர், தன்னிடம் எழுத்துத் தெளிவாகத் தெரிய வேண்டிமை பூசப்பட்ட தொகுதி யான ஓலைகளையுடையவர்; முழுதும் நீங்காத நாணத் தால் அடங்கியவர், முழுதும் நீங்காத கயிற்றுள் அடங் கியவர்; நலங்கிள்ளியால் நாடோறும் விரும்புதற் குரி யர், நலங்கிள்ளியால் நாடோறும்பாதுகாத்தற் குரியர்.

மந்திரப் பொருள்வயின் ஆககுநவும் என்றது, மந்திரப் பொருட்கண் அப்பொருட்குரித்தல்லாச் சொல் வருவனவும் என்ற வாறு இதற்குதாரணம் மந்திர நூல் வல்லார்வாய்க் கேட்டு ணர்க.

அன்றியனைத்தும் கடப்பா டிலவே என்றது, அவ்வனைதும் வழங்கிய வாறே கொள்வதல்லது இலக்கணத்தான் யாப்புற வுடைய வல்ல என்ற வாறு.

இஃது இச்சூத்திரத்திற்கு ஒருசாரார் உரை, ஒருசாரார் பிற வாறு உரைப்ப.

இஃது இயற் சொல்லும் திசைச்சொல்லும் பிறவும்பற்றி வழுவ மைத்ததாகலின், கிளவியாக்கம் முதலாயினவற்றின் கண் உணர்த் துதற் கியைபின்மையான் ஈண்டு வைத்தார்.

தெய்

*அதிகார முறையான் இசையெச்சம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : பெயர்நிலைக் கிளவிகளின் ஆகுஞ்சொல்லும் திசை நிலைக் கிளவிகளின் ஆகுஞ்சொல்லும், பழமைத்தாகி நெறிப்பட வரும் சொல்லினாகும் சொல்லும், பொருள் நிலை மயக்கின் ஆகும் சொல்லும், மந்திரப் பொருள்வயின் ஆகும் சொல்லும் அவ்வனைத்தும் இச் சொற்குப் பொருள் இது என்னும் நியமம் இல, எ-று.

எனவே, தன்பொருள் ஒழியப் பிறிது பொருளும் படும் என்றவாறாம். ஒரு சொல் இரண்டு பொருள்பட நின்றவழி, ஒரு பொருளை யுணர்த்தும் இசை எஞ்சி நிற்கும் அன்றே அஃது இசையெச்சமாவது என்று கொள்க. ஆகுஞ்சொல் என்றமையான் ஏற்பன கொள்ளப்படும்.

இசையெச்சம் ஐந்து வகையென்பது போந்தது. அவற்றுள் பெயர் நிலைக் கிளவியின் ஆகுவன : வேங்கை என்பது ஒரு மரத்திற்குப் பெயராயினும் புலிக்கும் பெயராயிற்று. அதுவு

---

* இக்கருத்து மற்றையோரினும் வேறுபட்டது.

மறின்க் கைவேம் என்னும் பொருளும் பட்டது. இவ்வாறு ஒரு சொல்லினானே பிறிது பொருள் உணரின் அதை யுணர்த்தும் ஓசை எஞ்சி நின்றதெனக் கொள்க.

இது பல பொருள் ஒரு சொல் அன்றோவெனின் ஆம்; பல பொருட்கண் ஒரு சொல் வருதற்கு இலக்கணம் ஈண்டு உணர்த்துகின்றது. என்னை உணர்த்தியவாறு எனின், வேங்கை என்னும் சொல் புலிப்பொருண்மையுணர்த்திற்றாயின், மரம் பொருண்மையுணர்த்தும் சொல்யாது என ஒருகடாவரும். அக்கடா வேங்கை என்னும் சொல்லின் கண்ணே மரப்பொருண்மையை உணர்த்துவதோர் ஓசை எஞ்சி நின்ற தெனின் அல்லது விடை பெறாதாம். அதனானே இலக்கணம் உணர்த்தியவாறு அறிந்து கொள்க.

திசை நிலைக் கிளவியின் ஆகுநவும் என்பது செந்தமிழ் நாட்டுவழங்கும் சொல் திசைச் சொல்லாகியவழிப் பொருள் வேறுபடுதல். கரை என்பது வரப்பிற்குப் பெயராயினும் [1]கருநாடர் விளித்தற்கண் வழங்குப

'தொன்னெறி மொழு' என்றதனான் முந்துற்ற வழக்காகித். தொடர்பு பட்டுச் செய்யுளகத்தினும் [2]பரவைவழக்கினும் வரும் தொடர்மொழி என்று கொள்ளப்படும். 'குன்றேறாமா' என்றவழி குன்று, ஏறு, ஆ, மா எனவும்படும்: குன்றின்கண் ஏறா நின்ற ஆமா எனவும் படும். இவ்வாறு வரும் பொருட்கெல்லாம் இத் தொடர் மொழி தானே சொல்லாகி இதன்கண் இசை வேறுபட்டுப் பொருள்வேறு உணர்த்தலின் அப்பொருண்மைகளை யுணர்த்தும் இசை எஞ்சி நின்றது. [3]காதற் கொழுநனைப் பிரிந்தலர் எய்தா-மாதர்க் கொடுங்குழை மாதவி தன்னொடும்" இச்சொல்

---

1. கருநாடர்-கன்னடர்.
2. பரவை வழக்கு—உலகவழக்கு.
3. மாதவிக் கொடிக்கும் மாதவிப் பெண்ணுக்கும் சிலேடை. பற்றிப் படரும் விருப்பத்துக்குரிய கொழுகொம்பைப் பிரிந்து பூத்தல் இல்லாத அழகிய வளைந்த தளிர்களையுடைய மாதவிக் கொடி; காதற் கொழுநனாகிய கோவலனைப் பிரிந்தமையால் மகிழ்தல் இல்லாத அழகிய வளைந்த காதணியை யுடைய மாதவி.

எல்லாம் குருக்கத்திக்கும் அடையாகி மாதவி என்னும் ஓர் பெண்பாற்கும் அடையாகிப் பொருள் வேறு படுதலின் இசை யெச்சமாயிற்று. இது தனி மொழியாகிய பெயர்நிலைக் கிளவி யின் அடங்காமையின் தொடர்மொழி யென்று வேறு ஓதினார்.

மெய்ந்நிலை மயக்கமாவது பொருள்நிலை மயக்கம் கூறுதல். [4]"குருகு கரு வுயிர்ப்ப ஒரு தன யோங்கிய திருமணிக் காஞ்சி" மணி. 18:55, 56 என்றவழிக் குருகு என்பது மாதவி என்னும் கொடிக்கும் பெயராதலின், அப்பெயருடையதனைக் குருகு என்றார். காஞ்சி என்பது மேகலைக்குப் பெயராதலின், அது மணிக்காஞ்சி என்றொட்டி மணிமேகலை என்பாள் மேல் வந்தது. இவ்வாறு பொருள்நிலை மயங்க வருவனவும் இசை யெச்சமாம் என்றவாறு.

மந்திரம் என்பது பிறர் அறியாமல் தம்முள்ளார் அறிய மயைத்துக் கூறுஞ்சொல் அதன்கண் ஆகுவன : உலகினுள் வழங்குகின்ற பொருட்குத் தாம் அறிகுறியிட்டு ஆண்டுவரும் குழூவின் வந்த குறி நிலை வழக்கு. அது வெளிப்பட்ட சொல் லால் உணரும் பொருட்கு மறைத்துப் பெயரிடுதலும், எழுத் திற்குப் பிற பெயரிட்டு வழங்குதலும் என இருவகைப்படும். இவையும் பொருள் வேறு படுத்தி வழங்குதலின் இசையெச்ச மாயின. அவற்றுள் பொருட்கு வேறு பெயரிட்டன : வண்ணக்கர் காணத்தை நீலம் என்றலும், யானைப்பாகர் ஆடையைக் காரை யென்றலும் முதலாயின. எழுத்திற்கு வேறு பெயரிட்டு வழங்குமாறு : மண்ணைச் சுமந்தவன் தானும் வரதராசன் மகன் தானும், எண்ணிய வரகாலி மூன்றும் இரண்டு மரமும் ஓர்யாறும், திண்ணம் அறிய வல்லார்க்குச்

---

4. பொருள் : மாதவி பெற்றெடுப்பச் சிறக்க வளர்ந்த மணிமேகலை. குருகு என்பது மாதவிக் கொடிக்கு ஒரு பெயர். குருகு என்பதால் மாதவிக் கொடியை நினைவு படுத்திப் பின் மாதவி என்பவளையுணர்தினார். காஞ்சி என்பது மேகலை என்னும் பொருளது. காஞ்சி என்ப தால் மேகலை என்னும் சொல்லைப் பெறவைத்து 'மணிக்காஞ்சி' என்பதால் 'மணிமேகலை' என்னும் பெயரைப் புலப்படவைத்தார்.

சிவகதியைப் பெறலாமே'' இதனுள் [1]மண்ணைச் சுமந்தவன் - ந. வரதராசன்மகன் - ம. வரகாலி மூன்று - சி. இரண்டு மரம் - வா. ஓர்யாறு-ய. எனக்கூற நமச்சிவாய எனப் பொருளாயிற்று. பிறவும் அன்ன.

## நச்

இதுவும் ஒருசார் வழுவமைக்கின்றது.

இ-ள்: பெயர் நிலைக்கிளவியின் ஆஅகுநவும்—தத்தம் பொருள் உணர்த்தாது பெயர்ந்த நிலைமையையுடைய சொல்லான் வரும் செய்யுளும், திசைநிலைக் கிளவியின் ஆஅகுநவும்-திசையான் நிலைபெற்ற பெயரான் வரும் சொல்லும், மொழிவயின் தொன்னெறிஆஅகுநவும்-சொல்லிடத்துப் பழைய நெறியான் ஆய்வரும் சொல்லும், மெய்ந்நிலை மயக்கின் ஆஅகுநவும்-ஒருமைப் பொருளால் கூறவே பன்மைப்பொருள் தோன்றி மயங்கும் மயக்கினான் ஆகும் செய்யுட்களும், மந்திரப் பொருள்வயின் ஆஅகுநவும்-மந்திரத்தையுடைய தெய்வங்களிடத்தே அம்மந்திரமாய் வரும் சொற்களும், அன்றி அனைத்தும்-ஆகிய அவ்வனைத்தும், கடப்பாடு இல-வழங்கியவாறே சொல்வது அல்லது இலக்கணத்தான் யாப்புறவு உடைய அல்ல, எ-று.

உ-ம்: ''ஒள்வாள், கறையடியானைக் கல்ல
துறைகழிப் பறியா வேலோன் ஊரே'' (புறம். 323)

என்புழி, [1] 'வேலோன்' என்பது 'வேலையுடையோன்' என்னும்

---

1. மண்ணைச் சுமந்தவன் சிவன் அவன் நந்தியெனவும் படுவான்... ந
வரதராசன் திருமால்; அவன்மகன் மன்மதன் ...ம
வரகாலி மூன்று-விளங்கவில்லை ...சி
இரண்டுமரம் -..............? ...வா
ஓர்யாறு-யமுனை. ...ய

1. வேலோன் என்பது, 'வாளை உறையினின்றும் நீக்குதலறியாத' என்றதால் காரணப்பெயராயில்லாமல் வாளா பெயராய் நின்றது தாமரையன்ன கண் என மென்மையும் அழகும் முதலிய பண்புபற்றிக் கூறியமையால் கொடுமைக்குரியவாள் உவமையாகக் கூறப்படாது. ஆதலின் வாட்கண் என்பது வாளா பெயராய் நின்றது.

பொருள் பெயர்ந்து ஒரு பெயர்த் தன்மையாய் 'செழுந் தாமரையன்ன வாட்கண்' (சீவக.8) என்பதூஉம் அது.

தென்னவன், வடமன், குடக்கோ, தென்பாண்டி என இவை திசைநிலைக்கிளவி.

முதுமொழி பொருள்உடையனவும் பொருள் இல்லனவும் என இருவகைப்படும். 'யாட்டுளான் இன்னுரை தாரான்' என்றது, "இடையன் எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுக்கும் மொழியைக் கூறுதலன்றி, எழுத்தொடு புணர்ந்துபொருள் அறிவுறுக்கும் மொழியைக் கூறான்" என்னும் பொருள் தந்து நின்றது. 'யாற்றுட் செத்த எருமை யீர்த்தல் ஊர்க்குயவர்க்குக் கடன்' என்பது, "குயவன் சுள்ளையின் எழுந்த புகையான் ஆயமேகம் தந்த நீரான் எருமைசாதலின், அதனை இழுத்தல் குயவர்க்குக் கடனாயிற்று" என ஒருகாரணம் உள்ளது போலக் கூறுகின்றது, உண்மைப் பொருளன்றி, ஒருவன் இயைபின்றிக் கூறிய சொற்கு எடுத்துக்காட்டாகக் கூறப்படுதலின் பொருள் உணர்த்தாதாயிற்று.

'இல்வாழ்வான் என்பான்', (குறள் 41), 'தினைத் துணையும் தேறான் பிறனில் புகல்' (குறள். 144), 'நட்பரண் ஆறும் உடையான்' (குறள். 381), 'வறியவன் இளமைபோல்' (கலி. 10) என்றாற் போல்வன எல்லாம் ஒருமைப் பொருள் கூறிற்றேனும் பன்மைப் பொருளை உணர்த்தலின் மெய்ந்நிலை மயக்கம் ஆயிற்று. மெய்-பொருள்.

மந்திரச்சொல் மந்திர நூல்களிற் கேட்டுணர்க.

நம்பி நங்கையென அஃறிணையைக் கூறுவனவும் 'எழுது வரிக் கோலத்தார்' (நன். 268. மயிலை. உரை மேற்) என்னும் பிரேளிகைச் செய்யுளில் திணை வழுவும், 'ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்' (கிளவி. 27) என்னும் சூத்திரத்துள் அடங்குமாறும், புலியான், பூசையான் என்பன திசைச்சொற்கண் அடங்குமாறும் உணர்க. வெண்கொற்றப் படைத்தலைவனும் சிறப்பினாகிய பெயர்க்கண் அடங்கும்.

வெள்

இதுவும் ஒருசார் வழுவமைக்கின்றது.

இ-ள் : ஒரு திணைப்பெயர் ஒரு திணைக்காய் வருவனவும், திசைச் சொல்லிடத்து வாய்பாடு திரிந்து வருவனவும், முதுசொல் லாகிய செய்யுள் வேறுபாட்டின் கண் இயைபில்லன இயைந்தன வாய் வருவனவும், பொருள் மயக்காகிய பிசிச் செய்யுட் கண் திணைமுதலாயின திரிந்து வருவனவும், மந்திரப் பொருட் கண் அப்பொருட் குரித்தல்லாச் சொல் வருவனவும், அவ்வனைத் தும் வழங்கியவாறே கொள்வதல்லது இலக்கணத்தான் யாப்புற வுடைய வல்ல, எ-று.

பெயர் நிலைக் கிளவியின் ஆகுந : ஓர் எருத்தை நம்பி யென்றும் ஒரு கிளியை நங்கை யென்றும் வழங்குதலும் முதலாயின.

திசை நிலைக் கிளவியின் ஆகுந : புலியான், பூசையான் என்னுந் தொடக்கத்தன.

தொன்னெறி மொழிவயின் ஆகுந : 'யாற்றுட் செத்த எருமையீர்த்தல் ஊர்க்குயவர்க்குக் கடன்' என்பது முதலாயின.

மெய்ந்நிலை மயக்கின் ஆகுந :

எழுதுவரிக் கோலத்தார் ஈவார்க் குரியார்
தொழுதிமைக் கண்ணணைந்த தோட்டார் முழுதகலா
நாணிற் செறிந்தார் நலங்கிள்ளி நாடோறும்
பேணற் கமைந்தார் பெரிது.

என்பது புத்தகம் என்னும் பொருள்மேல் திணை திரிந்து வந்த பிசி யென்னும் செய்யுள் என்பர் சேனாவரையர்.

மந்திரப் பொருள்வயின் ஆகுந என்பதற்குத் "திரிதிரி சுவாகா என்று கொண்டு கறவையும் வந்திக்க சுவாகா" என உதாரணம் காட்டுவர் இளம்பூரணர்.

ஆதி

பெயர்ச் சொல்லில் ஒன்றுக்கொன்று ஆகுவன, திசைச் சொல்லில் மாறுபடுவன, பழைய மரபில் மாறுபடுவன, பொருள் முறையில் மாறுபடுவன, மந்திர வகையில் மாறுபடுவன, இன்னும் இவை போன்றவையும் வரம்புள் நிற்பனவல்ல வழுவமைதியாக வருவனவாம்.

*குறிப்பு : ஆசிரியர் இச்சூத்திரத்தைத் தெளிவாக அமைத்தாரல்லர். உரையாசிரியர்கள் தம் திறன் எல்லாம் காட்டிக் கதை கற்பிக்கிறார்கள். யாமும் எமக்கு எட்டியவாறு கூறுகின்றோம்.

ஆகுநவும் — மாறுபாடு ஆகுநவும் என்ற பொருளில் வருகின்றது. அஃதே வழுவமைதி. முன்னர் (வேற். மய. 36ல்) 'ஆகுபெயர்' என்ற சொல் ஒன்று மற்றொன்றுக்கு ஆகுதலை அறிவிக்கின்றது. இங்கும் ஒன்று மற்றொன்றுக்கு ஆகுதல் என்றே பொருள் கொள்ள வேண்டியதாகிறது.

பெயர்ச்சொல்லில் ஆகுதல் : மனிதனைச் சிங்கம் வந்துவிட்டான் மாட்டை என் அம்மை வந்துவிட்டாள், பையனை என் அம்மை எப்போது வந்தாய், பெண்ணை அரசே இங்குவா இம்முறையிற் பார்ப்பின் திணை வழு வமைதி பால்வழு வமைதிகளே பெயர் நிலைக் கிளவியின் ஆகுந.

திசைநிலைக் கிளவியின் ஆகுந : வடக்கிருந்தான், தென்புலத்தார் என, உயிர் நீக்கும் வீரத்தாரையும், இறந்தாரையும் கூறும் முறைபற்றியோ — அல்லது திசைக்கு இடம் எனப் பொருள் கொண்டு இட ஆகு பெயரையோ – அல்லது இடம்— தன்மை முன்னிலை படர்க்கை இடங்களாகக் கொண்டு இட வழுவமைதியென்றோ கொள்ளுதல் வேண்டும்.

---

* இவர் தம் போக்கில் கூறும் உதாரணங்கள் பற்றிய இலக்கணங்களை ஆசிரியர் கிளவியாக்கம் முதலிய வற்றிற் கூறியுள்ளபடியால் இவர் கூறும் உரையும் உதாரணமும் ஏற்பதற்கில்லை.

தொன்னெறி மரபின் ஆகுந : மரபு வழுவமைதி. வாழைத் தோட்டத்தைச் சிந்தாமணியார் 'வாழைக்காடு' என்பதும், புத்தகங்களில் மிளகுச்செடியை மிளகாய்ச்செடி என்பதும் மரபு வழுவமைதி. தாய் தன் மகனை 'அம்மா' என அழைப்பதும் தந்தை தன் மகனை அப்பா என அழைப்பதும் மரபு வழு வமைதியே.

மெய்ந்நிலை மயக்கின் ஆகுந : மெய்ந்நிலை—உண்மைப் பொருள். அதன் மயக்கம் இடக்கரடக்கல் மங்கலம் குழூஉக் குறி ஆகிய தகுதி வழக்கும் ஆகலாம். இன்றேல் முந்திய வழுவமைதியோடு பிணைத்து, மெய்ந்நிலை—கால நிலை எனக் கொண்டு கால வழுவமைதியெனக் கோடல் வேண்டும்.

மந்திரப் பொருள்வயின் ஆகுந : மந்திரம் என்பது மறை மொழி. தெய்வப்பெயர் மந்திர மொழிகளை இடம் மாறி உரைப்பது இங்கு உணர்த்தப்பட்டது போலும். ரிசபதேவர் சமணத்தெய்வ மந்திரம். சிவன் கோயிலில் கூறப்படும் முக்கண்ணன் சிவமந்திரம் விநாயகருக்கும் இற்றை நாளில் எத்தெய்வச்சிலை முன்னும் நின்று சாமியே சரணம் ஐயப்பா என்பதும், மயிலாப்பூர்க் கோயிலுள் நின்று ஒற்றியூருடைய கோவேயென்பதும் முறையே மந்திர வழுவமைதியாகலாம்.

அன்ன அனைத்தும்—வேறு குறிப்பாக இடம் மாறிப்பொருள் கூறல் : பையனைப் பார்த்து—பெரிய மனிதன் என்ன சொல்கிறாய் ?

தடித்தவனைப் பார்த்து என்ன இப்படி மெலிவு ?

இவ்வாறு ஒன்றுக்கொன்று வழுவமைதியாக வருவதும் முறையே. இதனைக் கட்டுப்படுத்த முடியாது.

ஒரு கருத்து : முன் உரையாசிரியர் நம் கருத்துப் போல் கூறியுள்ளார் ; யாம் வழுவமைதி முறைபற்றி இச்சூத்திரம் அமைத்ததாய்க் கொண்டு அதற்கேற்பக் கூறியுள்ளாம்.

# செய்யாய்

444. செய்யா யென்று முன்னிலை வினைச்சொல்
செய்யென் கிளவி யாகிட னுடைத்தே (54)

(செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்என் கிளவி ஆகுஇடன் உடைத்தே)

ஆ. மொ. இல.

'Seyyay' the verb of the second person
may become 'sey' sometimes.

பி. இ. நா.

இ. வி. 353. } தொல். சூத்திரமே.
முத்து. ஒ. 116 }

பிரயோ. 46

செய்யாய் எனல் செய் எனக் குன்றுமே.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இது வினையியலுள் ஒழிந்து நின்ற ஒழிபு உணர்த்துதல் நுதலிற்று.

[1]உரை : 'செய்யாய்' என நின்ற முன்னிலை வினைச் சொல் 'செய்' என்னும் சொல்லும் ஆம்இடன் உடைத்து, எ-று.

---

1. "செய்யாய் என்னும் முன்னிலை எதிர் மறை வினைச் சொல் செய்வாய் என்னும் உடன்பாட்டு முன்னிலை. வினைச்சொல்லாகும் இடம் உண்டு" என்பது இவ்வு ரையின் கருத்து. தெய்வச்சிலையார், நச்சினார்க் கினியர் கருத்தும் இதுவே.

[2]இந்நாள் எம்மில்லத்து உண்ணாய் என்பது. அது செய்யாய் என்பது ; அது செய் இனி என்றுமாம்.

சேனா.

இ-ள் : செய்யாய் என்னும் வாய்பாட்டதாகிய முன்னிலை முற்றுச்சொல் ஆய் என்னும் ஈறுகெடச் செய் என்னும் சொல்லாய் நிற்றலுடைத்து, எ-று.

ஆகிடனுடைத்து என்றதனான் செய்யாய் என ஈறு கெடாது நிற்றவே பொரும்பான்மை யென்பதாம்.

உ-ம் : உண்ணாய், தின்னாய், கிடவாய், நடவாய் தாராய், வாராய், போவாய் என்பன ஈறுகெட உண், தின், கிட, நட, தா, வா, போ எனச் செய்யென் கிளவி யாயினவாறு கண்டு கொள்க.

[1]'செய்யாய்' என்னும் முன்னிலை எதிர்மறை 'செய்' என் கிளவியாதற்கு ஏலாமையான் செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல் என்றது விதி வினையையேயாம்.

[2]தன்னின முடித்தல் என்பதனான் வம்மின், தம்மின், என்பன மின்கெட வம், தம் என நிற்றலும் ; அழியலை,

---

2. உண்ணாய் என்னும் எதிர்மறை முன்னிலை வினைச் சொல் உண்ணதுவாய் என உடன்பாட்டு வினைச் சொல்லும் ஆம்.

1. செய்யாய் என்பது எதிர்மறை- அது எதிர்மறைப்பொருளிலேயே 'செய்' என வாராது ; ஆதலின் செய்யாய் என்பதும் உடன்பாட்டு முன்னிலை வினைச்சொல்லே எனக்கொள்ளல் வேண்டும்.

2. வம்மின் தம்மின் என்பன முன்னிலை வினைச்சொல் ஆதலின் தம்மினம் ஆயின. புகழ்ந்தார் என்பது படர்க்கை வினைச்சொல் ஆதலின் அது புகழ்ந்திகு மல்லரோ என வருவது திரிபு என்பதில் ஒன்றாக அமைதலின் ஒன்றென முடிக்கப்பட்டது.

அலையலை என்னும் முன்னிலை யெதிர்மறை ஐகாரங்கெட்டு அழியல், அலையல் என நிற்றலும் கொள்க. ஒன்றென முடித்தல் என்பதனான் 'புகழ்ந்தார்' என்னும் படர்க்கைவினை ஆர் ஈறுகெடப் 'புகழ்ந்திகு மல்லரோ' என நிற்றலும் கொள்க. இவையெல்லாஞ் செய்யுள் முடிபு என்பாரும் உளர்.

செய்யாய் என்னும் முன்னிலை யெதிர்மறை எதிர்மறை படாது 'செய்' யென விதி வினையாதலும் உரித்து என்று உரைத்தாரால் உரையாசிரியர் எனின், அற்றன்று; செய்யாய் என்னும் எதிர்மறை வினையும் செய்யாய் என்னும் விதிவினையும் [3]முடிந்த நிலைமை யொக்கு மாயினும், எதிர்மறைக்கண் மறை யுணர்த்தும் இடை நிலையும் உண்மையான் முடிக்குஞ்சொல் வேறெனவே படும். மறையுணர்த்தும் இடைநிலையாவன உண்ணலன், உண்டிலன், உண்ணாது, உண்ணேன் என்புழி வரும் அல்லும், இல்லும், ஆவும், ஏயும் பிறவும் ஆம். உண்ணாய் உண்ணேன் என்புழி எதிர்மறை ஆகார ஏகாரம் கெட்டு நின்றன எனல் வேண்டும், அல்லாக்கால் மறைப் பொருள் பெறப்படாமையின். அதனான் எதிர்மறைச் சொல்லே விதிவினைச்சொல் ஆகாமையின் அவர்க்கது கருத்தன்றென்க. அல்லதூஉம் ஆசிரியர் அக்கருத்தினராயின் 'செய்யாய் என்னும் எதிர்மறை வினைச்சொல்' என்றோதுவார்மன்; அவ்வாறு ஓதாமையான், அவர்க்கது கருத்தன்மையான் உரையாசிரியர்க்கும் அது கருத்தன்மை யறிக.

## தெய்

இது வினைச்சொற்கு உரியதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: 'செய்யாய்' என்னும் ஆய் ஈற்று முன்னிலை வினைச்சொல் 'செய்' என்னும் ஏவல் குறித்த வினைச் சொல்லுமாய் வருமு, எ-று.

---

3. முடிந்தநிலை யொத்தல் எதிர்மறைக்கும் உடன்பாட்டிற்கும் 'செய்யாய்' என ஒரே சொல்லமைப்பாய் நிற்றல். ஆனால் பிரித்துப்புணர்க்கு மிடத்து வேறு வேறாம். செய் + ஆய் = செய்யாய் - உடன்பாடு. செய் + ஆ + ஆய் = செய்யாய் - எதிர்மறை. இதில் எதிர்மறையுணர்த்தும் 'ஆ' என்பது கெட்டது.

உ-ம் : [1]நீ எ- இல்லத்து உண்ணாய் என்றவழி உண்ணாமையைக் குறித்தலேயன்றி உண்க என்பதும் குறித்தவாறு கண்டு கொள்க. [2]இவ்வாறு வருவதும் இசையெச்சம்.

[3]இன்னும் இச்சூத்திரத்திற்குப் பொருள் செய்யாய் என்னும் வினைச்சொல் செய் எனக் குறைந்து நிற்கவும் பெறும் என்றவாறு. உண்ணாய் என்பது உண் எனவரும்.

நச்

இஃது ஓசை வேறுபாட்டான் ஒருசொல் ஒருசொல்லாம் என்கின்றது.

இ-ள் : செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்— ஒரு தொழிலினை 'மேற் செய்யாய்' என்னும் மறையாகிய முன்னிலை வினைச்சொல், செய் என் கிளவி ஆகு இடன் உடைத்து — அத்தொழிலைச் செய் என்னும் உடம்பாட்டு முன்னிலை வினைச்சொல்லாம் இடத்தினையுடைத்து, எ-று.

இடன் உடைத்து என்றதனான், 'உண்ணாய்' என்பது மறையாய் வருதலே பெரும்பான்மை ஆயிற்று. அது சிறுபான்மை உடம்பாட்டின்கண் வருங்கால் வேண்டிக் கோடற் பொருண்மைக்கண் வரும் என்று உணர்க.

உண், தின் என்பன முதலிய முன்னிலை யேவல் உயர்ந்தான் இழிந்தானை ஏவுதற்கண் வரும்.

'அறியாய் வாழி தோழி
..................................
பொருளே காதலர் காதல்
அருளே காதலர் என்றி நீயே' (அகம் 53)

---

1. இது இளம்பூரணர் உரை.

2. பிறர் இசையெச்சம் என்று கூறார்.

3. இது சேனாவரையர் உரை.

என்னும் அகப்பாட்டினுள் 'அறியாய்' என்றது "காதலர் அருளே காதலித்திருப்பார் என்று நீ கூறுகின்றமையால் காதலர் கருத்தின நீ அறியாய்" என முன்னிலை மறையாய் நின்றவாறும்,

"அறியாய் வாழி தோழி பொறிவரிப்
பூநுதல் யானையொடு" (அகம். 268)

என்னும் அகப்பாட்டினுள் 'அறியாய்' என்றது.

"காமம் கலந்த காதல் உண்டெனின்
நன்றுமன் அது நீ நாடாய் உறுதி"

என்றதனோடு இயையுங்கால் 'அவனோடு கூட்டம் உண்டு எனின், அது மிக நன்று; அதனை நீ ஆராயாமல் கூறுகின்றாய்" என வேண்டிக் கோடற் பொருள் தந்து முன்னிலை ஏவல் உடம்பாய் நின்றவாறும் உணர்க. இங்ஙனம் மறைச்சொல் உடம்பாட்டுப் பொருளைப் படுத்தல் ஓசையாய் உணர்த்தி நிற்றல் சான்றோர் செய்யுளுள் பெரும்பான்மை யென்றுணர்க.

இனி, வழக்கினுள்ளும், 'இந்நாள் எம் இல்லத்து உண்ணாய், இப்பொழுது சொல்லாய்' என்றாற்போலப் பெரும்பான்மையும் வழங்குமாறு உணர்க.

'உண்பாய்' என்னும்சொல் ஓசைவேற்றுமையான் [1]முற்றும் தொழிற் பெயரும் வினையெச்சமும் வியங்கோளுமாய் நின்றாற் போலவும், 'தடி' என்பது ஓசை வேற்றுமையான் 'ஒன்றனைக் கொல்' என்றும், 'நீசா' என்றும் நின்றாற் போலவும், மறைச் சொல் ஓசை வேற்றுமையான் உடம்பாடு உணர்த்திற்று என்று

1. உண்பாய் - எதிர்கால வினைமுற்று; உண்ணுபவனாகிய நீ என்னும் பொருளில் வினையாலணையும் (தொழிற்) பெயர்; உண்பாயாய் என்னும் பொருளில் வினை யெச்சம்; உண்பாயாக என்னும் பொருளில் வியங்கோள்.

உணர்க. அங்ஙனம் உணர்த்திற்றேனும் [2]மறையுணர்த்தும் ஆகாரம் உடம்பாடு உணர்த்துமோ எனின், அதனை ஏகாரம் 'உண்பேனே', 'உண்ணேனே' விதிக்கும் மறைக்கும் வந்தாற் போலக் கொள்க.

மறை யென்பது 'செய்யாய் என்னும் வாசகத்தால் சூத்திரம் செய்தமையால் பெற்றாம். 'செய்' என்பது விதி வினையே உணர்த்துதல் பற்றிச் 'செய்யென் கிளவி' என்றார்.

இனி, சேனாவரையர், 'செய்யாய் என்னும் முன்னிலை முற்றுச்சொல் 'ஆய்' என்னும் ஈறுகெடச் செய் என்னும் முன்னிலையேவல் முற்றாய் நிற்கும்' என்று பொருள் கூறி, உண்ணாய், தின்னாய், நடவாய், கிடவாய் என்பன ஈறுகெட்டு உண், தின், நட, கிட என நிற்கும்'' என்றாரால் எனின், 'உண்ணாய்' என்பதும் 'உண்' என்பதும் தம்மில் [3]பொருள் வேறுபாடு உடைமையின், 'உண்ணாய்' என்பதன் பொருளை 'உண்' என்பது உணர்த்தி ஈறுகெட்டு நிற்கும் என்றல் பொருந் தாதாம். 'நீ கலாய்த்திராது உண்ணாய்' என்ற பொருளை 'உண்' என்றது தாராது ஏவற்பொருட்டாய் நின்றவாறு காண்க. அன்றியும் இவ் உண், தின், நட, கிட என்பன

---

2. உண்ணாய் என்பதில் ஆய் என்பதன் ஆகாரம் எதிர் மறை. அது உடன்பாட்டை யுணர்த்துமோ என்பது வினா. உண்பேன் என்பதில் உள்ள ஏன் என்பதின் ஏகாரம் உண்ணேன் என்பதில் எதிர் மறையில் வருவது போல ஆகாரம் எதிர்மறை உடன்பாடு இரண்டுக்கும் வரும் எனக் கொள்க.

3. பொருள் வேறுபாடாவது : உண்ணாய் - எதிர்மறை, உண் - உடன்பாடு. அதனால் உண்ணாய் என்னும் எதிர் மறைப் பொருளை உண் என்பது உணர்த்தாது. 'நீ கலாய்த்திராது உண்ணாய்' என்பதில் உண்ணாய் என்பது எதிர்மறைப் பொருள்படாது உண்க என்னும் உடன்பாட்டு ஏவற்பொருளைத்தருதலின் எதிர்மறையே உடன்பாட்டுப் பொருளில் வந்ததாம்.

வற்றை முதல் நிலையென்றே தாமும் [4]கூறிப்போந்தார் ஆதலின் [5]இவை முதல் நிலையாய் நிற்குமிடத்துக் கரு, செய், வெள் என்னும் முதல் நிலைகள் பண்பு மாத்திரையேயுணர்த்தி ஈறு கெடுதலும் பொருள் உணர்த்துதலும் இன்றி நின்றாற் போல இவையும் வினை மாத்திரையேயுச்சீர்த்தி ஈறுகெடுத் தலும் பொருள் உணர்த்துதலும் நிற்றல் வேண்டும். [6]இவை அங்ஙனம் நில்லாது, ஆய் என்னும் ஈறு கெட்டு முன்னிலையே வற்பொருண்மையே உணர்த்தி நிற்கும் என்றலின் 'முதல்நிலை' என்றல் பொருந்தாதாம். ஆகவே, வினைச் சொற்கு முதல் நிலைகள் உண், தின், நட, கிட முதலிய என்றாம். [7]இவர் பிறர்மதமே கூறினார்; இஃது ஆசிரியர்க்குக் கருத்தன்மை யுணர்க. [8]அன்றியும், உண், தின், நட, கிட முதலியன முன்னிலை யுணர்த்தி நிற்குமேல் 'உண்டான், உண்டேன்' என 'உண்' என்னும் முதல் நிலையில் விரிந்து நின்ற ஈற்றான் உணர்த்தும் படர்க்கைக்கும் தன்மைக்கும் வழுவாமாறு காண்க.

## வெள்

இது வினையியலுள் கூறாது ஒழிந்து நின்ற ஒழிபு கூறு கின்றது.

---

4. கூறிப்போந்தது வினையின் தொகுதி காலத்தியலும் (எச்ச. 19) என்னும் சூத்திரவுரையில்

5, 6. இவை—உண், தின், கிட முதலியன. முதல் நிலை என்பது கரு, செய், வெள் முதலிய முதனிலைகள் ஆய் விகுதியுடன் சேராமை போல உண் முதலியனவும் ஆய் விகுதியுடன் சேர்தலும் கெடுதலும் கூடாது. சேர்தலும் கெடுதலும் உண்மையின் உண் முதலியன பொதுவில் முதல் நிலை என்றல் பொருந்தாது; வினைச்சொற்கு முதல்நிலை என்றலே பொருந்தும் என்பது நச்சினார்க்கினியர் கருத்து.

7. இவர்—சேனாவரையர்.

8. உண்ணாய் எனும் முன்னிலை உண் எனக்குறைந்து நிற்குமாயின் உண்டான், உண்டேன் எனும் படர்க்கை தன்மை முற்றுகளும் உண் எனக்குறைந்து நிற்றல் வேண்டும். நிற்பின் வழுவாகி விடும்.

இ-ள் : செய்யாய் என்னும் வாய்ப்பட்டதாகிய முன்னிலை முற்றுச்சொல் ஆய் என்னும் ஈறு கெடச்செய் என்னும் சொல்லால் நிற்றலும் உடைத்து, எ-று.

'ஆகிடனுடைத்து' என்றதனால் 'செய்யாய்' என ஈறு கெடாது நிற்றலே பெரும்பான்மை யென்பதாம்.

உ-ம் : உண்ணாய், தின்னாய், கிடவாய், நடவாய், தாராய், வாராய், போவாய் என்பன ஈறு கெட, உண், தின், கிட, நட, தா, வா, போ எனச் செய்யென் கிளவியாயின.

ஈண்டுச் செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல் என்றது உடன்பாட்டு வினையை. எதிர்மறை வினையாயின் செய்யென் வினையாதல் ஏலாமையறிக.

.................................................

தன்னின முடித்தல் என்பதனால் அழியலை, அலையலை என்னும் முன்னிலை யெதிர்மறை ஐகாரங்கெட, அழியல், அலையல் என நிற்றலும், ஒன்றென முடித்தல் என்பதனால் 'புகழ்ந்தார்' என்னும் படர்க்கை வினை ஆரீறு கெடப் 'புகழ்ந் திசுமல்லரோ' என நிற்றலும் கொள்ளப்படும்.

ஆதி

எதிர்மறையாகச் செய்யாய் என்று தோன்றுகிற முன்னிலை வினை உடன்பாடாகச் செல் எனப் பொருள் தரலும் உண்டு.

தம்பி ! இங்கு வாராய் — வா எனப்பொருள்
சத்தியபாமா கதவைத் திறவாய் — திற
சற்றே இங்கு நோக்காய் — நோக்கு

இவை எதிர்மறைப் பொருளும் தரும் ஆகலின் பொதுவினை யாகக் கோடல் வேண்டும்.

நெடில் ஒற்று விகுதி ஆன் ஆள் ஆர் ஏன் தனிப் பகுதியுடன் எதிர்மறையே காட்டும். ஓடு + ஆன் = ஓடான், படி + ஆன் = படியான் பகுதியுடன் இடைநிலை சேரின்

ஆங்குற்ற ஆன் ஆள் உடன்பாடு ஆகும். கொடு + ப் + ஆன், படி + த் + ஆன் = சந்தி சேர்த்து உடன்பாடாகக் கொடுப்பான், படித்தான் ஆயிற்று.

செய்யாய் செய் + ஆய், ஆய் முன்னிலை விகுதி. இடை நிலை யின்றிச் சேரினும் ஒலிக்குறிப்பால் உடன்பாடு ஆகிறது.

## முன்னிலையில் ஈ, ஏ

445. *முன்னிலை முன்ன ரீயு மேயு
மந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே (55)
(முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய் ஊர்ந்து வருமே.)

ஆ. மொ. இல.

'I' and 'E' follow the verb of the second person having suitable consonants to join.

நன். 336 (தொ. சூத்திரமே).

இ வி. 358

முன்னிலை யேவல்முன் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே.

முத்து. ஒ. 117 (தொல். சூத்திரமே).

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இடைச்சொல்லோத்தினுள் ஒழிந்து நின்ற ஒழிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : முன்னிலைக்கண்ணான ஈகார ஏகார இடைச் சொற்கள் முன்னிலைக்குப் பொருந்திய மெய்யையூர்ந்து வரும், எ-று.

---

* முன்னிலை மரபின்—தெய்வச்சிலையார் பாடம்.

வ-று : [1]''சென்றீ பெரும நிற்றகைக்குநர் யாரே'' (அகம் 46) எனவும்,

''அட்டிலோலை தொட்டனை நின்மே (நற். 300) எனவும் [2]இவையிரண்டும் தத்தம் குறிப்பிற் பொருள் செய்யும் இடைச் சொல் என்பது ; ஈண்டு எப்பொருளை விளக்கி நின்றனவோ எனின், புறத்துறவு நீர்மைப் பொருள்பட வந்த என்றவாறு.

சேனா

இ-ள் : முன்னிலை வினைச்சொல்முன் வரும் ஈகாரமும் ஏகாரமும் அம்முன்னிலைச் சொற்கேற்ற மெய்யூர்ந்து வரும், எ-று.

உ-ம் : சென்றீ பெரும நிற்றகைக்குநர் யாரே (அகம் 46) 'அட்டி லோலை தொட்டனை நின்மே (நற். 300) என அவை முன்னிலைக்கேற்ற மெய்யூர்ந்து வந்தவாறு கண்டு கொள்க.

முன்னிலை யென்றாரேனும் செய்யென் கிளவியாகிய முன்னிலையென்பது அதிகாரத்தாற் கொள்க.

---

1. சென்றீ...... யாரே—வாயில் வேண்டிச்சென்றதலை மகற்குத் தோழி வாயில் மறுத்தது 'பெருமானே! நின்னைத்தடுப்பார்யார் செல்வாயாக' என்பது பொருள்.

 'அடில்... நின்மே' —பரத்தையிற் பிரிந்து வந்தத லைவன் பாணனை வாயிலாக அனுப்பக் காமக்கி ழத்தி வாயில் மறுத்தது.

2. ஈ, ஏ என்னும் இரண்டு இடைச்சொற்களும், சென்றீ, நின்மே என நின்று, பரத்தமைகொண்டு ஒழுகி வந்த தலைவனிடம் பேசும்போது வந்தனவாதலின் புறத்து நீர்மைப் பொள்பட வந்தன என்றார். புறத்துநீர்மை— பரத்தமையொழுக்கம்.

[3]ஈகாரம் ஒன்றேயாக புக்கீ, உண்டீ, உரைத்தீ, சென்றீ முன்னிலை வினையீற்று வேறுபாட்டிற்கேற்ப மெய்வேறுபட்டு வருதலான் 'அந்நிலை மரபின்மெய்' என்றார். ஏகாரம் மகரம் ஊர்ந்தல்லது வாராது.

இவ்வெழுத்துப்பேறு புணர்ச்சி விகாரம் ஆகலின் ஈண்டும் கூறற்பாற் றன்றெனின், அற்றன்று. 'இயற்பெயர் முன்னர் ஆரைக்கிளவி' (சொல். 270) அப்பெயரோடு ஒற்றுமைப்பட்டு நின்றாற்போல முன்னிலை முன்னர் ஈயும் ஏயும் முன்னிலைச் சொல்லோடு ஒற்றுமைப்பட்டு நிற்றலான், நிலைமொழி வரு மொழி செய்து புணர்க்கப்படாமையான், அம்மெய் [4]புணர்ச்சி விகாரம் எனப்பாட வென்க. அஃதேல், இடையியலுள் 'இயற் பெயர் முன்னர் ஆரைக்கிளவி (சொல். 270) என்பதனோடு இயைய இதனையும் வைக்க எனின், ஆண்டுவைப்பிற் செய்யாய் என்பது செய்யென் கிளவியாய வழியது அவ்வீகார வேகார வரவு என்பது பெறப்படாமையின் ஈண்டு வைத்தார். '[5]செய்யாய்

---

3. ஈகாரம் ஒன்றேயாக—ஈகாரம் ஒன்றே. புறத்துறவு என்பதற்கு அகத்தே விருப்பிருந்தும் புறத்தே வெறுப் புக்காட்டுதல் என்பர் கணேசய்யர். புறத்து + துறவு = புறத்துறவு ஆயிற்றென்பர் அவர்.

4. இயற்சொல்முன் ஆரைக்கிளவி சாத்தனார். சாத்தன் + ஆர் எனப்பிரித்துப்பின் சாத்தனார் எனப்புணர்க்கப் படாது. அதுபோல செல் + ற் + ஈ = சென்றீ எனப் பிரித்துப் புணர்க்கப்படாது. அதனால் இதில் வரும் மெய்யுணர்ச்சி விகாரத்தால் வரும் மெய்யன்று.

5. 'செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்' என்னும் சூத்திரம் வினையியலில் முன்னிலை வினை கூறிய இடத்தில் வைக்கப்பட வேண்டுவது. ஈண்டு வைத்த தன்பயன் யாதெனின் முன்னிலையில் ஈகார ஏகார வரவு செய்யாய் என்பது செய் என் கிளவியாகும் போதுதான் என்பதையுணர்த்த வேண்டி ஈகார ஏகார வரவு கூறுதற்கு முன்னர் செய்யாய என்பது செய் எனவரும் என்பதைக்கூற வேண்டுமாதலின் அது பயன் என்க.

என்னும் முன்னிலை வினைச்சொல்' என்பதனை ஈண்டு வைத்தற்கும் இதுவே பயனாதல் அறிக. முன்னிலைச்சொல் விகாரம் ஒருங்குணர்த்தல் அதற்குப் பயன் எனினும் அமையும். ஈயென்பதோர் இடைச்சொல் உண்டென்பது இச்சூத்திரத்தாற் பெற்றாம். இவையிரண்டும் ஈண்டுப் புறத்துறவு பொருள்பட நின்றன. அசைநிலை யென்பாரும் உளர்.

தெய்

இதுவும் முன்னிலை வினைச் சொற்கண் வருவதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : முன்னிலை வினைச் சொற்கண் ஈகாரமும் [1]மகரம் ஊர்ந்த ஏகாரமும் முன்னிலை மரபினையுடைய மெய்யை யூர்ந்து வரும், எ-று.

முன்னிலை மரபின் மெய்யாவன உண், தின் [2]என்னும் சொற்கண் ஈற்றெழுத்தோடு பால்காட்டும் எழுத்தினைப் புணர்க்க இடையே வரும் மெய்யெழுத்து.

உ-ம் : 'சென்றீ பெரும நிற்றகைக்குநர் யாரே' (அகம் 46)
'அட்டிலோலை தொட்டனை நின்மே' (நற் 300)

'இன்னா துறைவி யரும்படர் களைமே' எனவரும். மேல் ஓதப்பட்ட இ, ஐ, ஆய் அன்றி [3]இவையும் சிறுபான்மை வரும் எனக் கொள்க.

நச்

இது பொருள்தரும் இடைச் சொற்களுள் சில நிலை வேறுபடுமாறு கூறுகின்றது.

இ-ள் : முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்-முன்னிலை வினைச்சொல்முன் வரும் ஈகாரமும் ஏகாரமும், அந்நிலை

---

1. 'மகரம் ஊர்ந்த' என்பது தேவையற்றது.
2. என்னும் சொற்கண்-என்பன போலும் சொற்கண்.
3. இவையும்-ஈகாரமும் ஏகாரமும்.

மரபின்மெய் ஊர்ந்து வருமே-அம்முன்னிலை வினைச் சொற்கள் தாம் நிற்றற்குரிய முறைமையையுடைய மெய்களை ஊர்ந்து வரும், எ-று.

முன்னிலைச் சொல்லாவன செல், நில், புகு, உண், தின், உரை என்றாற்போல வருவனவாம்.

உ-ம்: 'சென்றீ பெரும நிற்றகைக்குநர் யாரோ'' (அகம்46)

'அட்டிலோலை தொட்டனை நின்மே' (நற்.300) என வரும். இவற்றுள் ஈகாரம் புக்கீ, உண்டீ, உரைத்தீ, சென்றீ எனக் க ட த ற வை யூர்ந்துவரும் என்பது தோன்ற 'அந்நிலை மரபின் மெய்' என்றார். ஏகாரம் மகரம் ஊர்ந்துவரும். இவை நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படாமையின், புணர்ச்சி விகாரம் இன்றி முன்னிலைச் சொல் விகாரமாயிற்று.

'உண்பாய்' என்பதற்கு மறையாகிய 'உண்ணாய்' என்னும் சொல் படுத்தல் ஓசையால் 'உண்டலைச் செய்' என்னும் பொருள் தந்து நிற்றலின், 'செய்யென் கிளவி ஆகிடனுடைத்து' (எச்ச-54) என்று சூத்திரம் செய்ததன் பின்னர், 'செல்லுதலைச் செய்' நிற்றலைச் செய்' என இச்சூத்திரத்தின் முதல் நிலைகளும் [1]'செய்' என்னும் வாசகத்தினையே உணர்த்தி நிற்கும் என்பது கருதி 'செய்யென் கிளவியாகிடனுடைத்து' என்பதன் பின் இதனை வைத்தார்.

வெள்

இது முன்னிலை வினைச் சொற்கண் வருவதோர் வேறுபாடு கூறுகின்றது.

இ-ள்: முன்னிலை வினைச்சொற்கண்வரும் ஈகாரமும் ஏகாரமும் அம்முன்னிலை சொற்கேற்ற மெய்யூர்ந்து வரும், எ-று.

உ-ம்: 'சென்றீ பெரும நிற்றகைக்குநர் யாரே'
அட்டிலோலை தொட்டனை நின்மே'

---

1 செய் என்னும் வாசகத்தினையே உணர்த்தி நிற்கும்= சென்றீ, நின்மே என்பன செல்வாய் நிற்பாய் எனச் செய்யாய் என்னும் வாய்பாட்டுப் பொருள்தரினும் 'செய்' என்னும் வாய்பாட்டளவிலேயே அமைந்து அதாவது செல், நில் என்னுமளவிலேயே அமைந்து நிற்கும்.

என முறையே ஈகாரமும் ஏகாரமும் முன்னிலைக் கேற்ற மெய் யூர்ந்து நின்றன.

முன்னிலை யென்றாரேனும் செய்யென் கிளவியாகிய முன்னிலை யென்பது அதிகாரத்தாற் கொள்க. ஈகாரம் ஒன்றே யாயினும் புக்கீ, உண்டீ, உரைத்தீ, சென்றீ என முன்னிலை வினையீற்று வேறுபாட்டிற் கேற்ப அஃது ஊர்ந்து வரும் மெய் வேறுபடுதலால் அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வரும் என்றார்.

ஆ.தி

முன்னிலை வினையின் ஈற்றிலுள்ள ஈ, ஏ மரபால் அவற்றுக்குரிய மெய்யெழுத்தைச் சேர்ந்தே வரும்.

புகு, உண், உரை, செல் என்பன புக்கீ, உண்டீ, உரைத்தீ சென்றீ என வருவது முந்தைநெறி. புகுதி, உண்ணுதி, உரைத்தி, செல்தி—இற்றை நாள் நெறி. அங்கு ஈ என்பது க், த் மெய் மீது நிற்கிறது,

நில்—நின்ம்—நின்மே—இங்கு ஏ ஈற்று'ம்' மீது நிற்கின்றது.

குறிப்பு: உரைத்தி உண்டி சென்றி என்பனவற்றின் ஈற் றெழுத்து நீட்டல் விகாரம் பெற்றது என்பதே நேர்மையாகும். புகுதி என்பதைப் புக்கி என்பது விதி விலக்கிற் கொள்க. புகு-புக்கீ ஆயின் வகு தகு எடு கொடு படு இவற்றுக்கு முறை யென்னை?

## புறனடை

446. கடிசொ லில்லை காலத்துப் படினே. (56)
(கடிசொல் இல்லை காலத்துப் படினே)

ஆ. மொ. இல.

No word is to be discarded if it has gained currency in course of time.

பி. இ. நூ.

நன் 462

பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், மேற்கூறப்பட்ட அவற்றுக்கெல்லாம் பொதுவாயதோர் புறனடையுணர்த்துதல் நுதலிற்று.

வ-று : [1]அழான், புழான் என்பன; அக்காலத்து அவை யுண்மையான் ஆசிரியன் ஓதி முடிவுகூறப்பட்டன.

இனிச்'[2]' சுட்டுச்சினை நீடிய ஐகார வீற்றுப்பெயர் (தொகை. மரபு 17) உறழ்ந்து முடிக என்றான் ஆசிரியன்; அக்காலத்து அவை யுண்மையான் ; இப்பொழுது அவற்றிற்கு உதாரணம் இல்லை பிறவும் அன்ன.

இனி ஆசிரியனால் ஆகா என ஓதப்பட்டன தோன்றுவவுள;

---

1. வரலாற்றில் கூறப்பட்ட இருவகை யுதாரணங்களைக் கொண்டு இச்சூத்திரத்தின் பொருள் இருவகையென்பது புலப்படும். (1) காலத்துப்படின் - இக்கால வழக்கில் இல்லாமல் ஆசிரியன் காலத்து வழக்கில் இருந்திருப்பின், கடிசொல் இல்லை—அவனால் இலக்கணம் கூறப்பட்ட சொல் இக்காலத்தில்லையென்று கடியப்படுதல் இல்லை. (2) காலத்துப்படின்—ஆசிரியன் காலத்து வழக்கில் இல்லாமல் அவ்வகாலங்களில் புதியன வாய்ச் - சொற்கள் தோன்றுமாயின், கடி சொல் இல்லை- ஆசிரியனால் இலக்கணம் கூறப்படாமையால் கடியப்படும் சொற்கள்இல்லை ; ஏற்றுக்கொள்ளப் படவேண்டியனவே. இவ்விரண்டனுள் பின்னதையே யாவரும் கொண்டனர்.

2. சுட்டுச்சினை நீடிய ஐகார ஈற்றுப்பெயர் ஆண்டை, ஈண்டை, ஊண்டை முன்னதை ஒன்றென முடித்தலாற் கொண்டனர்.

அவை [3]ஞண்டு என்றும் [4]நீர் கண்டக என்றும் [5]சம்புசள்ளை என்றும் வரும்.

## சேனா

இ-ள் : [1]இவை தொன்று தொட்டன வல்லன வென்று கடியப்படுஞ் சொல் இல்லை ; அவ்வக் காலத்துத் தோன்றி வழங்கப்படுமாயின், எ-று.

உ-ம் : சம்பு, சள்ளை, சட்டி, சமழ்ப்பு எனவரும். இவை தொன்று தொட்டு வந்தன வாயின், முதலாகாதனவற்றின் கண்

சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே.

அ ஐ ஔவெனும் மூன்றலங் கடையே (எழுத். 62)
என விலக்கார் ஆசிரியர். அதனான் அவை பிற்காலத்துத் தோன்றிய சொல்லேயாம் என்பது.

இஃது எழுவகை வழு வமைதியுள் ஒன்றாகாது ஓர்பாது காவலாதலிற் கிளவியாக்கத் தியைபின்மையான் ஈண்டுக் கூறினார் என்பது.

---

3. ஞகரமெய் அகர உயிருடன் மொழி முதலாதல் இல்லை என ஆசிரியர் கூறினார் (மொழி மரபு 31) அதற்கு மாறாக ஞண்டு வந்தது.

4. நீர் கண்டக—விளங்கவில்லை. காண்க—கண்டக ஆயதோ ?

5. சம்பு. சகரமேய் அகரத்துடன் மொழி முதலாதல் இல்லை என ஆசிரியர் கூறினார் (மொழி மரபு 29) அதற்குமாறாகச் சம்பு முதலியன வந்தன.

1. இவ்வுரை இளம்பூரணரின் இரண்டாவது உரை உதா ரணத்துக்கு ஏற்றது. உரையாளர் யாவரும் இதையே உரைத்தனர்.

இனி ஒருசாரார் உரை : இன்ன அநுவதிக்குங் கால மாமக்காலத்து அவை வழுவன்மை எல்லா ஆசிரியர்க்கும் உடம் பாடாகலின் அதனைத் தழுவிக் கொண்டவாறென்க.

இவை யிரண்டும் இச்சூத்திரத்திற்குப் பொருளாகக்கொள்க.

[2]இனி நன்றென முடித்தலாற் புதியன தோன்றினாற்போலப் பழையன கெடுவனவும் உளவெனக்கொள்க. அவை அழான் புழான் முதலியனவும் எழுத்திற் புணர்ந்த சொற்கள் இக்காலத்து வழங்காதனவுமாம்.

## தெய்

இது வினைச்சொற்கண் வருவதோர் வழுவமைதி யுணர்த்து தல் நுதலிற்று.

இ-ள் [1]மேற் சொல்லப்பட்ட இலக்கணத்தான் வந்தில வெனக்கடியப்படா ; அவ்வினைச் சொற்கள் காலத்தொடு பொருந்தின், எ-று.

காலமாவது இறந்த காலம் நிகழ்காலம் எதிர்காலம். காலப் பொருண்மை மயங்காமல் வரின் ஈறுதிரியினும் அமைக என்ற வாறு.

உ-ம் : [2]மறம்பாடிய பாடினியும்மே
பேருடைய விழுக்கழஞ்சிற்
சீருடைய விழை பெற்றிசினே
இழை பெற்ற பாடினிக்குக்
குரல் புணர்சீர் கொளைவல் பாண்மக னும்மே
என வாங்கு
ஒள்ளழற் புரந்த தாமரை
வெள்ளி நாராற் பூப் பெற்றிகினே (புறம். 91

---

2. இது இளம்பூரணரின் முதல் உரை உதாரணத்துக் குரியது.

1. இவ்வுரை மற்றையோர் உரையின் வேறுபட்டது.

2. பொருள் :

என்பதனுட் [3]படர்க்கை வினைச்சொல் ஈறு திரிந்து நின்றது, காலப் பொருண்மை வழுவாமையின் குற்ற மின்றாயிற்று.

"[4]ஆரம ரலறத் தாக்கித் தேரோடு
அவர்ப்புறங் காணே னாயின் சிறந்த
பேரமர் உண்கண் இவனினும் [5]பிரிக" (புறம். 71)

எனவும், 'முறை திரிந்து மென்கோல் [6]செய்தேனாகுக' (புறம்.71) எனவும் தன்மைக்கண் எதிர்காலம் குறித்த வஞ்சினம் வியங் கோள் வாய்பாட்டான் வந்தன.

[7]பகலே பலருங் காண நாண்விட்
டகல்வயற் படப்பை யவரூர் வினவிச்

---

3 ஈறுதிரிந்தவாறு—பெற்றேன் என்பது இறந்தகாலப் பொருளிலேயே பெற்றிசின் எனத்திரிந்தது.

4. பொருள் "அரிய போரில் பகைவர் அலறும் படித் தாக்கி அவர்களைத் தேரோடி புறமுதுகிடு மாறு செய்யேனாயின், சிறந்த பெரிய மதர்த்த மையுண்ட கண்ணுடைய இவளைப் பிரிவே னாகும்"

5. பிரிவேன் எனவர வேண்டிய தன்மையொருமை வினை முற்றுச் சொல் பிரிக என வியங்கோளாகத் திரிந்து வந்தது.

6. செய்தேன் ஆவேன் எனவரவேண்டிய சொல் செய் தேன் ஆகுக என வியங்கோளாக வந்தது.

7. பொருள் : இடி மின்னல் போலும் தொகுதியுடைய மேகம் பல நாளாகப் பெய்யவில்லையென் றாலும் நீர் குறையாது அருவி ஒலிக்கும் படியான மூங்கில் மிகுந்த அகன்ற இட முடைய வானைத்தோயும் பெரிய மலைநாட் டுக்குரிய தலைவனை நீ எம்மைப் பிரிந்து வந்தமையால் சான்றோன் அல்லன் என்று சொல்லி வருவதற்காகப் பகற்போதிலேயே பலரும் காணும்படி நம் நாணத்தையும் விட்டு அகன்ற வயலையும் தோட்டத்தையும் உடைய அத்தலைவன் ஊர் எங்குளது என்று வருவாரிடம் வினவிப் போவோம் வா தோழி.

சென்மோ வாழி தோழி பன்னாட்
கருவி வானம் பெய்யா தாயினும்
அருவி யார்க்கும் கழைபயில் நனந்தலை
வான்தோய் மாமலைக் கிழவனைச்
சான்றோ யல்லை யென்றனம் வரற்கே (நற். 365)

என்றவழிச் 'செல்வேமோ' எனற் பாலது 'சென்மோ' என வந்தது. பிறவும் அன்ன.

இச் சூத்திரத்திற்குப் பிறவாற்றாற் பொருள் உரைப்பவால் எனின், வினைச் சொல் திரிபு அதிகாரப்பட்டு வருதலானும், காலத்துப்படினே என்றமையானும் பிறவாற்றான் உரைப்பது பொருளன் றென்க.

நச்

இது காலந்தோறும் புதிதாகத் தோன்றிய சொற்களும் கொள்க என்கின்றது.

இ-ள் : கடி சொல் இல்லை — இவை தொன்று தொட்டு வந்தன வல்ல என்று கடியப்படும் சொற்கள் இல்லை, காலத்தொடு படினே — அவ்வக் காலத்துத் தோன்றி நன்மக்கள் வழக்கினுள்ளும் செய்யுளுள்ளும் வழங்கப்பட்டு வருமாயின், எ-று.

உ-ம் : சட்டி, சள்ளை, சமை எனவும்

'சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே'
தையலாய் சமழா துரையென்றதே (சீவக. 1000) எனவும்

சகரம் மொழிக்கு முதலாய் வந்தவாறு காண்க. இவை,

சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அஐ ஔவெனும் மூன்றலங் கடையே (மொழிமரபு. 29)

என ஆசிரியர் விலக்கலின், அக்காலம் மொழிக்கு முதலாகாது விலக்கிய சகரம் பிற்காலத்து வழங்கிய தாயிற்று.

ஞெண்டு (குறுந். 117) என்பது ஞண்டு ஆய்ப் பின்னர் நண்டு என மரீஇயிற்று.

இச்சூத்திரம் 'எதிர் பொருள் உரைத்தல்' என்னும் உத்தியாம். இவ்வாறு பின்னர் வழங்குவன எல்லாவற்றிற்கும் இதுவே விதி.

இனி, ஒன்றென முடித்தலால், புதியன தோன்றினாற்போலப் பழையன கெடுவனவும் உள. அவை, அழன், புழன் முதலிய னவும், எழுத்திற் புணர்ந்த சொற்கள் இக்காலத்து வழங்காத னவு மாம்.

## வெள்

இது காலந்தோறும் புதிதாகத் தோன்றிய சொற்களும் கொள்க என்கின்றது.

இ-ள் : இவை தொன்று தொட்டு வந்தன வல்ல என்று கடியப்படும் சொற்கள் இல்லை; அவ்வக் காலத்துத் தோன்றி நன்மக்கள் வழக்கினுள்ளும் செய்யுளுள்ளும் வழங்கப்பட்டு வருமாயின், எ-று.

உ-ம் : சம்பு, சள்ளை, சட்டி, சமழ்ப்பு எனவரும். இவை தொன்று தொட்டு வழங்கப்பட்டிருக்குமாயின், 'சகரக் கிளவியும் அவற்றோரற்றே, அ ஐ ஔவேனும் மூன்றலங்கடையே' என ஆசிரியர் சூத்திரஞ் செய்யார். எனவே இச்சொற்கள் ஆசிரியர் காலத்திற்குப் பின்தோன்றிய பிற்காலச் சொல்லேயாம்.

## ஆதி*

காலத்தால் நிலைத்த எச்சொல்லையும் கடிவதற்கில்லை. ஏற்க வேண்டியதே.

ரம்பம் ராமன் லகான் லட்டு டப்பி டங்கா யந்திரம் யவனர் முதலியவையும் ; மோட்டார் மீற்றர் கிராம் கில்லோ இன்னும் பெரும்பாலரின் வழக்கிலுள்ள பொருளற்ற எல்லாச் சொற்களும் ஏற்கத் தக்கவையே.

---

* இவர் உரை பொருத்தமில்லாததோடு தவறுடையதுமாம். ரம்பம் ராமன் முதலியன வடசொற்களும் திசைச்சொற்களுமாம். அவற்றைச் செய்யுளீட்டச் சொற்களாக மேற்கொள்ளலாம் என்று முன்னர்க் கூறினார். ஆசிரியர் ஆதலின் இவ்வுரை அதிலடங்கும். காலத்தில் தோன்றும் தமிழ்ச் சொற்கள் கடியப்படுவனவல்ல என்றற்கே ஆசிரியர் இச்சூத்திரம் கூறினார்.

வேற்றகத்துப் பெண் மருமகளாகவரின் நம் அகத்துப் பெண்ணே ஆகிறாள். அவ்வாறே மொழிகளையும் கொள்ளுதல் வேண்டும்.

# செய்யுள் விகாரம்

447. *குறைச்சொற் கிளவி குறைக்கும்வழி யறிதல்
குறைத்தன வாயினு நிறைப்பெய ரியல (57)
(குறைச்சொல் கிளவி குறைக்கும்வழி அறிதல்
குறைத்தன ஆயினும் நிறைப்பெயர் இயல)

ஆ. மொ. இல.

The use of a clipped word must find
its own place.

பி. இ. நூ.

முத்து. ஒ. 118, 119.

ஒருமொழி மூவழிக் குறைதலும் வரையார்
குறைந்தன வாயினும் நிறைந்தன வாகும்.

இளம்

இச்சூத்திரம் என்னுதலுற்றோவெனின், செய்யுட்கு ஆவதோர் முடிபு கூறுதல் நுதலிற்று.

உரை ; [1]முன் செய்யுளீட்டுந் தன்மையானே கடியப்படும்

---

* இதனை இரண்டு சூத்திரமாகக் கொள்வர் பிறர்.

1. "செய்யுள் ஈட்டச் சொற்களாக இயற்சொல் முதலியன கொள்ளப்பட்டபோது சொற்கள் எழுத்துக் குறைபாடுடையன கொள்ளப்படும் எண்பது கூறப்படாமையால், அவை, செய்யுளீட்டும் தன்மையில் நீக்கப்படும் என்பது அமைந்தது. இனி அச்சொற்களை முழுவதும் கிடக்குமாறே செலுத்தாமல் எழுத்துக் குறைத்துச் செலுத்தலும் உண்டு ஒரோவழி. அப்படிச் செய்யுளில் செலுத்தினாலும் முழுச் சொல்லாகவே புலப்படும் செவிக்கு" என்பது இவ்வுரைக் கருத்து. கிடைகடாவாது - சொல்கிடந்தவாறே செலுத்தாமல்.

என்றே யறியக் கிடந்தது ; இனி அவற்றை முழுவதூஉம் கிடைகடாவாது குறைத்துக் கடாவப்படுதலும் உடைய ஒரோவழி, அங்ஙனம் குறைக்கப்பட்டதேனும் குறையாது நின்றவிடத் தியலுமாறே புலப்பட்டு இயலும் செவிக்கு, எ-று.

இனி, அவை குறைக்குமிடத்துத் தலைக்குறைத்தலும், இடைக் குறைத்தலும், கடைக்குறைத்தலும் என மூன்று வகையாற் குறைக்கப்படும் என்பது.

அவற்றுள் தலைக்குறைந்தது, 'மரையிதழ் புரையும் அம்செம் சீறடி' என்பது. ஆண்டுத் தாமரை யெனற்பாலார் 'மரை' என்று தலைக்குறைத்தார் என்பது.

இடைக்குறைத்தல் என்பது, 'வெரிநின் ஓதி வெருக்கண் டன்ன' என்பது. ஆண்டு 'ஓந்தி' யெனற்பாலார் 'ஓதி' என்று இடைக் குறைத்தார் என்பது.

இனிக் கடைக் குறைத்தல் என்பது, 'நீலுண் துகிலிகை கடுப்ப' என்பது. 'நீலம் உண் துகிலிகை' எனற்பாலார் 'நீலுண் துகிலிகை' என்றார் என்பது.

குறைக்கும் வழியறிதல் என்பது குறைக்கைக்குத் தகக் குறைக்கப்படுவது என்றற்கு என்பது.

'நிறைப்பெயரியல்' எனவே இவ்விகாரம் பெயர்க்கண்ணதே என்பது பெற்றாம்.

மற்றுச் 'சென்றார் அன்பில தோழி' என அன்பிலர் எனற் பாலார் 'அன்பில' என்றார், எனவே, வினைச் சொல்லும் குறைக்கப்பட்ட தெனின், [1]'நிறைப்பெயரியல' என்றது

---

1. நிறைப் பெயரியல என்றது பெயர்ச்சொல் என்றவாறு ; ஆதலின் அன்பிலர் என்பது வினைச் சொல்லாதலின் அன்பில எனக் கடைக்குறைத்தல் தவறாகும், என்று கருத்துக் கொள்க. வினைச்சொல் குறைக்கப்படுதலை ஒன்றென முடித்தலாற் கொள்வர் நச்சினார்க்கினியர்.

பெயர்ச்சொல் என்றவாறு. அக்குறைக்கப் பெறுவன அம்மூன் றிடத்துள் எவ்விடத்துக் குறைக்கப் பெறினும் பெறுக.

பெற்றன குறையாதபோது நின்ற தத்தம் நிறைபு நிலைப் பெயரவேயாக வுணரப்படும் என்பார், 'நிறைப் பெயரியல் என்றார் என்பது. இதுவும் ஒரு கருத்து.

சேனா

(குறைச்சொற்...........அறிதல்)

இ-ள் : குறைக்குஞ் சொல்லைக் குறைக்கும் இடமறிந்து குறைக்க, எ-று,

'குறைக்கும் வழியறிக' என்பது ஒரு சொற்குத் தலையும் இடையும் கடையும் என இடம் மூன்றன்றே; அவற்றுள் இன்னுழிக் குறைக்கப்படும் இச்சொல் என்றறிந்து குறைக்க என்றவாறு.

உ-ம் : 'தாமரை' என்பது 'மரையிதழ் புரையும் அஞ்செஞ் சீறடி' எனத் தலைக் கண்ணும், 'ஓந்தி' என்பது 'வேதின வெரிநின் ஓதி முது போத்து' (குறுந். 140) என இடைக் கண்ணும், 'நீலம்' என்பது 'நீலுண் துகிலிகை கடுப்ப' எனக் கடைக் கண்ணும் குறைக்கப்பட்ட வாறும், அவை பிறாண்டுக் குறைத்தற் கேலாமையும் கண்டு கொள்க. குறைத்தலாவது ஒரு சொல்லிற் சிறிது நிற்பச் சிறிது கொடுத்தலாதலின் முழுவதும் கெடுதலாகிய தொகுக்கும் வழித் தொகுத்தலின் வேறாதல் அறிக.

இயற்சொற்றிரிசொல் (சொல். 397) என்னுஞ் சூத்திரம் முதலாயின செய்யுளதிகாரத்துக் கூறாமையானும் ஒரு காரணத் தாற் கூறினாரேனும் செய்யுட்கண் என்று விதந்து கூறாமை யானும் இது வழக்கு முடிபு என்பாரும் உளர்.

(குறைத்தன..............பெயரியல)

இ-ள் : குறைத்தனவாயினும் அவை குறையாது நிறைந்து நின்ற பெயரியல்புடைய, எ-று.

என்றது, முற்கூறிய உதாரணங்கள் தாமரை, ஓந்தி, நீலம் என நிறைந்த பெயர்களில் பொருள்களைத் தந்தே நிற்கும் என்றவாறாம்.

குறைந்த வழியும் நிறைந்த பெயராகக் கொள்க என்றவாறாம். குறைக்கப்படுவன பெயராகலின் 'நிறைப் பெயரியல' என்றார்.

தெய்

(குறைச்சொற்...........அறிதல்)

குறைச்சொல்லாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : யாதானும் ஒரு சொல்லைக் குறைக்க வேண்டு வழிக் குறைக்க வேண்டும் இடம் அறிந்து குறைக்க, எ-று.

அது தலைக்குறைத்தலும் இடைக் குறைத்தலும் கடைக் குறைத்தலும் என மூவகைப்படும்.

உ-ம் : 'மரை யிதழ் புரையும் அஞ்செஞ்சீறடி' என்ற வழித் 'தாமரை' என்பது தலைக் குறைந்து நின்றது. 'அகலிரு விசும்பினா அல்' என்றவழி 'ஆரல்' என்பது இடைக் குறைந்து நின்றது. 'நீலுண்டுகிலிகை' என்றவழி 'நீலம்' என்பது கடைக் குறைந்து நின்றது.

தொகுக்கும்வழித் தொகுத்தல் என்பதனோடி தனிடை வேற்றுமை யென்னை யெனின், ஆண்டு விரிந்து நின்ற சொல் தொகுக்க வேண்டுவழித் தொகுக்குமாறு கூறினார்; ஈண்டு [1]இயற்கையிற் குறைதலிற் குறைச்சொல் என்றார்.

(குறைந்தன...........பெயரியல)

மேலதற்கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : குறைச் சொற்கிளவி குறைந்து நின்ற...வாயினும் பொருள் வேறுபடா; நிறைந்த பெயரியல, எ-று.

உதாரணம்மேற் காட்டப்பட்டன. இவ்விதிமேல் விகாரப் பட்ட சொற்கும் ஒக்கும் என்று கொள்க.

நச்

(குறைச்சொற் .....................அறிதல்)

இது செய்யுள் விகாரம் கூறுகின்றது.

இ-ள் : குறைச்சொற் கிளவி—குறைக்கப்படும் சொல்லாகிய சொற்கள், குறைக்கும்வழி அறிதல்—குறைக்கும் இடம் அறிந்து குறைக்க, எ-று.

'குறைக்கும் வழி அறிதல்' என்றது ஒரு சொற்குத் தலை இடை கடை என இடம் மூன்றே; அவற்றுள் 'இன்னுழிக் குறைக்கப்படும் இச்சொல்' என்று அறிந்து குறைக்க என்றவாறாம்.

உ-ம் : 'மரையிதழ் புரையும் அஞ்செஞ் சீறடி' எனவும், 'வேதின வெரிநின் ஓதி முதுபோத்து' எனவும், 'நீலுண் துகிலிகை கடுப்பப் பலவுடன்' எனவும் மூன்று இடத்தும் குறைந்தவாறு காண்க.

இது ஒரு சொல்லின்கண் சிறிது நிற்பச் சிறிது கெடுத்தல் ஆதலின் முழுவதும் கெடுத்தலாகிய தொகுக்கும் வழித் தொகுத்தலின் வேறாதல் அறிக.

குறைச் சொற்கிளவி எனவே இவ்விதி செய்யுட்கண் என்பது பெறுதும். [1]இது 'பொருளிடையிடுதல்' என்னும் உத்தியாம்.

(குறைத்தன....................பெயரியல்)

இது மேலதற்கு ஓர் புறனடை

இ-ள் : குறைத்தன ஆயினும்—செய்யுளகத்துச் சொற்கள் குறைக்கப்பட்டன ஆயினும், நிறைப்பெயர் இயல - அவை பொருள் உணர்த்தும் வழி நிறைந்து நின்ற பெயரின் இயல்பை யுடையவாம், எ-று.

என்றது முற்கூறிய உதாரணங்கள் தாமரை, ஓந்தி, நீலம் என நிறைந்த பெயரின் பொருள்களைத் தந்தே நிற்கும் என்றவாறாம்.

---

1. இச்சூத்திரத்தை விகாரம் நோக்கி, "அந்நாற் சொல்லும் தொகுக்குங் காலை வலிக்கும் வழி வலித்தலும்" (எச்-7) என்னும் சூத்திரத்தின் பின்வையாது ஈண்டு வைத்தது பொருள் இடையிடுதல் என்னும் உத்தி.

'கண்திரள் முத்தம் கொண்டு வந்து' என்புழி, 'வந்தன்று' என்னும் வினையும், 'சான்றோர் என்பிலர் தோழி' என்புழி 'என்பாரிலர்' என்னும் வினையும் சிறுபான்மை குறைத்தல் தன்னின முடித்தலால் கொள்க.

வெள்

(குறைச்சொற்........அறிதல்)

இது செய்யுள் விகாரங் கூறுகின்றது.

இ-ள் : குறைக்குஞ் சொல்லைக் குறைக்குமிடம் அறிந்து குறைக்க, எ-று.

குறைக்கும் வழியறிதல் என்றது, ஒரு சொற்கு முதல் இடை கடையென மூன்றிடத்தினும். இச்சொல் இன்ன இடத்துக் குறைக்கத் தக்கது என அறிந்து குறைக்க என்றவாறு.

உ-ம் : 'தாமரை' என்பது 'மரையிதழ் புரையும் அஞ்செஞ் சீறடி' என முதலிலும், 'ஓந்தி' என்பது 'வேதின வெரிநின் ஓதி முது போத்து' என இடையிலும், நீலம் என்பது 'நீலுண் துகிலிகை' எனக்கடையிலும்குறைக்கப்பட்டவாறும்.அச்சொற்கள் அவ்விடங்களிலன்றிப் பிறவிடங்களிற் குறைத்தற்கு ஏலாமையும் கண்டு கொள்க...........

(குறைத்தன...........பெயரியல)

இதுமேலதற்கோர் புறனடை

இ-ள் : செய்யுளகத்துச் சொற்கள் குறைக்கப்பட்டன வாயினும் அவை பொருளுணர்த்துமிடத்து நிறைந்து நின்ற பெயரின் இயல்புடையனவாம், எ-று.

என்றது, முற்கூறிய உதாரணங்கள் மரை, ஓதி, நீல் எனக் குறைக்கப்பட்டன வாயினும் முறையே தாமரை, ஓந்தி, நீலம் என நிறைந்த பெயர்களின் பொருள்களைத் தந்தே நிற்றல் காணலாம். இவ்வாறு செய்யுளிற் குறைக்கப்படுவன பெயரே யாகலின் 'நிறைப் பெயரியல' என்றார்.

ஆதி

(குறைச்சொற்...........அறிதல்)

குறைபடு சொற்களைக் குறைக்கும்வழி அறிந்து குறைக்க.

தாமரை மலர்—மரைமலர்—முதற்குறை
ஓந்தி ஒன்று—ஓதி ஒன்று—இடைக்குறை.
நீலம் விளங்கு—நீல் விளங்கு—கடைக்குறை.

ஆகாயம்—காயம் } முதற் குறை.
விமானம்—மானம் }

(குறைத்தன...........பெயரியல)

எழுத்துக் குறைந்திருப்பினும் அது நிறைந்த சொல்லின் பொருள்தரும்.

# இடைச்சொல் வேற்றுமைச்சொல்

**448. இடைச்சொ லெல்லாம் வேற்றுமைச் சொல்லே(58)**

(இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே)

ஆ. மொ. இல.

All morphemes are capable of differenliating other words.

பி. இ. நா.

இ. வி. 359 } தொல் சூத்திரமே.
முத்து. ஒ. 120 }

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இடைச்சொல் எனப் பட்டன ; அவற்றுக்கட் படுவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : முன்னர் வேற்றுமை யோத்தினுள் ஐ, ஒடு, கு இன், அது, கண் என்னும் உருபுகளையன்றே வேற்றுமைச் சொல் என்று உணர்த்தியது ; இனி அவையன்றி ஒழிந்த இடைச்சொற்களையும் வேற்றுமைச்சொல் என அமையும், எ-று.

என்னை? அவையும் தாமாக நில்லா; பெயரும் தொழிலும் அடைந்து நின்றும் அவற்றையே [1]பொருள் வேற்றுமைப்படுக்கும் ஆகலின் என்பது.

சேனா

இ-ள் : பிறிதோர் சொல்லை வேறுபடுப்பனவும் பிறிதோர் சொல்லை வேறுபடுக்கப்படுவனவும் எனச் சொல் இருவகைப் படும்; பிறிதோர் சொல்லான் வேறுபடுத்தலாவது விசேடித்தல். பிறிதோர் சொல்லான் வேறுபடுக்கப்படுதலாவது விசேடிக்கப் படுதல். இடைச்சொல் எல்லாம் பிறிதோர் சொல்லை வேறு படுக்குஞ் சொல்லாம், எ-று.

வேறுபடுத்தலும் வேறுபடுக்கப்படுதலும் ஆகிய இரண்டும் பொதுவகையான் எல்லாச் சொற்கும் கூறாமை யெய்துமாகலின் இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச்சொல் என்றதனான், இவைவேறுபடுக்குஞ் சொல்லாத லல்லது ஒரு ஞான்றும் வேறு படுக்கப்படுஞ் சொல்லாகா வென நியமித்தவாறாம். அவை அன்னவாதல் இடையியலுள் ஓதப்பட்ட இடைச்சொல் வழக்கினுள்ளும் செய்யுளுள்ளும் வரும்வழிக் கண்டு கொள்க.

வேற்றுமைச் சொல் வேற்றுமையைச் செய்யுஞ் சொல்என விரியும். வேற்றுமை யெனினும் வேறுபாடு எனினும் ஒக்கும்.

இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லாயினும் அவற்றுள் [1]ஒருசாரனவற்றை வேற்றுமைச் சொல் என்று ஆள்ப; இயற்சொல்லுள் ஒருசாரனவற்றை [2]இயற்பெயர் என்றாற்போல் என்பது; இதுவும் ஓர் நயம்.

தெய்

இடைச் சொற்கண் எஞ்சிநின்றதோர் பொருள் நிகழ்ச்சி உணர்த்துதல் நுதலிற்று.

---

1. பொருள் வேற்றுமைப்படுக்கும்-பொருளால் வேறுபடுத்தும்.

1. ஒருசாரன-வேற்றுமையுருபுகள்.

2. இயற்பெயர்-வழங்குதற்காக மக்கட்கிடப்படும் பெயர்.

இ-ள் : இடைச்சொற்கள் எல்லாம் வேற்றுமைச் சொல்லாம், எ-று.

என்பது என் சொன்னவாறோவெனின், பெயரும், வினையும் போலப் பொருளை நேர்காட்டாது, ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்னும் வேற்றுமையுருபுபோல, வேறு பட்ட பொருளைக் குறித்து நிற்றலின், இடைச்சொல்லும் பொருள் வேறுபடுக்குஞ் சொல் எனப்படும்; பொருள் உணர்த்துஞ் சொல் எனப்படா. மன் என்பது கழிவினும், ஆக்கத்தினும், ஒழியிசையினும் வந்த வழித் தான் இடைப் பெற்று நிலை மொழியின் வேறுபட்ட பொருளைக் குறித்து நின்றதல்லது [3]அப் பொருட்கு வாசகமன்றி நின்றமை கண்டு கொள்க. பிறவுமன்ன.

நச்

இது விசேடிக்குஞ்சொல் இவ்வாறு நிற்கும் என்கின்றது.

இ-ள் : வேற்றுமைச்சொல் எல்லாம்-முடிக்கும் சொல்லை விசேடித்து நிற்கும் சொற்கள் எல்லாம், இடைச்சொல்-முடிக்கப்படும் சொற்கும் முடிக்கும் சொற்கும் நடுவே வரும் சொல்லாய் நிற்கும், எ-று.

வேற்றுமைச் சொல் 'வேறுபாட்டினைச் செய்யும் சொல்' என விரியும். எழுவாயை முடிக்கும், பயனிலைக்கும், முற்றை முடிக்கும் பெயரிற்கும், வினையெச்சத்தை முடிக்கும் வினைக்கும் பெயரெச்சங்களை முடிக்கும் பெயர்கட்கும் இடையே வருதலின் இடைச்சொல் என்றார்.

உ-ம் : [1]"கண்ணி கார்நறுங் கொன்றை

..............................

3. அப்பொருட்கு வாசகமன்றி நின்றமை—மன் என்பது கழிவு ஆக்கம் முதலிய பொருட்கு உரிய வாசகம் (சொல்) அல்லாமல், தான் வரும் இடத்தில் அப் பொருட்கருத்தைத் தருமாறு நிற்றல்.

1. பொருள் : கரிய நறுமணமுள்ள கொன்றையே மாலை ............ வாகனம் தூயவெண்மையான காளையே.

ஊர்தி வால்வெள் ளேறே'' (புறம். 1).

என்புழி, கொன்றையையும் ஏற்றையும் இடைவந்த சொற்கள் விசேடித்து வந்தன.

'ஈர்ந்தையோனே பாண்பசிப் பகைஞன்' (புறம் 180)

என்புழி 'ஈர்ந்தையோன்' என்னும் முற்றிற்கு முடிபாகிய 'பகைஞன்' என்னும் பெயரை இடையில் நின்ற சொல் விசேடித்து நின்றது.

''இழிபிறப்பினோன் ஈயப்பெற்று
நிலங்கல னாக விலங்குபலி மிசையும்'' (புறம்.363)

என்புழி 'பெற்று' என்னும் செய்தென் எச்சத்திற்கு முடிபாகிய 'மிசையும்' என்னும் வினையை இடைநின்ற சொற்கள் விசேடித்து நின்றன.

ஏந்தெழில் மழைக்கண் இளையோன் மடுப்பத்
தேம்பாய் தேறல் நீசிறி துணினே

என்புழி 'மடுப்ப' என்னும் செயவென் எச்சத்திற்கு முடிபாகிய 'உணின்' என்னும் வினையை இடைநின்ற சொற்கள் விசேடித்து நின்றன.

'வெற்பர் ஆடும் வெற்புச்சேர் இருக்கை
பயம்பிற் கொள்ளாப் பைங்கண் யானை'

என்புழி, செய்யும் என்னும் பெயரெச்சத்திற்கும் அதன் மறைக்கும் முடிபாகிய இருக்கையையும் யானையையும் இடைவந்த சொற்கள் விசேடித்து நின்றன.

'குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி' (அகம்.4)
'நின்னொடு தூக்கிய வெண்வேற் செழிய' (புறம்.19)

என்புழி, செய்தவென்னும் பெரெச்சங்கட்கு முடிபாகிய புரவியையும் செழியனையும் இடைவரும் சொற்கள் விசேடித்து நின்றன. சான்றோர் செய்யுட்கண் இங்ஙனம் அச்சொற்களை விசேடித்து வருதல் பெரும்பான்மை யென்று உணர்க. பண்பும் உடைமையும் முதலிய இடைவந்தால் அவை விசேடித்து நிற்குமாறும் உணர்க.

இனி, 'இடைச்சொற்கள் எல்லாம் தாம் அடைந்த பெயர் வினைகளின் பொருள்களை வேறுபடுத்தி நிற்றலின், வேற்றுமைச்சொல் என்று சொல்லப்படும்' என்று பொருள் கூறினாரால் உரையாசிரியர் எனின், அவை வேறுபாடு செய்தல் அவ்வோத்திற் கூறிய சூத்திரங்களின் பொருளான் ஆண்டுப் பெறப்படுதலின் ஈண்டுக் கூறல் 'கூறியது கூறல்' ஆம் ஆகலின், அது பொருந்தா தென்க. 'கூரியதோர் வாள்மன்' என்புழிக் திட்பம் இன்று என்பது வாளை வேறுபடுத்தினவாறு அச்சூத்திரத்தால் பெற்றாம். பிறவற்றையும் இவ்வாறே கொள்க.

இனிச் சேனா வரையர், 'இடைச் சொல் எல்லாம் விசேடித்து நிற்கும்' என்றாரால் எனின், 'கொன்னூர் துஞ்சினும்' (குறுந்.138) 'கொன்னே கழிந்தன் றிளமையும்' (நாலடி 55) என்றாற் போல்வன சில இடைச்சொற்கள் விசேடித்தல் அன்றி, எல்லா இடைச்சொற்களும் விசேடித்து நில்லாமை ஆண்டு அவர் காட்டிய உதாரணங்களை நோக்கி யுணர்க.

வெள்

இஃது இடைச்சொற்கண் எஞ்சி நின்றதோர் பொருளுணர்ச்சி கூறுகின்றது.

இ-ள் : இடைச்சொற்கள் எல்லாம் தாம் அடைந்த பெயர் வினைகளின் பொருள்களை வேறு படுத்தி நிற்றலின் வேற்றுமைச் சொல்லாம்; எனவே, தாமாக நின்று பொருளுணர்த்துஞ் சொல்லாகா, எ-று.

என்றது, இடைச்சொற்கள் எல்லாம் பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் போலப் பொருளையும் தொழிலையும் தாமாக நேரே யுணர்த்தாது ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்னும் வேற்றுமை யுருபுபோலச் சொற்பொருளை வேறுபடுத்துவன என்பதாம்.

வேற்றுமை—வேறுபாடு; வேற்றுமைச்சொல்-வேற்றுமையைச் செய்யுஞ்சொல்

மன் என்னும் இடைச்சொல் கழிவினும் ஆக்கத்தினும் ஒழியிசையினும் வந்தவழித்தான் இடை நின்று நிலை மொழியின்

பொருள் வேறுபாட்டினைக்குறித்து நின்றதல்லது, தானே அப் பொருளை உணர்த்தாமை கண்டு கொள்க.

**ஆதி**

இடைச்சொற்கள் எல்லாம் அவை சேர்ந்தவற்றின் பொருளை வேறுபடுத்தும் சொற்களாம்.

வீடு—பெயர்ச்சொல். ஐ இடைச்சொல் சேர்ந்து வீட்டை வாங்கினான், இடித்தான், அடைந்தான், விற்றான் எனப் பல பொருள் வேறுபடுத்தல் காண்க.

வீட்டுக்கு—கு—போனான் என்று குறிக்கிறது. வீடும்—உம்- வீடும் கோட்டமும் இவ்வாறு எல்லா இடைச்சொற்களும் வெவ் வேறு பொருள் கற்பிப்பனவாம்.

## உரிச்சொல் வேற்றுமைச்சொல்

**449. உரிச்சொன் மருங்கினு மூரியவை யுரிய (59)**
(உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய)

ஆ. மொ. இல.

In the group of sementemes also, there are some which serve as differentiating words.

பி. இ. நா.

இ. வி 360 } தொல். சூத்திரமே.
முத்து. ஒ. 121 }

**இளம்**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், உரிச்சொற்கள் திறத்துப் படுவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச்சொல்லாதற்கு எவ்வாறு உரியவாயினமன், அவ்வுரிமை உரிச்சொற்கண்ணும் எய்தும், எ-று.

உம்மை இறந்தது தழீஇயிற்று. 'உரிச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்' என்றது மேற்கூறிய இடைச்சொல்லே போல உரிச்சொல்லும் தாமாக நில்லா ; பெயரும் வினையும் அடைந்து பொருள் வேறுபடுதலுடைய; அது நோக்கியென்பது. இருதலையாக அவற்றை வேற்றுமைச்சொல் என்றவாறு.

## சேனா

இ-ள் : உரிச்சொல்லிடத்தும் வேறுபடுக்குஞ் சொல்லாதற்கும் உரியன உரியவாம் ; எல்லாம் உரியவாகா, எ-று. எனவே, உரிச்சொல்லுள் வேறுபடுத்தும் வேறுபடுக்கப்பட்டும் இருநிலைமையும் உடையவாய் வருவனவே பெரும்பான்மை யென்பதாம்.

வேறுபடுக்குஞ் சொல்லாவன உறு, தவ, நனி என்னுந் தொடக்கத்தன. இருநிலைமையும் உடையன ; குரு, கெழு, செல்லல், இன்னல் என்னுந் தொடக்கத்தன. உறுபொருள், தவப்பல, நனிசேய்த்து, ஏகல்லடுக்கம் என இவை ஒன்றை விசேடித் தல்லது வாராமையும், குருமணி விளங்கு குரு, கேழ் கிளரகலம் செங்கேழ், செல்லல் நோய் அருஞ்செல்லல், இன்னற்குறிப்பு பெரியரின்னல் என இவை ஒன்றனை விசேடித்தும் விசேடிக்கப்பட்டும் இருநிலைமையு முடையவாய் வருமாறும், வழக்குஞ் செய்யுளு நோக்கிக் கண்டு கொள்க. குரு விளங்கிற்று, செல்லல்தீர எனத் தாமே நின்று வினை கொள்வன விசேடிக்கப்பட்டுந் தன்மையுடைய வாதலின் விசேடிக்கப் படும் சொல்லாம். பிறவும் விசேடித்தல்லது வாராதனவும் விசேடித்தும் விசேடியாதும் வருவனவும் வழக்கும் செய்யுளும் நோக்கி யுணர்க.

வேறு படுக்குஞ் சொல்லேயாவன இவையெனத் தொகுத் துணர்த்தற்கும் 'உரிச்சொல் மருங்கினும் உரியவை யுரிய' எனச் சூத்திரம் சுருங்குதற்கும் இடையியலுள்ளும் உரியியலுள்ளும் வையாது இரண்டு சூத்திரத்தையும் ஈண்டு வைத்தார்.

## தெய்

உரிச்சொல் மருங்கினும் இடைநின்று பொருளுணர்த்தும் சொல் உள என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : உரிச்சொல்லிடத்தும் வேற்றுமை யுருபு போல அப்பொருள் வேறு படுத்தற்குரியவை உரியவாம், எ-று.

அது 'நனி' என்பது உறுவும், தவவும் போல மிகுதி குறித்துவரினும் உறுவன, தவவன எனப்பொருளுணர வாராது, இடைச்சொற்போலக் குறிப்பினான் மிகுதி யுணர்த்துதலின், இதுவும் பொருள் வேறுபடுக்குஞ் சொல்லாயின் அல்லது பொருளுணர வாராமை கண்டு கொள்க. பிறவும் அன்ன.

நச்

இஃது உரிச்சொற்கும் விசேடித்தல் உண்டு என்கின்றது.

இ-ள் : உரிச்சொல் மருங்கினும்—உரிச்சொல்லிடத்தும், உரியவை உரிய—விசேடிக்குஞ் சொல்லாதற்கு உரியன உரிய வாம், எ-று.

எல்லாம் உரியன ஆகா எனவே, உரிச்சொற்கள் விசேடித்தும் விசேடிக்கப்பட்டும் நிற்பனவுள என்பது பெற்றாம்.

உ-ம் : உறுகால், தவப்பல, நனிசேய்த்து, ஏகல்லடுக்கம் என்பன ஒன்றை விசேடித்தல்லது வாரா.

குருமணி, விளங்குகுரு
கேழ்கிளர் அகலம், செங்கேழ்
செல்லல் நோய், அருஞ் செல்லல்
இன்னற் குறிப்பு, பேரின்னல்

இவை தாம் ஒன்றனை விசேடித்தும், பிற தம்மை விசேடிக்கப் பட்டும் நின்றன.

குரு விளங்கிற்று, செல்லல் தீர்க எனத்தாமே நின்று வினை கொள்வன விசேடிக்கப்படும் தன்மையுடையன என்று உணர்க. பிறவும் இவ்வாறு வருவன உளவேல் கண்டு கொள்க.

மருங்கினும் என்ற உம்மையை எச்ச உம்மையாக்கி இடைச் சொற்களினும் விசேடித்து நிற்றற்கு உரியன சிலவுள ; எல்லாம் உரியன ஆகா எனப்பொருள் உரைத்து

'கொன்னூர் துஞ்சினும்' (குறுந். 188)
'கொன் முனை யிரவூர் போல' (குறுந். 91)
'கொன்னே கழிந்தன் றிளமை' (நாலடி. 55)

என்றாற்போல வருவன பிறவும் கொள்க.

முன்னிற்குஞ் சூத்திரத்தால் கூறிய விசேடித்தல் உரிச்சொற்கும் இடைச் சொற்கும் ஏற்றலின் அவற்றையும் ஈண்டுக் கூறினார் விசேடித்தல் இடைச்சொற்குச் சிறுபான்மை யாகலின் அதை உம்மையால் தழீஇயினார்.

## வெள்

இஃது உரிச்சொற்கண் எஞ்சி நின்றதோர் பொருளுணர்ச்சி கூறுகின்றது.

இ-ள் : உரிச்சொற்கண்ணும் வேறுபடுத்துஞ் சொல்லாதற்கு உரியன உரியவாம் ; எல்லாம் உரியவாகா, எ-று.

எனவே, உரிச்சொல்லுள் வேறுபடுத்தும் வேறு படுக்கப் பட்டும் இருநிலைமையும் உடையவாய் வருவனவே பெரும் பான்மை என்பர் சேனாவரையர்.

உ-ம் : உறுபொருள், தவப்பல, நனிசேய்த்து, ஏ கல் லடுக்கம் என முறையே, உறு, தவ, நனி, ஏ எனவரும் உரிச் சொற்கள் வேறுபடுக்குஞ் சொல்லேயாய் வந்தன. குருமணி விளங்குகுரு, கேழ்கிளரகலம் செங்கேழ், செல்லல் நோய் அருஞ் சொல்லல், இன்னற்குறிப்பு பேரின்னல் என்புழி முறையே குரு. கெழு, செல்லல், இன்னல் என்பன ஒன்றனை விசேடித்தும் ஒன்றனால் விசேடிக்கப்பட்டும் இருநிலைமையும் உடையவாய் வந்தன.

## ஆதி

உரிச்சொற்களிலும் வேறுபட்ட பொருள்தரற்கு உரியவை சில.

இளங்கன்று—நாகிளங்கன்று—நாகு என்னும் உரிச்சொல் மிக இளமை எனக்குறித்து நிற்கின்றது.

பலபேசினான்—தவப்பலபேசினான்—மிக அதிகமாகப் பேசினான் என்றுகுறித்தது.

பெருஞ்செல்வம்—விழுப்பெருஞ் செல்வம்—மிக அதிகமான செல்வம் எனக்குறிக்கின்றது.

மாப்புகழ் —பெரும்புகழ்—உறுமாபுகழ்—மிகப்பெரும்புகழ் இவ்வாறு உரிச்சொற்கள் பொருளை வேறுபடுத்துவது காண்க.

# வினையெச்சம் வேறுபடுதல்

**450. வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய (60)**

ஆ. மொ. இல.

The adverbial participle also has different grammatical features.

பி. இ. நூ.

நன் 346

சொல்திரியினும் பொருள்திருயா வினைக்குறை

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், முன்னர் வினையியலுள் வினையெச்சம் என்று ஓதப்பட்டன வற்றுக்கண் ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: வினையெச்சம் என்று கூறப்பட்டன செய்யுட்கண் தாம் வந்து முடிபு கொண்டதன் தன்மையாலே நில்லா; நின்றாற் பொருளிசையா வாதலால் ஓர் எச்சந் திரிந்து ஓர் எச்சமாகியும் நிற்கும் இலக்கணத்தினை யுடைய, எ-று.

வ-று: ஞாயிறுபட்டு வந்தான்; ஞாயிறு படவந்தான் என்பதுமன் ஆகற்பாலது. படவென்பது செயவென் எச்சம்; அது திரிந்து பட்டு என்னும் செய்து என் எச்சமாகி நின்றதென்பது. 'கோழி கூவிப்புலர்ந்தது என்பதூஉம் செயவென் எச்சம் செய்தென் எச்சமாகித் திரிந்து நின்றது என்பீது.

அங்ஙனம் நின்றவேனும் அவற்றைச் செயவென் எச்சமாக வுணர்ந்து கொளல் வேண்டும். அல்லாக்கால் சொல் முடிபு எய்தாது. என்னை? [1]'ஞாயிறுபட்டு' என்றக்கால் 'வந்தான்' என்றலும் முடியற்பாலது, பின்னும் ஞாயிற்றின்மேல் வினை கொண்டு முடியற்பாற்று. 'முதனிலை மூன்றும் முதனிலை முடிபின' (வினை. 31) என்று உரைத்தாராகலின் என்பது. 'கோவிகூவப் புலர்ந்தது' என்பதற்கும் அஃது ஒக்கும்.

இனி, 'மோயினளுயிர்த்த காலை' (அகம் 5) என்புழி 'மோந்து' என்னும் வினையெச்சம் 'மோயினள்' என முற்றுச் சொல்வாய்பாட்டாற் றிரிந்து நின்றதேனும் வினையெச்சமே யாகல் வேண்டும். பிறவுமன்ன.

பிறஎன்றதனால்,

ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
வாரி விளங்குன்றிக் கால் (குறள். 14)

என்பது 'குன்றியக்கால்' என்னும் வினையெச்சம் 'குன்றிக்கால்' என நின்றது.

சேனா

இ-ள் : மேற்கூறப்பட்ட வினையெச்சமும் வேறுபட்ட பல இலக்கணத்தை யுடைய, எ-று.

அவைகளாவன : 'உரற்கால்யானை' [1]ஒடித்துண் டெஞ்

1. ஞாயிறுபட்டு வந்தான் என்றக்கால்.........முடியற்பாற்று. இத்தொடர் சரியில்லை. ''வந்தான் என்றது ஒருவன் வினை; பட்டு என்றது ஞாயிற்றின் வினை. பட்டு என்றது செய்து என்வாய் பாட்டு எச்சம். அது தன் கருத்தாவின் வினையே கொண்டு முடிய வேண்டும். இங்கு வந்தான் என்ற பிறகருத்தா வினை கொண்டது. அதனால் முறையாக முடியவில்லை. அதனால் பட்டு என்பதைப் படஎன, கொள்ளல் வேண்டும் என்ற கருத்தில் அத்தொடர் அமைந்தது.

1. உண்டு என்பது யானையின் தொழில் உணர்த்தும் வினையெச்சம் எஞ்சிய என்பது யானை ஒடித்து உண்ண எஞ்சிய மரத்தின் தொழில்

சியயா' (குறுந் 232) எனவும், [2]'ஞாயிறுபட்டு வந்தான்' எனவும் செய்தென் எச்சம் வினைமுதல் கொள்ளாது பிறிதின் வினை கோடலும், அஃது ஈறு திரிதலும்;

[3]'மோயினள் உயிர்த்த காலை' (அகம். 5) எனவும், 'கண்ணியன் வில்லன் வரும் (குறிஞ்சிக்கலி 1) எனவும் முற்றுச்சொல் லது திரிபாய் வருதலும்;

[4]'ஓடி வந்தான் விரைந்து போயினான்' எனவும், [5]'வெய்ய சிறிய மிழற்றுஞ் செவ்வாய்' எனவும் [6]'செல்வன் தெரிகிற்பான், புதுவதனியன்ற அணியன்' (அகம் 66) எனவும் தம்மை முடிக்கும்

---

2. படுதல் ஞாயிற்றின் வினை. வருதல் ஒருவன் வினை.

3. மோயினள் என்னும் முற்று. மோந்து என்ற வினையெச்சப் பொருளில் திரிந்து வந்தது. கண்ணியன் வில்லன் என்னும் முற்றுகள் கண்ணியனாய் வில்லனாய் என எச்சப் பொருளில் திரிந்து வந்தன.

4. வந்தான் என்பது முடிக்குஞ்சொல். வந்தது எப்படி என விசேடிப்பது ஓடி. போயினான் முடிக்கும் சொல். எப்படி போயினான் என விசேடிப்பது விரைந்து. ஓடி விரைந்து என்பன தொழிலால் விசேடித்தன.

5. மிழற்றும் என்பது முடிக்குஞ் சொல். எப்படி மிழற்றும் என விசேடிப்பன வெய்ய சிறிய என்பன. அவை பண்பு. (வெய்யனவாய்ச் சிறியனவாய் மிழற்றும் செவ்வாய் என்க)

6. தெரிகிற்பான் குறிப்பு வினைமுற்று, முடிக்குஞ்சொல் அதை விசேடிப்பது செல்வன் என்பது. செல்வன் என்பதன் பொருள் குறிப்பாகவே உணரப்படுவது. அதனால் அது குறிப்பாக விசேடித்ததாம். புதுவதன் என்பதன் பொருளும் குறிப்பாகவே உணரப்படுவது. அணியன் என்பது முடிக்குஞ் சொல். அது எத்தகையது என்பதைப் புதுவது என்னும் சொல் தன்குறிப்புப் பொருளால் விசேடித்தது.

வினைக்கட் கிடந்த தொழிலானும் பண்பானும் குறிப்பானும் தெரிநிலை வினையும் குறிப்பு வினையுமாய் முடிக்கும் சொல்லை விசேடித்தலும் பிறவுமாம். செய்தென் எச்சத்து ஈறுதிரிதல் வினையியலுட் (சொல் 228) காட்டிப் போந்தாம்.

[7]'பெருங்கை யற்றவென் புலம்பு முந்துறுத்து' என்புழிப் 'பெரும்' என்பதனை ஒருசாரார் வினையெச்சவாய்பா டென்ப. ஒருசாரார் வினைச் சொற்பற்றி நின்றதோர் உரிச்சொல் என்ப.

[8]இடைச்சொல்லும் உரிச்சொல்லும் மேற்கூறப்பட்ட இலக்கண மேயன்றிப்பிறவிலக்கணமும் உடைய என்பதுணர்த்தினார்; இனி அவையேயன்றி வினையெஞ்சு கிளவியும் வேறு பலவிலக்கணத் தன என்பதுபட நின்றமையான் உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. [9]அவ்விலக்கணம் ஓரியலவன்றித் திரிதலும் வேறு பொருள் உணர்த்துதலும் விசேடித்தலு மாகிய வேற்றுமை யுடைய வாகலின் 'வேறுபல் குறிய' என்றார்.

வினை யெச்சத்துள் [10]விசேடித்தே நிற்பனவும் உள என்ப தூஉம் உணர்த்துகின்றா ராகலின் இதனை வினையியலுள்வை யாது ஈண்டு விசேடிக்குஞ்சொல் உணர்த்துவனவற்றோடு வைத்தார்.

---

7. பெரும் என்பது கையற்ற என்ற வினையுடன் முடிவ தால் வினையெச்சவாய்பாடு என்பர். உரிச்சொல் என்பார் கூற்றே நன்று.

8. இடைச்சொல் எல்லாம் (59) உரிச்சொல் மருங்கினும் (60) 4ன்னும் சூத்திரங்களில் கூறப்பட்டன.

9. திரிதல்-மோயினள்; வெய்ய சிறிய மிழற்றும் என்பதில் வெய்ய என்பது விரும்பத்தகாத என்று வேறு பொருளை யும் சிறிய என்பது சுருக்கமாக என்று வேறு பொருளை யும் தந்தன; விசேடித்தல் ஓடி விரைந்து முதலியவற்றிற் காண்க.

10. உண்டுவந்தான் என்றால் உண்ணல் வருதல் என இருதொழில் காணலாம். ஓடி வந்தான் என்பதில் ஓடுதலும் வருதலும் என இருதொழில் இல்லாமல் ஓடி என்பது வந்தது எப்படி என விசேடிக்க ஒரு தொழிலே இருத்தல் காண்க.

'பெயர்த்தனென் முயங்க' (குறுந்-84) என்பது முதலாயின செய்தென் எச்சம் முற்றாய்த் திரிந்தன வென்றும், 'ஓடித்துண்டு எஞ்சிய' என்பது முதலாயின செயவென் எச்சம் செய்தென் எச்சமாய்த் திரிந்தன என்றும் முன்னர் உரைத்தாரால் உரையாசிரியர் எனின், [11]'பெயர்த்தனென் முயங்க' என்பது முதலாயின எச்சத் திரிபாயின் எச்சப் பொருள் உணர்த்துவதல்லது இடமும் பாலும் உணர்த்தற்பால வல்ல; எச்சப் பொருண்மை

---

11\. 1. பெயர்த்து எனும் எச்சம் பெயர்தனென் எனமுற்றாய்த் திரிந்தது என்பது உரையாசிரியர் கொள்கை. சேனாவரையர் அதைமறுக்குமாறு :-

எச்சம்என்பது மூன்றிடத்துக்கும் ஐந்து பாலுக்கும்பொது. எனவே இடம்பால் உணர்த்தாது. முற்றுஉணர்த்தும் பெயர்த்து என்பது இடம்பால் உணர்த்த வில்லை. பெயர்தனென் என்பது தன்மையிடமும் பெண்பாலும் உணர்த்தும் அதனால் எச்சம் திரிந்தது என்னலாகாது. முற்றே எச்சப் பொருளில் திரிந்து வந்தது என்னல் வேண்டும்.

2 முற்று பெயர் கொண்டு முடியும்; பெயர்த்தனேன் என்பது முயங்க என வினைகொண்டு முடிந்தது. அதனால் சொல்முடிபு கொண்டு பெயர்த்து என்னும் எச்சமே பெயர்த்தனென் என முற்றாய்த் திரிந்தது என்னலாம் எனக் கூறுவார்க்கு மறுப்பு :- மார் ஈற்று வினைமுற்று வினையொடு முடிந்தாலும் வினைமுற்றே என்று ஆகுமே தவிர அது எச்சமாகாது. வினையொடு முடியும் மார் ஈற்று வினைமுற்றை எச்சத் திரிபாகக் கொள்ளாமைபோல வினைகொண்டு முடியும் பெயர்த்தனென் என்பதையும் எச்சத் திரிபாகக் கொள்ளல் கூடாது.

3\. பெயர்த்து என்பது பெயர்த்தனன் திரிந்தது என்றால் கண்ணியன் வில்லன் என்பன அவற்றின் திரிபு என வினவின் அவற்றிற்குரிய வினையெச்சங்கள் இல்லாமை முற்றே எச்சப் பொருளில் திரியும் என்னலாயேன்றி எச்சம் முற்றாய்த்திரியும் என்னலாகாது.

யாவது மூன்றிடத்திற்கும் ஐந்து பாற்கும் பொதுவாகிய வினை நிகழ்ச்சி யன்றே? அவ்வாறன்றி முற்றுச் சொற்கு ஓதிய ஈற்றவாய் இடமும் பாலும் உணர்த்தலின் அவை முற்றுத் திரிசொல் எனவே படும். சொல்நிலை யுணர்ந்து வினைகோடல் மாத்திரத்தான் வினையெச்சம் எனின்,—மாரைக்கிள்வியும் வினையொடு முடியும் வேற்றுமையும் பிறவும் எல்லாம் வினை யெச்சமாவான் செல்லும். அதனான் அவர்க்கது கருத்தன் றென்க. அல்ல தூஉம் 'கண்ணியன் வில்லன் வரும்' என வினைக் குறிப்பு முற்றாய்த் திரிதற் கேற்பதோர் வினையெச்சம் இன்மையானும் அது கருத்தன்மையறிக.

12'ஓடித்துண் டெஞ்சிய' என்பதூஉம், 'ஞாயிறுபட்டு

---

12. உண்டு என்னும் (யானையின்) வினை எஞ்சிய என்னும் பிற (மரத்தின்) வினை கொண்டது. செய்து என் வாய்பாட்டு வினையெச்சம் தன் கருத்தா வினையே கொள்ள வேண்டும். அதனால் பிறகருத்தா வினை கொள்ளுதற்குரிய செய என்னும் வாய்பாட்டு எச்சமே (உண்ண என்பதே) உண்டு எனச்செய்து என்னும் வாய்பாடாகத் திரிந்தது என்பது உரையாசிரியர் கருத்து. இதன்மறுப்பு :— செய என்னும் வாய்பாடு மூன்று காலத்துக்கும் உரியது ; செய்து என்னும் வாய் பாடு இறந்த காலத்துக்கேயுரியது. அதனால் முக் காலத்துக்கும் உரிய செய என்பது இறந்த காலத்துக் கேயுரிய செய்து என்னும் வாய்பாடாகத்திரிந்தது என்றல் பொருந்தாது.
செய என்னும் வாய்பாடு இறந்த காலத்தையும் காட்டு மாதலின் அந்த வகையில் திரியும் எனக்கொள்ளலாமே என வினவலாம். அதிலும் ஓர் குறையுண்டு. செய என்பது இறந்த காலம் காட்டுவது காரணப்பொரு ளாய் வரும் போதுதான். 'மழைபெய்யக்குளம் நிறைந் தது' என்பதில் பெய்ய என்னும் செயவென் வாய் பாட்டு எச்சம் இறந்த காலத்தில் குளம் நிறைவதற்குக் காரணமாய் வந்தது. அதுபோல உண்டது எஞ்சுதற்குக் காரணம் ஆகாது. இவ்வாறே ஞாயிறு படுதல் வந்த தற்குக் காரணமாகாது எப்பொழுதுவந்தான் என்ப தற்குவிடையாக பட்டபின் அல்லது படாநிற்க வந்தான் எனவருமேயன்றிக் காரணமாகாமையுணர்க.

வந்தான்' என்பதூஉம் பிறவினை கொண்டவனவாயினும், செய்தேன் எச்சத்திற்குரிய இறந்தகாலம் உணர்த்தலான், ஏனைக்காலத்திற்குரிய செயவென் எச்சத்தின் திரிபு எனப்படா. செயவென் எச்சத்திரிபாயின் செயவென் எச்சத்திற்குரிய காலம் உணர்த்தல் வேண்டும். 'மழை பெய்ய மரங்குழைத்தது' எனச் செயவென் எச்சத்திற்கு இறந்த காலம் உரித்து எனின்—காரண காரியப் பொருண்மையுணர்த்தும் வழி யல்லது செய வென் எச்சம் இறந்த காலம் உணர்த்தாது. ஓடித்துண்டலும் ஞாயிறு படுதலும் எஞ்சுதற்கும் வருதற்கும் காரணம் அன்மையான் ஆண்டிறந்த காலம் உணர்த்தாமையின், செய்தென் எச்சமாய் நின்று தமக்குரிய இறந்த காலம் உணர்த்தின எனப் படும். அதனாற் செய வென் எச்சம் செய்து என் எச்சமாய்த் திரிந்தன வென்றலும் அவர் கருத்தன் றென்க. 'ஞாயிறுபட்டு வந்தான்' என்பது 'ஞாயிறு பட்டபின் வந்தான்' என இறந்த காலம் உணர்த்தலும், 'ஞாயிறு படவந்தான்' என்பது 'ஞாயிறு படாநிற்க வந்தான்' என நிகழ்காலம் உணர்த்தலும் வழக்கு நோக்கிக் கண்டு கொள்க.

தெய்

வினையெச்சத்திற் குரியதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வினையெச்சச் சொல்லும் வேறு வேறாகிய பல இலக்கணத்தையுடைய, எ-று.

வேறு குறிய என்னாது 'பல்குறிய' என்றது சொல்லானும் பொருளானும் வேறு படும் என்பது அறிவித்தற்கெனக் கொள்க. சொல்லான் வேறுபடுதலாவது, பொதுவகையான் எடுத்தோதிய செய்து, செய்யூ என்பன, உகர ஊகார ஈறாகி வருதலே யன்றிப் பிற வீற்றானும் வருதலும், எச்சச் சொல்லாகி வரற்பாலது முற்றுச் சொல்லாகி வருதலும். பொருளான் வேறுபடுதலாவது ஒரு வாய்பாட்டான் உணரும் பொருளை மற்றொரு வாய் பாட்டாற் கூறுதலும், எல்லா வினையெச்சமும் பிரித்து நோக்கு வார்க்குப் பெறும் பான்மையும் வேற்றுமைப் பொருளாகித் தோற்றுதலும்.

அவையாமாறு: செய்தென் எச்சத்துக்கண் ஓடி, போய் எனவும், செய்யூ என்பதன்கண் செய்யா யெனவும் வருவன ஈறு வேறுபட்டு வந்தன.

'மோயினள் உயிர்த்தகாலை' எனவும், 'ஒலி சினை வேங்கை கொய்குவம் சென்றுழி' எனவும், 'கண்ணியன் வில்லன் வரும்' எனவும் வரும். அவை வினையெச்ச முற்றாகி வந்தன. இவற்றுள் 'மோந்து' என்பது 'மோயினள்' எனவும், 'கொய்ய' என்பது 'கொய்குவம்' எனவும், 'கண்ணியணிந்து வில்லை யேந்தி' என்பன 'கண்ணியன், வில்லன்' எனவும் முற்று வாய்பாட்டான் வரினும் எச்சப் பொருண்மைத் தாகலின் வினையெச்சம் எனப் பட்டன.

அஃதேல் முற்று என்பது ஒன்று இல்லையால் முற்றும் எச்சப் பொருண்மைத்தாய் வருதலின் எனின், அஃதாமிடனும் ஆகாதவிடனும் அறிதல் வேண்டும் என்பது வருகின்ற சூத்திரத்தான் விளங்கும். 'உரற்கால்யானை ஒடித்துண் டெஞ்சிய—வாய்வரி நீழல் துஞ்சும்' (குறுந். 232) என்றவழி 'உண்டு' என்பது வினை முதல் வினையொடு முடியாமையின் 'உண்ண' வெனத் திரித்தல் வேண்டிற்று. இந்நிகரான ஈறு திரிந்தன. 'மருந்துண்டு நோய் தீர்ந்தான், 'மழை பெய்ய மரங்குழைத்தது' என்பனவற்றைப் பிரித்து நோக்க, மருந்துண்டலான்' 'மழை பெய்தலான்' என வேற்றுமைப் பொருள் பட்டன.

அஃதேல் [1]இவை வேற்றுமை மயங்கியலுட் கூறப்பட்டன வன்றோ வெனின், ஆண்டு வேற்றுமைப் பொருள் வினைச் சொல்லானும் விளங்கும் என அதன் இலக்கணம் கூறினார். ஈண்டு வினையெச்ச வேற்றுமைப் பொருள்படும் என்று இதன் இலக்கணம் கூறினார் என்க. வினையெஞ்சு கிளவியும்' என்ற உம்மை இறந்தது தழீஇயிற்று.

நச்

இது வினையெச்சம் முதலியன வேறுபெயர் பெறும் என்கின்றது.

இ-ள் : வினையெஞ்சு கிளவியும்·வினையெச்சமாகிய சொற்களும் (உம்மையால் பெயரெச்சமாகிய சொற்களும் முற்றுச் சொற்களும்), வேறு பல்குறிய—முற்கூறிய பெயர்களோடு வேறு வேறாகப் பல பெயர்களையும் உடையவாம், எ-று.

1. இவை—மருந்துண்டு நோய் தீர்ந்தான் முதலியன.

உ-ம் : [1]பெயர்த்தனென் முயங்கயான் (குறுந்-84) இது வினையெச்சத் தன்மைத் தெரிநிலைமுற்று.

[2]‘வந்தனை சென்மோ வளைமெய்பரப்ப’-இது வினையெச்ச முன்னிலைத் தெரிநிலை முற்று.

[3]‘முகந்தனர் கொடுப் (புறம்.33 , ‘மோயினள் உயிர்த்த காலை’ (அகம்.5)-இவை வினையெச்சப் படர்க்கைத் தெரிநிலைமுற்று.

‘ஒலிசினைவேங்கை [4] கொய்குவம் சென்றுழி’-இது வினையெச்ச உளப்பாட்டுத் தன்மைத் தெரிநிலை முற்று.

[5]‘வறுவியேன் பெயர்கோ வாள்மேம் படுந’ (புறம் 209)—இது வினையெச்சத் தன்மைவினைக் குறிப்புமுற்று.

‘நன்னர் நறுநுதல் [6]நயந்தனை நீவி’ (கலி.21), ‘வெள்வேல்வலத்திர்’ (கலி.4) *இவை வினையெச்ச முன்னிலை வினைக் குறிப்பு முற்று.

‘சுற்றமை[7]வில்லர் சுரிவளர் [8]பித்தையர்-அற்றம் பார்த்தங்கும் கடுங்கண் மறவர்’ (கலி.4) - இவை வினையெச்சப் படர்க்கை வினைக் குறிப்பு முற்று.

இன்னும் வேறு வேறு பெயர் பெற்று வருவனவும் கொள்க.
‘எல்வளை நெகிழ்த்தோர்க் கல்லல் [9] உறீஇயர்’
‘உள்ளேன் தோழி [10] படீஇயர் என் கண்ணே’
[11]‘கேட்டீவா யாயின்’ (கலி.93)
என்பன வினையெச்ச வினைத்திரிசொல்.

---

1. பெயர்த்தனனாய் முயங்க 2. வந்தனையாய்ச் செல்வாய் 3. முகந்தனராய்க் கொடுப்ப 4. கொய்குவமாய்ச் சென்றுழி. 5. வறுவியேனாய்ப் பெயர்வனோ 6. நயந்தனையாய் நீவி 7 வில்லராய் 8 பித்தையராய்
9. உற என்பது திரிந்தது 10. பட என்பது திரிந்தது.
11. கேட்பின் என்பது திரிந்தது.
* இத்தொடர் இவை வினையெச்ச முன்னிலைவினை (தெரிநிலை) யும் குறிப்பு முற்றும் என்னும் பொருளது.

இங்ஙனம் வினையெச்சம் திரிந்துநிற்கும் எனவே, ஈறு திரிந்து நிற்கும் என வினையியலுட் காட்டியவற்றிற்கும் இதுவே விதியாயிற்று.

இனி, பெயரெச்சம் வேறு பெயர் பெறுமாறு: 'அவர் [1]தம்முளான் தருமதத்தன் என்பான்' (சீவக.242) எனவும்,

[2]கச்சினன் கழலினன் தேந்தார் மார்பினன்
வகையமைப் பொலிந்த வனப்பமை தெரியற்
சுரியலம் பொருநனைக் காணிரோ' (அகம்.76)
'குவளை யேயள வுள்ள [3]கொழுங்கணாள்
அவளையே' (சீவக 243)

எனவும்,

[4]'புரிமாலையர் பாடினியரும்'

எனவும் வந்தன உயர்திணை முப்பாற்கண்ணும் வந்த பெயரெச்சம் படர்க்கை வினைக் குறிப்பு முற்று.

'பெருவரை [5]மிசையது நெடுவெள் ளருவி' (குறுந்.78)
[6]'தெரிநடைய மாகளிறு
தன்தாள் பாடுநர்க்கு நன்கருளியும்'

இவை அஃறிணை யிருபாற்கண்ணும் வந்த பெயரெச்சப் படர்க்கைவினைக் குறிப்புமுற்று.

[7]'பெருவேட் கையேன் எற்பிரிந்து'

இது பெயரெச்சத் தன்மை யொருமை வினைக்குறிப்பு முற்று.

---

1. தம்முளானாகிய தருமதத்தன்.
2. கச்சினனாய் கழலினனாய மார்பினனாய-பொருநன்.
3. கொழுங்கண்ணாளாய அவளை.
4. புரிமாலையராய பாடினியரும்.
5. மிசையதாகிய அருவி.
6. தெரிநடையவாகிய களிறு.
7- பெருவேட்கையேனாகிய என்னை.

'கண்புரை [8]காதலேம் எம்மும் உள்ளாள்'
இதுபெயரெச்சத் தன்மை யுளப்பாட்டுப் பன்மை வினைக் குறிப்பு முற்று.

'உலங்கொள் [9] தோளினை ஒருநின்னால்'
இது பெயரெச்ச முன்னிலை ஒருமை வினைக்குறிப்பு முற்று.

'வினை [10] வேட்கையிர் வீரர் வம்மின்'
இது பெயரெச்ச முன்னிலைப்பன்மை வினைக் குறிப்புமுற்று.

இன்னும் வேறுவேறு பெயராய் வருவனவும் கொள்க.

[11]பின்பு நூல் செய்தோர் 'வினையெச்ச முற்று' என்று பெயர் கூறாமல், 'முற்று வினையெச்சம்' என்று பெயர் கூறினாரேனும், 'பெயரெச்ச வினைக்குறிப்பு முற்று' என்று பெயரெச்சத்திற்குக் குறியிட்டு ஆள வேண்டுதலின், [12]அதற்கும் அப்பெயரே கொள்ள வேண்டும் என்றுணர்க.

இனி, [13]பாயுந்து, தூங்குந்து (புறம். 24) எனவும், [14] 'சினை இய் வேந்தன் எயிற்புறத் திறுத்த' எனவும் [15]'கடைஇயநின் மார்பு' (கலி 77) எனவும் வருவன பெயரெச்ச வினைத்திரிசொல்.

---

8. காதலேமாகிய எம்(மையும்)
9. தோளினையாகிய நின்
10. வேட்கையிராகிய வீரர்
11. பின்புநூல்-வழிநூல். வழிநூல் செய்தோர் நன்னூலார் முதலியோர்
12. அதற்கும் = முற்று வினையெச்சம் என்பதற்கும் அப்பெயரே கொள்ள வேண்டும்—வினையெச்சமுற்று என்ற பெயரே கொள்ள வேண்டும். முற்று வினை யெச்சம் என்பது போல முற்றுப் பெயரெச்சம் எனக் கூற இயலாமையின் வினையெச்ச முற்று என்றலே நன்று என்பது கருத்து.
13. பாயும் தூங்கும் என்பவற்றின் திரிபுகள்.
14. சினந்த என்பதன் திரிபு. 15. கடவிய என்பதன் திரிபு.

இனி, 'கண்ணும் படுமோ [16]என்றிசின்யானே' (நற். 61) இது தன்மை முற்று வினைத் திரிசொல். 'ஈங்கு [17]வந் தீத்தந்தாய்' (கலி.96) இது முன்னிலை முற்று வினைத் திரிசொல். [18]புகழ்ந்திகு மல்லரோ' இது படர்க்கை முற்று வினைத் திரிசொல்.

இவ்வாறு மூவகைப் பெயர்களும் வேறு வேறு பெயர் பெற்று நிற்றல் கூறவேண்டுதலின், இதனை இவ்வோத்தினுள் கூறினார். இங்ஙனம் பெயர்கள் கூறவே, அவற்றிற்கு உரிய இலக்கணமும் கூறினாராயிற்று.

இனி ஓர் எச்சம் ஓர் எச்சமாய்த் திரிந்து வருவனவும் வேறே பெயர் பெறுதலின், அவற்றிற்கும் இதுவே இலக்கணமாம். விசேடித்து நிற்பனவும் உள என்பது உணர்த்துதற்கு 'உரிச்சொல் மருங்கின்' என்னும் சூத்திரத்தின் பின் இதனை வைத்தார்.

இதனை விரவு வினையாகிய வினையெச்சமும் பெயரெச்சமும், பாலும் இடமும் காட்டி நிற்றலின், முற்று எச்சமாய்த் திரிந்தது என்னாமோ? எனின், என்னாம்; 'அணிநிலை பெறாஅது' என்னும் அகப்பாட்டினுள் (அகம். 5) 'ஒண்ணுதல் குறுக வந்து முகமாறிக் கொள்ளாது, தனித்து, வடுக் கொளுத்தி, நக்கு, முகத்தினுரைத்து, ஒற்றி, போந்து, உயிர்த்த காலை' என வினையெச்ச அடுக்காகச் செய்யுள் செய்கின்றவர், தம் பேரறிவுடைமை தோன்ற எழுவாய்க்கும் பயனிலைக்கும் இடையே கிடந்து பயனிலையை விசேடிக்கும் எச்சங்களுள் சிலவற்றைத் திரித்துப் பாலும் இடமும் காட்டி நிற்பச் செய்யுள் செய்தாராகலின். இனிப்பெயரெச்ச வினைக் குறிப்பு முற்றிற்கும் 'அவர்தம்மிடத்தே நின்ற தருமதத்தன்', 'புரிமாலை யணிந்த பாடினியர்' எனப் பெயரெச்சம் விரிந்தவாறு காண்க.

பெரும்பான்மை இங்ஙனம் செய்யுள் செய்தற்குக் காரணம் விரவுவினை பிரிவு வேறுபடூஉம் செய்தியவாய்ப் பிரிந்து நிற்குங்கால் பாலும் இடமும் காட்டும் தன்மையும் தம்முள்ளே உடைய ஆயினமையின், அவ்வெச்சம் முற்றாய்த் திரிந்தது என்பது

16. என்றேன் என்பதன் திரிபு 17. வந்தாய் என்பதன் திரிபு.
18. புகழ்ந்தோம் என்பதன் திரிபு.

உணர்த்துதற்கு அன்றே இடையிடை வினையெச்ச வாய்ப் பாடும் உடன் ஓதி எல்லாவற்றிற்கும் ஒரு வினையே முடிபு கூறிற்று என்று உணர்க. அன்றியும் முற்று எச்சமாய்த் திரிந்து அடுக்கியும் தனித்தும் வந்து வினை கோடல் ஆசிரியர்க்குக் கருத்தாயின், சிறுப்பான்மையாய் வினை கொள்ளும். முற்றிற்குச் சூத்திரம் செய்தாற்போல, முற்றுச்சொல் அடுக்கியும், அடுக்காதும் வந்து பெயரொடு முடிதற்கு 'அவைதாம் தத்தம் கிளவி' (எச்ச. 33) என்று சூத்திரம் செய்தாற்போல, முற்றுச் சொல்லே எச்சமாகி அடுக்கியும் தனித்தும் வந்து வினைகொள்ளும் என் றாற் போல ஒரு சூத்திரம் செய்திலராம்; அங்ஙனம் பெரும் பான்மையும் வழங்குவதோர் இலக்கணத்திற்குச் சூத்திரம் செய்யாமையின் அவர்க்கு அது கருத்தன்மை யுணர்க. அன்றி யும், வினையெச்சம் முற்றாய்த் திரிந்து பின்னும் அதன் பொருள் உணர்த்தி நிற்றல் 'இன்றி யென்னும் வினையெஞ் சிறுதி' (உயிர் மயங்.35) என்னும் சூத்திரத்தானும் உணர்க. இவ்விலக்கணத் தினது நுண்மையை யுணர்தலாற்றாப் பின்னுள்ளோர் 'முற்றே எச்சம் ஆகலும் உரித்தே' எனச்சூத்திரம் செய்தார். அவர் கருத்துப்பற்றிச் சேனாவரையரும் 'முற்றெச்சமாம்' என்றார். அது பொருந்தாமை இக்கூறிய வாற்றானும் சான்றோர் செய் யுட்கு முன்னுள்ளோர் கூறிய வுரையானும் உணர்க.

இனி, 'ஞாயிறுபட' என்னும் செயவென் எச்சத்து அகர ஈறு பட்டு என உகரஈறாய்த் திரிந்து நின்றது', என்றாரால் உரை யாசிரியர் எனின், 'ஞாயிறு படவந்தான்' என்பது 'ஞாயிறு படாநிற்க வந்தான்' என நிகழ்காலம் உணர்த்துதல் வழக்கா தலின், அது திரிந்து இறந்தகாலம் உணர்த்தும் என்றல் பொருந்தாமை யுணர்க.

## வெள்

இது வினையெச்சத்திற் குரியதோர் இயல்பு கூறுகின்றது.

இ-ள் : மேற்கூறப்பட்ட வினையெச்சமும் வேறு பட்ட பல இலக்கணத்தை யுடையன, எ-று.

இடைச் சொல்லும் உரிச்சொல்லும் மேற் கூறப்பட்ட இலக்கணமே யன்றிப் பிற இலக்கணமுடைய என்பது உணர்த்தி னார், இனி அவையேயன்றி வினையெஞ்சு கிளவியும் பல இலக்கணத்தன என்பதுபட நின்றமையான் 'வினையெஞ்சு

கிளவியும்[4] என்ற உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. வினையெச்சத்தின் இலக்கணம் ஓரியல்பினவன்றித்திரிதல், வேறுபொருளுணர்த்தல், விசேடித்தல் முதலாகப் பல்வேறு திறத்தன வாகலின் 'வேறுபல் குறிய' என்றால். குறி—இலக்கணம். அவையாவன : செய்தென் எச்சம் வினைமுதல் வினை கொள்ளாது 'உரற்கால்யானை ஒடித்துண்டெஞ்சியயா' 'ஞாயிறு பட்டு வந்தான்' எனப்பிறிதின் வினைகோடலும், 'மோயினள் உயிர்த்த காலை' என அஃது ஈறு திரிதலும், 'கண்ணியன் வில்லன் வரும்' என முற்றுச்சொல்லது திரிபாய் வருதலும், ஓடி வந்தான் விரைந்து போயினான் எனவும், 'வெய்ய சிறிய மிழற்றுஞ் செவ்வ ய்' எனவும் செவ்வன் தெரிகிற்பான், புதுவதின் இயன்ற அணியன் எனவும் தம்மை முடிக்கும் வினைக்கட் கிடந்த தொழிலும் பண்பும் குறிப்பும் உணர்த்தித் தெரிநிலை வினையும் குறிப்பு வினையுமாய் முடிக்குஞ் சொல்லை விசேடித்தலும் பிறவுமாம் என்பர் சேனாவரையர்

............................

ஒடித்துண் டெஞ்சிய என்பது முதலாயின செயவென் எச்சம் செய்தென் எச்சமாய்த் திரிந்தன என்றும், பெயர்த்தெனன் முயங்க' முதலாயின செய்தென் எச்சம் முற்றாய்த் திரிந்தன வென்றும் கூறுவர் உரையாசிரியர்.

'உரற்கால் யானை ஒடித்துண் டெஞ்யயா' எனவும் 'ஞாயிறு பட்டு வந்தான்' எனவும் வரும் தொடர்களில் உண்டு, பட்டு என்னும் செய்தென் எச்சங்கள் தமக்குரிய வினை முதல்வினை கொள்ளாது பிறிதின் வினைகொண்டன வாயினும் செய்தென் எச்சத்திற்குரிய இறந்த காலம் உணர்த்தலான் ஏனைக்காலத்திற்குரிய செயவென் எச்சத்தின் திரிபாகா. செயவென் எச்சம் 'மழை பெய்ய மரந்தளிர்த்தது' என்றாங்குக் காரணகாரியப் பொருண்மையுணர்த்தும்வழி யல்லது இறந்த காலம் உணர்த்தாது. யானை ஒடித்து உண்ணுதலும் ஞாயிறு படுதலும் யா மரம் எஞ்சுதற்கும், ஒருவன் வருதற்கும் காரணம் அன்மையான் ஈண்டுச் செயவென்எச்சம் இறந்த காலம் உணர்த்தாது எனவே, உண்டு, பட்டு என்பன செய்தேன் எச்சமாய் நின்றே தமக்குரிய இறந்த காலம் உணர்த்தின எனக்கொள்ளுதலே பொருத்தமுடைய தாகும். ஞாயிறு பட்டு வந்தான் என்பது,

ஞாயிறு பட்டு பின்வந்தான் என இறந்த காலம் உணர்த்துதலும், 'ஞாயிறு படவந்தான் என்பது ஞாயிறு படாநிற்க வந்தான்' என நிகழ்காலக் உணர்த்துதலும் வழக்கு நோக்கி உணரத்தக்கனவாம்.

ஆதி

வினையெச்சங்களும் வேறுபட்ட குறிப்புணர்த்தும். மழை பெய்ய : பெய்ய—வினையெச்சம். 'தொடங்கிற்று' என அதற்குரிய வினை சேர்தல் முறைமை. 'ஆயின்', மழைபெய்யப் புல் முளைத்தது' என்றால் 'மழை பெய்ததால்' எனப்பொருள்தந்து, 'புல் முளைத்தது' என மற்றொன்றின் வினைகொண்டு முடிந்தது.

'மழை பெய்ய மேகம் கருத்தது, என்றால் 'மழைபெய்தற்கு' என எதிர் நடப்பை அறிவிக்கின்றது.

மாடு மிதித்து நாசமாயிற்று, புண்ணாயிற்று எனமற்றொன்றின் வினையில் முடிகிறது.

வந்தால் அடிபடும்—இங்கு வாராவிடின் அடிவிழாது என எதிர்மறைப் பொருள் தருகிறது.

'யான் உண்டசோறு'—உண்ட—பெயரெச்சம், சோறு உண்ணப்பட்டது, யான் எழுவாய்

'பசலை யுண்டதோள்'—இங்கு உண்டது பசலையோ தோளோ யாதும் இல்லை.

இவ்வாறு வினை யெச்சம் பெயரெச்சங்கள் மாறுபட்ட பொருள் தந்து நிற்கும்.

சிவ

## முற்றெச்சம்

'பெயர்த்தனென் முயங்க என்ற விடத்துப் 'பெயர்த்தனென் என்பது 'பெயர்த்தேன்' என்ற பொருள் தருதலின் முற்றாக இருந்தது, 'பெயர்த்து' என்ற பொருளில் ஆளப்படுதலின் எச்சமாகத் திரிந்தது. ஆதலின் 'முற்றெச்சம்' என்பதற்கு 'முற்றானது எச்சப் பொருளில் வருவது' எனக்கூறலாம் சேனாவரையர் இக்கருத்துடையவரே.

பெயர்த்து என்றிருக்க வேண்டிய சொல்—அதாவது எச்சமாக இருக்க வேண்டிய சொல் 'பெயர்த்தனென்' என முற்றாம் வந்தது என்றார் இளம்பூரணர். அவர் கொள்கைப்படி முற்றெச்சம் என்பது 'முற்றாகத் திரிந்து வந்தஎச்சம்' என்று பொருள்படும்.

எனவே 'முற்றெச்சம்' என்பது (1) முற்றானது திரிந்த எச்சம் எனவும், (2) முற்றாகத் திரிந்த எச்சம் எனவும் இருபொருள்படும் என அறியலாம்.

இவ்விருவகைப் பொருளும் பொருந்துமேனும் ஆசிரியர் எதைக்கருதியிருப்பார்? "வினையெச்சத்துக்குக் கூறப்பட்ட இலக்கண முடிபுகளேயன்றி வேறுபட்ட முடிபுகளும் வினையெச்சம் கொள்ளும்" என்ற பொதுவான கருத்தில் "வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய" என்றார். வினையெச்சமானது வேறுபட்ட இலக்கணம் பெறுதல் என்பது (1) தனக்கு இயல்பாகவுள்ள ஒரு வாய்ப்பாட்டு எச்ச நிலையில் திரிந்து வேறுவாய்பாட்டு எச்ச நிலையில் வருதலும், (2) தன்எச்ச நிலை திரிந்து முற்று நிலையில் வருதலும் என இருவகைப் படும் என்பர் இளம்பூரணர்.

"உறற்கால் யானை ஒடித்துண்டு எஞ்சிய" (குறுந். 232)
"பெயர்த்தனென் முயங்க" (குறுந். 84)

என்பன முறையே அவற்றுக்குக் காட்டுகளாம்.

எனவே, வினையெச்சம் வேறுபட்ட இலக்கணத்ததாய் வரும் என்றமையால் முற்றெச்சம் என்பது, எச்சமாக இருப்பதே முற்றாகத் திரிந்து வருவது என்னும் பொருளுடையதாம் என்னலாம். முற்றுஎச்சம்-முற்றாகத் திரிந்த எச்சம். இது இளம்பூரணர் கருத்து.

சேனாவரையர் கருத்து வருமாறு :— இச்சூத்திரத்துக்குச் சேனாவரையர் உரை கூறியபோது "வேறுபட்ட பல இலக்கணங்களை வினையெச்சம் கொள்ளும்" என்று கூறி, அவற்றுள் ஒன்றாக,

"மோயினள் உயித்த காலை" எனவும்,

"கண்ணியன் வில்லன் வரும் எனவும் முற்றுச் சொல்லது திரிபாய் வருதலும் கூறினர். எனவே, முற்றுச்சொல் சொல்

லால் திரியாமல் பொருளால் எச்சமாகத் திரிந்து வருவது முற்றெச்சம் எனக் கொண்டார் அவர் என்னலாம்.

வினைமுற்றென்பது உயர்திணை அஃறிணை, விரவுத் திணை ஆகிய மூன்று பொருள்கள் தோறும் தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூவிடங்களில், இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் முக்காலமும் பற்றித் தெரிநிலை குறிப்பு என்னும் இரண்டு வகையில் வரும் (எச்ச. ) எனக்கூறி, ''எவ்வயின் வினையும் அவ்வியல் நிலையும்'' ( ) என்றும் கூறினார். இச்சூத்திரத்தின் பொருள் ''எவ்விடத்து வினையாயினும்-எல்லாவினையும் முற்றுச் சொல்லாகவே நிற்கும்'' என்பதாம். இவ்விடத்துச் சேனாவரையர் ''எல்லாவினையும் முற்றுச் சொல்லாம் எனவே, எச்சமாதல் ஒருதலையன்று என்பதாம். ஆகவே, வினைச் சொல்லாதற்குச் சிறந்தன முற்றுச் சொல்லே என்பதாம். எல்லாவினையும் முற்றுச் சொல்லாகவும், கச்சினன், கழலினன், நிலத்தன், புறத்தன் என்னும் தொடக்கத்து வினைக்குறிப்பின் முதனிலை எச்சாமாய் நில்லாமையும் வழக்கு நோக்கிக்கண்டு கொள்க'' என்று எழுதினார். எனவே, இயல்பான முற்றுச் சொல்லே காலப் போக்கில் எச்சமாக மாறும் என இது கொண்டுநாம் உணரலாம். உண்டான்' என்னும் சொல்லே சிதைந்து 'உண்டு' என எச்சமாக வந்ததாக அறியலாம். அதனான், 'உண்டான் வந்தான்' என்ற தொடரே 'உண்டுவந்தான்' ஆகியிருக்கலாம்

ஒருகாலத்தில் முற்றாக இருந்த சொல்லே காலப்போக்கில் சிதைந்து எச்சமாகத் திரிந்தது என்பதைக் கொண்டு பார்த்தால் முற்றெச்சம் என்பது 'முற்றே எச்சமாகத் திரிவது' என்னும் பொருள்படுதலை யறியலாம். இதற்குத் தொல்காப்பியர் தரும் பிறிதொரு சான்றும் உண்டு.

''செய்கென் கிளவி வினையொடு முடியினும்
அவ்வியல் திரியா தென்மார் புலவர்'' (வினையியல்)

என்னும் சூத்திரம் சான்று தரும். 'செய்கு' என்பது, தன்மை யொருமை எதிர்கால வினைமுற்று பெயரொடு முடிய வேண்டும் என்றாராகலின், 'செய்குயான்' எனவரும். அவ்வாறன்றி 'செய்கு வந்தேன்' என வினையொடு முடிந்தாலும் அச் 'செய்கு' என்பது வினை முற்று நிலையில் திரிதல் இல்லை. எனவே,

மற்றைய வினைமுற்றுகள் வினையொடு முடிந்தால் திரிதல் உண்டு. இது கொண்டு பார்க்கும்போது வினைமுற்றே எச்சமாகத் திரியும் என்பது பெறப்படும். இத்தெளிவினால்தான் நன்னூலாரும் வினைமுற்றே வினையெச்ச மாகலும்'' (நன்.351) என்றார்.

முடிவாக முற்றெச்சம் என்பதற்கு 'முற்றுச் சொல்லே எச்சமாகத் திரிவது' என்னும் பொருளே சிறக்கும் என்னலாம்.

(இலக்கண ஆய்வுக் கட்டுரைகள் 1. பதிப்பாசியர் ச. அகத்தியலிங்கம், க. பாலசுப்பிரமணியன். அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர் (1974).

# தொடர்மொழிப் பொருள் வேறுபாடு

**451. உரையிடத் தியலு முடனிலை யறிதல் (61)**
(உரை இடத்து இயலும் உடன்நிலை அறிதல்)

ஆ. மொ. இல.

One must know the position of words which denote contraditory senses standing together in speech from the context

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், உலகத்து மாறுகொண்டு வேறுபட்டியலும் சொற்களவை அமைக என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை :[1]கட்டுரை யுரைக்கு மிடத்து நடக்கும் ஒருங்கு நிலையும், எ-று.

---

1. கட்டுரையுரைக்குமிடத்து ஒருங்குநிலையும் நடக்கும் என மாறுக. கட்டுரை நடக்குமிடத்து- —உரையாடுமிடத்து. ஒருங்கு நிலையும் இரு வேறு சொற்கள் சேர்ந்து வருதலும், நடக்கும்-நிகழும்.

ஒன்று உரைக்குமிடத்து இயைபில்லாத இரண்டு சொல் ஒரு பொருட்கண் நிற்பச் சொல்லுதல் உண்டு; உண்டேனும் அஃது அமைக என்றவாறு.

வ-று : இந்நாழிக்கு இந்நாழி சிறிதுபெரிது என்பது; சிறிது என்ற சொல்லும் பெரிது என்ற சொல்லும் தம்முள் மாறு கோளுடைய அந்நாழிமேலே நின்றனவேனும் அமையும் என்பது. என்னை யமையுமாறு எனின், சிறிது என்று நின்ற தன் சிறுமையே பெரிது என்பான் சொல்லினான் அல்லன். அந் நாழிக்கு இந்நாழி பெரிய துணை மிகுதியில்லை, பெருமை சிறிது எண்ணிய சொல்லினான்; அமையும் என்பது.

சேனா

இ-ள் : வழக்கிடத்து உடன்நிற்கப்பாலன வல்லன வற்றது உடனிலை போற்றுக, எ-று.

உடன் நிற்கப்பாலன வல்லவாவன; தம்முள் மாறுபாடு டையன. மாறுபாடில்லனவற்றது உடனிலைக்கண் ஆராய்ச்சி யின்மையின், 'உடனிலை' என்றது மாறுபாடுடையனவற்ற துடனிலையே யாம்.

உ-ம் : 'இந்நாழிக்கு இந்நாழி சிறிது பெரிது' என உடன் நிற்கப் பாலன வல்லாச் சிறுமையும் பெருமையும் உடன் நின்ற வாறு கண்டு கொள்க. சிறிது என்பது பெரிது எனப்பட்ட பொருளை நோக்காது பெரிது என்பதற்கு அடையாய் மிகப் பெரிதன்று என்பதுபட நிற்றலான் அமைவுடைத்தாயிற்று.

அறிதல் என்பது இவ்வாறு அமைவுடையன கொள்க என்றவாறு

மாறுபாடுடையன உடன்நிற்றல் *எழுவகை வழுவினுள் ஒன்றன்மையான், இதனைக் கிளவியாக்கத்துட் கூறாது ஈண்டுக் கூறினார்.

தெய்

மேலதற்கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

---

* எழுவகைவழு—திணை, பால், இடம், எண், வினா, செப்பு, மரபு வழு என்பன.

‡இ-ள் : உரை யென்பது தொடர்மொழி. முற்றுச் சொல் எச்சமாகிவருதலும், வினையெச்சம் ஈறுதிரிதலும், தொடர் மொழிக் கண் முடிக்கும் சொல்லோடு கூடி நின்ற நிலைமையை யறிந்து கொள்க, எ-று.

'மோயின ளுயிர்த்தகாலை' என்றவழி 'உயிர்த்தல்' என்னும் வினையொடு நிற்றலின் 'மோயினள்' என்பது எச்சமாயிற்று. அல்லாதவழி முற்றாயே நிற்கும். ஞாயிறு பட்டு வந்தான் என்றவழி 'வந்தான்' என்பதற்குப் பட்டென்பது இல்லாமையிற் பட எனத்திரித்தல் வேண்டிற்று. பிறவு மன்ன.

நச்

இது தொடர்மொழிப் பொருள் வேறுபாடு கூறுகின்றது.

[1]இள் : உரையிடத்து இயலும்—ஓர் எச்சவாய் படாகாக் கூறும் இடத்தது தானே மற்றோர் எச்சவாய்பாட்டிற்கும் ஏற்று நடக்கும், உடனிலை அறிதல்—கூட்டத்தினை யறிந்து தொடர் மொழிக்கு ஏற்ப வெவ்வேறாகப் பொருள் உரைக்க, எ-று.

உ-ம். 'பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்' (கிளவி.4)

என்புழி 'பெண்மை சுட்ட வேண்டி ஆண்மை திரிந்த' என வினையெச்ச வாய்பாடாயும், 'பெண்மை சுட்டிய பெயர் நிலைக் கிளவி' எனப்பெயரெச்ச வாய்பாடாயும் நின்றவாறு காண்க.

[2]'ஆடிய கூத்தனும் வந்தான் அவனோடு
கூடிய கூத்தியையும் கொண்டு'

---

‡ இவ்வுரை ஆய்வுக்குரியது. வலிந்து கொண்ட வுரை யாகும்.

1. இவர் உரையும் ஆய்வுக்குரியது.

2. ஆடிய கூத்தன் — பெயரெச்சத்தொடர், ஆடிய வந்தான் — வினையெச்சத்தொடர். கூடியகூத்தி — பெயரெச்சத்தொடர், கூடியகொண்டு—வினையெச்சத் தொடர்.

என்றாற் போல்வனவும், சான்றோர் செய்யுட்கண் இவ்வாறு வருவனவும், பிறவும் இதனான் முடித்துக் கொள்க.

இன்னும் 'உடனிலை' என்றதனானே 'ஓடி வந்தான், விரைந்து போயினான்' என[3]முடிக்கும் வினையோடு உடன் நிகழ்வனவும் கொள்க.

இச்சூத்திரத்திற்கு 'வழக்கிடத்து உடன் நிற்கப்பால அல்லனவற்றது உடனிலை போற்றுக' என்று பொருள் கூறி, 'இந்நாழிக்கு இந்நாழி சிறிது பெரிது' என்பது காட்டினராரால் [4]உரையாசிரியர் எனின், அது சிறப்பின்கண் வரும் நான்காம் வேற்றுமைப் பொருளாய் அடங்குதலானும், சிறிது என்பது பெருமையை விசேடித்து நிற்றலானும், அதுதான் [5]முன்னர்ப் பெறப்பட்டமையானும் இவ்வெச்ச மயக்கம் கூறுதலே ஆசிரியர் கருத்து என்று உணர்க.

## வெள்

இது வழக்கின்கண் பயிலும் சொல் வேறுபாடு கூறுகின்றது.

இ-ள்: வழக்கின் கண் உடன் நிற்கற்பாலன அல்லாத சொற்கள் உடன்நிற்றலை அறிந்து கொள்க, எ-று.

ஈண்டு உடன்நிலை என்றது தம்முள் மாறுபட்ட சொற்கள் ஒருங்கு நிற்றலை.

உ-ம் : இந்நாழிக்கு இந்நாழி சிறிது பெரிது எனவரும் உடன் நிற்றற்குரியவல்லாத சிறுமையும் பெருமையும் உடன் நின்றவாறு காண்க.

---

3. முடிக்கும் வினையோடு முடிதல் = ஓடுதல் வந்தான் என்பதிலேயே அடங்குதலும் விரைதல் போயினான் என்பதிலேயே அடங்குதலும் உணர்க.
4. சேனாவரையரும் காட்டினர்.
5. இடைச் சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே எச்ச 59 என்னும் சூத்திரத்தில்

## ஆதி

சொல்லும் உரையினால் அதன் உடன் சேர்ந்தவற்றையும் அறிதல் ஆகும்.

இது சிறிது என்று உரைப்பின் அது பெரிது

அவர் நன்கு பாடுவார் எனின் அடுத்தவர் பாட்டு சிறப்பில்லை என்று அறிகிறோம்.

இதுதவிர 'எடுத்த மொழியினம் செப்பலும் உரித்தே' (கிளவி. ) என்ற கருத்தில் ஒன்றைக் கொண்டு அதனைச் சேர்ந்தவற்றை அறிதலும் ஆகும் எனினும் குற்றமின்றாம்.

சோறு உண்டான்—சோற்றுடன் காய்கறிகள் பண்டங்கள் தண்ணீர்.

வெற்றிலை மென்றான்—பாக்கு புகையிலை சுண்ணாம்பு.

பையெடுத்துப் பள்ளிக்குப் போனான்—புத்தகம், பென், நோட்டு அடிக்கோல்.

## சிவ

தெய்வச்சிலையார் புறனடையென்றது தேவையற்றது, உரையிடம் என்பது தொடர் மொழியிடம் என்னும் பொருளதாகாது. புறனடைச் சூத்திரத்திற்கூறிய 'மோயினள் உயிர்த்த காலை' முதலிய உதாரணங்கள் 'வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய' என்பதிலேயே அடங்கும். நச்சினார்க்கினியர் 'உரையிடம்' என்பதத்கு 'ஓர் எச்ச வாய்பாடாக வுரைக்குமிடத்து' என்பதும் 'உடனிலை' என்பதற்கு 'மற்றோர் எச்ச வாய்பாட்டிற்கும் ஏற்று நடக்கும் கூட்டம்' என்றும் கூறும் உரையும் வலிந்து கொண்டதாதலின் சிறவாது. மற்றையோர் உரையே சிறக்கும்.

452. முன்னத்தி னுணருங் கிளவியு முளவே
இன்ன வென்னுஞ் சொன்முறை யான (62)
(முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே
இன்ன என்னும் சொல் முறையான)

ஆ. மொ. இல.

There are words the nature of which can be understood by inference only

பி. இ. நா.

**நன். 408**

முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே.

**இ. வி. 354**

தொல். சூத்திரமே.

**முத்து. ஒ. 123**

முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் சொற் கண்ணதோர் பொருள் படுதல் வேற்றுமை யுணர்த்துதல் நுதலிற்று.

உரை : சொல்லின விடத்துச் சொற்கிடந்தவாறே குறிப்பி னாற்கொண்டு உணரப்படும் பொருளும் உள ; சொற்கள் யாண் டாயினும் மற்று இன்னவென்று தன்மை வேறுபாடு சொல்லு தல் முறைக்கண், எ-று.

வ-று : 'செஞ்செவி வெள்ளொக்கலர்' எனவும், 'குழை கொண்டு கோழி யெறியும் வாழ்க்கையர்' எனவும் வரும்.

[1]'செஞ்செவி வெள்ளொக்கலர்' என்றால் உதிரம் சொரியும் செவியர், வெளிய சுற்றத்தார் என்பதன்று ; செவியெல்லாம் சாலச் செம்பொன் அணிந்து முட்டில் செல்வத்தார் கிளை யுடையர் என்றவாறு.

'குழை கொண்டு கோழியெறியும்' என்றக்காலும் [1]கோழி

1. சேனா விளக்கம் பார்க்க.

1. கோழியெறிதல் என்று உணரற் பாலதை முட்டில் செல்வத்தார் என்பதாக உணரற்பாற்று.

யெறிதல் என்று உணரற்பாலது, முட்டில் செல்வத்தார் என்பது உணரற்பாற்று.

சேனா

இ-ள் : சொல்லானன்றி சொல்லுவான் குறிப்பாற் பொருளு ணரப்படும் சொல்லும் உள; இப் பொருள் இத்தன்மைய வென்று சொல்லுதற்கண், எ-று.

உ-ம் : 'செஞ்செவி வெள்ளொக்கலர்' என்புழி மணியும் பொன்னும் அணிந்த செவி என்றும் வெளியது உடுத்த சுற்றம் என்றும் குறிப்பான் உணரப்பட்டவாறு கண்டு கொள்க.

'குழை கொண்டு கோழி யெறியும் வாழ்க்கையர்' என்புழி அன்ன பெருஞ் செல்வத்தார் என்பதூஉம் குறிப்பால் உணரப்படும்.

இது, 'தெரிபு வேறு நிலையலும் குறிப்பிற் றோன்றலும்' (சொல். 157) என்புழி அடங்கும் எனின், ஆண்டுப் பொருள் நிலை இருவகைத் தென்பதல்லது இன்னுழி இப்பொருள் குறிப்பிற் றோன்றும் என்னும் வேறுபாடு பெறப் படாமையான் ஆண்ட டங்கா தென்பது.

இதுவும் மேலை யோத்துக்களுள் உணர்த்துதற்கு இயை பின்மையான் ஈண்டுணர்த்தினார்.

தெய்

மனக் கருத்தினாற் பொருள் உணரும் இடம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : சொல்லினா னன்றி இத்தன்மையை வென்னும் சொல்லினது தொடர்ச்சிக்கண் மனக்குறிப்பினாற் பொருள் உணரப்படும் சொல்லும் உள, எ-று.

உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. [2]தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி, அஃதாண் டவள்செய்தது'' (குறள் 1279) என்றவழி இருப்போமாயின் வளைகழன்று தோள்

2. பொருள் : அவர் பிரியன் ஈண்டிருப்பின் இவை நில்லா வெனத் தன் தொடியை நோக்கி, அதற்கேதுவாக இவை மெலியும் எனத் தன்மென் தோள்களையும் நோக்கி, பின் இவ்விரண்டும் நிகழாமல் நீர் நடத்து காத்தல் வேண்டும் எனத் தன் அடியையும் நோக்கி அங்ஙனம் அவள் செய்த குறிப்பு உடன் போக்காய் இருந்தது.

மெலியும் எனக் கருதி நடக்க வல்லீராகல் வேண்டும் என அடியை நோக்கினாளாதலான் உடன்போதற்குக் கருதினாள் என இப்பொருளெல்லாம் அவள் குறிப்பினால் உணர நின்ற வாறு கண்டு கொள்க.

இது சொல்லினான் உணராமையான் எடுத்தோதல் வேண்டிற்று. பிறவும் இந்நிகரன அறிந்து கொள்க.

நச்

இது வினைக் குறிப்புச்சொல் பொருள்தரும் வேறுபாடு கூறுகின்றது.

இ-ள் : இன்ன என்னும் சொல் முறையான்—இத்தன்மைய என்று சொல்லப்படும் வினைக்குறிப்புச் சொற்கள் பொருள் தரும் முறைமையிடத்து, முன்னத்தின் உணரும் கிளவியும் உள அவற்றுள் சில நுண்ணுணர்வு உடையோர்க்குக் குறிப்பினால் [1]தெரிநிலைப் பொருள் உணரப்படும் சொற்களும் உள அவற்றை உணர்க, எ-று.

உம்மையால் தெரிநிலைப் பொருள் உணரப்படாத சொற்களும் உள என்று உணர்க. தெரிநிலைப் பொருள் உணர்த்துவன [2]வினையெச்ச வினைக்குறிப்பு முற்றும் [3]பெயரெச்ச வினைக் குறிப்பு முற்றுமாம். தெரி நிலைப் பொருள் உணர்த்தாதன ஏனை வினைக்குறிப்பு முற்றாம்.

முருகாற்றுப்படையுள்,

---

1. தெரி நிலைப் பொருள் உணரப்படும் சொற்கள்—காலம் காட்டுவதால் தெரிலைப் பொருள் என உணரப்படும் சொற்கள்.

2 வினையெச்சப் பொருளில்வரும் குறிப்பு வினைமுற்று

3 பெயரெச்சப் பொருளில்வரும் குறிப்பு வினை முற்று.

கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்
தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடியன் நெடியன் தொடியணி தோளன்
நரம்பார்த் தன்ன இன்குரல் தொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல்
மருங்கிற் கட்டிய நில னேர்பு துகிலினன்
முழவுறழ் தடக்கையின் இயல ஏந்தி
மென்தோள் பல்பிணை தழீஇத் தலைத்தந்து

குன்றுதோ றாடலும் நின்றதன் பண்பே. (திருமுரு 20-8-217 என்புழி வந்த வினையெச்ச வினைக்குறிப்பு முற்றுகள் [1]ஆக்கம் பெற்றுப் பொருள் உணர்த்துங்கால், கச்சைக்கட்டி, கழலை யணிந்து, கண்ணியைச்சூடி, குழலையூதி, கோட்டைக் கூறைத்து பல்லியங்களை எழுப்பி, தகரைப் பின்னிட்டு, மயிலை ஏறி, கொடியை உயர்த்து, வளர்ந்து, தோளிலே தொடியை யணிந்து, துகிலை யுடுத்து, ஏந்தி, தழீஇ, தலைக்கை கொடுத்து ஆடலும் அவற்கு நிலைநின்ற பண்பு'' எனச் செய்தென் எச்சப் பொருள் உணர்த்தி நின்றவாறு காண்க.

முன்னர்க் காட்டிய பெயரெச்ச வினைக் குறிப்பு முற்று கட்கும் தெரிநிலை வாசகமாக விரித்துப் பொருள் கூறுதற்கு ஏற்பனவற்றை யுணர்ந்து, அவற்றிற்கு ஏற்கத் தெரிநிலையாகப் பொருள் கூறிக்கொள்க.

'நல்லன் அறிவுடையன் செவ்வியன் சான்றோர் மகன்' எனக் குறிப்புமுற்று அடுக்கிப் பெயரோடு முடிபுழி, 'நல்லனா யிருப்பன்' அறிவுடையனாயிருப்பன், சான்றோர்மகன்' என விரித்துப் பொருள் கூறியக்காலும் [2]அத்தெரிநிலைப் பொருள் உணர்த்தாதவாறு காண்க.

---

1. சேனா வரையரும் உரையாசிரியர் கருத்தினரே.

2. காலம் உணர்த்தாமையைக் குறித்தது. நல்லன் என்பது நல்லனாய் இருப்பன் என விரிந்தும் காலம் உணர்த்தவில்லை.

இச்சூத்திரத்திற்கு [1]உரையாசிரியர் சொல்லுவான் குறிப்பால் பொருள் உணரப்படும் சொற்களும் உள, இப்பொருள் இத்தன்மையது என்று கூறுதற்கண்' எனப் பொருள் கூறி, செஞ்செவி வெள்ளொக்கலர் என்பது காட்டினாரால் எனின் அது குறிப்பின் தோன்றலினது வேறுபாடாம் என மறுக்க.

வெள்

இது சொற்கண் வருவதோர் பொருள் வேறுபாடு கூறுகின்றது.

இ-ள் : சொல்லா லன்றிச் சொல்லுவான் குறிப்பாற் பொருளுணரப்படும் சொற்களும் உள. இப்பொருள் இத்தன்மையன என்று சொல்லுதற்கண், எ-று.

உ-ம் : செஞ் செவி, வெள்ளொத்கலர் என்புழி மணியும் பொன்னும் அணிந்த செவி என்றும், வெளியது உடுத்த சுற்றம் என்றும் குறிப்பால் உணரப்பட்டவாறு கண்டு கொள்க. 'குழை கொண்டு கோழி யெறியும் வாழ்க்கையர்' என்புழி அத்தகைய பெருஞ் செல்வ முடையார் என்பது குறிப்பால் உணரப்படும்.

ஆதி

இன்னவாறு என்னும் சொல் முறையைக் கொண்டு குறிப்பால் அறியக்கூடிய பொருளும் உண்டு.

1. எல்லாம் கிடையிலேதான்
2. மூன்று கால் கொண்டவரானார்
3. இளமை திரும்பி விட்டது
4. புளித்த ஏப்பத்தில் இருக்கிறவர்
5. கொடி கட்டிப் பறக்கிறது

---

1. கச்சினனாய், கழலினனாய் என ஆக்கச் சொல் பெற்றுத் தெளிந்த பொருள் உணர்த்துங்கால் கச்சைக் கட்டி, கழலையணிந்து என இறந்தகால வினைப் பொருள் தருதலை இவ்வாறு எழுதினார்.

6. மஞ்சள் அரைத்தால் கரி ஆகிறது
7. நான் தான் எங்கள் வீட்டில் குழந்தை இவை குறிப்பால்

1. நடக்க முடியாதபடி நோயுற்றுப் படுக்கையில் கிடக்கிறார்
2. கைத்தடி யூன்றி நடக்கிறார்
3. காதல் வேட்கையில் இருக்கிறார்
4. நிறைய உண்டு செழித்து இருக்கிறார்.
5. எல்லாம் வெற்றி மயம்
6. தொட்டதெல்லாம் வெற்றி மயம்
7. குழந்தையில்லாதவர்—என அறிவிக்கின்றன.

சிவ

குறிப்பால் பொருள் உணரும் சொல் என்பதனால் சொல் மூலமே பொருளைக்குறிப்பால் உணர்தல் வேண்டும் என்பது பெறப்படுமாதலின் தெய்வச்சிலையார் 'தொடி நோக்கி என்னும் குறளைக்காட்டி அதன் மூலம் பெறப்படும் பொருளை முன்னத்தின் உணரும் பொருள் என்றது பொருந்தாது. உடன் போக்குக் கருதினாள் என்பது அக்குறள் மூலம் குறிப்பாற் பெறப்படுமாயினும் உடன் போக்கைக்குறித்தல் வேண்டி நிகழ்த்திய தொழில்கள் தொடிநோக்கல், மென்தோள் நோக்குதல், அடிநோக்குதல் ஆதலின் தொழில்களால் குறிப்பு உணர்த்தப்பட்டதேயன்றிச் சொற்களால் உணர்த்தப்பட்டதன்று. செஞ்செவியர் வெள்ஒக்கலர் என்பனவே பெருஞ்செல்வர், வெள்ளாடை யுடுத்தியவர் என்பனவற்றை யுணர்த்துவன. நச்சினார்க்கினியர் குறிப்பு வினைமுற்றுத் தெரிநிலைப் பொருளைக் குறிப்பால் உணர்த்துவது பற்றி இச்சூத்திரம் கூறுவதாகக் கொண்டதும் ஏற்பதற்கில்லை. குறிப்பு வினைமுற்று என்னும் பெயரே குறிப்பாற்பொருள் உணரப்படுவது என்பதைத் தெரிவித்தலாலும் குறிப்பால் உணரப்படுவதும் ஏதேனும் ஒரு காலத்துக்குரியதாகும் ஆதலினாலும் அவர் உரை போலியுரையே.

# ஒரு பொருள் இருசொல்

453. ஒரு பொருளிரு சொற் பிரிவில வரையார் (63)
(ஒரு பொருள் இருசொல் பிரிவு இல வரையார்)

ஆ. மொ. இல.

The use of two synonyms in pairs is not prohibited.

பி. இ. நூ.

நன். 397. 398

ஒரு பொருட் பலபெயர் பிரிவில் வரையார்
ஒரு பொருட் பன்மொழி சிறப்பினின் வழா
ஷ ஷ ஷ

இ. வி. 355, 356

முத்து. ஒ. 124

ஒரு பொருள் இருசொற் பிரிவில வரையார்.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் மரபுவழுக் காத்தது.

[1]உரை : ஒரு பொருள்மேற் கிடந்த இரு சொற் பிரிவின்றி நின்றன வரையப்படா, எ-று.

வ-று : [2]வையைக் கிறைவன் வயங்குதார் மாணகலம்

---

1. இவர் உரையைச் சேனாவரையர் மறுப்பர்.
2. பொருள் : வையைக்குத் தலைவனாகிய பாண்டியனின் விளங்கும் மாலை யணிந்த மாட்சியுடைய மார்பை ஏ தோழி ! நீ இன்று சேர்ப்பிப்பாயாக ; சேர்ப்பிக்க மாட்டாயாயின் யான் இறந்து படுதலால் கூடலார் கோவாகிய அப்பாண்டியனோடு நீயும் உலகறியும் படிப்பழிச்சொல்லுக்குட்படுவாய்

தையலாய் இன்றுநீ நல்குதி நல்காயேல்
கூடலார் கோவோடு நீயும் படுதியே
நாடறியக் கவ்வை யொருங்கு

வையைக்கு இறையெனப்பட்டானும் கோ எனப்பட்டானும் அவனாதலால் இவ்விரு சொல்லும் ஒரு பொருட்கண்மேலே நின்றன. பிறபொருட்குப் பிரியா; அங்ஙனம் நிற்பன அமையும் என்பதாம்.

இனிப் பிரிவில வரையப்படா எனவே, பிரிவுடையன வரையப்படும் என்பதாம். அஃதியாதோ வெனின்,

[1]கொய்தளிர்த் தண்டலைக் கூற்றப் பெருஞ்சேந்தன்
வைகலும் ஏறும் வயக்களிறே — கைதொழுதேன்
காலேக வண்ணனைக் கண்ணாரக் காணவெஞ்
சாலேகம் சார நட

இதனுள் 'கூற்றப் பெருஞ் சேந்தன்' என்றார், பின்னைக் 'சாலேக வண்ணன் என்றார். அவையிரண்டும் சொல்லும் பிரிவுடைய; அதனான் அமையா. யாவோ பிரிவெனின், 'காலேக வண்ணம்' என்பது சாந்து; கூத்தப் பெருஞ்சேந் தற்கேயுரித்தாய் நிற்பதொன்றன்று. காலேக வண்ணம் என்னும் சாந்து பூசினார்க் கெல்லாம் 'காலேக வண்ணர்' என்று பெயராம். அதனான் பிரிவுடைத்து; அமையாது என்பது.

மேல் கிளவியாக்கத்து. 'இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப் பெயர்க் கிளவியும்' (கிளவி 38) என்னும், 'சிறப்பினாகிய பெயர் நிலைக்கிளவிக்கு' (கிளவி. 41) என்றும், 'ஒரு பொருள்

---

பொருள்: கொய்தற்குரிய தளிர் தழைத்த சோலைகளையுடைய கூற்றத்துக்குரிய பெருந்சேந்தன் நாளும் ஏறிவரும் வெற்றி மிக்க களிறே! காலேக வண்ணனாகிய அவனை யான் கண்ணாரக் காணும் படி எம் சாளரவழியாக நடப்பாயாக. உன்னைக்கை தொழுது வேண்டுகிறேன்.

குறித்த வேறு பெயர்க்கிளவி' (கிளவி. 42) என்றும் ஒரு பொருள் மேல் இருபெயர் வழுவும், பல பெயர் வழுவும் கூறிப்போந்தான்; அவற்றோ டிதனிடை வேற்றுமை தெரிந்து கொள்க.

சேனா

இ-ள் : பொருள் வேறுபாடின்றி ஒரு பொருள் மேல் வரும் இரண்டு சொற் பிரிவின்றித் தொடர்ந்துவரின் அவற்றைக் கடியார், எ-று.

உ-ம் : 'நிவந்தோங்கு பெருமலை' எனவும், 'துறுகல் மீமிசை யுறுகண்' எனவும் வரும்.

பிரிவில என்றது வேறோர் சொல்லான் இடையிடப் படாது நிற்பன என்றவாறு,

இருசொல் ஒருபொருள்மேல் வருதல் எழுவகை வழுவினுள் ஒன்றன்மையான் ஈண்டுக் கூறினார்.

வையைக் கிழவன் வயங்குதார் மாணகலம்
தையலாய் இன்றுநீ நல்கினை நல்காயேல்
கூடலார் கோவோடு நீயும் படுதியே
நாடறியக் கவ்வை யொருங்கு

என்புழி வையைக்கிழவன், கூடலார்கோ என்பன ஒரு பொருளை வரைந்துணர்த்தலால் பிரிவிலவாகலின் வரையப் படாவென்றும்,

கொய்தளிர்த் தண்டலைக் கூத்தப் பெருஞ்சேந்தன்
வைகலும் ஏறும் வயக்களிறே—கைதொழுவல்
காலேக வண்ணனைக் கண்ணாரக் காணவெஞ்
சாலேகம் சார நட

என்புழிக் 'காலேக வண்ணன்' என்பது அச்சாந்து பூசினார் எல்லார்க்கும் பொதுவாய்க் கூத்தப்பெருஞ் சேந்தனையே வரைந்து ணர்த்தாமையின் அவை பிரிவுடையவாம் என்றும் உரையாசிரியர் உரைத்தாரால் எனின், அற்றன்று;

[1]நாணி நின்றோள் நிலைகண்டி யானும்
பேணின னல்லனோ மகிழ்ந வானத்து
அணங்கருங் கடவுள் அன்னோள் நின்
மகன்தாய் ஆதல் புரைவதாங் கெனவே (அகம் 16)

என்புழி, 'வானத்தணங்கருங் கடவுளன்னோள்' என்பது மகளிர்க் கெல்லாம் பொதுவாய் நாணி நின்றோளை வரைந்து ணர்த்தா தாயினும் சொல்லுவாசன் குறிப்பான் அவளையே யுணர்த்தினாற் போலக் 'காலேக வண்ணன்' என்பதூஉம் பொதுவாயினும் சொல்லுவான் குறிப்பாற் கூத்தப் பெருஞ் சேந்தனையே உணர்த்திப் பிரிவிலவாய் நிற்றலான் அவர்க்கது கருத்தன்றென்க.

தெய்

செப்பு வழு வமைத்தலை நுதலிற்று.

இ-ள் : ஒரு பொருள்மேல் இரண்டுசொற் பிரிவின்றிவரின் நீக்கப்படா, எ-று.

'உயர்ந்தோங்கு பெருமலை, 'உச்சிமீமிசை' 'நிலத்து வழி மருங்கிற் றோன்றலான' (பெயரி. 40) என்பன 'பிரிவில என் பதனான் ஒட்டிநிற்றல் வேண்டும்.

நச்

இஃது ஒருசொல் இருபொருள் உணர்த்துவதோர் மரபுவழு அமைக்கின்றது. இதனை, ஒருசொல் இருபொருள் பிரிவில வரையார்' எனமாறுக.

[1]இ-ள் : இருபொருள் ஒருசொல் பிரிவில வரையார் — ஒரு

---

1. பொருள் : மகிழ்ந! நாணி நின்றவள் தடுமாற்றம் கண்டு யானும் (தலைவி) வானத்திலுள்ள வருத்துதல் இல்லாத கடவுளாகிய அருந்ததியை யொத்தவளாகிய நின்காமக்கிழத்தியும் நின்மகனுக்குத் தாயாவது ஒக்கும் என்று அவளை விரும்பினேன் அல்லளோ.

1. உரை வேறுபாடு காண்க. இதுவலிந்து கொண்டது.

சொல் ஒருகால் கூறுதற்கண்ணே இரண்டு பொருளைப்புலப் படுத்தி இரண்டற்கும் பிரிவிலவாய் நிற்றலைச் சிறப்புடைய என்று சொல்லுவர் ஆசிரியர், எ-று.

'பிரிவில' என்றது இரண்டற்கும் ஒப்ப நிற்றலை.

உ-ம்: [2]குழல் வளர் முல்லையிற் கோவலர் தம்மொடு மழலைத் தும்பி வாய்வைத்தூத' (சிலப். 4:15, 16)

என்புழி 'குழல்வளர்முல்லை' என்று கூறிய பொழுதே ஆயர் ஊதும் குழலிலே எழுந்த முல்லை என்னும் பண்ணையும், மயிரிலே கிடந்த முல்லை என்னும் பூவையும் ஒருகாலத்தே புலப்படுத்தி இரண்டற்கும் பிரிவிலவாய் நின்றவாறு காண்க. இஃது, ஒரு சொல் ஒருகால் கூறுதற்கண் இரண்டு பொருளை யுணர்த்துதல் வழுவேனும் அமைக என அமைத்தார். இதனை உவமவியலுள் 'ஒரீஇக் கூறலும் '(உவம.33) என்னும் சூத்தி ரத்துச் செய்யுட்கு இலக்கணமாகக் கூறுமாறும் உணர்க. இங்ஙனம் சான்றோர் செய்யுட்களுள் பல இடத்தும் வருமாறு உணர்க.

'வரையார்' என்றதனான், இவை விகாரப்பட்டு நிற்பன வும் கொள்க.

[1]'பாடுதும் பாவை பொற்பே' (சீவக. 2046)

---

2. பொருள்: கோவலர் குழலிலே வாய்வைத்து வளரும் முல்லைப் பண்ணை ஊத எனவும், மழலை (இளந்) தும்பி கூந்தலில் உள்ள முல்லை மலரில் வாய் வைத்துத் தேனுண்ணவேண்டி ஊத எனவும் பொருள் கொள்க.

1. 'பாடுகம் பாவை பொற்பே பற்றி மற்றெமக்கு நல்கின்' (சீவக. 2046) என்பதில் 'பொற்பே' என்பதற்கு 'அழகே' எனப் பொருள் கோடலேயன்றிப் 'பொன்பேய்' எனவும் பொருள் கொள்ளுமாறு அமைந்துளது. இதில் 'பேய்' என்பது 'பே' என நின்றது விகாரம். பாவை யழகு முதலாக யாவும் எமக்குக் கொடுத்தால் பாடக் கடவேம் என்றொரு பொருளும், பாவை பொன்னாற் செய்த பேய் பற்றிக் கொடுத்தால் பாடக்கடவேம் என்றொரு பொருளும் காண்க.

என்றவழி ஒருகால் 'பொலிவே' என்று ஏகார வீறாயும் ஒரு கால் 'பொன்னாற் செய்த பேய்' என்று யகர வீறாயும் விகார மாயும் நின்ற வாறு காண்க. இவ்வாறு வருவன பிறவும் உணர்க.

இன்னும் 'உய்த்துக் கொண்டுணர்தல்' என்னும் தந்திர வுத்தியான் இச்சூத்திரத்திற்குச் செவ்வனே கிடந்தவாறும் பொருள் கொள்க.

ஒரு பொருளளையே உணர்த்தி நிற்கும் இரண்டு சொற்கள் தம்மிற் பிரிதல் இன்றி நிற்பன வற்றை நீக்கார் கொள்வர் ஆசிரியர், எ-று.

உ-ம் : நிவந்தோங்கு பெருமலை, துறுகல் மீமிசை என் றாற் போல்வன ஒருசொல் இடைவராமல் அடுக்கி நிற்பன வாம்.

## வெள்

இது மரபு வழுக் காக்கின்றது.

இ-ள் : பொருள் வேறுபாடின்றி ஒரு பொருள்மேல் வரும் இரண்டு சொல் பிரிவின்றித் தொடர்ந்துவரின், அவற்றை நீக்கார் ஆசிரியர், எ-று.

பிரிவில ஆவன வேறோர் சொல்லான் இடைப்படாது ஒட்டி நிற்பன.

உ-ம் : 'நிவந்தோங்கு பெருமலை' எனவும், துறுகல் மீமிசை எனவும் வரும்.

## ஆதி

ஒரு பொருள் தரும் இரு சொற்கள் பிரியாது சேர்ந்து நிற் பதும் கடிவதற்கில்லை.

உயர்ந்து ஓங்கிய மலை, தடித்துப் பருத்தபையன், குழித்து ஆழ்ந்தகண், யாதும் இல்லா ஏழைப்பையன்—முதல் இரு சொற்கள் ஒத்த பொருளுடையன. நிலைமையின் மிகுதியைக் காட்டுகிறது.

# பால்வழுவமைதி

454 ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி (64)
பன்மைக்காகு மிடனுமா ருண்டே
(ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக்கு ஆகும் இடனுமார் உண்டே).

ஆ. மொ. இல.

A noun of singular number may denote plural sense.

பி. இ. நூ.

**நேமி சொ. 69.**

வந்தொருமை பன்மை மயங்கினும்

**நன். 380.**

ஒருமையிற் பன்மையும் பன்மையின் ஒருமையும்
ஓரிடம் பிறவிடம் தழுவலும் உளவே.

**இ. வி. 300.**

ஒருமை பன்மையும் பன்மை ஒருமையும்
ஓரிடம் பிறவிடம் தழுவலும் உளவே.

**தொ. வி. 81.**

ஒருமையிற் பன்மையும் பன்மையின் ஒருமையும்
ஓரிடம் பிறவிடம் தழுவலும் உளவே.

**முத்து. ஓ. 125.** (தொல். சூத்திரமே).

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இதுவும் பால்வழு அமைக்கின்றது.

உரை : ஒருமைசுட்டி நின்ற பெயர்ச் சொல்லும் பன்மை கொண்டு முடியும் இடனும் உடைத்து, எ-று.

வ-று : அங்கலுழ் மாமை அகுதை தந்தை
அண்ணல் யானை யடுபோர்ச் சோழர்'' (அகம் 96)

எனவரும். இதனுள் 'தந்தை' என்கின்ற ஒருமை முறைப் பெயர் 'சோழர்' என்னும் பன்மை கொண்டு முடிந்தமையின் வழூஉவே யெனினும் அமையும் என்பது. ''யான் எம்மூர் புகுவல்'' என்பதும் அது.

சேனா

இ-ள் : ஒருமைக்குரிய பெயர்ச்சொல் பன்மைக்காகும் இடமும் உண்டு, எ-று.

உ-ம் : ஏவல் இளையர் தாய்வயிறு கரிப்ப' (அகம் 66) என்புழித் 'தாய்' என்னும் ஒருமை சுட்டிய பெயர் இளையர், என்பதனாற் 'றாயர்' என்னும் பன்மை உணர்த்தியவாறு கண்டு கொள்க.

'பன்மைக்காகும் இடனுமாருண்டே' என்பது ஒருமைச் சொற் பன்மைச் சொல்லோடு தொடர்தற்குப் பொருந்துமிடம் உண்டு என்பதூஉம்படநின்றமையான் அஃதை தந்தை அண்ணல்யானை அடுபோர்ச் சோழர்' என ஒருமைச்சொற் பன்மைச் சொல்லோடு தொடர்தலும் கண்டு கொள்க. ஈண்டு ஒருமைச்சொல் பன்மைச் சொல்லோடு மயங்குதலுடைமை யான் [2] ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவி (கிளவி.25) என்புழி அடங்காமை யறிக.

[3]ஏற்புழிக் கோடல் என்பதனான் இம் மயக்கம் என்று கொள்க.

---

1. யான் ஒருமை, எம் பன்மை-இதனை நச்-மறுப்பர்.
2. அவன் வந்தான் என்பதை அவர் வந்தார் என்பது.
3. அஃறிணைப் பெயர் பால்பகா நிலையதும் உண்டு ஆதலின் யானை வந்தது. யானை வந்தன எனவரும்) உயர்திணைக்கே கொள்ளல் வேண்டும்.

ஆகுமிடம் என்பதனால் பன்மையுணர்த்துதற்கும் பன்மை யுணர்த்துதற்கும் பன்மைச் சொல்லோடு தொடர்தற்கும் பொருந்தும் வழிக்கொள்கவென்பதாம்.

தெய்

ஒருமைப் பெயர் பன்மைப் பொருள் உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் ஒருமை குறித்த பெயர்ச்சொல் பன்மைக்கு ஆகும் இடனும் உண்டு, எ-று.

புலையன் எறிந்த பூசற் றண்ணுமை
ஏவல் இளையர் தாய் வயிறு கரிப்ப (அகம். 96)

என்றவழித் 'தாயர்' எனல் வேண்டுமாயினும் 'தாய்' என்பது பன்மை குறித்து நின்றது.

நச்

இது பால் வழு அமைக்கின்றது.

இ-ள் : ஒருமை சுட்டிய பெயர் நிலைக்கிளவி — ஒருமையைக் கருதிய பெயராகிய நிலைமையை யுடைய சொல், பன்மைக்கு ஆகும் இடனுமார் உண்டே — பன்மைக்குப் பொருந்தி நிற்கும் இடமும் உண்டு, எ-று

எனவே, பன்மை சுட்டிய பெயர்ச்சொல் ஒருமைக்குப் பொருந்தி நிற்கும் இடமும் உண்டு என்னும் பொருள் அருத்தாபத்தியால் தந்தது.

உ-ம் : 'அஃதை தந்தை, அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்' என்புழி சோழர் எல்லாரும் அஃதைக்குத் தந்தையாம் முறையராய் நிற்றலின், 'தந்தை' என்னும் ஒருமை சோழர் என்னும் பன்மையோடு தனித்தனி சென்று கூடுதலின் வழுவின்றேனும் ஈற்றுப் பன்மைபற்றி வழுவமைத்தார்.

"புலையன் எறிந்த பூசற் றண்ணுமை, ஏவல் இளையர் தாய்வயிறு கரிப்ப" என்புழி 'இளையர்' என்னும் பன்மை 'தாய்' என்னும் ஒருமையோடு பொருந்தும் வழி ஒருவற்கு ஒருத்தி தாயாம் தன்மையான் வழுவின்றேனும், ஈற்றுப் பன்மைபற்றி வழுவமைத்தார். இவை 'பொருள் இடையிடுதல்' என்னும் உத்தியாம்.

இன்னும் இதனானே,

[1]தினைத்தா ளன்ன சிறுபசுங்கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
குருகும் உண்டுதாம் மணந்த ஞான்றே (குறுந். 25)

எனப்[2]பன்மை சுட்டிய பெயர்ச்சொல் [3]ஒருமையோடு இயை பின்றி இயைதலின் வழுவாய் அமைவதூஉம் கொள்க 'குருகு' என்பது இயற்பெயராதலின் அதன்கண் பன்மையோடும் [4]'கால' என்பது இயைந்து, 'காலனவாகிய குருகுகள்' என நிற்பின், அஃது உண்டு என்னும் ஒருமைக்கு ஏலாமையின், 'குருகு' என்பது ஒருமையாயே நின்றது ஆதலின் வழுவேயாம்; 'கள்வன்தான் ஒருவனுமே; வேறு சிலர் ஆண்டு இல்லை'

---

பொருள்: தலைவர் தாம் என்னை மணந்த காலத்தில் (களவிற்புணர்ந்த காலத்தில்) தினையின் தாள் போன்ற கால்களை யுடையனவாகிய ஓடும் நீரில் தம் உணவுக்காக ஆனால் மீனையே பார்க்கும் குருகுகளும் உண்டு.

இதனைப் புறனடைச் சூத்திரத்தற் (456) கொள்வர் இளம்.

2. பன்மை சுட்டிய பெயர் 'தாம்' என்பது

3. ஒருமை என்றது அப்பாடலின் முதலடியில் வரும் தானே, கள்வன் என்பனவற்றை

4. கால குருகு என்பது காலையுடைய குருகு எனக்கொள்ள அமைத்தது என்பது நச்சர். கருத்து. காலனவாகிய குருகு எனின் உண்டு எனும் ஒருமை வினைகொண்டு முடிதல் தவறு. உண்டு என்பது ஒருமை பன்மைப் பொது வினை என்பது நன்னூலார் கொள்கை (நன் )

என்று கூறுகின்றாள், 'இரைதேரும் மனக்குறிப்பு உடைமையின் கேளாது; சிறிது கேட்டதாயினும் கொலைசூழ் குருகு ஆதலின் கூறுவதும் செய்யாது; இத்தன்மைத்து ஆயதோர் குருகும் உண்டு' என்று கூறுதலின் 'உண்டு' என்று ஒருமை வாசகத்தால் கூறினார்.

இனி, 'அவ்விரண்டனுள் கூர்ங்கோட்ட காட்டுவல்' என்புழி 'இரண்டனுள்' என ஒன்றை வகுத்தமையால் கூர்ங்கோட்டது என ஒருமையாகற்பாலது 'கோட்ட' எனப்பன்மையாய் நிற்றலும் இதனால் கொள்க.

என்நீர் அறியா தீர்போல இவைகூறின் (கலி.6) என ஒருவனைப் பன்மையாற்கூறிப் பின்னர் 'நின்னீர வல்ல நெடுந்தகாய்' என அவனை ஒருமையால் கூறுவன போல் வனவும், 'இறப்பத் துணிந்தனிர் கேண்மின் மற்று ஐய' (கலி. 2) என்றாற் போல்வனவும் இதனால் கொள்க.

இன்னும் இதனானே 'நம்பிமார், நங்கைமார், அன்னைமார்' என்றாற்போல்வன ஒருமைப்பெயர் அடுத்து நின்று 'மார்' ஈறு பன்மையுணர்த்துதலும் கொள்க.

'யான் எம்மூர் புகுவன், நீ நும்மூர் புகுவை' என்றாற் போல்வனவோ எனின், அவை 'யான்புகுவன், நீபுகுவை' என ஒருமை முடிபோடு முடிந்து நிற்ப, எம்மூர், நும்மூர் என்பன வேறோர் முடிபாய் நின்றன என்று கொள்க.

இனி, மன்ற மரா அத்த பேஎமுதிர் கடவுள்' (குறுந் 87) என்பது 'மராத்துக் கடவுள்' என நிற்கும். இவை போல்வன அன்றி, முன்னர்க் காட்டிய உதாரணங்கள் போல மயங்கி வருவன உளவேல், அவற்றையும் இச்சூத்திரத்தான் அமைத்துக் கொள்க.

வெள்

இது பால் வழு அமைக்கின்றது.

இ-ள்: ஒருமைக்குரிய பெயர்ச்சொல் பன்மைக்கு ஆகும் இடமும் உண்டு, எ-று.

உ-ம் : ‘ஏவலிளையர் தாய் வயிறு கரிப்ப’ என்புழித்தாய் என்னும் ஒருமைப்பெயர் ஏவல் இளையர் என்பதனால் தாயர் எனப்பன்மை யுணர்த்தியது.

‘பன்மைக்காகும் இடனுமாருண்டே’ என்பது, பன்மைச் சொல் ஒருமைச் சொல்லொடு தொடர்தற்குப் பொருந்தும் இடம் உண்டு என்ற பொருளும் தந்து நிற்றலால், “அஃதை தந்தை அண்ணல் யானை அடு போர்ச்சோழர்” எனத்தந்தை என்னும் ஒருமைச்சொல் சோழர் என்னும் பன்மைச் சொல் லோடு தொடர்தலும் கொள்ளப்படும்.

ஏற்புழிக் கோடலால் இம்மயக்கம் உயர்திணைக்கண்ணது என்று கொள்க.

ஆதி

ஒருமைப் பெயர் பன்மையைக்குறிக்கும் இடங்களும் உண்டு
மரம் சாய்ந்தது—மரம் ஒருமை
மரம் சாய்ந்தன—மரம் பன்மை
ஊறுகின்ற கிணறு—கிணறு பன்மை
பால் பகா அஃறிணைப் பெயர் ஒருமையாயினும் பன்மைப் பொருளில் வருகின்றது. இவ்வாறன்றி நல்லவன்—நல்லவர் எனப் பன்மை காட்டுகிறோம் ஆயினும் அது ஒருமையே

## ஆற்றுப்படையில் முன்னிலை ஒருமை முடிபு

455. முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி
பன்மையொடு முடியினும் வரைநிலை யின்றே
யாற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும் (65)

(முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி
பன்மையொடு முடியினும் வரைநிலை இன்றே
ஆற்றுப்படை மருங்கில் போற்றல் வேண்டும்.

ஆ. மொ. இல.

The second person singular, ending in plural is permissible ; this usage being allowed in 'Arruppadai'- the literature of guiding some to somebody els.

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இது செய்யுட்கு உரியதோர் முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : முன்னிலை சுட்டிய ஒருமைச்சொல் பன்மை கொண்டு முடியினும் வரைந்து மாற்றப்படாது ; ஆற்றுப்படைச் செய்யுளிடத்து. அதனை ஆண்டுப் போற்றியுணர்க, எ-று.

'கலம் பெறுகண்ணுளர் ஒக்கல் தலைவ' (மலைபடு. 50) என்புழித் 'தலைவ' என்பது ஒருமைப் பெயர். அது, பின்னை, 'ஒருவீர் ஒருவீர் ஓம்பினிர் கழிமின்' (மலைபடு 218) எனப் பன்மை கொண்டு முடிந்தது ; முடிந்ததே யெனினும் அமைக என்பது ; மற்று இதுவும் ஒருமைப்பெயர் பன்மை கொண்டு முடிதல் ஒக்கும் ஆகலின் 'முன்னர் ஒருமை சுட்டிய பெயர் நிலைக் கிளவி' (64). என்னும் சூத்திரத்துள் அடங்கும் பிற வெனின், அற்றன்று ; முன் செய்யுள் நோக்கிச் சொல்லினார் அல்லர் ; இனிச் செய்யுள் நோக்கிச் சொல்லினார். எங்ஙனம் ? முன்னிலை யொருமை பன்மை கொண்டு முடிதல், ஆற்றுப் படைச் செய்யுட்கு முன்னிலைக் கட்டுரை பயின்றமையானும், மேல்தலைக் கொண்டும் அச்செய்யுள் விதியுடைத்தொன்று ஆதலானும் அதனை அமைக்க வேண்டும்? அதனாற் சொல்லினார் அதற்கே வரைந்து என்பது.

மற்று, 'ஆற்றுப்படை மருங்கினானே' யமையாது போற்றல் வேண்டும் என்பதனால் பிறவும் உள ஈண்டுப் போற்றிப் யுணரப் படுவன என்பது.

நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளும்
என்னையே குறித்த நோக்கமொடு (அகம் 210)

என்புழித் தானும் அன்னாருள்ளாராகலின் 'பல்லே முள்ளேம்' எனற்பாற்றுமன ; ஆயினும் அஃது அமைக என்பது.

இனி, 'ஏவல் இளையர் தாய் வயிறு கரிக்கும்' எனற்பாற்று மன் ; ஆயினும் அமைக என்பது, மற்று இளையர் பல்லாரையும் உடையதாயைச் சொல்லிற்றாகப் பெறாதோ வெனின், அற்றன்று ஆண்டு ஆண் [1]பூசலாட்களாகலான் அவர்க்கெல்லாம் ஒரு தாயாதல் இயைபு இன்று என்பது.

இனி ஒருசாரார், 'கறையணிமிடற்றனை' என்னும் முன்னிலை யொருமை, 'கறையணி மிடற்றினவை' என்னும் அஃறிணைப் படர்க்கைப் பன்மையானும் முடிந்ததென்று காட்டுப. இனிக் 'கறையணிமிடற்றினவை' என்றது அத்தேவனார் கூளிகளை என்ப ஒருதிறத்தார். அற்றன்று பின்னையனையை யாதலின் அத்தேவனார் தம்மேல் ஏறும் ஆகலின் அமைக்க வேண்டும் என்பர் முன்னையுரைப்பார். பிறவும் இவ்வாறு வருவன போற்றி யுணரப்படும் என்றவாறு.

சேனா

இ ள் : முன்னிலை குறித்து நின்ற ஒருமைச்சொல் பன்மை போடு முடிந்ததாயினும் வரையப்படாது, அம்முடிபு ஆற்றுப் படைச் செய்யுளிடத்துப் போற்றியுணரப்படும், எ-று.

கூத்தராற்றுப்படையுள் 'கலம் பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ' (மலை படு. 50) என நின்ற ஒருமைச் சொற்போய் இரும்பேரொக்கலொடு பதம்மிகப் பெறுகுவிர்' (மலைபடு. 157) என்னும் பன்மைச் சொல்லொடு முடிந்தவாறு கண்டு கொள்க.

ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக் காகும் இடனுமாருண்டே (எச்ச. 64)

என்பதனான் இதுவும் அடங்குதலின் இச்சூத்திரம் வேண்டா வெனின், 'பன்மையொடு முடியும் இடனுமாருண்டே' என்னாது பன்மைக் காகும் இடனுமாறுண்டே' என்றாராதலின் ஆண்டுப்

---

1. பூசல் ஆட்கள் - போர் வீரர்.

பன்மைச் சொற் கொண்டு முடியாது ஒருமைச் சொற்பன்மை யுணர்த்துதலும் பன்மைச் சொல்லொடு ஒரு பொருட்டாகிய துணையாய் பயங்குதலும் உணர்த்தினார். அதனான் இக் கொண்டு முடிபு செய்யுட்குரித் தென்றமையானும் ஆண்டடங் காமையறிக.

பொதுவகையான் ஆற்றுப்படை மருங்கின் என்றாராயினும் சுற்றத்தோடு சுற்றத் தலைவனை ஆற்றுப் படுத்தற் கண்ணது இம்மயக்கம் என்பது பாதுகாத்துணர்க என்பார் 'போற்றல் வேண்டும்' என்றார்.

'பான்மயக் குற்ற ஐயக்கிளவி' (கிளவி 23) என்பதனாற் கூறிய ஒருமைப்பன்மை மயக்கம் வழுவமைதியாயினும் இலக் கணத்தோடு ஒத்து பயின்றுவரும். ஒருமை சுட்டிய பெயர் நிலைக்கிளவி பன்மைக்காதலும், முன்னிலை யொருமை பன்மை யொடு முடிதலும் அன்னவன்றிச் சிறு வழக்கினவாதலின் ஆண்டுவையாது ஈண்டு வைத்தார்.

ஒருவர் ஒருவரை ஆற்றுப்படுத்தற்கண் முன்னிலை யொருமை பன்மையொடு முடிதல் வழக்கிற்கும் ஒக்கும் ஆக லான் ஆற்றுப்படையெனப் பொதுவகையாற் கூறினார்.

தெய்

இது ஒருமை பன்மை மயக்கம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : முன்னிலையைக் குறித்த ஒருமைச் சொல்பன்மை யொடு முடியினும் நீக்கப்படாது. அதனை ஆற்றுப்படுக்கும் வழி பாதுகாத்துக் கூறுக, எ-று.

'ஆற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும்' எனவே, அஃதல்லாதவழிப் போற்றாமையும் கூறப்படுமாயிற்று. ஆற்றுப் படை மருங்கிற் போற்றலாவது : பெரும்பாணாற்றுள் 'புல்லென் யாக்கைப் புலவுவாய்ப்பாண' (22) என அண்மைவிளியேற்று முன்னிலை குறித்து நின்ற ஒருமைப் பெயர் 'நீயிரும் பல்வேல் திரையற் படர்குவிராயின் (27) எனப்பன்மையொடு முடிந்தது.

கூத்தராற்றுப்படையுள், 'கலம் பெறும்கண்ணுளர் ஒக்கல் தலைவ' (மலைபடு-50) என அண்மைவிளியேற்று முன்னிலை குறித்து நின்ற ஒருமைப் பெயர் 'நீயிரும் நன்னற் படர்ந்த கொள்கையொடு முடிந்தது.

இவ்வாறு வருங்காற் கூத்தரும் பாணரும் விறலியருமாகி யாண்டுச் செல்வார் பலராயுழியே வரப்பெறுவது என்றும் தனியொருவனாயின் மயங்கப் பெறாதென்றும் கொள்க.

இனி, ஆற்றுப்படை யல்லாதவழிப் பலரில் வழியும் மயங்கப் பெறும்.

[1]"குறிப்பேவல் செயல்மலைக் கொளைநடை யந்நணீர்
வெவ்விடைச் செலல்மாலை யொழுக்கத்தீர் இவ்விடை
என்மகள் ஒருத்தியும் பிறள் மகன் ஒருவனும்
தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சியர்
அன்னார் இருவரைக் காணிரோ பெரும" (கலி. 9)

எனவும்,

[2]மறப்பருங்காதல் இவள் ஈண்டொழிய
இறப்பத் துணிந்தனிர் கேண்மின்மற் றைய (கலி. 2)

எனவும்,

[3]"என்னீர் அறியாதீர் போல இவைகூறின்

---

1. பொருள் : குறிப்பாற் செயலாற்றும் ஐம்புலன்களும் நுங்கள் ஏவல்படிச் செயல்புரியும் கோட்பாட்டையும் ஒழுக்கத்தையும் உடைய அந்தணர்களே! கொடிய இப்பாலைவழியிற் செல்லுதலை இயல்பாகவுடைய வழக்கத்தையுடையீர் ஆதலின் (நுங்களை வினவுகிறேன்) இவ்வழியில் என்மகன் ஒருவனும் பிறள் மகள் ஒருத்தியும் தங்களுக்குள்ளே கொண்டதாமறிந்த புணர்ச்சியினராய் உள்ள அன்னார் இருவரைக் கன்டனிரோ?.
இப்பகுதியில் அந்தணிர், பெரும என வந்தன பன்மை யொருமை மயக்கம்.
2. இதில் துணிந்தனிர், ஐய என்பன மயக்கம்.
3. இதில் நீர் அறியாதீர் எனவும் நின் எனவும் வந்தன மயக்கம்.

நின்னீர வல்ல நெடுந்தகாய்'' (கலி. 6)
எனவும் வரும். பிறவுமன்ன.

## நச்

இஃது ஆற்றுப்படைக்கண் முன்னிலை யொருமை பன்மையொடு முடிக என்கின்றது.

இ-ள் : முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி—முன்னிலை யிடத்தைக் கருதின ஒருமைப்பெயர், பன்மையொடு முடியினும் வரைநிலை இன்று—பன்மைச் சொல்லோடு முடியினும் நீக்கும் நிலை இன்று, ஆற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும்—அம்முடிபு ஆற்றுப்படைச் செய்யுளிடத்துச் சுற்றத்தார் தலைவனை ஆற்றுப்படுத்தற் கண்ணதாகப் பாதுகாத்து உணர்த்தல் வேண்டும், எ-று.

உ-ம் : கூத்தராற்றுப் படையுள் 'கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ' எனநின்ற ஒருமைச் சொல் முடிவுழி, 'இரும்பே ரொக்கலொடு பதமிகப் பெறுகுவிர்' என்னும் பன்மை பொடு முடிந்தவாறு காண்க.

இவ்விரண்டு சூத்திரத்தானும் கூறிய மயக்கம் சிறு வரவிற் றாய் இலக்கணவழக்கு உண்மையின், 'பான் மயக்குற்ற' (கிளவி. 23) என்னும் சூத்திரத்தால் கூறிய ஒருமை பன்மை வழுவமைதி யாகிய இலக்கண வழக்கோடு உடன் வையாது ஈண்டு வைத்தார்.

## வெள்

இது செய்யுட் குரியதோர் முடிபு கூறுகின்றது.

இ-ள் : முன்னிலை குறித்து நின்ற ஒருமைச் சொல், பன்மையொடு முடிந்தாயினும், நீக்கப்படாது; அம் முடிபு ஆற்றுப்படைச் செய்யுளின்கண் போற்றியுணரப்படும், எ-று.

'ஆற்றுப்படைமருங்கின்' எனப் பொதுவயையாற் கூறினா ராயினும், சுற்றத் தலைவன் ஒருவனை நோக்கி அவனது சுற்றத் துடன் ஆற்றுப்படுத்தற்கண் வருவது இவ் ஒருமை பன்மை மயக்கம் என்பதனைக் குறித்துணர்க என அறிவுறுத்துவார் 'ஆற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும்' என்றார்.

கூத்தராற்றுப் படையுள் 'கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ' என நின்ற முன்னிலை யொருமைச்சொல், 'இரும்பேர் ஒக்கலொடு பத மிகப் பெறுகுவிர்' என்னும் பன்மைச் சொல் லொடு முடிந்தவாறு காண்க. ஒருவரை யொருவர் ஆற்றுப் படுத்தற்கண் முன்னிலை யொருமை பன்மையொடு முடிதல் செய்யுட்கேயன்றி வழக்கிற்கும் ஒக்கும் ஆதலால் ஆற்றுப் படையெனப் பொதுவகையாற் கூறினார்.

ஆதி

முன்னிலை யொருமையாகத் தொடங்கியது பன்மையாக முடியினும் ஆற்றுப்படையில் தள்ளுவதற்கில்லை; ஏற்கத் தக்கதே.

ஒக்கல்தலைவ - ஒக்கலொடு பதம் மிகப் பெறுகுவிர் - தலைவ - ஒருமை, பெறுகுவிர் எனப்பன்மை வினை கொண்டது கூத்தராற்றுப்படை.

விரகு அறிபொரு - கடைக்கூட்டுதிர் - பொருநராற்றுப்படை

முதுவாய் இரவல — கலவையொடு பெறுகுவிர்—சிறு பாணாற்றுப் படை

புலைவாய்ப்பாண— இயக்கினர் கழிமின்— பெரும்பாணாற்றுப் படை

## அதிகாரப் புறனடை

456 செய்யுண் மருங்கினும் வழக்கியன் மருங்கினு
மெய்பெறக் கிளந்த கிளவி யெல்லாம்
பல்வேறு செய்தியி னூனெறி பிழையாது
சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல் (66)

(செய்யுள் மருங்கினும் வழக்கு இயல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்
பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
சொல்வரைந்து அறியப் பிரித்தனர் காட்டல்)

To know the nature of all the words found in literature and usage they must be illustrated individually in their many different aspeets without Violating the rules of grammar.

பி. இ. நூ.

**நேமி.சொ. 70**

புல்லா எழுத்தின் கிளவிப் பொருள் படினும்
இல்லா இலக்கணத்த தென்றொழிக — நல்லாய்
மொழிந்த மொழிப்பகுதிக் கண்ணே மொழியா
தொழிந்தனவும் சார்த்தி யுரை

**பிரயோ. 50.**

ஆக்கும் பிரதி பதத்துடனே அழியா நிருத்தி
நோக்கும்படி யச்சனைய உதாரணம் நோக்கினர் ஈர்
தூக்கும் பொழுது அரிதாவ தொன்றில்லை சொல்லாதனவும்
காக்குந் திறங்கண்டு காப்பதுவேகடன் கற்றவர்க்கே.

**நன். 461**

சொற்றொறும் இற்றிதன் பெற்றியென் றனைத்தும்
முற்ற மொழிகுறின் முடிவில வாதலின்
சொற்றவற்றியலான் மற்றைய பிறவும்
தெற்றென வுணர்தல் தெள்ளியோர் கடனே

**இ. வி. 372** ஷ ஷ ஷ

இளம்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இவ்வதிகாரத்து எடுத்தோத்தே இலேசேயன்றி இவ்வாற்றான் முடியாது நின்ற வற்றுக்கெல்லாம் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

**உரை :** செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் முன்னரே முடிபு கூறப்படாது நின்ற சொற்கள் இவையென்று தெரிந்து அவற்றை உத்திவகை இலக்கணத்தோடு படுத்திக்காட்டுக, எ-று.

[1]வ-று : தினைத்தா ளன்ன சிறுபசுங் கால
ஒழுநீர் ஆரல் பார்க்கும்
குருகு முண்டுதாம் மணந்த ஞான்றே (குறுந்-25)

---

1. இதனை 'ஒருமைசுட்டிய பெயர்நிலைக்கிளவி' (454) என்னும் சூத்திரத்தில் கூறுவர் நச்சினார்க்கினியர்.

என்புழிச் 'சிறுபசுங்கால' என்று பன்மையாற் கூறிப் பின்னைக் 'குருகும் உண்டு' என்று ஒருமையாற் கூறுதல் வழுவாயிற்று; ஆயினும் அமைக என்பது.

'இரண்டனுட் கூர்ங்கோட்ட காட்டுவல்' என்புழிக் கூர்ங் கோட்டது எனற்பாற்று; என்னை? இரண்டனுள் என்றாற் பின்னை ஒன்றே யாகலின் என்பது. ஆயினும் அமைக என்பது.

இனி, வழக்கினுள் எம்முளவனல்லன், நும்முளவனல்லன் என்னும். பிறவும் இவ்வாறு இடவழுப்பட வருவன அமைத்துக் கொள்க.

இனி, ஒருசாரார் சம்பு சள்ளை சத்தி என்பன ஈண்டுக் காட்டுவாரும் உளர்.

பிறவும் முடியாது நின்றனவெல்லாம் இதுவே விதியோத்தாக முடித்துக் கொள்க என்பது.

ஒன்பதாவது எச்சவியல் முற்றிற்று.
சொல்லதிகாரமும் உண்மைப் பொருளும் வரலாறும் முடிந்தன.

சேனா

இ-ள் : செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் இல்வதிகாரத்தின் கட் பொருள்பெறச் சொல்லப்பட்ட சொல் எல்லாவற்றையும் பல்வேறு செய்கையுடைய தொன்னூல் நெறியிற் பிழையாது சொல்லை வேறுபடுத் துணருமாற்றாற் பிரித்துக் காட்டுக எ-று.

என்றது 'நிலப்பெயர் குடிப்பெயர்' எனவும் (பெய. 11) 'அம்மாம் எம்ஏம்' எனவும் (வினை. 5) பொதுவகையாற் கூறப் பட்டன அருவாள நிலத்தான் என்னும் பொருட்கண் 'அரு வாளன்' எனவும், சோழ நிலத்தான் என்னும் பொருட்கண் 'சோழியன்' எனவும் ; இறந்த காலத்தின்கண் உண்டனம், உண்டாம் எனவும்; நிகழ்காலத்தின் கண் உண்ணாநின்றனம், உண்ணா நின்றாம், உண்கின்றாம் எனவும் ; எதிர் காலத்தின் கண் உண்குவம், உண்பாம் எனவும் வேறுபட்டு வருமன்றே ? அவ்வேறு பாடெல்லாம் கூறிற் பல்கும் என்றஞ்சிக் கூறிற்றில னாயினும், தொன்னூல் நெறியிற் பிழையாமல் அவ்வேறு பாடுணரப் பிரித்துக் காட்டுக நூல்வல்லார் என்றவாறாயிற்று.

இது பிற நூல்முடிந்தது தான் உடம்படுதல் என்னும் தந்திர வுத்தி. பிறவுமன்ன செய்கை—விதி.

'சொல் வரைந்தறியல்' எனவே, வரைந்தோதாது பொது வகையான் ஓதப்பட்டவற்றின் மேற்று இப்புறனடை யென்பதாம்.

இனி ஓர் உரை : செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் என்னாற் கிளக்கப்படாது தொன்னூலாசிரியராற் கிளக்கப்பட்டு எஞ்சி நின்ற சொல் எல்லாவற்றையும் அவ்வத் தொன்னூல் நெறியாற் பிழையாமைச் சொல் வரைந்துணரக் கொணர்ந்து பிரித்துக் காட்டுக என்றவாறு.

என்னாற் கிளக்கப்படாது என்பது பெற்றவாறு என்னை யெனின், கிளந்தன பிறநூலிற் கொணர்ந்து காட்டல் வேண்டாமையிற் கிளக்கப்படாதன என்பது பெறப்படும் என்க.

புறனடையாற் கொள்ளப்படுவன; 'யானு நீயு மவனும் செல்வேம்' எனவும், யானும் நீயும் செல்வேம் எனவும் ஏனை யிடத்திற்குரிய சொல்றன்மைச் சொல்லோ டியைந்தவழித் தன் மையான் முடிதலும், அவனும் நீயும் சென்மின் எனப் படர்க் கைச்சொல் முன்னிலையோ டியைந்தவழி முன்னிலையான் முடி தலும் 'நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளும்'

என்புழிப் 'பல்லே முள்ளும்' எனத் தன்மையாகற் பாலது 'பல்லோருள்ளும்' எனப் படர்க்கைப் பன்மையாய வழி அமை தலும்,

முரசுகெழு தானை மூவருள்ளும்'
அரசெனப் படுவது நினதே பெரும (புறம். 35)

என்புழி மூவிருள்ளும்' என முன்னிலையாகற்பாலது 'மூவருள்ளும்' எனப் படர்க்கையாய வழி அமைதலும், 'இரண்டனுட் கூர்ங் கோட்ட காட்டுவல்' என்புழிக் 'கூர்ங்கோட்டது' என ஒருமை யாகற்பாலது 'கூர்ங்கோட்ட' எனப் பன்மையாய வழி அமைத லுமாம். பிறவும் உளவேனும் கொள்க.

அகத்திய முதலாயின எல்லா விலக்கணமும் கூறலிற் 'பல்வேறு செய்தியினூல்' என்றார்.

இவ்விரண்டுரையும் இச்சூத்திரத்திற்கு உரையாகக் கொள்க.
எச்சவியல் முற்றிற்று
சொல்லதிகாரச் சேனா வரையருரை முற்றுப் பெற்றது.

## தெய்

இவ்வதிகாரத்துள் ஓதப்பட்ட எல்லாச் சொற்கும் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : செய்யுளிடத்தும் பொருளுணரச் சொல்லப்பட்ட சொற்களெல்லாம் ஈண்டு ஓதிய இலக்கணத்தான் முற்றுப் பெற்றில வாயினும், பலவகைப்பட்ட ஆசிரியமத விகற்பத்தான் வரும் இலக்கணத்திற் பிழையாமல் யாதானுமொரு சொல்லாயினும் பாகுபடுத்துணருமாறு வகுத்துக் காட்டி யுணர்த்தும் நூலுணர்ந்தார், எ-று.

பிறநூல் முடிபினான் முடியினும் இலக்கணப் பிழைப்பின் றாம் என்றவாறு.

[1]கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர
இன்னே வருகுவர் தாயர் (முல்லைப் 15, 16)

என்றவழி ஒன்றனைக் கூறும் தன்மைக் கிளவியின் அடங்காமையின் இதன் இலக்கணம் வேறுவேண்டியது.

[2]வளியிடை வழங்கா வானஞ்சூடிய
மண்டிணி கிடக்கை (புறம். 25)

என்றவழியும், 'நெடிய வலிய ஆள்' எனவும் பெயரெச்சம் அடுக்கி வந்தது.

---

1. பொருள் : வளைந்த கோலையுடைய கோவலர் பின்னிருந்து ஓட்டிவர இப்பொழுதே பசுக்கள் வரும். இதில் பசுக்களைத் தாயர் என்றதும் வருகுவர் என்றதும் வழு. இது பலவற்றைத் உயர்த்திக் கூறிது ஒன்றனைப் பன்மையாற் கூறியதன்று. அதனான் 'ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்' (கிளவி.27) என்னும் சூத்திரத்தில் 'ஒன்றனைக் கூறும் பன்மைக்கிளவி என்பதில் அடங்காது.

2. வழங்கா, சூடிய என்னும் பெயரெச்சங்கள் அடுக்கி மண்டினி கிடக்கை என்னும் பெயர் கொண்டன.

நெல்லரியும் இருந்தொழுவர் (புறம்.24)

என்னும் புறப்பாட்டு முற்றுப் பெற் றடுக்கி வந்தது.

[3]ஒன்னா தார்க் கடந்தடூஉம் உரவுநீர் மாகொன்ற
வென்வேலான் குன் றின்மேல் (கலி. 27)

என் றவழியும் அடுக்கி வந்தது.

[4]வினைத் தொகைப் புறத்தும் உவமத் தொகைப் புறத்தும் பொருளொற்றுமைப்படாது அன்மொழித் தொகையாகிச் சான் றோர் செய்யுளகத்து வரின் இச்சூத்திரம் இடமாக அமைத்துக் கொள்க.

'நின்னகண்ணியும் ஆர்மிடைந்தன்றே' என்பது நின்னுடைய என்னும் பொருண்மைக்கண் ஒட்டி, [5]அவ்வாய்பாடு குறித்து நின்றது. பிறவும் எடுத்தோதிய இலக்கணத்து மாறுபட்டு வருவன வுளவேல் இச்சூத்திரத்தான் அமைத்துக் கொள்க.

ஒன்பதாவது எச்சவியல் முற்றும்.

சொல்லதிகாரம் - தெய்வச்சிலையார் உரை முற்றிற்று.

நச்

இஃது யான் விரித்துக் கூறாதனவற்றை விரித்துக் கூறிக் கொள்க என அதிகாரப் புறனடை கூறுகின்றது.

இ ள் ; செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும் இவ் வதிகாரத்தின்கண் செய்யுளிடத்தும் வழக்கிடத்தும், மெய் பெறக் கிளந்த கிளவி யெல்லாம்- சிலவற்றிற்கு ஞாபகமாகப் பொருள்

---

3. அடூஉம், கொன்ற என்னும் பெயரெச்சங்கள் அடுக்கி 'வென்வேலான்' என்னும் பெயர் கொண்டன.

4. அன்மொழித் தொகையானது பண்புத் தொகை, வேற்று மைத் தொகை, உம்மைத்தொகை என்னும் மூன்று பற்றி வரும் என ஆசிரியர் கூறினமையால் (எச்ச.23) இவ்விரண்டும் புறனடையிற் கொள்ளப்பட்டன.

5. அவ்வாய்பாடு-பெயரெச்ச வாய்பாடு.

பெறச் சொல்லப்பட்ட சொற்கள் எல்லாவற்றையும், பல்வேறு செய்தியின் நூல் நெறி பிழையாது- செம்பொருளவாய்ப் பலவாக வேறு படுத்திய விரிவுகளையுடைய அகத்தியத்திற் கூறிய நெறியில் தப்பாமல், சொல் வரைந்து அறியப் பிரித்தனர் காட்டல்- சொல்லை வேறுபடுத்து மாணாக்கன் உணருமாறு நுண்ணுணர்வுடையோர் உரையானும் காண்டிகையானும் பிரித்துக் காட்டுக, எ-று.

அங்ஙனம் உணரப் பிரித்துக் காட்டுமாறு என்னை? எனின், இரண்டாவது ''வினையே வினைக் குறிப்பு அவ்விரு முதலிற்றோன்றும்'' (வேற்.10) என்றதற்கு 'மூவகையாகிய வினைச் சொல்லினும் வினைக் குறிப்புச் சொல்லினும் பிறக்கும் காரணங்கள் எட்டனுள் செயப்படு பொருட் கண்ணே இரண்டாவது தோன்றும் என்றும், அச்செயப் படு பொருள்கள்தாம் மூவகைய என்றும், மூன்றாவதற்கு ஓதிய வினைமுதல் இயற்றும் வினை முதலும் ஏவும் வினை முதலும் என இருவகைய என்றும், கருவி முதற் காரணமும் துணைக் காரணமும் என இருவகைய என்றும், நான்காவதற்கு ஓதிய கொடைப்பொருள் இருவகைய என்றும், ஐந்தாவதற்குப் பொருள் நால்வகைய என்றும், அதன் கண் பொருள் உறழ் பொருவும் உவமப் பொருவும் ஆம் என்றும், ஏதுகாரக ஏதுவும் ஞாபக ஏதுவும் ஆம் என்றும், ஆறாவதற்குத் தற்கிழமை ஐ வகைய பிறிதின்கிழமை மூவகைய என்றும், பிறவும் வேற்றுமை யோத்தினுட் பிரித்துக் காட்டினாம்.

இனி, 'வினையெனப்படுவது' (வினை. 1) எனப்பொதுப் படக்கூறிய முதல் நிலைகளை இன்னவாறு வரும் எனப் பிரித்துக் காட்டியும், அவை எடுத்தல் ஓசையான் முன்னிலை ஏவல் ஒருமை முற்றாய் நிற்கும் என்றும், [1]கடத றக்கள் முதல் நிலையையடுத்து வருங்கால் இறப்பும், ஈற்றினையடுத்து வருங்கால் எதிர்வும் உணர்த்தும் என்றும், 'நில் கின்று என்பன

---

1. உண்டன—உண்+ட் என டகரம் பகுதியை யடுத்து வந்து இறந்த காலம் காட்டியது. வந்தது—வா+த் எனத்தகரம் பகுதியையடுத்து இறந்தகாலம் காட்டியது இப்படிப் பிறவும். வருது என்பதில் வா+து எனத் தகரம் உகரத்துடன் அதாவது விகுதியுடன் சேர்ந்து எதிர் காலம் காட்டியது.

நிகழ்காலம் உணர்த்தும் என்றும், [2]பகர வகரம் எதிர் காலம் உணர்த்தும் என்றும், [3]ஏனையெழுத்துக்கள் இன் பெற்றும் பெறாதும் உகரம் பெற்றும் பெறாதும் வரும் என்றும், [4]வினைக் குறிப்புக்கள் பண்பாம் காலத்தும் வினைக் குறிப்பாம் காலத்தும் வேறு வேறு பொருள் உணர்த்தும் என்றும், [5]விரவு வினைகள் பிரிவு வேறு படூஉம் செய்திய ஆம் காலத்து முடிக்குஞ் சொல்லானும் அன்றித் தம்முள்ளே பாலும் இடமும் குறித்துக்கொள்ளும் தன்மையை யுடைய என்றும், வினையெச்சங்கள் காலம் காட்டும் எழுத்துக்கள் பெறும் என்றும், [6]அவை திரியும் என்றும், அவை காரண காரியம் பெறும் என்றும், பெயரெச்சங்களுள் காரணப்பொருட்டாய் வருவன கருவிக்கண் அடங்கும் என்றும் பிறவும் வினையியலுட் பிரித்துக் காட்டினாம்.

இனி, அறுவகைத் தொகையும் தொகுங்கால் இன்ன சொற்கண்ணே இன்ன தொகை தொகும் என்றும், முற்கூறிய வினைச் சொற்கள் தாமும் சில முக்காலமும் சில ஒரோவோர் காலமும் உணர்த்தும் என்றும், அவை பெயர்கள் பெறுங்கால் இன்னவாறே பெயர்கள் பெறும் என்றும், பிறவும் எச்சவியலுள் பிரித்துக்காட்டினாம்.

இனி, 'சொல் வரைந்தறியப் பிரித்தனர் காட்டல்' என்பதனால், 'திரையன் ஊர்' என்பது 'திரையனால் செய்யப்பட்ட ஊர்' எனவும், 'திரையனது ஊர்' எனவும் மூன்றாவதும் ஆறாவதும் விரிந்தது.

---

2. உண்ப, உண்ணுவ எனக் காண்க.

3. அ, து போலும் எழுத்துகள் எஞ்சிய, எஞ்சின எனவும், போயது, போயினது எனவும் இன்பெற்றும் பெறாதும் வரும்.

4. நல்லன் வினைக்குறிப்பு. பண்பாம் காலத்து நன்மையன் என்றும் வினைக்குறிப்பாம் காலத்து நல்லனாயினான் என்றும் பொருள்படும்.

5. விரவு வினைகள் : தன்மை முன்னிலை வியங்கோள் வினைகளும் வேறு இல்லை உண்டு என்பனவும்.

6. திரிதல் வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குரிய (எச்ச. 61.) என்பதிற் காண்க.

'கடிப்பகை' என்பது' [1]நான்காவதும், [2]ஆறாவதும், கடியாகியபகை எனப் பண்பும் விரிந்தது.

'ஏழேகால்' என்பது, 'ஏழும் காலும்' என உம்மையும், 'ஏழே கால் நிலமான் ஊர்' என அன்மொழியும் விரிந்தது.

[3]'சொல்லிலக்கணம்' என்பது, ஆறாவதும் நான்காவதும் ஏழாவதும் விரிந்தது ; சொல்லிலக்கணம் கூறிய நூல் என ஆகு பெயருமாய் நின்றது.

[4]'பொன்மணி' என்பது மூன்றாவதும், ஐந்தாவதும், ஏழாவதும் பொன்னும் மணியும் என உம்மையும் விரிந்தது.

[5]'கருப்புவேலி' என்பது நான்காவதும், ஆறாவதும், ஏழாவதும், மூன்றாவதும், ஐந்தாவதும் விரிந்தது.

[6]'இயலிசை' என்பது ஆறாவதும் ஏழாவதும், இயலும் இசையும் என உம்மையும் இயல்கின்ற இசை என வினையும, இயலாகிய இசை எனப்பண்பும் விரிந்தது.

[7]'உரைவிரி' என்பது ஆறாவதும், ஏழாவதும், நான்காவதும், இரண்டாவதும், 'உரைக்கும் விரி' என வினையும் உரை விரியையுடையது என அன்மொழியும் விரிந்தது.

---

1. கடிக்குப்பகை.
2. கடியதுபகை. (கடி—பேய்)
3. சொல்லது இலக்கணம் ஆறாவது. சொல்லுக்கு இலக்கணம் நான்காவது.
4. பொன்னாலாயமணி, பொன்னின் இயன்றமணி, பொன்னின் வைத்தமணி எனக்காண்க.
5. கரும்புக்கு வேலி, கருப்பினது வேலி, கரும்பின்கண் வேலி, கரும்பால் ஆயவேலி, கரும்பினின் வேலி எனக் காண்க.
6. இயலது இசை, இயலின்கண் இசை, எனக்காண்க.
7. உரையது விரி, உரைக்கு விரி, உரையை விரி எனக்காண்க.

[8]கருத்துப் பொருள் என்பது இரண்டாவதும், மூன்றாவதும், ஐந்தாவதும், நான்காவதும், ஆறாவதும், ஏழாவதும், கருத்தும் பொருளும் என உம்மையும் விரிந்தது.

[9]சொற்பொருள் என்பது, மூன்றாவதும், நான்காவதும், ஐந்தாவதும், ஆறாவதும், சொல்லும் பொருளும் என உம்மையும், சொல்லாகிய பொருள் எனப்பண்பும் விரிந்தது.

இவ்வாறே பிற சொற்களும் தொக்கு விரியுமாறு அறிந்து பிரித்துக் காட்டுக.

'இவன்யார் என்குவை யாயின் இவனே' (புறம். 13) என்னும் புறப்பாட்டினுள், சேரனை முன்னிலையாக்கி முடமோசியார் கூறுகின்ற காலத்து, 'இதன்' என்பது முன்னிலைப் படர்க்கையாய் நின்றது. இவ்வாறு வருவனவும் பிறவும் பிரித்துக் காட்டுக.

கொல், செல், வெல் என்பன லகரம் னகரமாய்த் திரிந்து தனக்கேற்ற றகரவொற்றுப் பெற்றுப்பாலும் இடமும் காட்டும் 'ஆன் ஏறிக் கொன்றான், சென்றான், வென்றான் என நின்றன.

சோறு சோறும், சேறு சேறும், வேறு வேறும் என்பன முதல் நிலை நீண்டு லகர வேற்றுக் கெட்டுத் தமக்குரிய ஒருமைத்தன்மையீறும் பன்மைத்தன்மையீறும் பெற்றுநின்றன.

'வா' என்பது வந்தான், வருகின்றான் என முதல் நிலை குறுகி கால எழுத்திற்கேற்ற இடைநிலை யெழுத்துப் பெற்று வந்தன.

'கொள்' என்பது கொண்டான், கோடு, கோடும் என ளகரம் ணகரமாயும் கெட்டும் முதல்நிலை நீண்டும் வந்தன.

---

8. கருத்தை விளக்கும் பொருள், கருத்தால் விளங்கும் பொருள். கருத்தினின்றும் விளங்கும் பொருள், கருத்துக்குப் பொருள், கருத்தினது பொருள், கருத்தில் உள்ள பொருள் எனக்காண்க.

9. சொல்லால் விளங்கும் பொருள், சொற்குப் பொருள், சொல்லிலிருந்து விளங்கும் பொருள், சொல்லது பொருள் எனக்காண்க.

கை வாரம்போல்வானைக் 'கைவாரி' எனவும், திரு இல்லாதானைத் 'திருவிலி' எனவும், அறிவு இல்லாதானை 'அறுவிலி' எனவும், நூல் ஓதினானை 'நூலோதி' எனவும் இவ்வாறே [1]ஈறு திரிந்து வருவனவும் பிறவும் பிரித்துக் காட்டுக.

[2]வில்லி வாளி வினைக்குறிப்புமுற்று ஈறு திரிந்த பெயர்.

[3]வலைச்சி, பனத்தி, வெள்ளாட்டி முதலியன சகரமும் தகரமும் டகரமுமாகிய இடைநிலை பெற்றன.

[4]சொட்டிச்சி, கணக்கச்சி முதலியன இச்சு என்னும் இடைநிலை பெற்றன.

[5]கணவாட்டி - இவ்வினைப் பெயர் டகரம் பெற்றது.
இன்னும் இவ்வாறே வருவன பிறவும் பிரித்துக் காட்டுக.

'கிள்ளிகுடி' - கிள்ளியுடைய குடிமக்கள் இருக்கும் ஊர் எனவும், கீழ்வயிற்றுக்கழலை - கீழ்வயிற்றின்கண் எழுந்த [6]கழலை போல்வான் எனவும் அன்மொழித் தொகையாம்.

'வடுகக் கண்ணன்' வல்லொற்று அடுத்தால் 'வடுக நாட்டிற் பிறந்த கண்ணன்' என்றாம்; 'வடுகங்கண்ணன்' என மெல்லொற்று அடுத்தால் 'வடுகனுக்கு மகனாகிய கண்ணன்' என்றாம்.

---

1. கைவாரன், திருவிலான் அறிவிலான், ஓதினான் என்னும் னகர வீறு இகர வீறாகத் திரிந்தமை காண்க.
2. வில்லன், வாளன் என்பன அவ்வாறு திரிந்தன.
3. வலை+இ, பாண்+இ, வெள்ளாள் + இ எனப்பிரித்து இடைநிலைகள் பெய்து புணர்க்க.
4. செட்டி+இ, கணக்கன் + இ எனப்பிரிக்க.
5. கணவாள்+இ எனப்பிரிக்க.
6. கழலை—கட்டி (நோய்)

'நனி நீடுழந்தன்று மன்னே இனியே'(குறுந். 149) என்பது [7]பின்வருங்காலம் உணர்த்திற்கு.

'இனி எம் எல்லை' எனப் 'பின்' என்னும் இடம் உணர்த்திற்று

ஏனோன் என்பது ஒழி பொருள் உணர்த்திற்று.

ஏதிலன் என்பது அயலான் என்னும் பொருள் உணர்த்திற்று.

[8]உண்ணா நின்றான் என்புழி 'ஆ' என்பது இடைநிலை எழுத்து என்று உணர்க.

வா, தா என்றாற் போல்வன, மறை யுணர்த்துங்கால் வாரான், தாரான்; வாராது போயினான், தாராது போயினான்; வாராத சாத்தன், தாராதசாத்தன் என முதல் நிலை குறுகாது நிற்கும் என்றுணர்க.

நன், தீ, சிறு, பெரு, வன், மென், கடு, முது, கிள, புது, பழ, இன், உடை, அன் என்பன முதலிய முதல் நிலைகள் மகர ஐகாரம் பெற்று, நன்மை, தீமை, சிறுமை, பெருமை என வினைக் குறிப்புப் பெயராய் நிற்குமாறும், இவைதாம் நன்று, தீது, சிறிது, பெரிது, வலிது, மெலிது, கடிது, முதிது, இனைது, புதிது, பழைது, இன்று, உடைத்து, அன்று என அஃறிணை வினைக் குறிப்பு முற்றாய் நிற்குமாறும்; நல்லன், தீயன், சிறியன், பெரியன், வலியன், மெலியன், கடியன், முதியன்;

---

7. இனி என்பது பின்வருங் காலம் உணர்த்திற்று.

8. உண்ணா நின்றான் — உண் + ஆநின்று + ஆன் எனப் பிரிக்க. ஆ நின்று என்பதையே ஆ என்றார். உண்ணாது நின்றான் எனப் பொருள்படின் ஆ எதிர் மறை இடைநிலையாம்.

இளையன், புதியன், பழையன், இன்னன், உடையன், அல்லன் என 'அன்' பெற்று உயர்திணை வினைக் குறிப்பாய் நிற்கு மாறும்; இவைதாம் ஆள் என்னும் ஈறு பெற்று முற்றாயும் படுத்தல் ஓசையான் வினைக் குறிப்புப் பெயராய் உருபு ஏற்றும் பயனிலை கொண்டும் நிற்குமாறும் பிரித்துக் கொள்க. இவ்வாறே ஏனைப் பால்களோடும் ஒட்டுக. இவை பண்பாய் நிற்குமாறும் உரிய என்றுணர்க. இவை தாமே நன்றாய் வளர்ந்தான், வளர்ந்தது, தீதாய்ப் போயினான், போயிற்று' என வினையெச்சக் குறிப்பாமாறும்; 'நல்ல சாத்தன், தீய சாத்தன்' எனப் பெயரெச்சக் குறிப்பாமாறும் காண்க.

சிற, இழி, தீர் என்னும் முதல்நிலைகள் 'அல்' ஈறு பெற்றும் 'அன்' ஈறும் 'ஆன்' ஈறும் பெற்றும் முற்கூறியவாறே நிற்குமாறும்; சிறந்து, இழிந்து, தீர்ந்த எனவும் வினைக்குறிப் பும் (?) பெயரெச்ச வினைக்குறிப்பும் ஆமாறும் உணர்க. இவ்வாறு வருவன பிறவும் பிரித்துக் கொள்க.

'சுடரிழாய் பன்மானும்' (கலி. 47) என்புழி மான் என்னும் இடைச்சொல் பலபடியும் என்னும் பொருட்டாய் நின்றவாறு காண்க.

'பிரிதல் வல்லியார் ஈதும் துறந்தோர்' என்புழி, 'வல்லா ராய்' என வினையெச்சமாய் நின்றவாறு காண்க.

'கால்பொர நுடங்கல் கறங்கிசையருவி' (கலி. 45.) என்புழி [1]நுடங்குதலையுடைய அருவி என நிற்குமாறு உணர்க. இவை போல்வன ஓசை வேற்றுமையான் வேறுபடுவனவும் உணர்ந்து கொள்க.

'நில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும்' என்புழி, முன்னர் எல்லாரும் உளப் பாடாகக் கூறிய தோழி ஈண்டும் பல்லே முள்ளும் என்னாது தன்னை நீக்கிக் கூறியது என்னை( எனின், தலை மகன் தன்னை நோக்கி அழிவுதகக் கூறி ஆற்றானாகி நின்ற நிலைமையைக் கண்டும் அருள் பிறவாது ஆயமும் தலை

1. நுடங்குதல்—

வியும் போயவாறும் அதற்குத்தான் அழிவு தக்கு நிற்றலின் அவரோடு போதல் ஆற்றாது பின்னர்ப் போயவாறும் தோன்றக் கூறுகின்றானாதலின் 'பல்லோருள்ளும்' எனக் கூறினாள் என்று பொருள் கூறுக.

"முரசு முழங்குதானை மூவருள்ளும்
அரசெனப் படுவது நினதே பெரும" (புறம். 35)

என்புழி மூவிர்' என்னாதது என்னை யெனின், புலவன் கூறு கின்ற இவனை ஒழிந்த இருவகைக் குலத்தோரும் இவன் முன் னுள்ளோரும் படர்க்கையர் ஆதலின், அம் மூவகைக் குலத்து உள்ளோரையும் கூட்டி 'முரசு முழங்கு தானை மூவர் அரசுள்ளும்' 'அரசு' என்று ஈண்டுச் சிறப்பித்துச் சொல்லப்படுவது அச் சோழன் வழித் தோன்றிய நின் அரசே என்றான் எனப் பொருள் கூறுக.

இங்ஙனம் சான்றோர் செய்யுட்கள் இவ்வாசிரியர் கூறிய இலக்கணங்களுள் அடங்காதது போன்று கிடப்பன பிறவும் உளவேனும், நுண்ணுணர்வுடையோர் அவற்றின் பொருட் பயனை நோக்கி, ஒருவாற்றான் இக்கூறிய இலக்கணங்களுள் அடக்கிக் கொள்க.

இச்சூத்திரத்தின் கருத்து, 'இவ்வதிகாரத்துள் சிலவற்றிற்கு விரித்துக் கூறாது நுண்ணுணர் வுடையார் உணருமாறு கூறிய இலக்கணங்களும் உள; அவற்றிற்கு முதல் நூலானும் விரித்து ரையானும் காண்டிகையானும் உணர்த்துக' என்று கூறுதலாம். இங்ஙனம் கூறினார், 'முடிந்தது காட்டல்' என்னும் தந்திரவுத் திக்கு இனமாக என்று உணர்க. இங்ஙனம் கூறாது 'யான் கூறப்படும் இலக்கணங்களை முதல் நூல்களால் கூறிக் கொள்க' எனின், அது குன்றக் கூறல் என்னும் குற்றமாம் என்று உணர்க.

எச்சவியல் முற்றும்
சொல்லதிகாரம் முற்றும்

சொல்லதிகாரத்திற்கு மதுரையாசிரியன் பாரத்துவாசி நச்சினார்க்கினியன் செய்த காண்டிகை முற்றும்.

———

வெள்

இஃது இவ்வதிகாரத்துள் ஓதப்பட்ட சொற்கெல்லாம் ஓர் புறனடை கூறுகின்றது.

இ-ள் : செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் இவ்வதிகாரத்தின் கண் பொருள் விளங்கச் சொல்லப்பட்ட சொற்கள் எல்லாவற்றையும் பல்வேறு செய்கையை யுடைய தொன்னூலின் நெறி முறையில் தவறாது சொல்லை வேறுபடுத்து உணருமாறு பிரித்துக் காட்டுக, எ-று.

'நிலப் பெயர் குடிப்பெயர்' எனவும், அம்மாம் எம்மேம்' எனவும் மேற் பொது வகையாற் கூறப்பட்டன. அருவாளனிலத்தான் என்னும் பொருட்கண் அருவாளன் எனவும், சோழன் நிலத்தான் என்னும் பொருட்கண் சோழன் எனவும் நிலம் பற்றி வரும் பெயர்கள் எல்லாம் நிலப் பெயர் எனப் பிரித்துப் பொருள் உணர்த்தப்படும். இவ்வாறே இறந்த காலத்தின் கண் உண்டனம், உண்டாம் எனவும்; நிகழ் காலத்தின் கண் உண்கின்றாம் எனவும்; எதிர் காலத்தின் கண் உண்குவம், உண்பாம் எனவும் வரும்வேறுபா டெல்லாம் கூறிற் பெருகும் என்றஞ்சிக் கூறிற்றில னாயினும் அவ்வேறுபா டெல்லாம் உணர நூல் நெறி பிழையாது பிரித்துக் காட்டுதல் இந்நூலைக் கற்றுணர்வோர் கடமையாம் என அறிவுறுத்தியவாறாம்.

இதன்கண் 'பல்வேறு செய்தியின் நூல்' என்றது அகத்திய முதலாய தொன்னூல்களை. செய்தி—செய்கை + விதி.

இனி இச்சூத்திரத்திற்கு 'செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் என்னாற் கிளக்கப்படாது தொன்னூலாசிரியராற் கிளக்கப்பட்டு எஞ்சி நின்ற சொற்கள் எல்லாவற்றையும் அவ்வத் தொன்னூல் நெறியிற் பிழையாமல் வரைந்துணரக் கொணர்ந்து பிரித்துக் காட்டுக' என மற்றும் ஓர் உரை வரைந்து இடைவழு வமைதி பலவற்றுக்கு எடுத்துக் காட்டு தந்து விளங்குவர் சேனாவரையர்.

ஆதி

இலக்கிய நெறியிலும் உலக வழக்கிலுமாகப் பொருள் தெளிவாகச் சொல்லப்பட்ட யாவற்றையும் முந்து நூல்நெறிக்கு விலகாமல் பல்வகைச் செய்திகளையும் சொல்வரம்போடு அறிந்துணரப் பிரித்துக்காட்டுக.

இங்குக்கூறப்பட்ட வற்றை முறையோடு பிரித்து உணர்க.

பிரிப்பது முந்து நூல்முறை தழுவியதாக இருத்தல் வேண்டும்.

முறை கெடப் பிரித்துப் பொருளைப் பிழைபட உணரலாகாது என அறிவிக்கின்றார்.

'அவ்வாறென்ப (எச்ச. 31) — அ ஆறு என்ப என உரையாசிரியர்கள் தவறாகப் பிரித்தார்கள். அதற்கேற்ப உரையெழுதப் பலவாறு கதை கட்டுகிறார்கள். ஆறு ஆறு அவ்வாறு என்பது மெய்ப்பொருள்.

இறந்த கால இடைநிலை த்—ற், ட் ஆக மாறுகின்றமையின் ற், ட் இடைநிலை எனக் கூறுவது தவறு.

ஒன்றன்பால் விகுதி து—று, டுவாக மாறுகின்றமையின் று, டு விகுதி எனக் கூறுவது தவறு.

நடவாய்—முன்னிலை உடன்பாட்டு வினையாயின் நட+வ்+ஆய்—வ் எதிர்கால விகுதி எதிர்மறை வினையாயின் நட+ஆய்+ ஆ—வா ஆனது உடம்படு மெய் பெற்று.

இடம்பொருள் அறிந்து முறையோடு பகுத்து உணர்தல் வேண்டும் என ஆசிரியர் அறிவுரை கூறுகின்றார்.

எச்சவியல் உரைவளம் முற்றும்.

# பயன்படுத்தப் பெற்ற நூல்கள்

## இலக்கண நூல்கள்

1. தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - இளம்பூரணம்
சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை (1973)

2. தொல் - சொல் - சேனாவரையம்
கு. சுந்தரமூர்த்தி (பதிப்பு)
தெற்கு வீதி, திருப்பனந்தாள் (1966)

3. தொல் - சொல் - தெய்வச்சிலையார்
சை. சி. நூ. கழகம் (1979)

4. தொல் - சொல் - நச்சினார்க்கினியம்
சை சி. நூ. கழகம் (1979)

5. தொல் - சொல் - சேனாவரையர், கணேசய்யர் பதிப்பு
வட இலங்கைத் தமிழ் நூற் பதிப்பகம், சுன்னாகம், இலங்கை

6. தொல் - சொல் - சேனா வரையம், பூவராகம் பிள்ளை விளக்கத்துடன்
சை. சி. நூ. கழகம் (1970)

7. தொல் - சொல் - குறிப்புரை, பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரியார்
38, பாண்டியன் சந்து, தெப்பக்குளம், திருச்சி (1930)

8. தொல் - நன்னூல் - சொல்லதிகாரம், க. வெள்ளை வாரணனார்
142, கனகசபைநகர், சிதம்பரம் (1971)

9. தொல் - சொல் - ஆதித்தியம்
C. L. S. கிறித்துவ இலக்கியச் சங்கம்
பூங்கா நகர், சென்னை (1971)

10. தொல்காப்பியம், க. வெள்ளைவாரணன், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், (1970)

## ஆராய்ச்சி நூல்

11. சண்முகம், செ. வை., சொல்லிலக்கணக் கோட்பாடு, தொல்காப்பியம் முதற் பகுதி, அனைத்திந்தியத்தமிழ் மொழியியல் கழகம், அண்ணாமலை நகர், (1984)

**ஆராய்ச்சிக் கட்டுரைகள்**

12. சச்சிதானந்தம், ச. வா, பதினொன்றாவது கருத்தரங்க ஆய்வுக் கோவை தொகுதி 2. அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், (1979)

13. சிவலிங்கனார், ஆ., 'வினைத்' தொகையின் முன் மொழி பெயரா? வினையா ?', ஒன்பதாவது கருத்தரங்க ஆய்வுக் கோவை, தொகுதி 2. அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், 1977

14. மீனாட்சி சுந்தரம், கா., 'சொற் பகுப்பு - அன்றும் இன்றும்'. ஐந்தாவது கருத்தரங்க ஆய்வுக் கோவை, அண்ணா மலைப் பல்கலைக் கழகம் அண்ணாமலை நகர், 1973

**ஆங்கிலம்**

15. Tolkappiyam with Critical Studies.
Prof. S. Ilakkuvanar
Kural Neri Publishing House
Mathurai 6. 1963

# சூத்திர முதற் குறிப்பகராதி

(எண்—பக்க எண்)

# சொல், தொடர் அகராதி

(எண் — பக்க எண்)

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | தமிழில் விடுகதைகள் | ... ரூ. | 12-00 |
| 2. | உலகத் தமிழ் எழுத்தாளர் யார்? எவர்? | ... ரூ. | 6-00 |
| 3. | தமிழர் தோற்கருவிகள் | ... ரூ. | 10-00 |
| 4. | தமிழும் தமிழரும் | ... ரூ. | 5-00 |
| 5. | தமிழர் இசை | ... ரூ. | 70-00 |
| 6. | ம.பொ.சி.யின் இலக்கியநூல்கள்-ஓர்மதிப்பீடு | ... ரூ. | 20-00 |
| 7. | இளங்கோவின் இலக்கிய உத்திகள் | ... ரூ. | 12-00 |
| 8. | திராவிட மொழி இலக்கியங்கள் | ... ரூ. | 35-00 |
| 9. | உ. வே. சா. இலக்கணப் பதிப்புகள் | ... ரூ. | 12-00 |
| 10. | தமிழ் இலக்கியக் கொள்கை-9 | ... ரூ. | 20-00 |
| 11. | தொல்காப்பியம் புணரியல் | ... ரூ. | 10-00 |
| 12. | தொல்காப்பியம் வேற்றுமை மயங்கியல் | ... ரூ. | 12-00 |
| 13. | தொல்காப்பியம்-விளிமரபு | ... ரூ. | 6-00 |
| 14. | தொல்காப்பியம்-பெயரியல் | ... ரூ. | 12-00 |
| 15. | தொல்காப்பியம் - வினையியல் | ... ரூ. | 20-00 |
| 16. | பிரபந்த தீபிகை | ... ரூ. | 12-00 |
| 17. | கண் மருத்துவம் | ... ரூ. | 50-00 |
| 18. | வர்ம சூத்திரம் | ... ரூ. | 10-00 |
| 19. | தன்வந்திரி குழந்தை வாகடம் | ... ரூ. | 14-00 |
| 20. | வெள்ளைக்காரன் கதை | ... ரூ. | 7-00 |
| 21. | மெய்க்கீர்த்திகள் | ... ரூ. | 20-00 |
| 22. | சிந்து இலக்கியம் | ... ரூ. | 8-00 |
| 23. | தமிழ்ச் சுவடிகள் அட்டவணை | ... ரூ. | 6-00 |
| 24. | தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் | ... ரூ. | 12-00 |
| 25. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்-1 | ... ரூ. | 12-00 |
| 26. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்-2 | ... ரூ. | 22-00 |
| 27. | இஸ்லாம் வளர்த்த தமிழ் | ... ரூ. | 15-00 |
| 28. | உ. வே. சா. சங்க இலக்கியப் பதிப்புகள் | ... ரூ. | 10-00 |
| 29. | டாக்டர் உ. வே. சா. காப்பியப்பதிப்புகள் | ... ரூ. | 10-00 |
| 30. | தமிழரின் தாயகம் | ... ரூ. | 10-00 |
| 31. | பாவாணரும் தனித்தமிழும் | ... ரூ. | 12-00 |
| 32. | தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வு | ... ரூ. | 10-00 |
| 33. | செங்கை மாவட்ட ஊர்ப் பெயர்கள் | ... ரூ. | 25-00 |
| 34. | மொழி பெயர்ப்பியல் | ... ரூ. | 10-00 |
| 35. | தமிழர் திருமணம் | ... ரூ. | 25-00 |
| 36. | தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம் | ... ரூ. | 35-00 |
| 37 | தமிழ்தந்த வ. உ. சி. | ... ரூ. | 15-00 |
| 38. | எண்பத்திரண்டில் தமிழ் | ... ரூ. | 90-00 |
| 39. | மகாமதிப்பாவலர் | ... ரூ. | 11-00 |
| 40. | உலக முதன் மொழி தமிழ் | ... ரூ. | 12-00 |
| 41. | Siddha Medicine (Heritage of the Tamils) | ... Rs. | 45-00 |
| 42. | Cultural Heritage of the Tamils | ... Rs. | 20-00 |
| 43. | Literary Heritage of the Tamils | ... Rs. | 50-00 |
| 44. | Tamil Drama | ... Rs. | 20-00 |
| 45. | Dr Mu. Va. | ... Rs. | 20-00 |
| 46. | Thiru Murugan | ... Rs. | 5-00 |
| 47. | A Study of the Perunkatai | ... Rs. | 12-00 |
| 48. | Tamil Writers Directory | ... Rs. | 10-00 |
| 49. | Dissertations on Tamilology | ... Rs. | 10-00 |
| 50. | Tamil-Text (An-Auto Instructional Course) | ... Rs. | 25-00 |
| 51. | Thiruk-Kural the day light of psyche | ... Rs | 25-00 |
| 52. | Karaikkal Ammaiyar | ... Rs. | 6-00 |
| 53. | Heritage of the Tamils-Temple Arts | ... Rs. | 50-00 |
| 54. | Tolkappiyam (An English Translation) | ... Rs. | 25-00 |
| 55. | Heritage of the Tamils Education&Vocation | ... Rs. | 50-00 |